


பதிப்பாசிரியர் : அரு. ராமநாதன்

மூலங்களைப் பரிசோதித்து
தமிழில் எழுதியவர் :
துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி




பிரசுரம்
சென்னை —24

விலை ரு 8—50



# பொருளடக்கம்

## ஒன்பதாவது ஸ்கந்தம்

## பத்தாவது ஸ்கந்தம்

## பதினொன்றாவது ஸ்கந்தம்

## பன்னிரண்டாவது ஸ்கந்தம்

# ஒன்பதாவது ஸ்கந்தம்

## ஐவகை சக்திகள்

நாராயணர் நாரத முனிவரை நோக்கி, "நாரதரே! கணேசரின் தாயான துர்க்கா தேவி, மற்றும் ராதை, லக்ஷ்மி, சரஸ்வதி, ஸாவித்திரி, எனப்படும் பஞ்ச சக்திகள் ஐந்து விதமான பிரகிருதிகள் என வழங்கப்படுவார்கள்!" என்றார்.



நாரதர் குறுக்கிட்டு நாராயணரை நோக்கி, "மாபெரும் முனிவரே! அவர்கள் யார்? அவர்கள் இலக்கணம் என்ன? அவ்வைவரும் யாரால் உண்டாக்கப்பட்டார்கள்? அவர்கள் எதனால் பஞ்ச சக்திகள் என்று கருதப்பட்டார்கள். அவர்கள் அனைவராலும் போற்றப்பட்டுத் தியானித்து வழிபடத் தக்கவர்களாக இருப்பதால் அந்த ஐந்து சக்திகளின் வரலாற்றையும், அவர்களை வழிபட வேண்டிய பூஜை முறைகளையும் குணச் சிறப்புகளையும் அவர்களுக்குப் பிரியமான அவதாரத் தலங்களையும் விவரமாகச் சொல்ல வேண்டும்!" என்றார்.

நாராயணர் கூறலானார்:

"நாரதரே! அவ்வைந்து சக்திகளும் பஞ்சப் பிரகிருதிகளாகையால் அவற்றின் சொல்லியல்பை யாராலும் பூரணமாக வரை



யறுத்துக் கூறுவது கடினம். ஆயினும் நான் அறிந்தவரை ஒரு வாறு கூறுகிறேன்.

''ப்ர என்ருல் எழுச்சி என்று அர்த்தம்...க்ருதி என்ருல் சிருஷ்டி என்று அர்த்தம். எனவே ப்ரக்ருதி என்ருல் சிருஷ்டி என்று அர்த்தம். எனவே ப்ரக்ருதி யென்ருல் சிருஷ்டியால் மனவெழுச்சி யுடையவர் எனக் கொள்ளலாம். மேலும் ப்ர என்பது சத்வ குணத்தையும் கிரு என்பது ராஜஸ குணத்தையும் தி என்பது தாமச குணத்தையும் குறிப்பன. ஆகையால் முக்குணத் தின் தன்னகமான சக்தியோடு சிருஷ்டிப்பதில் இவ்வைவரும் முதற் சக்திகளாக இருப்பவர்கள் என்று அர்த்தப்படும். மேலும் ப்ர என்பது ஆதி என்ற பொருளேயும், கிருதி என்பது சிருஷ்டி என்ற பொருளேயும் குறிப்பன. ஆதலின் சிருஷ்டிக்கு ஆதியில் உள்ளவர்கள் என்றும் அர்த்தமாகும்.

இவ்வாறு, ஐந்து விதப் பிரகிருதியான சக்தி, பரமாத்மாவான பிரும்மத்தோடு கலந்திருக்கும் சித்சக்தி (அறிவாற்றல்) ஆகும். எனவே சிருஷ்டிக் காலத்தில் இந்தச் சக்தி வலது பாகம் ஆண் வடிவமாகவும், இடது பாகம் பெண் உருவாகவும் இருப்பாள். ஆனுல் அவள் ஆண், பெண் என இரண்டு உருவங்களாகத் தோற்றமளித்தாலும் பரப் பிரும்மம் எப்படியோ, அப்படியேதான் சக்தி என்பதை யோகியர்கள் அறிந்திருப்பதால், அக்கினியில் உஷ்ணம் எப்படி இரண்டறக் கலந்திருக்கிறதோ அது போல ஆண் பெண் ன இரண்டு உருவமாகத் தென்பட்டாலும் அந்த சக்தி ஒன்றே என்று உணர்ந்து அந்த சக்தி நித்தியமாயும் அழிவில்லாத

தாகவும் விளங்கும் ஒரே பிரும்ம சொரூபம்தான் என்பதை மெய் யறிவால் கண்டு, எல்லாம் பிரும்ம மயம் என்று சொல்லுவார்கள். அந்த சக்தி இரண்டு உருவாகத் தோற்றமுற்றபோது, அதில் மூலப் பிரக்கிருதி (பெண் உருவு) ஆன ஈஸ்வரி, கிருஷ்ணரை (சிவ ரூபமான ஆணுருவைத், தோற்றுவிக்க வேண்டும் என்று எண்ணி தன்னியல்பாய் தனி இரண்டாகப் பிரிந்து தோன்றினுள். அவ்விதம் தோன்றிய அந்த மூலப் பிரகிருதியின் ஏவலினுல் ஐந்து விதச் சக்திகள் உண்டாயின. அவையாவன:

## துர்க்கா தேவி

பிரார்த்தனை செய்யும் பக்தர்களுக்கு அருள் செய்பவளாகத் துர்க்கா தேவி தோன்றினுள். இவள்சிவப்பிரியை, கணேசர் பிறப்பதற்கு அன்னையானவள். மாயையாகவும் முழுப் பிரும்மசொரூபிணியாகவும், பிரும்மா முதலான தேவர்கள், மகரிஷிகள், மனுக்கள் முதலியவர்களால் துதிக்கப்படுகின்றவளாகவும் விளங்குபவள். இவள் எல்லாப் பொருள்களிலும், நிறைந்திருப்பவள். புகழ், உயர்வு, மங்களம், சுகம், மோட்சம் முதலியவற்றை வழங்குபவள். துக்கம், பீடை முதலியவற்றை ஒழிப்பவள். தன்னைச் சரணடைந்தவர்களையும் பலஹீனர்களையும்காப்பாற்றுபவள். தேஜோமயமானவள். தேஜஸிற்கு நிலைக்களமான தேவதை. சகல சக்திகளின் தன் வடிவம். சக்திகளுக்கெல்லாம் மகேஸ்வரி சித்தபகவதி. சித்தியை தருபவள். அறி



வுணர்வு உறக்கம், பசி, தாகம், ஒளி, சோம்பல், கருணை, கவனம், பொறுமை, பிரமை, மெய்யறிவு, துஷ்டி, லக்ஷ்மி, தைரியம், மாயை ஆகியவற்றின் சக்தி யுருவாகத் திகழ்பவள். (சிவ ரூபமான) கிருஷ்ணரை அடைந்திருக்கும் போது நாராயணியாகவும் தோன்றினவள். இவளது குணச் சிறப்புக்கள் அளவற்றவை. அவற்றில் சில திருமறைகளில் கூறப்பட்டுள்ளன.

## லக்ஷ்மி தேவி

சுத்த சத்துவத்தின் தன் வடிவாகவும், சகல செல்வ பாக்கியங்களின் தன் உருவாகவும் அவற்றிற்கு அதிட்டான தேவதை



யாகவும் லக்ஷ்மி தேவி விளங்குகிருள். இவள் மனேகரி, அமைதி, அழகு ஒளி, சாந்தி முதலியவற்றின் வடிவம். நற்குண மயமான சுசீலே. சர்வ மங்கள சொரூபிணி. காமம், லோபம், மோகம் ரோஷம், மதம், அகங்காரம் ஆகியவற்றை வர்ஜிப்பவள். இந்திரிய நிக்கிரகையாகவும் பக்தர்களிடம் பிரியமுடையவளா கவும் இருப்பாள். இவள் விஷ்ணுவின் பிரேமைக்குரியவள். அவரது பிராணனுக்கு இணையானவள். திருமாலிடம் இனிமை யாக உரையாடுபவள். சகல பல வடிவினி. ஜீவனேபாய உரு வினி. இவள் வைகுண்டத்தில் விஷ்ணுவின் பத்தினியான லக்ஷ்மி யாகவும், சுவர்க்கத்தில் சுவர்க்க லக்ஷ்மியாகவும், ராஜ்யங்களில் ராஜ்ய லக்ஷ்மியாகவும், ராஜாக்களிடம் ராஜ லக்ஷ்மியாகவும், இல்லற வாசிகளின் கிருகங்களில் கிருக லக்ஷ்மியாகவும், எல்லாப் பிராணிகளிடத்தில் சோப லக்ஷ்மியாகவும், புண்ணியவான்களிடம் ப்ரீதி லக்ஷ்மியாகவும், க்ஷத்திரியர்களிடம் கீர்த்தி லக்ஷ்மியாகவும், வைசியர்களிடம் வர்த்தக லக்ஷ்மியாகவும், பாவிகளிடம் கல லக்ஷ்மி யாகவும், வேதாந்திகளிடம் தயா லக்ஷ்மியாகவும் பல்வேறு பெயர் களோடு விளங்குகிருள்.

## ஸரஸ்வதி தேவி

எல்லோரும் வணங்கிப் போற்றும் மூன்ருவது தேவியான ஸரஸ்வதியைப் பற்றிக் கூறுகிறேன். வாக்கு, புத்தி வித்தை, ஞானம் (சொல், அறிவுணர்வு, கல்வி, மெய்யறிவு) என்பன வற்றின் நிலேக்களமாகவும், சகல வித்தைகளின் வடிவமாகவும் சரஸ்வதி தேவி விளங்குகிருள். அதனுல் இவள் தன்னே வழிபடு கிறவர்களின் புத்தி வடிவமாகவும் அவர்கள் பாடும் கவிதையின் கவியுருவாகவும், அக்கவியில் யுக்தி வடிவமாகவும், அந்த யுக்தியில் நுண் பொருளின் வடிவமாகவும், அந்த நுண் பொருளே மறவா திருக்கச் செய்யும் சிந்தனே வடிவாகவும், அந்தச் சிந்தனேயின் ஆதாரமான பலவிதச் சித்தாந்த பேதங்களின் வடிவாகவும், அச்சித்தாந்த பேதங்களின் உட்பொருள் விசாரணேகள் விளக்கக் கூடிய விசாரணே வடிவாகவும் அந்த விசாரணேயில் தூக்கிக் காட்டும் வாக்கிய போதனேயின் வடிவமாகவும், அந்த வாக்கிய பேதங்களால் எல்லாச் சந்தேகங்களேயும் நீக்கக் கூடிய நாச காரணியாகவும், அதனுல் தெளிவுறும் விசாரகாரணியாகவும் அந்த விசாரம் இதுதான் என்று எடுத்தியம்பும் கிரந்தகாரணி யாகவும், அக்கிரந்தங்களே அறிவிக்கும் ஆற்றல் வடிவமாகவும், சரஸ்வதி தேவியே விளங்குகிருள். மேலும் எல்லா விதமான சங்கீதங்களின் வடிவமாகவும், அவ்வின்னிசைகளுக்கு ஏற்ற தாள பேத காரண வடிவமாகவும், அவற்றிற்கு ஏற்ற பொருளறிவு வடிவமாகவும், அப்பொருளறிவுக்கு உகந்த கவிதை வடிவ

மாகவும், அவற்றால் மகிழ்ச்சி பெறும் பிரபஞ்ச வடிவமாகவும சரஸ்வதி தேவியே இலங்குகிறாள்.

மேலும் சொற்பொருள் வாதங்களின் வடிவமாகவும் அவற்றால் அடையும் அமைதி வடிவமாகவும் விளங்குகிறாள். சகல வித்தைகளின் வடிவும் தானே என்பது தோன்றும்படி எப்போதும் வீணை, புத்தகம் ஏந்தியபடி காட்சியளிப்பாள். இத்தகைய வித்தைகளால் விளையக் கூடிய ஆத்ம பயனான சுத்த சத்துவ சொரூபிணியாகவும் (தூய அமைதிப் பண்பின் தன் வடிவமாகவும்) நற்குணையாகவும் திருமகளுக்கும் திருமாலுக்கும் இனிமையானவளாகவும் திகழ்கிறாள். பச்சைக் கர்ப்பூரம், சந்தனம், முல்லைப் பூ, ஆம்பல், வெண் தாமரை முதலானவற்றிற்கு இணையான நிறமுள்ளவள். மகா விஷ்ணுவை இரத்தின மாலையால் பூஜிப்பவள். தவ வடிவினளாக இருந்து தவ யோகிகளுக்குப் பலனளிப்பவள். சித்தி, வித்தை வடிவினளாக இருந்து அவற்றை வழங்குபவள். இந்தக் கலைமகளை வழிபடாத அந்தணர்கள் சொற் பயனான வித்தையின் ஒளியில்லாமல் உயிரற்ற நடைப் பிணங்கள் போல் திரிவார்கள். இவை வேதத்தில் கூறப்பட்டுள்ள ஜகதாம்பிகையான சரஸ்வதி தேவியின் சிறப்புகளில் சிலவாகும்.

## சாவித்திரி தேவி

பிராமணர் முதலான நான்கு குலங்கள் வேதாந்தங்கள், சந்தஸ்ஸ சந்தியாவந்தன மந்திரம், தந்திர சாஸ்திரங்கள், இவற்றிற்கு எல்லாம் தாயாக விளங்குபவள் சாவித்திரி தேவி. அவள் பிராமண குல வடிவினளாகவும் ஜப வடிவாகவும் தவவுருவமாயும் அவற்றால் விளையும் பிரும்ம தேஜஸின் வடிவாகவும், அதனால் உண்டாகும் தூயத் திருவுருவமாகவும், நமஸ்கார ஸ்வரூபிணியாகவும், சாவித்திரி, காயத்ரி வடிவாகவும் அவற்றை அனுஷ்டிக்கும் அந்தணப் பிரியையாகவும் தீர்த்தத்தின் வடிவமாகவும் அந்த தீர்த்தத்தைத் தொட்டதுமே தூய்மைப்படுத்த விரும்புபவளாகவும், சுத்த ஸ்படிகம் போல் ஒளிரும் நிர்மலமான சுத்த சத்துவ ஸ்வரூபிணியாகவும், அதனால் ஏற்படும் பரமானந்த வடிவமாகவும், அந்த வடிவில் அநாதியாயுள்ளவளாகவும் பரப்ரம்ம வடிவமாகவும் அதை அடையும் பிரும்மஞானிகளின் பிரும்ம தேஜோமய மாகவும், அந்தச் சக்திக்கு அதிட்டான தேவதையாகவும் விளங்குகிறாள். அவளது பாத தூளியால் உலகமெல்லாம் தூய்மையடைகிறது.

## ராதாதேவி

ஐவகைப் பிராணன்களுக்கும் ஆதிதேவியாக விளங்குபவள் ராதாதேவியாவாள். அவள் பஞ்சப் பிராணங்களின் வடிவாகவும்

பிராணனைவிட மிகவும் பிரீதிப் பொருளாகவும் எல்லா தேவி களடமுள்ள அழகுருவமாகவும் எல்லாரிடத்தும் உள்ள சம்பத் தாகவும் எல்லார் உடல்களிலும் இடபக்க ஸ்வரூபமாகவும் குணத் திறுலும் தேஜஸினுலும் நிறைந்துள்ள பெருமையுருவமாகவும், பராபரங்களுக்குச் சாராம்சமாகவும், அவற்றுக்கு ஆதிமூல மாகவும், அநாதியாயும், பூஜைக்கு உகந்தவளாயும் அனைவராலும் பூஜிக்கப் படுபவளாகவும் ராஸக்ரீடைக்கு அதிதேவதையாயும். பரமாத்மாவின் ராஸக்ரீடை மண்டபத்தில் இருப்பவளாகவும் ராஸக்ரீடையால் அலங்காரமானவளாகவும், ராஸக்ரீடைக்கே இறைவியாகவும் மகா இரகசிய மானவளாகவும், ராஜமாளி கையிலும் கோகுலத்திலும் வசிப்பவளாகவும் கோபிகாஸ்திரி யின் வேடம் பூண்டவளாகவும், அளவற்ற ஆனந்தமயமாகவும், நிர்குணையாகவும், நிராகரையாகவும், பாவ புண்ணியமற்றவளாக வும், அமைதி, அகங்காரமின்மை, அவாவின்மை, பக்தர்களுக்கு அருள்புரிதல் முதலியனவாய்ந்தவளாகவும் வேதவழிகளால் தியானித்து அறியக்கூடியவளாகவும் தேவர்கள் முனிவர்கள் முதலியவர்களால் ஞானநோக்கால் பார்க்கப்படுபவளாகவும் திகழ்கிருள். நெருப்பால் சுத்தமான ஆடையை அணிந்து கொண்டு, பலவித அலங்காரங்கள் புனைந்து கொண்டு, கோடிச் சந்திரன் ஒருங்கே உதயமானது போல் அவளது திருமேனி ஒளி வீசும். சகல காந்தியோடும் அவள்தேகம் நேர்த்தியாக விளங்கும். கிருஷ்ணபரமாத்மாவிடம் இவள் மிகவும் பற்றுதலும் பக்தியும் கொண்டவள். எல்லாச் சம்பத்துக்களையும் வழங்குபவள். வராக அவதார வடிவாக இருக்கும் மகாதேவியின் திருவடித் தாமரை சம்பந்தப்பட்ட சிறப்பால் பூமா தேவியைத் தூய்மைப் படுத்துபவளாகப் பிரகாசிக்கிருள். புதுமையான மேகத்தில் ஒளிவீசும் மின்னலைப் போல், பரமாத்மாவின் மார்பில் பெண் ரத்தினமாகத் திகழ்கிருள். ஆதியில் பிருமா, தம் ஆத்ம சக்தியின் பொருட்டு அறுபதினயிரம் ஆண்டுகள் அரும் தவம் புரிந்தும் கனவிலும் காண்பதற்கு அருமையான திருவடித் தாமரைகள் உள்ளவள், பிறகு. அந்தப் பிருமா, பூமியில் அரும் தவம் புரியவே, அதனுல் இரக்கங் கொண்டு, பிருந்தாவனந் தோறும் தன்னைக் காணும்படிச் செய்தவள் இந்த ராதாதேவி யாவாள்.

"நாரதரே! இது வரையில் பரிபூரணமான ஐந்து தேவிகளின் சிறப்புகளைக் கூறினேன். முதன்மையான அம்ச ரூபங்களாகவும், கலை உருவங்களாகவும் அக்கலைகள் பலவற்றில் ஒரு பாகமாகவும் விளங்கும். அத் தேவிகளியிடமிருந்து தான் உலகத்திலுள்ள சதாரண ஸ்திரீகளும் உற்பத்தியாஞர்கள். இனி, அவர்களுக் குள்ள பிரதான அம்சரூபங்களைக் கூறுகிறேன்.

உலகங்களையெல்லாம் தூய்மைசெய்ய வல்ல கங்காதேவி, பிரகிருதி தேவியின் பிரதான அம்சமாவாள். அந்த கங்கா தேவி விஷ்ணுவின் தேக அம்சத்திலிருந்து நீர் வடிவமாகப் பிறந்தவள். பாவிகளின் பாவம் எனப்படும் பாழுங்காட்டை சுட்டெரிக்கும் அக்கினியைப் போல் திகழ்பவள். தூய்மை நதிகளிலெல்லாம் அதி உன்னதமானவள். ஸ்நானபானங்களால் ஆனந்தமாக ஸ்பரிசிக்க உகந்தவள். மோக்ஷத்தைவழங்குகின்றவள். கோலோகத்திற்கு ஆனந்தமாக ஏறக் கூடிய படிக்கட்டைப் பரமேஸ்வரனின் விரிசடையான மேருவில் முத்துப்போல் ஒளிவீசுபவள். பாரத தேசத்தில் தவம் செய்பவர்களுக்குத் தவத்தின் சித்தியை வழங்குபவள்.

சந்திரன், வெண்தாமரை, பால் ஆகியவற்றைப் போலப் பிரகாசிக்கும் சுத்த தத்வ சொரூபிணியாகவும் மலமற்றவளாகவும் அகங்காரமற்றவளாகவும், பயாகவும் நாராயணருக்குப் பிரியையாகவும் துளசி தேவி விளங்குகிருள். அவள்பிரகிருதிதேவியின் பிரதான அம்ச வடிவினள். பத்திர உருவினள். விஷ்ணுப் பிரியை; விஷ்ணு பூஷண சொரூபிணி; திருமாலின் திருப்பாதத்தில் இருப்பவள். தவம், சங்கல்பம், பூஜை முதலானவற்றை விளைவிப்பவள். மலர்களில் சிறந்த மலர் உருவினள். எப்போதும் புண்ணியம் நல்குபவள். தரிசனத்தாலும் ஸ்பரிசத்தினுலும் தென் திசையில் முக்தியைக் கொடுப்பவள். கலியுகத்தில் பெருகும் பாவத்தை அக்கினி போல் எரித்து ஒழிப்பவள். பூமிதேவியைத் தனது பாதஸ்பரிசத்தால் தூய்மைப்படுத்துபவள். மேலோர் செய்யும் தவம், தரிசனத்தாலும் ஸ்பரிசத்தாலும் சித்தியாவதற்குத் தீர்த்த சொரூபிணியாக விளங்குபவள். எல்லாக் கர்மங்களும் வீணடையாமல் பயனடையச் செய்பவள் பாரததேசத்தில் முக்தியை விரும்புவோ

ருக்கு முக்தியையும் போகத்தை விரும்புவோருக்குப் போகத்தையும் வழங்கவல்ல கற்பக விருட்சம் போன்றவள்.

மானஸாதேவியோ பாரத தேசத்தவரை மகிழச் செய்யவல்ல பிரகிருதி தேவியின் பிரதான அம்சரூபிணியாவாள். இவள் பரதேவதை. இவள் சங்கரருக்குப்பிரிய சிஷ்யையாகவும் மகாஞானசொரூபிணியாகவும், அனந்தன் சகோதரியாகவும் நாகங்களால் பூஜிக்கப்படும் நாகேஸ்வரியாகவும் நாகமாதாவாகவும் நாகேந்திர கணங்களோடு கூடியிருப்பாள். நாகங்களையே ஆபரணங்களாகப்பூண்டு கொண்டு நாகத்தையே வாகனமாகவும் பஞ்சணையாகவும் கொண்டிருப்பாள் இவள் சித்தயோகினி. விஷ்ணுரூபிணி. பேரழகி-திருமாலின் பக்தி, பூஜை பாராயணம், முதலானவற்றைக் கொண்டுள்ளவள். தவம் புரிபவளாகவும் தபோரூபிணியாகவும் தவபலத்தைத் தருகின்றவளாகவும் விளங்குபவள். மூன்று லக்ஷம் தேவவருஷம் வரை மகா விஷ்ணுவை குறித்துத் தவம் செய்தவள். முனிவர்களிடையேயும் பெண்களிடையேயும் மாபெரும் புகழ் பெற்றவள். சகல மந்திரங்களின் அதிதேவதை. பிரம்ம தேஜஸினால் ஒளிரும் பரப் பிரம்ம ஸ்வரூபிணி. பரப்பிரம்மத்தைத் தியானிப்பதில் ஆர்வம் மிகுந்தவள். கிருஷ்ணரின் அம்சமான ஜரத்காரு முனிவருக்கு இவள் பத்னியாகவும் மகாப் பதிவிரதையாகவும், முனி சிரேஷ்டரான ஆஸ்தீக முனிவருக்குத் தாயாகவும் விளங்குபவள்.

இனி சஷ்டிதேவி என்பவள் பிருகிருதி தேவியின் பிரதான அம்சரூபிணியாக விளங்குகிறாள். இவள் தேவசேனையாகவும் மாத்ருகாகணங்களில் பூஜிக்கப்பட்டவளாகவும் சிறந்து திகழ்கிறாள். இவள் பிரகிருதியின் ஆறாவது அம்சமாகத் தோன்றியவள். மூவுலகிலும் வாழ்பவர்களுக்கு புத்திரர் பேரர் முதலான சம்பத்துக்களை கொடுத்து சந்ததியைக் காப்பாற்றும் சம்பத் சொரூபிணியாகவும், குழந்தைகளிடம் வளர்ச்சி வடிவினளாகவும் யோகினி வடிவாகவும் விளங்குகிறாள். அதனால் இடைவிடாது குழந்தைகளை முன்னிட்டு ஒரு வருஷம் உலகில் பூஜிக்கப்படுகிறாள். பிரசவத்தில் இருக்கும் போதே ஆறாவது நாளிலும் இருபத்தோராவது நாளிலும் மங்களத்தை முன்னிட்டு மக்களால் பூஜிக்கப்படுகிறாள். எப்போதும் விருப்பங்களை நிறைவேற்றுகிற கருணைவடிவினள். உத்தமத்தாய். நீரிலும் பூமியிலும் வானத்திலும் சிசுக்களுக்கு ஒருவித ஆபத்தும் அணுகாதவாறு காப்பாற்றும் ரக்ஷகாரணியாகவும் விளங்குகிறாள்.

மங்கள சண்டிகை என்னும் :சக்தியும் ஒன்று உண்டு. அவள் பிரகிருதி தேவியின் முகத்திலிருந்து தோன்றி எப்பொழுதும் சர்வ மங்களத்தைக் கொடுப்பவள். சிருஷ்டி (படைப்பு) காலத்தில் மங்கள சொரூபிணியாகவும் சங்கார (அழிப்புக்) காலத்தில் கோப உருவினளாகவும் இருப்பதினால் அவளை மங்கள சண்டிகை என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். இவள் உலகத்தில் மங்களவாரந்தோறும்



(செவ்வாய்கிழமை பூஜிக்கப்படுகிருள். புத்திரனை, பேரன், செல்வம், புகழ், முதலியவற்றைப் பெண்களுக்கு வழங்கி மகிழ்வூட்டுகிருள்.

காளிகாதேவி என்னும் சக்தி கோபத்துடன் சகல பிரபஞ்சத்தையும் ஒரே கணத்தில் அழிக்கக்கூடியவள். பிரகிருதியான துர்க்கையின் முகத்திலிருந்து பகுதியம்சமாக சும்பநிசும்பர்களின் பெரும் போராட்டத்தின் போது தோன்றியவள். தாமரை மலர் போன்ற விழிகள் வாய்ந்தவள். தேஜஸிஞலும் குணத்திஞலும் துர்க்காதேவிக்கு சமதையானவள். கோடி சூரியர்களுக்கு ஈடாகப் பிரகாசிக்கும் உடற்காந்தி உள்ளவள் சக்திகள் அனைத்திலும் முக்கியமானவள். மிகவும் வலிமை நிறைந்தவள். சகல சித்திகளும் கொடுப்பவள். கிருஷ்ணரிடம் பக்தியுள்ளவள். கிருஷ்ணருக்குச் சமமான தேஜஸ், விக்கிரம குணங்கள் பாவனைகள், நிறம் முதலியவற்றைக் கொண்டவள். ஒரே மூச்சிஞல் சகல பிரம்மாண்டங்களையும் அழிக்கத்தக்க மகா சக்தி பெற்றவள். அசுரப்போராட்டத்தை ஒரு விளையாட்டைப் போலச் செய்பவள்; தன் ஆற்றலின் பெருமையை உலகினருக்கு உணர்த்துபவள். அறம். பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினையும் விரும்புகின்றவர்களால் ஆராதனை செய்யப்படுகிருள்.

பூதேவி அல்லது பூமாதேவி என்னும் சக்தி பிரமன், தேவர்கள், முனிவர்கள், மனிதர்கள் ஆகியோரால் போற்றித் துதிக்கப்படுகிருள். இவள் பிரகிருதிதேவியின் முக்கிய அம்சங்களால் பிறந்தவள். எல்லாவற்றுக்கும் அடிப்படையானவள். எல்லா ஔஷதரூபிணியும் இவளேயாவாள். இவள் ரத்தினங்களுக்கு ஸ்தானமானவள். ரத்தினகர்ப்பிணி. சமுத்திரங்களுக்கெல்லாம் ஆதாரமான

வள். மக்களாலும் மன்னர்களாலும் போற்றிப் பூஜிக்கப்படுபவள்· அனைவருக்கும் ஜீவனோபாயரூபிணியாகவும் சகல சம்பத்தையும் தந்தருள்பவளாகவும் விளங்குகிறாள்.

நாரதரே! இனி, தாவர ஜங்கமமாக விளங்கும் இந்தப்பிரபஞ்ச மெல்லாம் எந்தப் பிரகிருதி தேவியை ஆதாரமாகக் கொண்டிருக் கிறதோ அந்தப் பிரகிருதி தேவியின் கலைகளினால் தோன்றிய கலா தேவிகளையும், அவர்கள் யார் யாருக்குப் பத்தினிகள் என்பதையும் பற்றி கூறுகிறேன்.

ஸ்வாஹா தேவி என்பவள் அக்கினியின் மனைவி; அந்த தேவி இல்லாவிடில் ஒமஞ்செய்யும் அவசை தேவர்கள் பெறுவதற்கு வலிமையிராது.

தக்ஷிணா தேவி தீக்ஷா தேவி என இரண்டு தேவிகள் உண்டு. அவர்கள் யக்ஞ பத்தினிகள். இவர்கள் பூஜிக்கப்படாவிட்டால் உலகில் எல்லாச் செயல்களும் வீணாகும்.

தர்ப்பண காலத்தில் உச்சரிக்கும் சுவதாதேவி என்பவள் பிதுர்க்களின் பததினியாவாள் இவளைப் பூஜிக்காவிடில் பிதுர்க்களின் பூஜை வீணாகும். சுவஸ்தி தேவி என்பவள் வாயுவின் பத்தினியாக இருக்கிறாள். தானம் வாங்கும் போதும் கொடுக்கும் போதும் இந்த தேவி போற்றித் துதிக்கப்படுகிறாள். புஷ்டி என்பவள் கணேசரின் பததினியாகத் திகழ்கிறாள். இவள் இல்லாவிடில் எல்லோரும் பலஹீன மடைந்து நலிந்துவிடுவார்கள்.

துஷ்டி தேவி என்பவள் ஆதிசேஷனின் பத்தினியாக விளங்கு கிறாள். இவள் இல்லாவிட்டால் யாரும் ஆனந்தமடையார்.

சம்பத்து தேவி என்பவள் ஈசானபத்தினியாக இருக்கிறாள். இவள் இல்லாவிட்டால் யாரும் வறுமை அடைவார்.

திருதி தேவி என்பவள் கபிலரின் பத்தினியாக இருக்கிறாள். இவள் இல்லாவிட்டால் தைரியமும் இல்லாமற்போய்விடும்.

சதி தேவி என்பவள் சத்திய பத்தினியாகத்திகழ்கிறாள். இவள் இல்லாவிட்டால் உறவினர்களும் இருக்கமாட்டார்கள். தயாதேவி பதிவிரதா தேவி என்பவர்கள் மோகபத்தினிகள். இவர்கள் இல்லா விட்டால் யாரும் ஒரு பயனும் அடையமுடியாது.

பிரதிஷ்டை என்பவள் புண்ணிய பத்னி. இவளை வழிபடாத மனிதர்கள் நடைப்பிணங்களுக்கு ஒப்பாவார்கள்.

சம்சித்தி தேவி கீர்த்தி தேவி என்பவர்கள் சுகர்மத்துக்குப் பத்தினிகள். புண்ணிய சீலர்களால் இத்தேவிகள் போற்றித் துதிக் கப்படாவிட்டால் உலகமெங்கும் புகழ் நசித்துப் போய்விடும்.

கிரியை என்னும் தேவி உத்தியோக பத்தினியாக இருக்கிருள். இவள் இல்லாவிட்டால் உலகம் சோம்பலுற்று விடும்.

மித்தியா தேவி என்பவள் அதர்மபத்தினியாக இருக்கிருள். இவள் துஷ்டர்களால் போற்றப்படுகிருள். இவள் இல்லாவிட்டால் உலகம் பாழ் வெளியாகிவிடும். இவள் கிருதயுகத்தில் உருவற்ற வளாகவும் திரேதாயுகத்தில் நுண்ணுருவினளாகவும் துவாபரயுகத்தில் பூரண உருவமுடையவளாகவும் இருப்பாள். தன் வலிமையினுல் எங்கும் வியாபித்து, தன் சகோதரனை கபடனேடு வீடுகள் தோறும் சஞ்சரித்துக் கொண்டிருப்பாள். சாந்தியும் லஜ்ஜையும் சுசீல பத்தனிகளாக இருக்கிருர்கள் இவர்கள்யாவராலும் ஆராதிக்கப்படுகின்றனர் இவர்கள் இல்லாவிடில் இந்த உலகம் பித்துப் பிடித்ததுபோல் மாறிவிடும். இனி தியான பத்தினிகளாக புத்தியும் மேதையும் திருதியும் விளங்குகிருர்கள் இவர்கள் இல்லாவிடில் உலகம் அறிவிழந்து சித்தப்பிரமை பிடித்தது போலாகிவிடும். காந்தி என்புவள் தருமபத்தினியாக விளங்குகிருள்; இவள் இல்லையென்ருல் பிரபஞ்சவடிவமான பரமாத்மாவுக்கு ஆதாரமிருக்காது. சோப ஒளியுருவமான லக்ஷ்மி என்பவள் மதிபத்தினி. இவள் பெண் உருவமாகவும் உடலுருவமாகவும், தானியம் முதலானவற்றின் உருவமாகவும் போற்றிவழிபாடு செய்யப்படுகிருள். காலாக்கினி தேவியும் சித்தயோகினியான நித்திராதேவியும் ருத்திர பத்தினிகளாக இருக்கிருர்கள். இவர்கள் உலகமுழுவதும் வியாபித்திருக்கிருர்கள். சந்தி, இரவு, பகல் என்ற மூன்று தேவிகள் காலத்துக்குப் பத்தினிகளாக இருக்கிருர்கள். இவர்கள் இல்லாவிடில் நான்முகப் பிருமாவினுலும் காலத்தைக் கணிக்க முடியாது. பசியும் தாகமும் லோப பத்தினிகளாக இருந்து அனைவரிடமும் வியாபித்து கவலைப்படச் செய்து கௌரவித்துப் போற்றப்படுவார்கள் பிரபையும் (வெளிச்சமும்) தாஹிகையும் (தகிப்பும்) தேஜஸின் பத்தினிகள். இவர்கள் இல்லையென்ருல் பிருமாவுங்கூட சிருஷ்டிக்கும் திறமையற்றுவிடுவார் காலகன்னி என்ற மிருத்யுதேவியும் ஜரையும் ஜ்ுரத்திற்குப் பத்தினிகளாக இருக்கிருர்கள். இவர்கள் இல்லையென்ருல் பிரும தேவனுல் சிருஷ்டிக்கப்பட்ட உலகங்கள் நெருக்கடியில் சிக்கி அழிந்துவிடும். நித்திரா புத்திரிகளான தந்த்ரையும் (சோம்பலும்) ப்ரீதியும் சுகத்தின் பத்நினிகளாக உலக முழுவதும் வியாபித்துள்ளார்கள். சிரத்தையும் பக்தியும் வைராக்கியத்திற்குப் பத்தினிகளாக இருந்து ஜீவன் முக்தரிடம்நிறைந்திருப்பார்கள். தேவமாதாவான அதிதி, பசுக்களுக்கெல்லாம் தாயான காமதேனு, அசுரமாதாவான திதி, கர்த்துரு, வினதை, தநு என்பவர்களும், மற்றும் சந்திரனின் பத்தினியான ரோகிணி, சூரியனின் பத்தினியான ஸம்க்ஞா, மநுவின் பத்தினியான சதரூபை, இந்திரனின் பத்தினியான சசீ, குரு பிரகஸ்பதியின் பத்தினியான தாரை, வசிஷ்டரின் பத்தினியான அருந்ததி, கௌதமரின் பத்தினியான அகலிகை, அத்திரி



முனிவரின் பத்தினியான அருசுயை, கர்த்தம பிரஜாபதியின் பத்தினியான தேவஹூதீ, தக்ஷனின் பத்தினியான பிரசூதீ, பிதுர்க்களின் மானசீகப் புத்திரியான மேனகை, அகஸ்தியரின் பத்தினியான லோபாமுத்திரை, குபேரனின் பத்தினியான குந்தி, வருணனின் பத்தினியான பிரசித்தி, வாயுவின் பத்தினியான விந்தியா தேவி, மற்றும் தமயந்தி, யசோதை, தேவகி, காந்தாரி. திரௌபதி, சௌப்பியா, சத்தியவதி, விருஷபனுக்குப் புதல்வியாகவும் ராதைக்குத் தாயாகவும், விளங்கும் குலோத்வஹா, மந்தோதரி கௌசல்யா, சுபத்திரை, கவுரவி, ரேவதி, சத்தியபாமை, காளிந்தி, லக்ஷ்மணை, ஜாம்பவதீ, அக்கினி ஜிதி, மித்திர விந்தை, ருக்மணி, சீதை, காளி, பரிமளகந்தி, உஷா, அவளுடைய தோழியான சித்திரலேகை, பிரபாவதி, பானுமதி, மாயவதி, ரேணுகை, பலராமரின் தாயான ரோகிணி, கிருஷ்ணருக்குச் சகோதரியான ஏகதந்தை, மற்றும் துர்க்கை முதலான தேவிகளும் பிரகிருதியின் கலையாக இருக்கிறார்கள்.

மேலும் கிராம தேவிகள் அனைவரும் பிரகிருதி தேவியின் கலாம்சத்தில் தோன்றியிருக்கிறார்கள். பிரபஞ்சத்திலுள்ள பெண்கள் அனைவரும் அந்தக்கலையின் அம்சத்தில் பிறந்தவர்கள். ஆகையால் பெண்டிரை அவமானஞ் செய்தால் பிரகிருதி தேவியை அவமானஞ் செய்வதற்கு சமமாகும். புத்திரி புத்திரனைப்பெற்ற பிராமணப் பெண்மணியையும், எட்டுவயதுள்ள பிராமண கன்னிகையையும் ஆடைகள், மலர்கள், சந்தணம் முதலியவற்றைக் கொடுத்து வணங்கினால் பிரகிருதி தேவியையே வணங்கி வழிபாடுவதற்குச் சமமாகும். நல்ல குணமும் நடத்தையுமுள்ள கற்பரசிகள் உத்தம ஸ்திரீகள் ஆவார்கள். இவர்கள் பிரகிருதியின் சத்வாம்சம் உள்ளவர். இவர்கள் புருஷர்களால் அனுபவிக்கத்தக்கவர்களாகவும் வீட்டுக் காரியங்களில் ஆவலுள்ளவர்களாகவும் இருப்பார்கள். மத்திம ஸ்தீரீகள் என்பவர்களோ ராஜோ குணம் மிகுந்தவர்கள், இனம் தெரியாத குலமும் பயங்கரமான முகமும் குலத்தை நாசஞ் செய்யும் துர்க்குணமும் யாருக்கும் அடங்காமலும் வம்புகலகங்களில் ஆவலும் விபச்சாரத்தனமும் கொண்டிருக்கும் பூலோகஸ்திரிகளும் சுவர்க்கத்திலுள்ள அப்சரஸ்திரீகளும் அதம ஸ்திரீகளாவார்கள். இவர்கள் தாமஸ குணத்தில் பிறந்தவர்கள்.

பிரகிருதி தேவியின் அம்சங்கள் தேவிகள் எல்லாம் புண்ணிய க்ஷேத்திரமான பரதகண்டத்தில் சுரதன் என்பவனால் பூஜிக்கப்பட்டார்கள். இராவணவதம் செய்த பிறகு இராமபிரானால்

துக்கம் நீக்கும் துர்க்காதேவி போற்றிப் பூஜிக்கப்பட்டாள். மூவுலகினராலும் வணங்கப்படும் தக்ஷனின் குமாரியான சக்திதேவி பூஜிக்கப்பட்டு தன் தந்தைமீதுள்ள கோபத்தால் அக்கினிப்பிர வேசமாகி, இமாசலனின் பத்தினியான மேனகையிடம் தோன்றி, பரமேஸ்வரனை மணந்தாள். கிருஷ்ணமூர்த்தியின் கலாம்சமாகக் கணேசரும் விஷ்ணுவின் கலாம்சமாக கந்தபிரானும் தோன்றி, பிறகு பார்வதிக்குப் புலவர்களானார்கள். லக்ஷ்மிதேவி மங்கள பூபனாலும், சாவித்திரிதேவி அஸ்வபூதியாலும், சரஸ்வதிதேவி பிரும்மாவினாலும் முதலில் பூஜிக்கப்பட்டுப் பிறகு மகரிஷி தேவர் களாலும் மூன்று உலகங்களிலும் பூஜிக்கப்பட்டார்கள். ராதா தேவியை கோ லோகத்தில் ராசமண்டலத்தில் கார்த்திகை மாத பௌர்ணமியில் பரமாத்மாவான கிருஷ்ணமூர்த்தி முதலில் பூஜித் தார். பிறகு, அவருடைய கட்டளைப்படி கோபிகாஸ்திரீகள், கோபர்கள், சிறிய பெண்கள், பிள்ளைகள், பசுக்கூட்டங்கள், பிருமா முதலான தேவர்கள், தவமுனிவர்கள் எல்லோரும் ராதா தேவியைப் பக்தியோடு பூஜிக்கலாயினர். சங்கரரால் ஏவப்பட்ட சுயக்ஞை தேவி என்பவள் பாரத தேசத்தில் புண்ணியத் தலங் களில் பூஜிக்கப்பட்டு வருகிறாள். இவ்வாறே பிரகிருதிதேவியின் கலையில் தோன்றிய தேவிகளும், கிராமதேவதைகளும் கிராமங் களிலும் நகரங்களிலும் பூஜிக்கப்படுகின்றனர், நாரதரே! இனிமேல் நீர் எதைக்கேட்க விரும்புகிறீர்?''

## 2 ஐந்து பிரகிருதிகள்

நாராயணரைநோக்கி நாரதர், ''மகாத்மாவே! தேவிகள் எல் லோருடைய வரலாறுகளையும் சுருக்கமாகக் கேட்டறிந்தேன். ஆனால் அவற்றை மற்றவர்களுக்கு எடுத்துரைப்பதற்கு என் மனதில் பதியும்படி அவற்றை நீங்கள் விவரமாகச் சொல்ல வேண்டும். சிருஷ்டிக்கு ஆதியிலுள்ள தேவி, சிருஷ்டியை முன்னிட்டு எப்படி தோற்றமெடுத்து எப்படி ஐந்து விதமாகப் பிரிந்தாள்? எந்த எந்தத் தேவி அம்சமாகவும் எந்தத்தேவி கலையாகவும், எந்த எந்தத்தேவி முக்குணங்களின் தன்வயமாகவும் தோன்றினார்கள்? அவர்களின் அவதாரம், தியானம்பூஜை கவசம், பிரார்த்தனை துதி, செல்வம், சுகம். மங்களம் ஆகியவற்றை விவரித்துச் சொல்ல வேண்டும்.'' என்று கேட்டார்.

நாராயணன் கூறலானார்:

''பரமாத்மா, வானம், காலம், திக்கு, பிரபஞ்ச பூகோளம், கோலோகம், வைகுண்டம் ஆகியவைகள் நித்தியமாக இருப்பன வாகும், அவற்றைப்போலவே, பரப்பிரம்மத்தின் லீலையாக அதில்



ஒன்றித்திருக்கும் பிரகிருதியும் நித்தியமாக உள்ளது. தாமரைப் பூவில் பிரகாசத்தைப் போலவும், நெருப்பில் சூடு போலவும் சந்திரனிடம் குளிர் நிலவைப் போலவும் சூரியனிடம் வெய்யல் போலவும், பிரகிருதியானது எப்போதும் அபேதமாக இருக்கிருள். குண்டலம் போன்ற ஆபரணங்களை பொன் இல்லாமல் தட்டான் எப்படிச் செய்ய முடியாதோ, மண் குடங்களை மண் இல்லாமல் குயவன் எப்படிச் செய்ய முடியாதோ, அதுபோலவே, பிரபஞ்சப் படைப்பை அந்தப் பிரகிருதி இல்லாமல் பரமேஸ்வரரும் செய்யமுடியாது! சர்வ சக்தி வடிவமாக இருக்கும் அந்தப் பிரகிருதியின் சம்பந்தத்திஞல் தான் பரமபுருஷன் சக்திமான் என்று வழங்கப்படுகிருன். சக்தி என்பது ஐஸ்வரியம், பராக்கிரமம் என்ற இரண்டு அர்த்தமுள்ளது. பிரகிருதி அந்த இரண்டையுமே தன் உருவாகக் கொண்டு ஐஸ்வரிய உருவாகவும் பராக்கிரம உருவாகவும் இருந்து, அந்த இரண்டையும் வழங்குவதால், சக்தி என்று கூறப்படுகிறது. பகம் எனப்படும் சொல், ஞானம், சமிருத்தி, சம்பத்து, யஸசு. வலிமை என்னும் பொருள்களைக் கொண்டது. ஆகையால் பக வடிவமான சக்தி அந்தப் பிரகிருதியே ஆகையால் பகவதி என்று வழங்கப்படுகிருள். அந்தப் பகவதியோடு பரமாத்மா கூடியிருப்பதால் பகவான் என்று வழங்கப்படுகிருர். அதனுல் அந்தப் பகவான் தனது இச்சையால் உருவமுள்ளவராகவும் உருமற்றவராகவும் விளங்குகிருர். எனவே யோகிகள் அவரை, உருவமுள்ளவராயும் உருவமில்லரதவாராயும் தியானித்து,'' பரப்பிரம்மம் என்றும் பரமாத்மா என்றும் ஈஸ்வரரென்றும் போற்றித் துதிக்கிருர்கள். யாருக்கும் அவர் புலப்படாதவர் என்றும், யாவரையும் அவர் காணக்கூடியவர் என்றும் எல்லாம் அறிந்தவர் என்றும் அனைத்திற்கும் ஆதி காரணமானவர் என்றும் எல்லாவற்றையும் தந்தருள்பவர் என்றும், எங்கும் எதிலும் நிறைந்தவர் என்றும் தியானித்து வழிபடுகிருர்கள். ஆனுல் இவ்வாறு வைஷ்ணவர்கள் கருதுவதில்லை.



வைஷ்ணவர்களின் கருதுவதாவது:—

பிரகாசமுள்ள பொருளே இல்லாமல் பிரகாசம் என்பது எப்படி இருக்க முடியும்? ஆகவே பிரமதேஜசுள்ள ஒரு பொருள் தேஜோ மண்டலத்தில் இருக்கின்றது. அது தன்னிச்சையாக இயங்குகிறது. அதுவே அனைத்துருவம் அனைத்திற்கும் காரண காரணம். மிகுந்த அழகுடையது. மனதைக்கவர்வது. அழகுருவம் வாய்ந்தது! அதுவே குழந்தையாகவும் எல்லாப் பொருள்களையும் விடச்சிறந்ததாகவும் விளங்குகிறது. நீர் உண்ட கருமேகம் போல் பிரகாசமான கருத்த மேனியுள்ளது. சரத்கால மத்தியான்னத்தில் மலரும் தாமரை மலர்களைவிட உன்னதமான விழிகள் கொண்டது. முத்துக்களைப் பழிக்கும் பல் வரிசையைக் கொண்டது. மயில் தோகையின் இறகுகளும் மல்லிகை மாலைகளும் அலங்கரிக்கும் தலை உள்ளது. அழகான மூக்கும் பக்தர்களுக்கு அருள்புரியும் புன்னகையும் உடையது. அக்கினிப் பிரகாசத்தோடு ஜொலிக்கும் பொன்மயமான ஆடைகள் அணிந்திருப்பது. புல்லாங்குழல் ஏந்திய இரண்டு கைகளும் இரத்தின ஆபரண அலங்காரங்களும் கொண்டது. எல்லா உலகங்களுக்கும் ஆதாரமானதாகவும் சகல சக்தியோடு கூடியதாகவும், எல்லா ஐஸ்வரியங்களையும் கொடுப்பதாகவும் பூரண சுதந்தரமாக

வும் சர்வ மங்களகரமாகவும், அகண்ட பரிபூரணமாகவும் சித்தியா கவும் சித்தேசமாயும், சித்திகாரகமாகவும் விளங்கும் நித்தியமான பரம்பொருள் அதுவே! அதுவே பரப்பிரம்மம் என்று வைணவர்கள் போற்றித் தியானிக்கின்றனர். பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய், துக்கம், பயம் முதலானவற்றை அகற்றக்கூடியது அந்தப் பிரம்மம். அதன் இமை கொட்டுங்காலம் பிரமனுக்குப் பூரண வயதாகும். இத்தகைய பரம் பொருளே பரப்பிரம்மம் என்றும் பரமாத்மாவென்றும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி என்றும் சொல்லப்படுகிறது. 'கிருஷ்ண' என்ற பதத்தில் 'கிருஷ்' என்பது பரப்பிரம்ம பக்தி என்றும், 'ண' என்பது தாசத்தன்மை என்றும் அர்த்தப்படுவதால் அவ்விரண்டையும் வழங்கக்கூடிய அதற்குக் 'கிருஷ்ணர்' என்ற பெயர் வந்தது என்று கூறுவார்கள்.

சித்தாந்தத்தைப் பற்றிக் கூறுகிறேன். பிரம்மமான பகவான் (சிவரூபம்) சிருஷ்டிக்க வேண்டும் என்ற இச்சைகொண்டு சங்கற்பம் பூண்டார். அந்த இச்சையின் அம்சமான காலதத்துவத்தின் ஏவலினால் சித்சக்தியாய் அந்தச் சக்தி ஒன்றுலேயே ஆ ஈயில் சிருஷ்டித்தார் அதாவது தன் இச்சா மயமான இச்சாசக்தியினால் பகவான் தன் வலப்பாகம் ஆண் உருவாகவும் இடது பாகம் பெண் உருவாகவும் இரண்டுருக்கொண்டார். பிறகு, காமத்திற்கு அடிப்படை உருவமான பெண்ணுருவத்தை மிகவும் காமத்தோடு பார்த்தார். அவரால் பார்க்கப்பட்ட அந்தப் பெண் உருவமோ தாமரை மலர் போன்ற அழகும், சந்திரமண்டலத்தைப் பழிக்கின்ற பிருஷ்ட பாகமும், வாழைமரத்தைப் பழிக்கும் தொடைகளும், அழகான வில்வப்பழம் போன்ற முலைகளும், மலர்களால் அலங்கரிக்கும் நளினமான சிற்றிடையும், மனதைக்கவரும் வனப்பும், சாந்தமானதோற்றமும், சிரிப்பும், கடைவிழிப் பார்வையும் கொண்டவள். சுத்தமாயும் சுகமாயுமுள்ள ஆடை அணிந்தவள். ரத்தினாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவள். வெண்ணிலாவின் உதயத்தை சகோரப்பறவை உற்சாகமாகப் பார்ப்பதுபோல் கிருஷ்ணரின் திருமுகத்தைக் கண்களால் பார்ப்பவள்! நெற்றி நடுவில் சந்தனப் பொட்டும் அதன் நடுவில் சிந்தூரப்பொட்டும் அதன் நடுவில் கஸ்தூரிப் பொட்டும் தரித்தவள். மலர் மாலைகள் சூடிய அழகான சுருள்களைக் கொண்ட கூந்தலையுடையவள் நடுவில் உன்னத ரத்தினம் ஒளி வீசும் முத்தாரம் புனைந்தவள். பர்த்தாவை விரும்புபவள். மகிழ்ச்சியினால் பூரித்த உருவமுள்ளவள். யானை, அன்னம் ஆகியவற்றின் இறுமாப்பை அடக்கும் அழகான நடையுடையவள். சிருங்கார ரசமே ஓர் உருவாகக் கொண்டது போல் அவள் விளங்கினாள். சிருஷ்டித் தொழிலுக்குத் தலைவரான கிருஷ்ணமூர்த்தி அவளை சிருஷ்டித் தானத்தில் பிரமனது ஒரு நாளளவு வரை சிருஷ்டியில்விருப்புடையவராகக் கூடி மகிழ்ந்து சம்போகம் செய்தார். அதனால் அவர் சிரமமடைந்து, நித்தியானந்த வடிவினளான தேவியிடம் சுபவேளையில்



தம் வீரியத்தை விட்டார். அந்த வீரிய தேஜஸினால் தேவி சிரமப் படவே தேவியின் உடலிலிருந்து வியர்வையும் நிஸ்வாஸ மூச்சும் உண்டாயிற்று. அந்த வியர்வை முழுவதையும் பூவுலகம் கிரகித்துக் கொண்டது. பெருமூச்சான நிஸ் வாஸக் காற்றோ சராசரமான எல்லாப் பிராணிகளும் ஜீவிப் பதற்கு ஆதாரமாயிற்று. அந்தக் காற்றின் (வாயுவின்) இடது பக்கத் திலிருந்து பிராண பத்தினி உற் பத்தியானாள். அவளுடைய புத்தி ரர்களாகிய பிராணன், அபானன், வியானன், உதானன் சமானன் என்பவர்கள், (பஞ்சவாயுக்கள்) ஜீவர்களுக்குப் பஞ்சப் பிராணன் என்று வழங்கப்படுகின்றனர். அந்த வாயுவின் இடப்பக்கத்தில் தர்மரூபமான தண்ணீருக்கு அதி பதியான வருணனின் சக்தியாக விளங்கும் வாருணி உண்டானாள். (சிவ ரூபமான) கிருஷ்ணருக்கு பிராண சொரூபியான சித்சக்தி யோ பிரம்ம தேஜஸினால் ஜொலித் துக்கொண்டு பிராணனைக் காட்டி லும் அதிகப் பிரியமுள்ளவளாயும், தினந்தோறும் கிருஷ்ண சகவாச முள்ளவளாகவும் அவரது மார் பில் வசித்து வந்தாள். அவ்வாறு அவள் நூறு மன்வந்தர காலம் வசித்த பிறகு பிரபஞ்சத்திற்கெல் லாம் அடிப்படையான பொன்னெனப் பிரகாசிக்கும் ஒரு குழந்தை யைப் பெற்றாள். பெற்றதும் அந்தக் குழந்தையைச் சிறிதும் இரக்க மின்றி பிரம்மாண்ட கோள ஜலத்தினில் வீசியெறிந்தாள். அதைப் பார்த்ததும் கிருஷ்ணர், "ஏ! கடின சித்தமும் கோபக்குணமும் உள்ளவளே! நீ அந்தப் பிள்ளையை விட்டெறிந்து விட்டதால் நீயும் உன்னம்சமாகப் பிறக்கும் தேவதாஸ்திரீகளும் பிள்ளையின்றி நித்திய யுவதிகளாவீர்கள்!" என்று சபித்தார்.

இந்நிலையில் அந்தத் தேவியின் நாக்கு நுனியிலிருந்து அதி வேகமாக ஓர் கன்னிகை தோன்றினாள். அவள் வெண்மையுருவம் வாய்ந்தவளாகவும், வெண்ணிற ஆடை பூண்டு, வீணையும் புத்தக

மும் கைகளில் ஏந்திக் கொண்டு ரத்திஞபரண அலங்காரங்களோடு தோன்றினுள். சில காலம் சென்ற பிறகு அந்தத் தேவி, வலப் பாகம் ராதையாகவும் இடதுபாகம் லக்ஷ்மியாகவும் பிரிந்தாள். அவ்வாறே கிருஷ்ணமூர்த்தியும் வலப்பாகம் இருகைகளுள்ள புருஷ ஞகவும் இடப்பாகம் நான்கு கைகளுள்ள புருஷஞகவும் பிரிந்தார். பிறகு கிருஷ்ணமூர்த்தி வாக்குத் தேவியையும், ராதை,லக்ஷ்மிதேவி யையும் நான்கு கைகளுள்ள நாராயணருக்குப் பத்தினிகளாக இருக்கவேண்டும் என்ருர். அவ்வாறே அவர்கள் நாராயணரோடு வைகுண்டம் சென்று வசிக்கலாஞர்கள் அவர்களுக்குப் பிள்ளைகள் பிறக்காததால் நாராயணர், தம் அங்கத்திலிருந்து நான்கு கைகளை யுடைய கூட்டத்தினரை உருவாக்கி, தேஜஸ், வடிவு, குணம், உருவம் ஆகியவற்றில் மகா விஷ்ணுவுக்கு இணையாக விளங்கும்படி பிறப்பித்தார். அவ்வாறே லக்ஷ்மிதேவியும் தன் உடலிலிருந்து கோடி கோடிக் கன்னியர்களை உண்டாக்கினுள். கோகுலத்தில் கிருஷ்ணனின் ரோம கூபத்திலிருந்து அநேக கோபர்கள் பிறந்தார் கள். அவர்கள் வயசு, தேஜஸ், உருவம் குணம் வலிமை பராக் கிரமம் முதலானவற்றில் கிருஷ்ணருக்குச் சமமானவர்களாகவும் அவரது பிராணனுக்கு சமானமான பிரியம் உடையவர்களாகவும் திகழ்ந்தார்கள். ராதையின் ரோமகூபத்திலிருந்து அநேக கோபி கைகள் பிறந்தார்கள். அக்கன்னிகைகளெல்லாம் ராதைக்குச் சம மானவர்களாகவும் ராதைக்குப் பணிவிடை புரிபவர்களாகவும் பிரிய வசனியர்களாலும் ரத்ஞபரண அலங்காரம் பூண்டவர்களாகவும் விளங்கிஞர்கள். அவர்கள் எல்லாம் நித்திய யௌவனமுள்ளவர் களாய். முன்பு ஏற்பட்ட சாபத்திஞல் பிள்ளைகள் பெறமுடியாத நித்திய கன்னிகளாகவே, இருந்தார்கள்.

இந்நிலையில், நாராயணியாகவும் ஈசானியாகவும் துர்க்கா தேவியாகவும் அஞதியான விஷ்ணு மாயையாகவும் உள்ள கிருஷ்ண சக்தியான தேவி தோன்றினுள். அவள் கிருஷ்ணரின் புததியைத் தன் வசப்படுத்திக் கொண்டிருப்பவள். தேவியருக் கெல்லாம் பீஜரூபமாயும் மூலப்பிரகிருதியாயும் விளங்குப ள். முழு நிறைவுள்ள பரிபூரணி! தேஜோரூபிணி! உருக்கிய பொன்னைப்போல் ஒளி வீசுபவள்! உதய சூரியனைப்போல் பிரகாசிப்பவள். மூன்று கண் களும் புன்னகையும் கொண்டவள். பலவிதமான ஆயுதங்களைத் தரித்திருக்கும் ஆயிரம் கைகள் உள்ளவள். பிரகாசமான ஆடை களாலும் ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவள். அவளுடைய அம்சாம்ச கலையிஞலே எல்லாப் பெண்களும் ஜனங்களும் தோன்றி ஞர்கள். அவ்வாறு தோன்றியவர்களெல்லாம் மோகித்திருக்கச் செய்யும் மாயையுள்ளவள். எல்லாச் செல்வங்களையும் சம்பத்து களையும் விருப்பங்களையும் வழங்குபவள். உலகினருக்கு கிருஷ்ண பக்தியைக் கொடுப்பவள். வைஷ்ணவர்களுக்கு வைஷ்ணவியாய் விளங்குபவள்! முமுக்ஷுக்களுக்கு மோக்ஷத்தையும் சுகவாசிகளுக்கு

சுகத்தையும் தருபவள். சுவர்க்கத்தில் சுவர்க்க லக்ஷ்மியாகவும் கிருகத்தில் கிருகலக்ஷ்மியாகவும் தபசிகளிடம் தபசியாயும், அரசர்களிடம் செல்வபாக்கியரூபிணியாகவும் அக்கினியுள் உஷ்ணமாகவும், சூரியனில் வெய்யிலாகவும் சந்திரனிடம் நிலவாகவும் தாமரையில் காந்தியாகவும் பரமாத்மா கிருஷ்ணமூர்த்தியிடம் சர்வ சக்தி வடிவமாகவும் இருக்கிருள்.

எந்தத் தேவியினுல் ஆன்மாவானது சக்தியுள்ளதாக இருக்கின்றதோ, உலகமெல்லாம் சக்தியுள்ளதாக இருக்கின்றதோ, எந்தத் தேவியில்லாவிட்டால் உலகங்களனைத்தும் ஜீவனற்று மடிந்தது போலத் தோன்றுமோ, எந்தத் தேவி சம்சாரம் என்ற விருட்சத்திற்கு வித்தாக இருக்கின்ருளோ, பசி, தாகம், தூக்கம், சோம்பல், பொறுமை, துணிச்சல், அமைதி, நாணம், சாந்தி, துஷ்டி, புஷ்டி, மயக்கம், தேஜஸ் முதலிய உருவங்களைக் கொண்டு இருக்கிருளோ அந்த ராதிகாதேவி பகவானை தோத்திரஞ் செய்து அவருக்கு எதிரில் நின்ருள். பகவான் அவளுக்கு ரம்மியமான ரதின சிம்மாசனம் தந்தருளினுர்.

பின் பகவானின் நாபிக் கமலத்திலிருந்து (கொப்பூழ் தாமரையிலிருந்து) கமண்டலதாரியாகவும், ஞானிகளுக்குள் மிகச் சிறந்த தபசியாகவும், பிரம்ம தேஜசினுல் ஜொலிப்பவராகவும் நான்கு முகங்களினுல் துதிப்பவராகவும் விளங்கும் பிருமா உற்பத்தியானுர். அவரோடு நூறு சந்திரோதயங்கள் போன்ற பிரகாசமும் பேரழகும் அக்கினி ஜொலிப்பும், ரத்தினுபரண அலங்காரங்களும் உள்ள ஒருதேவியும் தோன்றினுள். அவள் இரத்தினமயமான அரியணையில் வீற்றிருப்பவள். பகவதியைப் போற்றித் துதிப்பவள்.

அப்போது பகவான் இடப்பாகம் மகாதேவ உருவமாகவும் வலப்பாகம் கோபியர் நாதரான கிருஷ்ணராகவும் இரண்டு உருவெடுத்தார். அவ்விருவரில் மஹாதேவர் சுத்தப் பளிங்கைப்போலப் பிரகாசமும் கோடி சூரியோதயம் போன்ற காந்தியும் உள்ளவர். திரிசூலந்தரித்தவர். புலித்தோல் பூண்டவர். உருக்கிய பொன்னைப் போல் ஒளிரும் விரிசடையும், விபூதி பூசப்பட்ட தேகமும் உடையவர். தலையில் சந்திரனை அணிந்த நீலகண்டர், திகம்பரர்; எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்படுபவர்: வலதுகரத்தில் ரத்னமாலை கொண்டுள்ளவர். ஐந்து முகங்களால் அநாதியான பரப்பிரம்மத்தை உணர்த்துபவர். அனைத்திற்கும் காரண காரணர். சத்தியவடிவினர். சகல மங்களங்களுக்கும் மங்கள புருஷர். பிறப்பு, மூப்பு, இறப்பு, பிணி, துயரம், பயம் முதலானவற்றை ஒழிப்பவர். மிருத்யுவுக்கு மிருத்யுவாயும் கிருஷ்ணமூர்த்தியாகவும் இருக்கும் பரமாத்மாவைப் போற்றித் தியானித்து ரத்தின சிம்மாசனத்தில் அவர் அமர்ந்திருந்தார்.

# 3 சிருஷ்டியின் துவக்கம்

நாராயணர் மேலும் சொல்லுகிறார்: நாரதரே! முன்பு நீரில் விடப்பட்ட குழந்தையானது, ஒரு பிரும்மாவின் ஆயுட் காலம் வரை அந்த நீரிலேயே இருந்து, அந்தக் காலத்தின் இறுதியில் இரண்டு உருவங் கொண்டது. அதன் நடுவில் நூறு கோடிக் கதிரவன் உதித்தாற் போன்ற காந்தியுள்ள குழந்தையாயும், பசியால் பீடிக்கப்பட்டும் சிறிது காலம் அழுது கொண்டிருந்தது. நீர் மோதுவதால் தாக்கப்படாததாயும், அநேகம்பிரும்மாண்டங்களுக்கு நாதனாகப் போவதாயும், ஆகாயத்தைப் பார்ப்பதாயும், சிறியதில் சிறிதாயும், பெரியதில் பெரியதாயும் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியின் தேஜஸில் ஓர் அம்சமாகவும், உலகத்திற்கெல்லாம் ஆதாரமாயுமுள்ள மஹாவிராட் என்ற பகவானும், இரண்டாவது ரூபமான மகாவிஷ்ணு பகவானுமாக தனித் தனியாகத் தத்தமது ரோம கூபங்களில் சகலமான பிரபஞ்சங்களையும் படைத்தார்கள். அவர்களால் படைக்கப்பட்ட மும்மூர்த்திகளும் பிரபஞ்சங்களும் எண்ண முடியாதனவாகும் ஒவ்வொரு பிரம்மாண்டத்திலும் ஒவ்வொரு பிரும்ம, விஷ்ணு, ருத்திரர்கள் இருக்கிறார்கள். பிரும்மனது உலகம்வரை எண்ணப்படும் மேல் ஏழு உலகமும் பாதாளம் இறுதியாக எண்ணப்படும் கீழ் ஏழு உலகமும் சேர்ந்த ஸந்தத்திற்கு ஒரு பிரம்மாண்டம் என்று பெயர். அதற்கும் மேலாக வைகுண்டம் அமைந்துள்ளது அதற்கும் மேல், ஐம்பது கோடி யோசனை தூரத்தில் நித்தியமாயும் சத்திய சொரூபமாகவும் இருப்பது—கோலோகம். தாவரஜங்கம பேதங்களோடும் நான்கு வகைப்பட்ட வருண பேதங்களோடும் நாற்பத்தொன்பது தீவுகளோடும் பாம்பு முதலிய ஊர்வனவான உயிரினங்களின் பேதங்களோடும் மலைகளோடும் ஏழு பெருங் கடல்களோடும் இருப்பது பூவுலகமாகும். இந்தப் பூலோகத்திற்கு மேலே இருப்பது புவர் லோகம். சுவர்லோகம், ஜனலோகம், தபோலோகம், சத்திய லோகம், பிரம்மலோகம் முதலிய உலகங்கள் அமைந்துள்ளன. அவையும் அவற்றில் அடங்கியுள்ள பிரபஞ்சங்களும் கூட அழியக் கூடியன. கோலோகமும் வைகுண்டமும் தான் எந்தக் காலத்திலும் அழிவற்றதாகவும் நித்தியமானதாகவும் இருப்பனவாகும். தேவியின் ரோம கூபம் ஒவ்வொன்றிலும் ஒவ்வோர் அண்டம் இருக்கிறது. இந்தப் பிரம்மாண்டங்களின் எண்ணிக்கையைக் கிருஷ்ண பரமாத்மாவாலும் கணக்கிட முடியாது என்றால் மற்றவரால் எப்படிக் கணக்கிட்டுச் சொல்ல முடியும்? ஒவ்வொரு பிரம்மாண்டத்திலும் மும்மூர்த்திகளும் முக்கோடி தேவர்களும்



திக் பாலகர்களும் நவக்கிரகங்களும் நட்சத்திரங்களும் இருக்கின்றன.

மஹாவிராட் புருஷன், ஆகாயத்தை அடிக்கடி அண்ணாந்து பார்த்துத் தன்னைத் தவிர, வேறு ஒருவருமே இல்லாததால், மிகவும் சிந்தித்துக் கண்ணீர் விடலானார். பிறகு ஞானத்தால் தெளிவடைந்தார். கருத்த திருமேனியும் இரண்டு திருக் கரமும் பொன்னுடையும் கொண்டு பக்தர்களுக்கு அருள் புரியும், பிரும்ம சொருபமாய், புல்லாங் குழலோடு தோன்றிய கிருஷ்ண பகவானை விராட்புருஷன் பார்த்துச் சிரித்தார். அப்படிச் சிரித்த குழந்தையைத் தந்தையான பரமாத்மா பார்த்து, "நீ என்னைப் போன்ற ஞானமுடையவனாகவும், பசி, தாகம், மூப்பு, ரோகம், சோகம், மரணம் ஆகியவை இல்லாதவனாயும் யாவருக்கும் வர மளிப்பவனாகவும் அநேகம் பிரம்மாண்டங்களுக்கு ஆதாரமாகவும் படைப்புக்கு லயம் வருமளவும் இருப்பாயாக!" என்று கூறி, அவனுடைய காதில் உத்தமமான பிரணவத்தை முதலிலும், அக்கினி பத்தினியின் பெயரை இறுதியிலும் சதுர்த்தியந்தமான கிருஷ்ணன் என்பதை நடுவிலுமுள்ள விக்கினங்களை யெல்லாம் போக்கும் ஷடாக்ஷர மந்திரத்தை மும்முறையும் உபதேசித்து "விராட் புருஷனே! எல்லா உலகங்களிலும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் எதை நிவேத்தியம் செய்தாலும் அதில் பதினாறில் ஒரு பங்கை உனக்கும், பதினைந்தில் ஒரு பங்கை மஹாவிஷ்ணுவுக்கும் கொடுக்க வேண்டும். கிருஷ்ணமூர்த்தி நிர்க்குணராயும் பரிபூரண ராயும் உள்ளவர். ஆகையால் அவர் நிவேதனத்தினால் திருப்தி யடைவதில்லை. அவருக்குச் செய்யும் நிவேதனமெல்லாம் லக்ஷ்மி

நாதனென விராட்டுக்கே சேரும்!'' என்று கூறி, மீண்டும் ''உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

அதற்கு விராட் புருஷர், கிருஷ்ணமூர்த்தியான பரமேஸ்வரனைப் பார்த்து ''நான் வாழுங்காலம் குறைவானாலும் அதிகமானாலும் அசைவற்ற உமது மலரடியில் பக்தியுடையவனாக இருக்க வேண்டும். இவ்வுலகில் பக்தியுள்ளவன்தான் ஜீவன் முக்தனாய் வாழ்கின்ற புகழுடையவனாவான். பக்தியில்லாதவன் உயிர் வாழ்ந்தாலும் நடைப்பிணமென இகழ்ச்சியுறுவான். பக்தியில்லாதவனுக்கு ஜபம், தபம், யக்ஞம், பூஜை, விரதம், உபவாசம், புண்ணியம், தீர்த்த யாத்திரை, க்ஷேத்திராடனம் முதலியவைகளால் யாதொரு பயனும் இல்லை!'' என்று துதித்தார்.

அதைக் கேட்டதும் கிருஷ்ணன், விராட் புருஷனை நோக்கி ''நீ என்னைப் போல எண்ணற்ற காலம் இருந்து, எண்ணற்ற பிரம்மாக்களுக்குப் பிரபுவாய், ஒவ்வொரு அண்டத்திலும் அம்சத்தால் கூடிய விராட்புருஷனாய் வாழ்வாயாக உன்னால் பிறக்கவிருக்கும் பிரம்மன் பிரபஞ்சத்தையெல்லாம் படைப்பான். அவனது நெற்றியிலிருந்து பதினொரு ருத்திரர்கள் சிவரூபிகளாகத் தோன்றுவார்கள்· அவர்களில் காலாக்கினி ருத்திரர் சகல பிரபஞ்சங்களையும் சங்கரிப்பார். விஷ்ணுவும் எனது சிறிய அம்சமாகப் பிறந்து என்னிடம் பக்தியுள்ளவராய் காக்கும் தொழில் புரிவார். என் அருளால் நீ நாள்தோறும் என்னையும் என் மார்பிலிருக்கும் உன் அன்னையையும் சலனமற்ற புத்தியோடு பார்ப்பாயாக இனி நான் என் இருப்பிடம் செல்கிறேன். நீ இங்கேயே இருப்பாயாக!'' என்று சொல்லி விட்டுப் பிரும்மனை நோக்கி, ''பிள்ளாய்! நீ படைப்புத் தொழிலின் பொருட்டு விராட் புருஷனுடைய நாபிக் கமலத்தில் பிறப்பாயாக!' என்று கூறி விட்டு ருத்திரரைப் பார்த்து, ''நீ பிரும்மாவின் நெற்றியிலிருந்து தோன்றுவாயாக!'' என்றும் கட்டளையிட்டு மறைந்தார். பிறகு, அந்த மஹாவிராட் புருஷனுடைய ரோம கூபத்திலிருந்து பிரமாண்ட கோளக நீரில் அவரது அம்சமாகிய சிறிய விராட் புருஷர் தோன்றினார். அவர் கரியராயும் இளமை வடிவினராயும் பீதாம்பரம் அணிந்தவராய், நீர்மயமான சயனத்தில் படுத்திருப்பவராகவும், புன்னகை செய்து கொண்டே தோன்றினார். அவரது நாபிக் கமலத்தில் பிருமன் தோன்றி, ஒரு லக்ஷ யுகங்கள் வரையில், தான் தோன்றிய அந்தத் தாமரையைச் சுற்றிச் சுற்றிச் சஞ்சரித்தும், அதன் நுனியை அறியாமல், மிகவும் யோசித்த வண்ணம் குழம்பினார். பின்னர், பகவானைத் தியானித்து, அதன் பயனாக, சிறிய விராட் புருஷரையும் அவரது ரோம கூபத்தில் பிரம்மாண்டத்தையும், கோப கோபியருடன் கூடிய கோலோகத்தில் கிருஷ்ணரையும் தரிசித்துத் துதித்து அவரது அருளைப் பெற்று, தமது படைப்புத் தொழிலைத் துவங்கினார் அப்போது பிருமனின் மனதிலிருந்து

ஜனகன் முதலிய பிள்ளைகள் தோன்றினார்கள். அதன் பின்னர், ஐம்பத்தோரு ருத்திரர்கள் தோன்றினார்கள். சின்ன விராட்டின் இடது புறத்திலிருந்து, உலகைக் காக்கும் நான்கு திருக் கரங்களை யுடைய விஷ்ணு பகவான் தோன்றினார். அவர் சுவேதத்வீபத்தில் வசித்தார். பிறகு, சுவர்க்கத்தையும் மனிதர்களையும், பாதாளத்தையும் தாவர ஜங்கமங்களையும் பிரும்மா படைத்தார். இந்த விதமாகவே, சின்ன விராட்டின் ரோம கூபம் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு அண்டம் இருக்கிறது. அந்த அண்டங்கள்தோறும் மும்மூர்த்திகள் இருக்கிறார்கள். இது வரை, ஸ்ரீ கிருஷ்ணரின் கீர்த்தியைச் சொன்னேன். இனி மேல், நீ எதைக் கேட்க விரும்புகிறாய்?'' இவ்வாறு நாராயணர் கேட்டார்.

## ஸரஸ்வதி பூஜை—விதி முறைகள்

நாரதர், நாராயணரைப் பார்த்து, ''உங்கள் தயவினால் அமுதம் போன்ற பல சரிதங்களைக் கேட்டறிந்தேன். இப்போது, பிரகிருதி சக்திகளில் எந்தச் சக்தியின் பூஜையானது மண்ணுலகில் எந்த மனித இனத்தால் நடைபெறப் போகிறது, யாரால், எந்தச் சக்தி துதிக்கப்பட்டாள் என்பதையும், எந்தெந்த சக்தி தேவதைகளால், யார் யாருக்கு வரங்கள் வழங்கப்பட்டன என்பதையும், அவர்களுடைய சரிதங்களையும், தாங்கள் தயவு செய்து எனக்குச் சொல்ல வேண்டும்'' என்று கேட்டார்.

அதற்கு நாராயணர் கூறியது:

முன்பு நான், கூறிய ஸ்ரீ துர்க்கா தேவி உட்பட்ட ஐந்து வகைச் சக்திகளின் அம்ச ரூபமாகவும் கலா ரூபமாகவும் காளி, வசுந்தரை, கங்கை, ஷஷ்டி, மங்கள சண்டிகை, துளசி, நித்திரா தேவி, ஸ்வதா, ஸ்வாஹா, தக்ஷிணா என்ற தேவியர்கள் தோன்றினார்கள். இந்தச் சக்தி தேவியரின் பூஜை பிரசித்தமானது. இவர்களுடைய சரிதம் அமிர்தமாக, செவிக்கு இனிமை தருவது. சர்வ மங்களங்களுக்கும் காரணமாகவும், புண்ணியம் நிறைந்ததாகவும் இருப்பது. இவர்களில் ஸ்ரீ துர்க்கை, இராதை என்ற சக்திகளின் சரிதங்கள் மிகப் பெரியவை, மிகவும் விரிவானவை. ஆகையால், அவற்றைப் பிறகு சொல்லுகிறேன். இப்போது, மற்றவர்களுடைய சரிதங்களையும், ஆன்மாக்களின் கர்மப் பிரிவுகளையும் சொல்லுகிறேன். இதைச் சொல்லும் முன்பாக, எவளது திருவருளால், மகா மூடனும் மாபெரும் அறிஞனவானோ, அந்தச் சரஸ்வதி தேவியின் சரிதத்தைச் சொல்லுகிறேன், கேள்.

பரப் பிரும்ம வடிவினரான ஸ்ரீ கிருஷ்ணரின் பத்தினியான இராதையின் திருமுகத்திலிருந்து சரஸ்வதி தேவியானவள் பிரத்தியக்ஷமானாள் அவள் தோன்றியவுடனேயே, அந்தக் கிருஷ்ண மூர்த்தியையே தன் நாயகனாக அடைய வேண்டும் என்று ஆசைப் பட்டாள். காமரூபிணியும் அனைத்துலக அன்னையுமான அவளுடைய எண்ணத்தை ஸ்ரீ கிருஷ்ணர் அறிந்து கொண்டு அந்தக் கலா தேவியைப் பார்த்து, ''என்னுடைய அம்ச பூதனும், நான்கு கரங்களும், சர்வ குணங்களும், இளமையும் அழகும் வாய்ந்த நாராயணன் ஒருவன் இருக்கிறான். அவன் எனக்குச் சமமானவன். காமமுள்ள மங்கையரின் காமத்தை நிறைவு செய்பவன். கோடி மன்மதர்களின் பேரழகு வடிவமும் கொண்டவன்; அவனையே உன் கணவனாக அடைவாயாக! அழகியே! நீ, என்னையே உனது கணவராகக்கொண்டு, இங்கேயே இருக்க வேண்டும் என்று விரும்புவாயானால் நானோ தனியனல்லன்; என்னோடு இராதை இருக்கிறாள். தேஜஸ், குணம், உருவமைப்பு, ஆகியவற்றில் அவள் எனக்கு ஈடானவளாகவும், என் ஆன்மாவின் அதிஷ்டான தேவதையாகவும் இருப்பதால், உனக்கு என்ன நன்மை எப்படி யுண்டாகும்? ஒருவன், எல்லோரையும் விடப் பலவானாக இருந்தால்தான், மற்றவர்களை அடக்கியாண்டு காப்பாற்ற முடியும், அவன் பலவீனனாக இருந்தால், அவனால் மற்றவர்களைக் காக்க முடியாதல்லவா? அது போலவே, நான் யாவற்றையும் அடக்கியாண்டு காக்க வல்லவனாகவும் யாவற்றையும் தண்டிக்க வல்லவனாக இருந்துங் கூட, அந்த இராதையை மட்டும் அடக்கியாளும் ஆற்றல் எனக்கில்லை. ஏனென்றால், அவள், என் பிராணனுக்கே அதிஷ்டான தேவதையான மஹா சக்தியாக இருக்கும்போது, அவளை விட எனக்கு எப்படி வலிமையிருக்கும்? ஆகவே நான் அவளை விட்டு உனக்கு எப்படிச் சுகமளிக்க முடியும்? ஆகையால் உயிரை விடக் குமாரன் பிரியத்துக்குரியவனாகையால் என் புத்திரனான நாராயணனையே உன் நாயகனாக அடைய வேண்டும் என்று நான் சொன்னேன். நீ என்னுடைய கட்டளையை மீறாமல் அவனிடம் போய்ச் சேர்ந்தால், உனக்கு நெடுங்காலச் சுகமும் மகிழ்ச்சியும் உண்டாகும். அந்த நாராயணனும் லக்ஷ்மி தேவியோடு இருக்கிறானே, அப்படியிருக்க அவனால் மட்டும் எனக்கு எங்கிருந்து சுகம் உண்டாகும் என்று நீ என்னைக் கேட்கலாம். ஆனால், அந்த லக்ஷ்மி தேவியானவள் லோபம், காமம், மோகம், குரோதம், ஹிம்சை முதலிய தீய பண்புகள் இல்லாதவள். தேஜஸ், ரூபம், குணம் முதலியவற்றால் அவள் உனக்கு இணையானவள். அவள் அப்படியிருப்பதால் உனக்குச் சுகம் உண்டாகும் என்பதில் ஐயமில்லை. உன் வாழ்நாள் மிகுந்த அன்பும் மகிழ்ச்சியும் நிறைந்ததாக இருக்கும். பெண்ணே! அந்த நாராயணனும், உங்கள் இருவரிடமும் சரி சமமான மதிப்பளிப்பவனாக இருப்பான். அவனோடு வாழ்வதால், எல்லாப்



பிரபஞ்சத்திலும் நீ மிகவும் மதிப்போடு பூஜிக்கப்படும் பூஜைகளை யடைவாய். உன் பூஜைக்குரிய காலம் எப்போது வரும் என்ருல், மாசி மாதத்து சுக்கில பக்ஷத்துப் பஞ்சமி நாளும் கல்வி கற்கத் துவங்கும் நாளும் நீ பூஜிக்கப் படும் நாட்களாகும் அந்த நாளில் மனுக்கள், மனிதர்கள், தேவர்கள், முனிவர்கள், மும் மூர்த்திகள், வசுக்கள், யோகீ ஸ்வரர்கள், சித்தர்கள், நாகர் கள், கந்தர்வர்கள், அரக்கர் கள் ஆகியோர் உன்னைப் பூஜிப்பார்கள் அவர்கள் கற்பம் தவருமல் புலனடக்கத் துடன் நியமம் தவருமல், கண் ணுவசாகையில் கூறியுள்ளபடி கடத்திலாவது புத்தகத்திலா வது உனது உருவை ஆவா ஹனம் செய்து, தியானித் துத் துதிப்பார்கள். வாசனை மிக்க சந்தனத்தால் பூசப் பட்ட குளிகைகளைப் பக்தி சிரத்தையோடு லாவது வலது கரத்திலாவது கவசமாக அணிந்து கொள்ளு வார்கள். கலைஞர்கள் அந்தப் பூஜா காலம் தோறும் உன்னை வழிபட்டு, உன் புகழ் பாடித் துதிப்பார்கள்!'' என்று கலை மகள் மனம் மகிழும்படிக் கூறி அவளை வைகுண்டத்துக்கு அனுப்பி வைத்தார். அவளும் மகிழ்ச்சியுடன் அங்கு சென்று, சுகம் பெற்று யாவராலும் பூஜிக்கப்பட்டு வருகிருள்.

இவ்வாறு நாராயணர் கூறி யதும் நாரத முனிவர் குறுக் கிட்டு, ''உத்தமரே! உயர்ந்த வரே! வேதமறிந்த வித்தகரே!

அந்த வாக்குத் தேவியை நாள்தோறும் வழிபடத் தக்க வழிபாட்டு முறைகள், கவசம், தியானம், பூஜைக்குரிய நிவேதனம், மலர்கள், சந்தனம் முதலியவற்றைத் தாங்கள் கூற வேண்டும்! அவை யனைத்தும் வேத விதியாக இருப்பதாலும் அவற்றைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வமும் ஆவலும் அதிகம் இருப்பதாலுமே கேட்கிறேன்!'' என்றார்.

நாரதரது ஆவலை அறிந்த நாராயணர், அவருடைய வேண்டு கோளுக்கு இணங்கிக் கூறலானார்.

''நாரதரே! கண்ணுவ சாகையில் சொல்லப்பட்ட பத்ததியின் படி, ஜகன்மாதாவான சரஸ்வதி தேவியை வழிபடும் விதி முறைகளை உமக்குச் சொல்லுகிறேன் கேட்பீராக. மாசி மாத சுக்ல பக்ஷ பஞ்சமி திதியிலும் வித்தியாரம்ப நாளிலும் முற்பகலில் தூய்மையோடு அன்றாடக் காரியங்களை முடித்துக் கொண்டு கண்ணுவ சாகை விதிப்படி அல்லது ஆகம விதிப்படி விக்கினேஸ் வரரை முதலில் பூஜித்து விட்டுப் பக்தியோடு கடத்தை ஸ்தாபிக்க வேண்டும். பிறகு அதில் இஷ்ட தேவதையான சரஸ்வதி தேவியைத் தியானித்து ஆவாகனம் செய்து மறுபடியும் சோட சோபசாரத்தால் பூஜை செய்ய வேண்டும்

நவநீதம், தயிர்; பால், பொரி, எள், லட்டு, கரும்பு, கரும்பின் சாறு, வெள்ளைப் பாகு, வெல்லம், மது, ஸ்வஸ்திகம், சர்க்கரை, பிளவு படாத வெள்ளைத் தான்ய அட்சதை, அவற்றால் உண் டாக்கிய அவல், வெண்மோதகம், நெய்யும் உப்பும் கலந்த வெண் பொங்கல், நெய் கலந்து தினை, கோதுமை, சுவஸ்திகம், (ஆசனம்) ஆகியவற்றில் மாம்பழம், வாழைப்பழம் முதலியவற்றைத் தோல் உரித்து, பழம் சேர்த்துப் பிசைந்து செய்யும் பலகாரம், பரமான்னம், நெய் கலந்த தூய அன்னம், தேங்காய், இளநீர், வெட்டிவேர், பக்குவ நிலையிலுள்ள வாழைப் பழம், வில்வப் பழம், இலந்தைப் பழம், அந்தந்த பருவ காலத்திலுண்டாகும் வெள்ளைப் பழங்கள், நறுமணம் மிக்க வெள்ளை மலர்கள் மாலைகள், வெள்ளைச் சந்தனம், புதம் புதிய வெண்ணிற ஆடை, அழகான சங்கு அணிகள், முத்தாரம், ஆபரணம் முதலியன சரஸ்வதி பூஜைக்குரியனவாகும்.

இனி வேதத்தில் சொல்லப்பட்டும் எல்லோராலும் புகழப்படும் சரஸ்வதி தேவியின் திருவருளைப் பெற்று அறிவுப் பிரமை நீங்கும் படியான தியானத்தைச் சொல்லுகிறேன்.

''வெண்மை நிறமுடையவளாயும், புன்னகையுடன் சந்துஷ்டி யும் புஷ்டியான திருமேனியும் கொண்டவளாயும், தூய்மையான ஆடைகளை அணிந்து வீணை புத்தகம் ஆகியவற்றைத் தரித்தவளாக வும், உயர்ந்த இரத்தின ஆபரண அலங்காரியாகவும், மும் மூர்த்திகள் முதலிய தேவகணங்களால், நன்கு பூஜிக்கப்பட்டவளா

யும் முனிவர்களால் போற்றப்பட்டவளுமான சரஸ்வதி தேவியைப் பக்தியோடு வணங்குகிறேன்'' என்ற தியானத்தைச் சொல்லி, மூல மந்திரத்தால் தியானிக்க வேண்டும் அதனாலேயே, அர்க்கிய, பாத்திய, ஆசமனாதிகளை அளித்துக் கவசத்தைத் துதித்து, சாஷ்டாங்கமாகக் கும்பிட வேண்டும் இந்த சரஸ்வதி தேவி யாரிடம் பிரியமாக இருக்கிறாளோ, அவர்களுடைய நித்திய வேலைகள், நித்தியமாக முடிந்து விடுகின்றன. வித்தியாரம்ப காலத்திலும், வருஷ கால முடிவிலும், பஞ்சமி தினத்திலும் எல்லோராலும் பயன்படுத்தப்படும் மூல மந்திரமும் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் அஷ்டாக்ஷரமும், எவருக்கு எந்த மந்திரம் உபதேசிக்கப் பட்டிருக்கிறதோ அந்த மந்திரமும், தியானத்துக்கு உரியனவாகும். லக்ஷ்மி, மாயை ஆகியோரின் பீஜாக்ஷரங்களை முதலிலும், சதுர்த்தி யந்தமான சரஸ்வதி பதம் நடுவிலும், அக்கினி பத்தினியைக் குறிக்கும் பதத்தை முடிவிலும் கொண்ட மந்திரம், பக்தர்களுக்குக் கற்பகத்தருவாகவே விளங்குகிறது.

முற்காலத்தில் இந்த மந்திரத்தை பாரத தேசத்தில் கங்கைக் கரையிலுள்ள புண்ணிய க்ஷேத்திரத்தில் வால்மீகி மகரிஷிக்கு நாராயணர் உபதேசித்தார். அதைப் பதரிகாசிரமத்தில் பிருமதேவர் பிருகு முனிவருக்கும், பிருகு முனிவர் புஷ்கர த்வீபத்தில் சூரிய மலையில் சுக்கிரருக்கும், சந்திர மலையில் மரீசி முனிவர் பிரஹஸ்பதிக்கும், பாற்கடலில் ஜரத்காரு மகரிஷி ஆஸ்திகருக்கும், மேரு மலையில் விபண்டகர் ரிஷ்யசிருங்கருக்கும், ருத்திரமூர்த்தி கணாதருக்கும் கௌதமருக்கும், சூரியன் யாக்ஞ வால்கியருக்கும், காத்யாயனருக்கும், பலி ஆட்சி செலுத்தும் சுதலலோகத்தில் ஆதிசேஷன் பாணினிக்கும் பரத்வாஜருக்கும், சாகடாயனருக்கும் உபதேசித்தார்கள். அந்த மந்திரத்தை நான்கு லக்ஷம் தடவை உரு ஜெபஞ் செய்பவன், மந்திர சித்தி பெற்று, அதனால் தேவ பிரகஸ்பதிக்குச் சமானமாகி விடுவான்.

முன்பு கந்தமாதன மலையில் பிருகு முனிவர், பிருமாவை வணங்கி, ''பிரும்ம ஞானத்தைத் தெளிவாக அறிந்தவர்களில் உயர்ந்தவரே! எல்லாவற்றையும் படைத்த சிருஷ்டி கர்த்தாவே! சகல பிரபஞ்சங்களையும் வெல்லும் பொருட்டு, எனக்குச் சரஸ்வதி கவசத்தையும் அயாதையாமம் என்ற மந்திரங்களையும் எனக்கு உபதேசிக்க வேண்டும்.'' என்று வேண்டினார். அதற்குப் பிருமதேவர், பிருகு முனிவரை நோக்கி, ''வேதத்துள் சாரமாகவும் வேதத்தால் பூஜிக்கப்பட்டு, வேதத்தில் சொல்லப்பட்ட இரகசியமாய், கற்பகம் போல காமத்தைத் தருவதாய், ஒருபோதும் கேட்டறியாத விந்தையான மந்திரங்களுடன் அமைந்த கவசத்தை, கோலோகத்தில் கிருஷ்ண பகவான் எனக்கு உபதேசித்தார். சுக்கிராசாரியார், அந்தக் கவசம் தரித்து அசுரர்களின்

ஆசிரியரானார். தேவகுரு பிரஹஸ்பதி, அந்தக் கவசத்தைத் தரித்து மாபெரும் அறிஞரானார். வால்மீகி முனிவர் அதைப் படித்தும் தரித்தும் கவிஞர்களில் உயர்ந்தவரானார். சுவாயம்புவ மனு அதைத் தரித்து, எல்லாராலும் வணங்கப்பட்டார். அது போலவே, கணாதமுனிவர், கௌதமர், கண்ணுவர், பாணினி, சாகதாயனர், தக்ஷன், காத்தியாயனர், சாதாதபர், சம்வத்தர், வசிஷ்டர். பராசரர், ஆகியோர் நூலியற்ற வல்லவரானார்கள். ரிஷ்யசிருங்கர், பரத்வாஜர், ஆஸ்திகர், தேவலர், ஜைகிஷவ்யர், யயாதி, ஆகியோர் அனைவராலும் தொழப்பட்டனர் இந்த மந்திர கவசத்தினாலேயே வியாசமகரிஷி வேதங்களை வகைசெய்வதையும் புராணங்களை இயற்றுவதையும் விளையாட்டாகவே செய்பவரானார். இந்தக் கவசத்துக்கு ரிஷி—பிரஜாபதி! சந்தஸ்—பிரஹதி! தேவதை — சாரதாம்பிகை! விநியோகம்—சகல தத்துவங்களை அறிவதும் சகல புருஷார்த்தங்களை நிறைவேற்றுவதும் பலவகைக் கவிதைகளைப் பாடுவதுமாகும்

## சரஸ்வதி கவசம்

"ஸ்ரீ ஸரஸ்வதி தேவி சிரசை காக்க; வாக்குத் தேவி நெற்றியைக் காக்க; ஸரஸ்வதி செவிகளைக் காக்க; பகவதியான கலைமகள் கண் விழிகளைக் காக்க; வாக்வாதினி நாசியைக் காக்க; வித்யாதிஷ்டான தேவதை வாயிதழ்களைக் காக்க; பிராம்மி பல் வரிசைகளைக் காக்க; ஐம் என்ற ஓரெழுத்து மந்தரம் கண்டத்தைக் காக்க; ஹ்ரீம் என்ற மந்திரம் கழுத்தைக் காக்க; ஸ்ரீம் என்ற அக்ஷரம் புயங்களைக் காக்க; வித்யாதிருஷ்டான்ம தேவதை மார்பைக் காக்க; வித்தை வடிவினள் நாபியைக் காக்க; கலைவாணி, கைகளைக் காக்க; எல்லா எழுத்தின் வடிவினி தாள்களைக் காக்க; வாக்கதிஷ்டான தேவி, யாவற்றையும் காக்க; சர்வகண்டவாசினி கிழக்குத் திக்கில் காக்க; யாவர் நாவிலும் வசிப்பவள் அக்கினி திக்கில் காக்க; உயர்ந்தவளாயும், ஸரஸ்வதி வடிவினளாயும் விளங்கும் மந்திர ராஜ தேவதை, தென் திக்கில் காக்க; மூன்றெழுத்து வடிவினள் நிருதி திக்கில் காக்க, ஜிஹ்வாக்ரவாசினி மேற்கு திக்கில் காக்க; சர்வாம்பிகை வாயுத் திக்கில் காக்க; கத்தியவாசினி வடதிசையில் காக்க; சர்வ சாஸ்திரவாசினி ஈசானத்தில் காக்க;சர்வ பூஜிதை, ஊர்த்துவ திசையில் காக்க, நூல் உறைமடந்தை அதோ திக்கில் காக்க; கிரந்த பீஜவடிவினள் எந்தத் திக்கிலும் காப்பாளாக!'' என்று உபதேசித்தார்

பிரும்ம முனிவரே! எல்லாப் பிரபஞ்சங்களையும் ஜெயிக்கத் தக்க, பிரும்ம ரூபமான இந்தக் கவசத்தை, நான் முன்பு கந்த மாதன மலையில் தருமரிடம் கேட்டேன். நான் உம்மிடம் அன்

புடையவனுகையால், அதை இப்போது உமக்குச் சொன்னேன். பத்தியுள்ளவன் தன் குருவை 'ஆடையாபரணங்கள், சந்தனம், மலர்கள் முதலியவற்ருல் அலங்கரித்து, தண்டகாரமாக வீழ்ந்து வணங்கி, இந்தக் கவசத்தை அவரிடம் உபதேசமாகப் பெற வேண்டும். இதை ஐந்து லக்ஷம் உருச்செபித்தால், மந்திரம் சித்தியாகும். அந்தச் சித்தியினுல் சரஸ்வதி தேவியின் திருவருள் உண்டாகும். தேவ குருவுக்கு இணையான புத்தி உண்டாகும். வாக்குத் திறமையும் கவிதை இயற்றுவதில் உயர்வும், மூவுலகையும் ஜெயிக்கத் தக்க பராக்கிரமமும் உண்டாகும்.

## 5 கலைமகள் துதி

நாராயணர் மேலும் தொடர்ந்து சொல்லலானுர்: "நாரதரே! இனிமேல் விருப்பங்களை நிறைவேற்றும்சரஸ்வதி தேவியின் ஸ்தோத்திரத்தைச் சொல்லுகிறேன் இந்த துதி, யாக்ஞவால்கிய முனிவரால் இயற்றப்பட்டது ஒரு சமயம், அந்த முனிவர் தம் குரு சாபத்தினுல், எல்லா வித்தைகளையும் மறந்து, துக்கத்துடன சூரியனை அடைந்து, சோகத்துடன் அழுது துதித்தார். அப்பொழுது சூரியன். அந்த முனிவருக்கு வேத வேதாந்தங்களைக் கற்பித்து, 'இவை உன் மனதில் நிலையாகப் பதிவதற்கு, நீ கலைமகளைத் துதிப்பாயாக!'' என்று சொல்லி மறைந்தார். அது போலவே, யாக்ஞவால்கிய முனிவர், கலை மகளைப் பக்தியுடன் சிரம் தாழ்த்தித் துதிக்கலானுர்:

"அனைத்துலக அன்னையே! புத்தி இல்லாத என் மீது தயை செய்வாயாக! குரு சாபத்தினுல் கவனம் இழந்த நான், மிகவும் வருந்துகிறேன் ஞானத்தையும் ஞாபக சக்தியையும் வித்தையையும், அதை மாணவர்களுக்குப் போதிக்கும் அறிவையும், நிலையான புத்தியும் நற்குணமும் கொண்ட மாணவனையும், நூல் இயற்றும் ஆற்றலையும் எனக்கு அருள்வாயாக! அறிஞர்களின் சபையில் ஆய்வுகள் செய்யும்போது, புதிது புதிதாய்த் தோன்றும் புத்தியை எனக்குத் தருவாயாக! எப்படித் தேவதையானது பஸ்மத்தில் முளையுண்டாகச் செய்கிறதோ, அது போலவே என்னிடத்தில் வித்யா முளையை உண்டாகச் செய்வாயாக. பிரும்ம வடிவினளாயும் அநாதியான பரஞ்சோதி வடிவினளாயும் இருக்கும் சரஸ்வதி தேவியே! உனக்கு நமஸ்காரம்! சகல வித்தைகளுக்கும் அதிதேவதையே! உனக்கு நமஸ்காரம் விசார்க்கம் (:) பிந்து (.) மாத்திரை (கால வளவு) ஆகிய இம்மூன்றிலும் எந்தத் தேவதை ஊடுருவியிருக்கிருளோ, அந்தத் தேவியாகிய சரஸ்



வதியே! உனக்கு நமஸ்காரம்! எந்தத் தேவி, விளக்கவுரை வடிவினளாக (வியாக்கியான ரூபமாக) இருக்கிருளோ, விளக்கத்தின் விளக்கமாக எந்தத் தேவியானவள் விளங்குகிருளோ எந்தச் சக்தியில்லாமல் கணித நூல் வல்லான் கணிதஞ் செய்ய இயலாதோ, அந்த சதுர்ஷஷ்டி கலா ரூபிணியான கலைமகளே; சங்கியா ரூபிணியே! உனக்கு பலப் பல நமஸ்காரம். சந்தேகத்தைப் போக்கடிக்கும் சித்தாந்தவடிவினளான உனக்கு எனது நமஸ்காரம்! நினைவாற்றலாகவும், அறிவாற்றலாகவும், ஞான சக்தியாகவும், பிரதிபா சக்தியாகவும், கற்பனு சக்தியாகவும் இருக்கும் கலைமகளே, உனக்கு நமஸ்காரம். ஜனத் குமாரர் பிருமாவிடம் ஞானத்தின் உட்பொருளைக் கேட்க, அவர் அந்தச் சித்தாந்தத்தைச் சொல்லக்கூடிய வல்லமை இல்லாமல் ஊமையைப் போல இருந்தார். பிறகு, கிருஷ்ணரின் கிருபையால், உன்னைத் துதித்து, உன் அருளால் உத்தம சித்தாந்தத்தை, அந்தச் சனத்குமார முனிவருக்குப் போதித்தார். ஒரு சமயம் ஆதிசேஷனிடம் பூமடந்தை, ஞானத்தைப் பற்றிக் கேட்க, அவர் ஊமையைப் போல வாய் பேசா மௌனியாகி மிகவும் பயந்து, காசிபரையடைந்து அவரது கட்டளைப்படி கலைமகளாகிய உனைத் துதித்து, அஞ்ஞானம் அனைத்தையும் போக்க வல்ல அரியதொரு சித்தாந்தத்தைச் செய்தார். வேத வியாஸ முனிவர், வால்மீகி முனிவரிடம் புராண சூத்திரம் பற்றிக் கேட்டபோது, அவரும் மௌனியாகி, உன்னைத் தியானித்து, உனது திருவருளால், சித்தாந்தம் கூறினர். அத்தகைய நிர்மலமான அறிவுரையையும், அறியாமையைப் போக்கும் புராண சூத்திரத்தையும் அவரிடம் வியாசர் கேட்டுக் கொண்டு அதன் பிறகு கலைமகளான உன்னை நினைத்து நூறு வருஷங்கள் புஷ்கர த்வீபத்தில் தியானித்து, உன்னிடம் வரம் பெற்ற வரப்பிரசாதத்தால், கவிஞர்களில் உயர்ந்த நிலையடைந்து வேதப் பிரிவுகளையும் புராணங்களையும் இயற்றினர். ஒரு காலத்தில், மஹேந்திரன், மஹேஸ்வரரிடம் சென்று அவரிடம் தத்

துவ ஞானத்தைப் போதிக்க வேண்டவே அவர் க்ஷணநேரம் கலைத் தேவியாகிய உன்னை நினைத்து, வரம் பெற்று, தத்துவப் பொருளை உபதேசித்தார். மஹேந்திரன் ஒரு சமயம் பிருகஸ்பதியிடம் சென்று சப்தசாஸ்திரம் (ஒலி நூல்) உபதேசிக்க வேண்டுமென்று கேட்க பிருகஸ்பதி புஷ்கர த்வீபத்தில் ஆயிரம் ஆண்டுகள் உன்னைத் தியானித்து வரம் பெற்று அந்த நூலைக் கற்பித்தார். இப்போதும் கூட உபதேசம் பெறும் மாணவனும் உபதேசம் செய்யும் ஆசிரியனும் கலைத்தேவியான உன்னையே துதித்துப் படிப்பைத் துவங்குகிறார்கள். கலை மகளே' நீ பூசனைக்குரியவளாகவும் துதிகளால் புகழப்பட்டவளாகவும், சொல் வளத்தையும் பேச்சுத் திறனையும், தருபளாகவும் இருக்கிறாய்! தேவர்களாலும் அசுரர்களாலும் மும்மூர்த்திகளாலும் புகழப்படும் தேவியே! ஆயிரம் முகத்தானும் ஐந்து முகத்தானும், நான்கு முகனும் தோத்திரஞ் செய்து புகழ இயலாத உன்னை, ஒரு முகமுள்ள நான் எவ்வாறு புகழ்வேன்!'' என்று துதித்து யாக்ஞவல்கிய ரிஷி ஆகாரமில்லாமல், அழுதவண்ணம் வணங்கினார்.

தேஜஸ் வடிவான சரஸ்வதி தேவியானவள், அதனால் மகிழ்ந்து, அவரைப்பார்த்து, ''நீ கவிகளில் உயர்ந்தவனாவாயாக!'' என்று வாழ்த்துக்கூறி, வானுலகத்திற்கு சென்றடைந்தாள். இந்தக் கலைமகளின் துதியை எவன் வாசிக்கிறானோ, அவன் கவிஞரில் சிறந்த கவிஞனாகவும், பேச்சுத் திறனில் புலமை மிக்கவனாகவும், தேவகுரு பிருகஸ்பதிக்கு இணையானவனாகவும் விளங்குவான். அறிவிலியாயினும் துஷ்டனேயானாலும், இந்தப் புகழை ஒரு வருஷ காலம் படித்தால் அவன் அறிஞனாகவும் புத்திமானாகவும் புலவனாகவும் கவிஞனாகவும் ஆகிவிடுவான்.

## 6 சகபத்தினிகளின் சச்சரவும் சரஸ்வதியின சாபமும்

''நாரதரே! சரஸ்வதிதேவி ஒரு காலத்தில் கங்காதேவியினால் சபிக்கப் பெற்று, பாரதநாட்டில் ஓர் நதியாக அவதரித்தாள்'' என்றார் நாராயணர். அதைக் கேட்டதும் நாரதர் திகைத்து, நாராயணரை நோக்கி, ''பிரபுவே! பூஜிக்கத்தக்க அவர்களிடையே ஏற்படக்கூடாத அந்தச் சண்டை என்ன காரணத்தால் உண்டாயிற்று?'' என்று கேட்டார்.

நாராயணர் கூறலானார்:

''நாரத முனிவரே! கங்கை, சரஸ்வதி, லக்ஷ்மி என்ற மூன்று தேவியரும் பரமாத்மாவின் மனைவியராவர். பரமாத்மா அம்

மூவரிடமும் சமமான அன்பு வைத்து வேற்றுமையற்ற குணபாவத்தோடு அப்பத்தினிகளின் அருகிலேயே எப்போதும் இருப்பார். ஒரு சமயம் கங்கையானவள், மோகனச் சிரிப்போடும் ஆசையோடும் காதல் பரவசத்தோடும் அவரது விருப்சத்திற்கு இசையும் கருத்தோடும் அடிக்கடி பரமாத்மாவின் முகத்தைப் பார்த்துப் புன்னகை செய்தாள். அவரும் க்ஷணநேரம் கங்காதேவியின் முகத்தைப் பார்த்து ஆவலோடு புன்னகை செய்தார். இவ்வாறு கங்கையும் பரமாதமாவும் சிரிப்பும் உல்லாசமாக இருப்பதைக்கண்டதும் சரஸ்வதி தேவிக்குப் பொறுக்கவில்லை. சத்வகுணமுடைய லக்ஷ்மி தேவியோ, தானும் சிரித்து, தன் அருகில் இருந்த சரஸ்வதியையும் சிரிக்கும்படித் தூண்டினுள் உடனே சரஸ்வதிக்கு கோபம் அதிகரித்து அடங்காதளவு பொங்கியெழுந்தது. அவளது கண்கள் சிவந்தன. முகம் சிவந்தது. உதடுகள் ஆத்திரத்தால் அதிகம் துடிதுடித்தன. அவள் உள்ளம் மதனவேகத்தால் சலித்துக் கொதித்ததால், அவள் தன் கணவனை உறுத்துப் பார்த்துக் குமுறினுள். "நல்லவரான ஒரு புருஷன் தர்ம சீலனுகவும், உத்தமனுகவும் யோக்கியனுகவும் இருப்பவன் என்ருல், அவன் தன் மனைவிகளிடம் ஒரே சமமான புத்தியும் ஆசையும் கொண்டவனுக இருக்க வேண்டும். ஆனுல் உமக்கோ அது இல்லை! அதிக அழகான கங்காவிடந்தான் ஆசையும், உல்லாச விருப்பும் அந்தச் சுகத்திற்குக் காரணமான அறிவும் அதிகமாக இருக்கிறது. அதுபோலவே லக்ஷ்மியிடமும் பிரியம் வைத்திருக்கிறீர். அத்தகைய ஆசையில் சிறிதுகூட என்னிடம் உமக்கு இல்லை. லக்ஷ்மிக்கு கங்கையிடம் பிரியம் இருப்பதால் கோபப்படாமல் உங்கள் இருவரின் உல்லாசச் சிரிப்பை சும்மா பார்த்துக் கொண்டிருக்கிருள். பாக்கியமில்லாத நான், இந்நிலையில் உம்மோடு இங்கிருந்து என்ன பிரயோஜனம்? எந்தப் பெண் தன் கணவனின் ஆசையால் வஞ்சிக்கப்படுகிருளோ, அவளுக்குத் தாம்பத்திய வாழ்க்கைச் சுவைக்காது. அவள் வாழ்வும் பயனற்றுப் போய்விடும். இதுபோன்ற மனே வேதனையை எனக்கு உண்டாக்கிய உம்மைச் சத்துவகுணசீலர் என்று யாரெல்லாம் சொல்லுகிருர்களோ அவர்கள் எல்லோருமே அறிவிலிகளாகவும் வேதம் அறியாதவர்களாகவும் உமது வஞ்சக குணத்தையறியாத மூடர்களாகவுந்தான் இருப்பார்கள்!" என்று கடிந்துரைத்தாள்.

சரஸ்வதியின் வார்த்தைகளைக்கேட்டதும் பரமாத்மா அவளை ஒரு பார்வை பார்த்து, ஆலோசனை செய்தவண்ணம் அந்த இடத்தை விட்டு எழுந்து வெளியே போய்விட்டார். சரஸ்வதிக்கு கங்கையைக் காணக் காணக் கோபம் பொங்கியது. அவள் சிறிதும் யோசியாமலும் பயப்படாமலும் கங்கையை நோக்கி, வாய்கூசாமல், "ஏ, கூச்சம் இல்லாதவளே! வெட்கம் கெட்டவளே! கட்டற்ற காமவேகம் கொண்டவளே! நம் கணவரின் எதிரில் நீ ஏன் கர்வப்



படுகிறாய்? உன்மீது அவருக்கு அதிக ஆசையிருப்பதால், அந்தச் சுகபோக லட்சணத்தை இப்படித்தானா காட்டிக் கொள்ளவேண்டும்? இப்பொழுதே உன்னை அதே நாயகன் முன்னால் அவமானப் படுத்துகிறேன் பார்! உன் ஒருத்திக்கே கணவனாக இருப்பதாக நினைக்கும் என் நாயகன் என்னை என்னதான் செய்யமுடியும், பார்க்கலாம்!'' என்று சொல்லிக் கங்காதேவியின் கூந்தலைப் பற்றியிழுத்தாள். அப்போது லக்ஷ்மிதேவி இருவருக்குமிடையே குறுக்கிட்டு நின்று சரஸ்வதியை தடுத்தாள். அதனால் அதிக வலிமையுள்ளவளும் பதிவிரதையுமான சரஸ்வதி, தன்னைத் தடுத்த லக்ஷ்மியைச் செடியாகவும் நதியாகவும் மாறிப்போகும்படி சபித்தாள். இத்தகைய விபரீத நிலைக்கு ஆளாகிய லக்ஷ்மி அவளிடம் ஒன்றும் பேசவில்லை. பதிலுக்குப் பதில் சாபமிடவுமில்லை. கோபிக்கவும் இல்லை. ஆனால் அவள் தன்னைச் சபித்த சரஸ்வதியின் கையைப் பிடித்துக் கொண்டே வருந்தினாள். கம்பீரமான வடிவம் கொண்ட கங்கை, அதைப் பார்த்து உதடுகள் துடிதுடிக்க கூவினாள். ''ஆ! லக்ஷ்மியே! மிகவும் கொடூரமான இவளா கலைமகள்! இவள் கையை விட்டுவிடு! அந்த சரஸ்வதி எப்போதுமே கலகப்பிரியை! அளவுமீறிப் பேசும் துஷ்டை! தூஷணைக்காரி! வம்புக்காரி! அவளுக்கு எவ்வளவு சக்தியும் தகுதியும் இருக்கிறதோ அத்தனையும் என்னிடம் காட்டி, பலாபலன்களைப் பரீட்சித்துப் பார்க்கத் துடிக்கிறாள்! இதனால், இனிமேல் எல்லோரும் எங்கள் இருவரின் மதிப்பையும் தன்மையையும் தகுதியையும் அறிந்து கொள்ளட்டும்!

லக்ஷ்மி! உன்னைச் சபித்த அந்த சரஸ்வதியும் ஒரு நதி வடிவம் பெற்று பூவுலகில் பாவி மனிதர்களை அடைந்து அம்மனிதர்களின் பாபங்களையெல்லாம் கலியுகத்தில் சம்பாதித்துக் கொள்வாளாக!'' என்று சரஸ்வதியைச் சபித்தாள்.

அதைக் கேட்டதும் சரஸ்வதி, கங்கையை நோக்கி ''நீயும் நதி வடிவில் பூமியையடைந்துபாபிகளின்பாபங்களை அடையக்கடவை!' என்று சாபமிட்டாள். அப்போது அங்கு பரமாத்மா பரிசாரகர்களோடு வந்து சரஸ்வதியின் கையைப் பிடித்து, அவளை மார்பில் அணைத்துக் கொண்டு, அவள் கோபத்தைத் தணித்து பழைமையான பல ஞானங்களையும் அறிவுரைகளையும் சொன்னார். பிறகு அவர் தம் பத்தினிகளுக்கிடையே மூண்ட சண்டையையும், அதன் காரணத்தையும் கேட்டுத் தெரிந்து கொண்டு லக்ஷ்மியை நோக்கி, ''லக்ஷ்மி! நீ உன் கலையினால் பூவுலகில், தர்மத்வஜரின் இல்லத்தில், தாய் வயிற்றில் பிறவாமல், அவரது புதல்வியாக இருப்பாயாக! அங்கு தெய்வகதியால் ஏற்பட்ட ஒரு சாபத்தினால் எனது அம்சமான சங்க சூடன் அவதரித்திருப்பான். அவனுக்கு நீ நாயகியாகி பிறகு எனக்குப் பத்தினியாக வந்து' சேர்வாய்! உன்னை சரஸ்வதி சபித்துவிட்டதால் அந்தச் சாபத்தின்படியே நீ பாரத தேசத்தில் துளசி என்ற செடி வடிவையும் பத்மாவதி என்ற நதி வடிவையும் பெறுவாயாக!'' என்றார் பிறகு அவர் கங்கையை நோக்கி, ''கங்கா! நீயும் சரஸ்வதியின் சாபப்படியே பூவுலகில் நதி வடிவமடைமாய்' நீ பகீரதனால் பாரத பூமியை அடைந்து எல்லோருடைய பாவத்தையும் கழுவியகற்றும் பாகீரதி என்ற நதியுருவம் பெற்று ஓடி என் அம்சமான சமுத்திர ராஜனோடு கலந்து அவனுக்கும் எனது கலையினால் பிறக்கவிருக்கும் சந்தனு ராஜனுக்கும் நாயகியாக விளங்குவாயாக! இது மட்டுமல்ல எனது சகபத்தினிகளான உங்கள் மூவருள்ளும் மூண்ட கலகத்தால் அடைய வேண்டிய பயனையும் நீங்கள் அடையத்தான் போகிறீர்கள். சரஸ்வதி! இனி நீ பிரம்மனது சத்திய லோகத்தில் பிருமதேவனுக்குப் பத்தினியாவாய்! கங்கையே! நீ சிவபெருமானை அடைவாய்! லக்ஷ்மி! நீமட்டும் இங்கேயே என்னிடம் இருப்பாயாக! ஏனென்றால் நீ சாந்தகுணமுடையவள். கோபமில்லாதவள். பக்திசிரத்தையோடு பதிவிரதைத் தன்மையோடும் நல்ல ஒழுக்கத்தோடும் தர்மநெறிப்படி நடப்பவள். அதனால் நீயே என்னிடம் இருந்து என்னோடு வாழத்தக்கவள். உன் அம்சத்தில் பிறப்பவர்கள் தர்ம சிந்தையுடன் கற்புடையவர்களாகவும் சாந்தமான உருவமும் நல்ல ஒழுக்கமும் கொண்டவர்களாகவும் எவ்வுலகத்தாராலும் மதிக்கத் தக்கவர்களாகவும் விளங்குவார்கள். லக்ஷ்மி! உலகத்தில் மூன்று மனைவிகளையும் மூன்று பணியாட்களையும் மூன்று உறவினர்களையும் கொண்டவர்களுக்கு ஒருபோதும் சுகம் ஏற்படாது! அது போலவே, ஒருவனுக்கே பல பத்தினிகளாக இருப்போருக்கு இடம் ஒன்றாக இருந்தாலும் அது

நலமளிக்காது! ஒருவன் வீட்டில் அவன் மனைவியே புருஷனைப் போலவும், புருஷனே மனைவிக்கு ஸ்வாதீனமான அடிமையாகவும் இருந்தால், அவ்விருவருடைய பிறப்பும் வாழ்நாளும் வீணாகும். மேலும் அவர்களுடைய தாம்பத்திய வாழ்க்கையில் தகராறுகளும் கலகங்களும் அடிக்கடி உண்டாகும். பேச்சிலும் பெண்குறியிலும் துடுக்காகவும் துஷ்டையாகவும் இருப்பவளை எவன் மனைவியாக அடைந்தாலும் அவன் உடனே வீட்டைத் துறந்து காட்டுக்குப் போய்விட வேண்டும். துஷ்டையுடன் அவன் வாழும் மேலான வீட்டைவிட அந்தக்காடே அவன் சுலபமாகவும் நிம்மதியாகவும் வசிக்கக்கூடிய இடமாகத் தோன்றும். அவனுக்கு உண்மையான பலமும் உறவு ஜனங்களும் கொண்டதாக அந்தக்காடே அமையும்.' துஷ்டையின் அருகிருந்து வாழ்வதைவிட காட்டிலோ பெரு நெருப்பு, பயங்கரப் புலி, பாம்பு ஆகியவற்றின் அருகிலோ வாழ் வதே மிகவும் எளிது! மிகவும் சுகமானது! துஷ்டமங்கையர் தங்கள் முகத்திலே காட்டும் கொடூரமோ விஷம், வியாதி ஆகியவற்றின் கொடுமையை விடக் கொடியது; சகிக்க முடியாதது, கஷ்டமானது. மனைவியினால் ஆளப்படும் கணவனுக்கு, அவன் சுடுகாட்டுச் சாம்பலாகப் போகும்வரையில் சுகமே இராது. பகலில் செய்யக் கூடிய நற்கருமங்களும் பயன் தராது. இகத்திலும் பரத்திலும் இழிவைத் தவிர புகழ் ஏற்படாது. புகழால் ஏற்படும் நற்பெயரும் வீரதீரமும் இல்லாமல் எவன் ஒருவன் வாழ்கிறானோ அவனது வாழ்வு உண்மையான வாழ்வல்ல! அவன் நடைப் பிணத்திற்கே சம மானவன்! ஒரே பத்தினியோடு வாழ்பவன் சுகத்தையும், பல பத்தினியரோடு வாழ்பவன் துன்பத்தையும் அடைவான். ஆகை யால், நான் முன்பு சொன்னபடி நீங்கள் மூவரும் பிரிந்து அந்தந்த இடங்களை அடைவீர்களாக! இவ்வாழ்வில் எவன் ஒருவனுக்குத் தன் மனைவி, தன் சுவாதீனத்திலிருந்து, தன் சொற்படி நடந்து நல்ல ஆசார ஒழுக்கமுடையவளாகவும் கற்பரசியாகவும் அமைந் திருக்கிறாளோ, அவனுக்குத் தன் குடும்பத்தை விடச் சுவர்க்கமும் மோக்ஷமும் வேறு இல்லை. அவனே முக்தன்; அவனே தூய்மை யானவன்; அவன்தான் சுகவாசி. எவன் ஒருவன் விபசாரிக்கு கணவனாக இருக்கிறானோ, அவன் தூய்மையற்றவனாகிச் சகல துன்பங்களையும் அனுபவித்து தத்தளிப்பான். அவன் உயிர் பிழைத் திருந்தாலும் இறந்தவனுக்கு ஒப்பான நடைப்பிணமேயாவான்!'' என்று கூறினார்.

## 7 தேவியரின் தவிப்பும் விஷ்ணு பக்தர்களின் குறிப்பும்

விஷ்ணு பரமாத்மா கட்டளையிட்டவுடன், அவரது தேவிகள் மூவரும், ஒருவரை யொருவர் கட்டிக் கொண்டு அழுது நடுநடுங்கி

துக்கத்துடன் தங்கள் கணவரை நோக்கிக் கண்ணீர் விட்டுப் பேசலானார்கள். அவர்களில் சரஸ்வதி, ''ஸ்வாமீ! எனக்குப் பிறவியின் ஆரம்பத்திலிருந்து துக்கம் மூட்டக் கூடிய சாபத்தின் விளைவைக் கூறிய நீங்கள், அந்தச் சாபத்தின் முடிவைப் பற்றிச் சொல்லவில்லையே! அதைச் சொல்லுங்கள். நல்லதொரு கணவனால் கைவிடப்பட்ட மனைவியர் எப்படி வாழ்வார்கள்? பாரத தேசத்தில் நான் யோகசாதனையால் என் உடலை விட்டு விடப் போகிறேன். என்னைக் காக்கத் தக்கவர் தாங்கள் அல்லவா?'' என்றாள்.

கங்காதேவியும் விஷ்ணுவை நோக்கி, ''பிரபஞ்ச நாயகரே! குற்றத்தால் நீங்கள் என்னைக் கைவிடுகிறீர்கள்? நானும் என் தேகத்தைத் துறந்து விடுகிறேன். மனைவியை ஹிம்சித்தவன் அடையும் பலாபலன்களை நீங்களும் அடைவீர்கள்! எவன் ஒருவன் குற்றமில்லாத தன் மனைவியைக் கைவிடுகிறானோ அவன் எல்லாம் வல்ல இறைவனாகவே இருந்தாலுங் கூட நரகத்தைத்தான் அடைவான்!'' என்றாள். லக்ஷ்மியும் விஷ்ணுவை நோக்கி, ''நாதரே! சத்வ குணமுடைய தங்களுக்கு ஏன் இந்தக்கோபம் உண்டாயிற்று? இந்த இரண்டு மங்கையரும் உமக்கு மனைவியாக இருக்கத் தக்கவர்கள்தானே? அவர்களுக்கு இரக்கம் காட்டுங்கள்! நான் சரஸ்வதியின் சாபத்தால் பாரத தேசம் போய்ச் சேர்ந்தால், எவ்வளவு காலம் நான் அங்கு இருக்க வேண்டும்? உங்கள் திவ்ய தரிசனம் மீண்டும் எப்போது எனக்குக் கிடைக்கும்? பூவுலகில் நான் நதியாகப் பாயும்போது, குளிப்பவர்கள் தங்கள் பாவங்களை யெல்லாம் என்னிடம் சுமத்துவார்களே! அந்தப் பாவங்களை நான் எப்படித் தொலைப்பது? எப்போது நான், என் கலையினால் தரு மத்துவஜரின் பெண்ணாகித் துளசியின் வடிவை அடைந்து தங்களால் ஏற்கப்படும் விருக்ஷமாவேன்? கருணாமூர்த்தியே! நீங்கள் என்னை எப்போது அடைவீர்கள்? அதைச் சொல்லுங்கள்! என்னைப் போலவே, ஸரஸ்வதியும் சாபத்தினால் பாரத தேசத்தில் நதியுருவமாகச் சேர்வாளானால் அவள் அந்தச் சாபத்திலிருந்து நீங்கி உம்மிடம் திரும்பி வரட்டுமே? சரஸ்வதி பிரமதேவரிடமும் கங்கை சிவபெருமானிடமும் போய்ச் சேர வேண்டும் என்று நீங்கள் கட்டளையிட்டீர்கள் அந்த ஆஞ்ஞையை மட்டும் மாற்ற வேண்டும்!'' என்று கூறித தன் பிராணபதியின் திருப்பாதங்களைப் பிடித்துக் கொண்டு கும்பிட்டாள். பிறகு, தனது கூந்தலால் அவரது கால்களை சுற்றிக் கொண்டு மிகவும் அழுதாள்.

விஷ்ணு பகவான் அவளை நோக்கி, ''செந்தாமரையாளே! உன் விருப்பமும் என் வாக்கும் தவறாதபடி நிறைவேற்றுவேன். சாபத்தின்படி சரஸ்வதி ஒரு கலையினால் நதி ரூபமாகவும் என் வாக்கின் பிரகாரம் பாதி கலையினால் பிரமதேவனிடமும் என்னிடமும் வாழக் கடவள். அது போலவே கங்கையும் பகீரதனால் பூமியை அடைந்து, மூவுலகையும் தூய்மைப்படுத்துவாள்—பிறகு,



பிறை சூடிய சிவபெருமானின் ஜடா முடியிலும் என்னிடமும் வந்து சேர்வாள். இயற்கையிலே தூய்மையானவளான கங்கை சிவனாரின் விரிசடையில் போய் அமர்ந்ததும் மிகவும் பரிசுத்தவதியாவாள்! லட்சுமியே! நீ உன் கலையினால் பாரத தேசத்தில் பத்மாவதி என்ற நதியாகவும் துளசி விருட்சமாகவும் உருவெடுப்பாயாக! நீங்கள் மூவரும் கலியுகத்தில் ஐயாயிரம் ஆண்டுகள் கழித்தால் நதி யுருவத்திலிருந்து மீண்டும் என்னிடம் வந்து சேர்வீர்கள்! உலகத்தில் எல்லோரிடமும் உள்ள சம்பத்துக்கெல்லாம் விபத்தே மூல காரணமாகும்! விபத்தில்லாமல் யாருக்குத்தான் சம்பத்து உண்டாகிறது? நீங்கள் நதியுருவம் அடைந்ததும் அந்நதிகளில் குளிப்பவர்களால் உங்களுக்கு உண்டாகும் பாபங்கள் எல்லாம் எனது மந்திரத்தை உபாசிக்கும் நல்ல பக்தர்கள் செய்யும் ஸ்நான, தரிசன ஸ்பரிசங்களால் ஒழிந்து விடும். பூவுலகைத் தூய்மைப் படுத்துவதற்காகவே என் மந்திரங்களை உச்சரிக்கும் பக்தர்கள் வாழ்கிறார்கள். எந்த இடத்தில் அவர்கள் வசிக்கிறார்களோ, அவ் விடமும் எந்த நதி நீரினால் அவர்கள் தங்கள் பாதங்களைக் கழுவு கின்றனரோ, அந்த நதியும் பரிசுத்தமாகிறதென்பதில் சிறிதும் ஐய மில்லை. பெண்வதை (ஸ்திரீ ஹத்தி)பசுவதை(கோஹத்தி)பிராமண வதை (பிரும்ம ஹத்தி) குரு பத்தினியை அனுபவித்தல்; நன்றி மறத்தல் முதலானவற்றைச் செய்தவர்களும் ஏகாதசி விரதத்தைக் கைவிட்டவனும் சந்தியாவந்தனத்தை அனுஷ்டிக்காதவனும், கடவுள் இல்லை என்கிற நாஸ்திகனும், கொலை புரிபவனும்,

யக் காட்டிப் பிழைப்பவனும் எருதின் மேல் ஏறுகின்றவனும் நம்ப வைத்துக் கழுத்தை அறுப்பவனும், நண்பனைக் கொலை செய்கின்றவனும், பொய் சாட்சி சொல்லுபவனும், புதைத்து வைத்த பொருளைத்திருடுபவனும், அதிமூர்க்கமாகப் பேசுபவனும், எல்லோரையும் ஏளனம் செய்து தூற்றுபவனும், அன்னியப் பெண்களோடு கூடிக் குலாவுகிறவனும், விபசாரியின் புதல்வனும், பரத்தையின் கணவனும் கீழோனுக்கு சமையல் செய்பவனும் கிராமப் புரோகிதனும், கூலிக்குப் பூஜை செய்பவனும்; தீக்ஷை பெருதவனும், காய், தந்தை, மனைவி, மக்கள், உடன் பிறந்த சகோதரர், சகோதரிகள், குருகுலத்தார், கண்ணில்லாத உறவினர்கள், மாமி மாமன்



மார் முதலானவர் கஷ்டப்பட்டு துக்கப்படும் போது, எவன் அவர்களை காப்பாற்றாமல் இருக்கிறானோ அவனும், அரச மரத்தை அழிப்பவனும் எனது பக்தர்களைப் பழிப்பவனும், சூத்திரரின் அன்னத்தைச் சாப்பிடும் பிராமணனும், தெய்வ சொத்து, அந்தணர் சொத்து முதலானவற்றைக் கைப்பற்று பவனும், திராக்ஷாரசம், பஞ்சலோகம், உப்பு முதலான ரச வகைகளை விற்பவனும், பெண்ணை விற்பனை செய்பவனும் தெய்வ பக்தி இல்லாதவனும், பெரும் அகம்பாவத்தோடு தன்னைத் தானே புகழ்ந்து கொள்பவனும், சாதுக்களை இகழ்பவனும், துஷ்டனும் எனது பக்தனைத் தரிசித்தாலும் தொட்டாலும் தூய்மையடை வார்கள்!'' என்று கூறினார்.

உடனே லக்ஷ்மி அவரை நோக்கி, ''எந்த முக்தரைத் தரி சித்தால் பரிசுத்தமாவாரோ, எந்த பக்தரின் பாத துளியாலும் பாதங்களை அலம்பும் நீரினாலும் பூமி பரிசுத்தம் ஆகின்றதோ, அத்தகைய உத்தமர்களை நான் அறிந்துகொள்வதற்கான அடை யாளக் குறிப்புகளைச் சொல்லுங்கள். தண்ணீர் வடிவமான தீர்த் தங்களும் மண், கல் ரூபமான தேவதைகளும், கால கதிப்படி தான் தூய்மையாக்கும். ஆனால் பக்தர்களோ ஒரே கணத்தில் பரிசுத்தப்படுத்தி விடுவார்களல்லவா?'' என்று கேட்டாள்.

விஷ்ணு பரமாத்மா புன்னகையுடன் பதில் சொல்லத் துவங்கினார்: ''பக்தர்களின் குறிப்பு வேதங்களில் மறைந்திருக் கிறது. திருமகளே! புண்ணிய வடிவாகவும் பாபத்தை ஒழிப்ப தாகவும் சுகத்தையும் மேலான பக்தியையும் முக்தியையும் கொடுப்பதாகவும் விளங்கும் சாரமான இரகசியத்தைச் சொல்லு கிறேன். கவனித்துக் கேள். துன்மார்க்கர்களுக்கு சொல்லக் கூடாத இந்த இரகசியத்தை என் உயிருக்கு இணையான உன்னிடம்

''எவனுடைய காதுகளில், பகவானின் மந்திரம் குருமுகமாக விழுகிறதோ அந்த சத்புருஷனை வேதங்கள் பரிசுத்தன் என்று சொல்லுகின்றன எவன் எந்தக் குலத்தில் பிறந்தாலும் அவன் தெய்வ பக்தியோடு விளங்குவானேயாகில் அவனது முன்னோர்கள் நூறு தலைமுறை வரை நரகத்தில் கிடப்பவரானாலும் முக்தி நிலை அடைவார்கள்! எந்த ஜீவப் பிராணியாவது எங்காவது பகவான் மீது பக்தியுள்ள பிறவியெடுக்குமானால் அது ஜீவன் முக்திபெற்று பரம பதத்தை அடைகின்றது. என் பக்தன், மனிதனாக இருந்தா லும் தேவனேயாவான்! எனது குணங்களோடு விளங்குகிறவனும் அக்குணங்களுக்குத் தக்க வாழ்க்கை உடையவனும், எப்போதும் எனது கதைகளைக் கேட்டு மகிழ்பவனும், எனது குணத்தைக் கேட்டதுமே மெய்சிலிர்த்து ஆனந்தத்தால் வாய்குழறி ஆனந்தக் கண்ணீர் சொரிகிறவனும், அந்தப் பக்தியிலே மெய்மறக்கின்றவ

னும் பிரமத் தன்மையையும் சாயுஜ்யப் பதவிகளையும் அமரத் தன்மையையும் இந்திரத் தன்மையையும் அடைய வேண்டுமென்று கனவிலும் விரும்பமாட்டான்! அத்தகைய பகதர்கள் பாரதேசத்தில் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். பக்தனுகும் பிறவி கிடைப்பது அரிது. அவர்கள் எனது குணத்தைக் கேட்பதாலும் காதுக்கினிய பாடல்களினுலும் நாள்தோறும் மகிழ்ச்சியுடனிருந்து, பூமியைத் தூய்மைப்படுத்திவிட்டு இறுதியில் என் ஸ்தானத்தை அடைகிறார்கள்!''

இவ்வண்ணம் பக்தர்களின் அடையாளங்களை விஷ்ணு பகவான் கூறிய பிறகு மூன்று தேவிகளும், அவரது கட்டளைப் படியே நடந்தார்கள்.

## 8 நதிகளாக மாறிய தேவிகளும் வருங்கால நிலைகளும்

கங்கையினுல் சபிக்கப்பட்ட சரஸ்வதி அந்தச் சாபப்படியே பாரததேசத்தில் நதியுருவமெடுத்தப் பிறகு விஷ்ணுவின் கட்டளைப் படி பிருமாவுக்குப் பத்தினியாக பிரம்மலோகத்திலும் வசித்தாள். அந்த சரஸ்வதி பாரததேசத்திற்கு வந்தால் பாரதி என்றும் பிரும்ம தேவருக்குப் பத்தினியாகியதால் பிராம்மணி என்றும் வாக்குகளுக்கெல்லாம் அதிதேவதையானதால் வாணி என்றும், பாவிகளின் பாவங்களையெல்லாம் கொளுத்தும் அக்கினியைப்போல் மஞ்சள் நிறமுள்ள நதியாக அனைவரும் சுலபமாக காணும்படி வந்ததால் சரஸ்வதி என்றும் வழங்கப்படுகிறாள். சரஸ்வதியின் சாபத்தால் கங்கையும் நதிவடிவமானாள். அவள் பகீரதனால் பூமிக்கு வரவழைக்கப்பட்டதால் பாகீரதி என்றும் வழங்கப்படுகிறாள். கனவேகமாக பூமியைநோக்கிப் பாய்ந்து வந்த அந்தப் பாகீரதியைச் சிவபெருமான் பூமிதேவியின் வேண்டுகோளுக்கு இணங்கித் தம் தலைமுடியில் தரித்துக் கொண்டார். மகாலக்ஷ்மியும், சரஸ்வதியின் சாபத்தால் பாரத நாட்டில் பத்மாவதி நதியாகவும் தர்மத்வஜரிடத்தில் பெண்ணாகவும், தூய்மையாக்கும் துளசி விருட்சமாகவும் ஒவ்வொரு கலையினுல் தோன்றினாள். இம்மூன்று தேவிகளும் நதியுருவமாக கலியுகத்தில் ஐயாயிரம் ஆண்டுகள் இருந்த பிறகு நதி வடிவைவிட்டு, வைகுண்டத்தை மீண்டும் அடையப்போகிறார்கள். அப்போது அவர்களோடு காசியையும், பிருந்தாவனத்தையும் தவிர, மற்றெல்லாப் புண்ணிய நதிகளும் தீர்த்தங்களும் மறைந்துபோய் விடும். சிவசக்தி

சொரூபங்களும் சாளக்கிராமமும்• ஜகந்நாதமும் பதினாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு பரமபதத்தை அடைந்து விடும். முன் சென்ற நதிகளோடு, சாதுசங்கம். சிரார்த்தம், தர்ப்பணம் வேத காரியங்கள், தெய்வ பூஜை, தேவநாமம், தேவ சங்கீர்த்தனம், வேதம், சாஸ்திரம், உத்தமசீலர்கள், சத்தியம், தர்மம், கிராம தேவதை, விரதம், தவம், உபவாசம் முதலிய புண்ணியங்களும் மறைந்தழிந்து போகும். ஜனங்களெல்லாம் மாறிவிடுவார்கள். பொய்யான ஆசாரவாதிகளாகவும், கபட வேஷதாரிகளாகவும், கோணவழிக்காரர்களாகவும், துளசியில்லாமல் பூஜை செய்பவர்களாகவும், துஷ்டர்களாகவும் கொடூரமான முரடர்களாகவும், திருடர்களாகவும், கொலைகாரர்களாகவும் ஆடம்பரக்காரர்களாகவும், வெகு அலங்காரப் பித்தர்களாகவும், சொத்துக்களுக்கு 'இவன் தான் எஜமான்' என்ற வித்தியாசத்தைத் தவிர, பெண்களுக்கு இந்தப் புருஷன்தான் எஜமான் என்கிற தர்மத்தைக் கைவிட்டவர்களாகவும், இஷ்டம் போல் கல்யாணம் செய்து கொண்டு இஷ்டம்போல் பெண்களையெல்லாம் அனுபவிப்பவர்களாகவும், கணவர்களெல்லாம் பெண்களுக்குக் கைவசப்பட்ட அடிமைகளாகவும், வீடுகள் தோறும் பெண்கள் விபசாரத்தினாலும், மிரட்டல் உருட்டல்களினாலும் ஏளனத் தூஷணங்களாலும் தண்டிப்பதினாலும், தங்கள் கணவரைத் தத்தளிக்க வைத்து பாதிப்பவர்களாகவும், வீட்டுக்கு மனைவியே எஜமானி போலவும், புருஷன் வீட்டு வேலைக்காரன் போலவும் விளங்குபவர்களாகவும். பிள்ளைக்குத் தந்தைகளே வேலைக்காரர்களாவும், மனைவியின் உறவினர்களும், ஆசைக்காதலியோடு சம்பந்தப்பட்டவர்களும்,





வீட்டுக்கு அதிகாரிகளாகவும், வித்துவான்களான பந்துக்களுடன் பேச்சுறவுகூட இல்லாதவர்களாகவும், உறவினரும் மற்றையோரும் பழக்கத்தின் அளவுக்கு ஏற்ப வெறும் முறைமை பாராட்டுபவர் களாகவும், மனைவியரின் கட்டளையை மீறி புருஷர்கள் ஒரு தொழிலைக் கூடச் செய்வதற்கு சக்தியற்றவர்களாகவும், நானகு வருணத்தினரும் தத்தமது ஆசாரங்களையும், சாஸ்திரங்களையும் கைவிட்டு விட்டு அன்னியரின் ஆசாரத்தையும், சாஸ்திரத்தையும் கைக்கொள்பவர்களாகவும், அந்தணர்கள், வைசியர்கள், க்ஷத்திரியர் என்னும் மூன்று வர்ணத்தார் நான்காவது வர்ணத் தினரான சூத்திரருக்கு சமையல் முதலிய வேலைகளைச் செய்பவர் களாகவும், உடலை வருத்தித் திரியும் தொழிலுடையவர்களாகவும் எருதின் மீது ஏறுபவர்களாகவும், சத்தியமில்லாத பொய்யர் களாகவும் ஜனங்கள் இருப்பார்கள்.

சந்தியாவந்தனம் யக்ஞ சூத்திரம் முதலியவை அழிந் தொழிந்து போகும். பூமியானது. பயிர்களையும், மரங்கள் பழத் தையும், பெண்கள் பிள்ளைகளையும், பசுக்கள் பாலையும், பால், நெய்யையும் தம்பதிகள் பிரியத்தையும், இல்லறத்தோர் அறநெறி யையும், அரசர்கள் பராக்கிரமத்தையும் அதிகமாகக் கொண்டிருக்க மாட்டார்கள். மக்கள் வரிசெலுத்த சக்தியற்றவர்களாவார்கள். நதிகள், குளங்கள் முதலியவை நல்ல நீரற்றவையாகிவிடும். நான்கு வர்ணத்தவரும் தரும நெறியிறில்லாமலும், புண்ணியமில்லா மலும் சஞ்சரிப்பார்கள் லக்ஷத்தில் ஒருவன் கூடப் புண்ணிய வானாக இருக்கமாட்டான். ஆடவர், பெண்டிர், குழந்தைகள் முதலியோர் கெட்ட நடத்தையை உடையவராயும், விகாரமான





பேச்சும், வார்த்தைகளும், உருவத் தோற்றங்களும் கொண்டவர் களாகவும் இருப்பார்கள். நகரங்கள், கிராமங்கள் சிலவற்றில் மனிதர்களேயில்லாமலும் சிலவற்றில் மனிதர்களும் சிலவற்றில் வீடுகளும் நஷ்டமாகும். சிலவற்றில் புல் முளைத்தும் தாவரங்கள் சூழ்ந்தும் இருக்கும் காட்டில் வாழ்வோரும் வரிச் சுமையால் பாதிக்கப்படுவர். ஏரி, குளம் முதலியவை பயிர் செய்யப்படும் நிலங்களாக மாறும். உயர்ந்த குடும்பங்களில் பிறந்தவர்கள் தாழ்வடைவார்கள், பொய்யர்களும், பித்தலாட்டக் காரர்களும், தீயவர்களும், சூதாடிகளும் அதிகரிப்பார்கள். விளை நிலங்களிலெல்லாம் விளைச்சல் இல்லாமல் போய்விடும். மிகவும் அற்பத்தனமானவர்கள் மிகவும் உயர்ந்தவர்களாகவும் பொருளுள்ள வர்களாகவும் ஆவார்கள். தெய்வ பக்தியுள்ளவர்கள் அந் நம்பிக்கையற்ற நாஸ்திக வ திகளாக மாறுவார்கள். நகரவாசிகள் ஈவிரக்கம் இல்லாமல் வதைப்பவர்களாகவும் மக்களைக் கொலை செய்யக் கூடிய கொடியவராகவும் இருப்பார்கள். ஆடவரும் பெண்களும் குள்ளமாகவும் நோய்நொடிகளோடும் ஆயுள் குன்றியும் விளங்குவார்கள் இளமை குன்றியவர்களாகவும், பதினறு வயதிலேயே கிழத்தன்மை அடைந்தவராகவும் இருப்பார் கள். எட்டுவயதிலேயே பெண் ருதுவடைந்து ஆண்டுதோறும் பிள்ளைகளைப் பெற்றெடுத்துப் பதினறுவயதிற்குள் கிழவியாகவும் போய் விடுவாள். நான்கு வருணத்தாரும் கன்னிகைகளை விற் பார்கள். மலடிகள் அதிகமாகவும் பிள்ளைப் பேறுடையவர்கள் குறைவாகவும் இருப்பார்கள் புதல்வி, சகோதரி, மருமகள், தாய், மனைவி முதலியவர்கள் விபசாரத் தொழிலால் கொண்டு வரும் சோற்றைத் தின்பவர்களாக மனிதர்கள் வாழப் போகிருர் கள். திருமாலின் திவ்யநாமங்களைக்கூட விற்பனை செய்வார்கள். புகழ் உண்டாக வேண்டும் என்பதற்காக நாலுபேர் அறிய ஏற் போருக்குந் தானம் கொடுத்து, பிறகு கொடுத்தவரிடமிருந்தே அவற்றைப் பறித்துக்கொள்வார்கள். பிராமணர்களும், தேவாலயங் களும் ஆசிரியர்களும் தன்னுலாவது பிறராலாவது செல்வமுடைய வராக இருந்தால் அவர்களிடமிருந்து மற்றவர்கள் அந்தச் செல் வத்தையும் பறித்துக்கொள்வார்கள். சிலர் புதல்வியையும் சிலர் மாமியையும் சிலர் மருமகளையும் சிலர் ஜாதியைப் பார்க்காமல் எக்குலத்து மங்கையரையும், சிலர் சிற்றன்னை, உடன் பிறந்த சகோதரி, தமையன் மனைவி முதலானவர்களையும் இன்னும் கூடத் தகாத ஸ்திரீகளையும் கூடியின்புறுவார்கள் இவ்வாறே வீடுகள் தோறும் தனது சொந்தத் தாரமே நீங்கலாக, மற்ற பெண்களிடமெல்லாம் மனப்போக்குப்படியெல்லாம் பலவிதமாகவும் உடலுறவு கொள்வார்கள். புருஷனுக்கு இவள்தான் மனைவி என்றும் மங்கைக்கு இவன்தான் கணவன் என்றும் நியதியில்லாமல் போய் விடும். மக்களுக்கும் கிராமங்களுக்கும் இன்னின்ன பொருட்கள் தான் உரியவை என்கின்ற நியதியும் இல்லாமற் போய்விடும்

அனைவரும் பொய், களவு, பேராசை, கொலை முதலியவைகளில் ஈடுபடுவார்கள். நான்கு குலத்தினரும் பாபிகளாவார்கள். திராட்சா ரசம், லோகம், ரஸவஸ்துக்கள் மது வகைகள் முதலியவற்றை விற்பனை செய்வார்கள் பிராம்மணர் எருதுகளின்மீது ஏறுவார்கள். சூத்திரர்களின் பிணங்களைத் தகனஞ்செய்வார்கள் சூத்திரர் அன்னத்தைத் தின்று, சூத்திரப் பெண்களைக் கூடிக் களிப்பார்கள்; அமாவாசை இரவில் கூடச் சாப்பிடுவார்கள். சந்தி, சௌசம், யக்ஞசூத்திரம், பஞ்சயக்ஞம் முதலானவற்றைக் கைவிட்டு விடுவார்கள். அவர்களுக்கு விபச்சாரியும் தூமைக்காரியும் சமையற்காரிகள் ஆவார்கள் அன்னத்திற்கும் அல்குலுக்கும் பிரமச்சாரியாதி ஆஸ்ரமங்களுக்கும் விதித்துள்ள நியமங்களெல்லாம் அழிந்து போகும். அப்போது பிராமணர்களோடு மற்ற அனைவருமே மிலேச்சர்களாகி விடுவார்கள்.

மரங்கள் எல்லாம் ஒரு கையளவே உள்ளதாக வளர்ச்சி குன்றிப்போகும்! மக்களெல்லாம் ஒரு கட்டை விரல் அளவுள்ள குள்ளர்களாவார்கள். கலியுக முடிவில் யஸஸ் என்ற அந்தணனுக்கு நாராயணரின் அம்சமான கல்கி என்ற அதிபலசாலியான புத்திரன் பிறந்து, நீண்ட வாளேந்தி, உயர்ந்த குதிரையின் மீதேறி, மூன்று இரவுகளுக்குள் மிலேச்சர் எல்லோரையும் வெட்டி மறையப் போகிறார். பூமியானது ஆளுவோர் இல்லாமல் திருடர்களால் பாதிக்கப்படும் பிறகு, மேகங்கள் ஆறு நாட்கள் வரையில் இடைவிடாமல் தூண்களைப்போல் பெரும் நீர்த்தாரைகளைப் பொழிந்து, பூமியிலுள்ள மக்கள், வீடுகள், மரங்கள் முதலியவற்றையெல்லாம் அழிந்து மறையும்படி செய்துவிடும்! அதற்குப் பிறகு பன்னிரண்டு சூரியர்கள் உதித்து, பூமியை உலரச் செய்வார்கள். அப்போது கலியுகம் முடிந்துவிடும்!

அதன் பிறகு, கிருதயுகம் பிறந்து, தவம் சத்வருணம் ஆசிரமம் ஆகியவற்றோடு கூடிய தருமங்கள் முழுமையாக நடைபெறும். அப்போது பிராமணர்கள் வேதவுணர்வு தரும நெறி முதலானவற்றையுடையோராகவும், வீடுகள்தோறும் மங்கையர்கள் இல்லறம் தவறாத பத்தினிகளாகவும் விளங்குவார்கள். அரசர்கள் எல்லாம் க்ஷத்திரியராகவும் வீரபராக்கிரமம் தருமம் ஆகிய வழிகளால் செங்கோல் செலுத்துவோராகவும் புண்ணியத்தில் விருப்பமுடைவராகவும் பிராமண விசுவாசிகளாகவும் இருப்பார்கள்.

வைசியர்கள் வாணிபத்திலும் புண்ணியத்திலும் ஆவலுள்ளவர்களாக இருப்பார்கள். சூத்திரர்கள் புண்ணியம் தருமம் முதலியவற்றில் ஆவலுடையவர்களாகவும் மேல் வருணத்தாருக்கு வேண்டியவற்றைச் செய்வதில் உற்சாக முயற்சி உடையவர்களாகவும் இருப்பார்கள். நான்கு வருணத்தாரும் தேவியிடம் பக்தியும் தேவி மந்திரத்தால் சக்தியும் கொண்டு, தேவியைத் தியானம்

செய்து கொண்டும் இருப்பார்கள். ஸ்ருதி, ஸ்மிருதி, புராணங்களை ஆராய்ந்து அறிவதில் ஆவல் மிக்கவராக இருப்பார்கள். புருஷர்கள் ருதுகாலச் சங்கமம் செய்வார்கள். 'கிருதயுகத்தில் அதர்மமே இல்லாமல், அறநெறி முழுமையாகவும் திரேதா யுகத்தில் தர்மம் முக்காலாகவும் துவாபரத்தில் அரையாகவும் கலியுகத்தில்காலாக வும் கடைசியில் சூனியமாகவும் நடைபெறும்.

வாரங்கள் ஏழாகவும், திதிகள் பதினைந்தாகவும், ருதுக்கள் ஆறாகவும், பட்சங்கள் இரண்டாகவும், அயனம் இரண்டாகவும், நான்கு ஜாமங்கள் ஒரு இரவாகவும். ஒரு பகலாகவும் இரவு பகல் கூடிய நாட்கள் முப்பது கொண்டது ஒரு மாதமாகவும் கணித பேதத்தால் வருஷம் ஐந்து வகையாகவும் இருக்கின்றன. இவ்வாறே யுகங்கள் வந்து போய்க் கொண்டிருக்கும். மனிதர்களுக்கு ஒரு வருஷம் என்பது தேவர்களுக்கு ஒரு தினமாகும். மனிதர்களுக்கு முன்னூற்று அறுபது யுகங்கள் கழிந்தால் தேவர்களுக்கு ஒரு யுகம் கழிந்ததற்கு சமானமாகும். தேவ யுகங்கள், எழுபத்தொன்று சேர்ந்தால் ஒரு மன்வந்தரமாகும். அது இந்திரனுடைய பதவிக் காலத்திற்குச் சமமாகும். இருபத்து எட்டு இந்திரரின் காலம் கடந்தால், பிருமதேவனுக்கு ஒரு நாளாகும். அந்தக் கணக்குப்படி அவருக்கு நூற்றெட்டு ஆண்டுகள் வயதானால் பிரமனின் ஆயுள் முடிந்து விடும். அப்பொழுது பிராகிருத பிரளயம் ஏற்படும். பூமி தண்ணீருக்குள் மறையும். அப்போது மும்மூர்த்திகளும் மாமுனிவர்களும் சகல ஞானியரும் சத்திய உருவமான சிதாத்மாவில் ஐயக்கியமாகி விடுவார்கள். பிரகிருதியும் சிதாத் மாவில் லயமடையுங் காலம் தேவிக்கு ஒரு முறை கண் இமை கொட்டும் காலமாகும். இது போலவே அளவற்ற பிரம்மாண்டங்கள் லயித்துப் போகின்றன மறுபடியும் தேவியின் படைப்புக் கிரமத்தால் ஒரு கணகாலத்துக்குள் சிருஷ்டித்து விடுகிறாள். இப்படியே எத்தனையோ, சிருஷ்டிகள், லயங்கள், கற்பங்கள் நடந்து விட்டன. இதன் கணக்கையும் பிரம்மாண்டங்களின் கணக்கையும் யார்தான் அறிவார்? யாவற்றுக்கும் இறைவன் பரமாத்மா ஒன்று தான். சத் சித்தானந்த ரூபத்தை (மெய்யறிவின்பத்தின் உருவைத்) தரித்திருக்கும் பரமாத்மாவின் அம்சந்தான் பிரமன் முதலான சகல தேவர்களுமாவர். சின்ன (க்ஷீத்) விராட், என்பது மகாவிராட் புருஷனுடைய அம்சமாகும். அவர் பரமாத் மாவின் அம்சம். பிரகிருதியிலிருந்து அர்த்தநாரீஸ்வரர் தோன்றினார். கோலோகத்தில் இரண்டு கைகளுள்ள கிருஷ்ணரும் வைகுண்டத் தில் நான்கு கைகளுள்ள நாராயணரும் அந்தப் பிரகிருதியின் உருவமேயாகும். பிருமன் முதல் துரும்பு வரையிலுமுள்ள படைப்புகள் யாவும் பிரகிருதியின் சம்பந்தமுடையவையேயாகும். படைப்புக்குக் காரணமாகவும், சத்தியமாகவும் நித்தியமாகவும் அநாதியாகவும் தன் இச்சைப்படி இயங்குவதாயும் உள்ள நிர்க்குண

மான அந்தப் பரப்பிருமமானது பிரகிருதிக்கும் மேம்பட்டது. பிருமத்திற்கு என்று ஒரு பேதமும் ஓர் உருவமும் கிடையாது. அப்படியிருந்தும் பக்தர்களுக்கு அருள் செய்யும் எண்ணத்தாலேயே எல்லாவற்றையும் படைத்து, எல்லாவற்றையும் அழித்து வருகிறார். அந்தப் பிருமத்தைப் பற்றிய தபசாலும் ஞானத்தாலும் அனைத்திற்கும் நாதராய், எல்லாம் அறிந்தவராய் அனைத்துருவமாய் சகல லோகத்திலும் பரவியவராய், எல்லாவற்றையும் காப்பவராய், எல்லாச் சம்பத்தையும் வழங்குபவராய் விளங்குதலாகிய ஆறு குணங்களையும் கொண்டவராய் மகாவிஷ்ணு துலங்குகின்றார். அதனால் தான் அவர் யாவராலும் விஷ்ணுபகவான் என்று வழங்கப்படுகிறார். அவரைப் போலவே, அந்தப் பிருமத்தின் பக்தியினாலும் பணியாற்றலினாலும் மகா மாயா சொரூபிணியாகிய பிரகிருதி தேவியானவள், சர்வ சக்திக்கும் ஈஸ்வரி என்றும் சச்சிதானந்த உருவமான பகவதி என்றும், பராசக்தி என்றும் வழங்கப்படுகிறாள். அவளுடைய திருத் தொண்டினாலும் தவத்தாலும் சாவித்திரி தேவியானவள் வேதத்தின் தாயாகவும் அதற்கு அதிஷ்டான தேவதையாகவும் பிராமணர்களால் பூஜிக்கத் தக்கவளாகவும் விளங்குகிறாள். வித்தைகள் அனைத்துக்கும் அதிஷ்டான தேவதையான சரஸ்வதி தேவியானவள் அந்த மகாதேவியின் தியான சேவைகளினாலேயே அறிஞர்களால் போற்றிப் பூஜிக்கப்படுகிறாள் இது போலவே, சகல கிராம தேவதைகளும் தம்மைப் பூஜிக்கின்றவருக்குச் சகல சம்பத்தையும் கொடுப்பவர்களாக விளங்குகின்றன. கிருஷ்ணரின் இடது பாகத்தில் தோன்றி அவருக்கு அதிஷ்டானியாய், அவரது உயிரைவிடப் பிரியையாக இருக்கும் ராதிகை அந்த சக்தி சேவையினாலேயே, எல்லாரையும் விட உயர்ந்த மகிமை, சௌபாக்கியம், சௌந்தரியம், மானம், கௌரவம் முதலியவற்றைக் கொண்டவளாய் விளங்கி, கிருஷ்ணரின் இதய கமல வாசினியாயும் அவருக்குப் பத்தினியாகவும் ஆனாள். அவள் முன்பு ஒரு காலத்தில் சத சிருங்கம் என்ற மலையில் தகுந்த கணவனை அடையவேண்டி ஆயிரம் ஆண்டுகள் தவம் புரிந்து, மஹாசக்தியின் அருளைப் பெற்றாள். அப்போது கிருஷ்ணமூர்த்தி அவளைத் தன்னுடைய மார்பில் இருத்திக்கொண்டு, தன்னைப்போல நிலைத்தவளாகவும் தன்னிடம் பக்தியுள்ளவளாகவும் மேன்மை, ப்ரீதி, கௌரவும் ஆகியவற்றில் தன்னைவிட மேம்பட்டவளாகவும்: தன் அன்பிற்கு உரியவளாகவும் தனது மனைவியரில் உயர்ந்தவளாகவும், தன்னால் பூஜிக்கப்பட்டவளாகவும் வைத்துக் கொண்டு, "என் உயிருக்கு இணையானவளே! நான் எப்போதும் உன் சுவாதீனமாகவே இருக்கிறேன்!'' என்றார்.

மகாதேவியைக் குறித்து, எந்தெந்த தேவிகள் எந்தெந்த அளவுக்குத்தவஞ் செய்தார்களோ, அந்த தவத்திற்கு ஈடான மேன்மையை அடைந்தார்கள். துர்க்காதேவி ஆயிரம் தேவ

ஆண்டுகள் இமயமலையிலும், ஸரஸ்வதிதேவி லக்ஷம் தேவ ஆண்டு கள் கந்தமாதன பர்வதத்திலும், லக்ஷ்மி புஷ்கரத்திலும், சாவித்திரி அறுபதினாயிரம் தேவ வருஷம் மலய மலையிலும் தவம் இருந்து, அனைவராலும் போற்றப்பட்டு, பூஜித்து வணங்கப்பட்டு, அவர் களுக்கு எல்லாவற்றையும் வழங்கும் சக்தியுடையவரானார்கள். சிருஷ்டி முதலான தொழிலுக்குரிய மும்மூர்த்திகள், நூறு மன்வந்திரம் தேவியைக்குறித்து தவம் செய்து, தத்தமது தொழிலில் வல்லவரானார்கள். கிருஷ்ணர் பத்து மனுவந்திரம் தவம் செய்து கோலோகத்தையடைந்து சுகம் பெற்றார், தருமர் பத்து மன்வந்தரம் தவம்புரிந்து, சகலருக்கும் பிராண பூதனாய் ஆதாரனாய்ப் பூஜிக்கத் தக்கவனானன். இவ்விதமாகவே, தேவர் கள் அனைவரும், முனிவர்களும, பிராமணர்களும் தேவியைக் குறித்துச் செய்யும் தவத்தாலேயே கௌரவமடைந்தனர். இவ்வாறு வேத சொல்லை எடுத்து கூறும் புராணத்தை, என்னுடைய குருநாதரிடம் கேட்டவாறு உனக்குச் சொன்னேன்''

இவ்வாறு நாராயணர் கூறினார்.

## 9 வசுதாதேவியின தோற்றம்

நாரதர், நாராயணரை நோக்கி, ''பிரபுவே! பிரும்மதேவன் முதலான எல்லாத் தோற்றங்களும் ஜலதத்துவத்தில் ஒடுங்கு கின்ற காலந்தான் பிரளய காலம் என்பதையும் அந்தக் காலமே



தேவி, கண்ணிமை கொட்டும் கால அளவு என்பதையும் தெரிந்து கொண்டேன். அப்போது இந்தப்பூமி, எந்தத் தண்ணீரில் எங்கே மறைந்திருந்தது? அது படைப்புக் காலத்தில் எப்படி மீண்டும் உண்டாகின்றது?'' என்று கேட்டார்.

நாராயணர் கூறலானார்:

''இந்த உலகம் தோன்றும் போதெல்லாம் நீரில்தான் மறைந் பூமிதான் முதலில் உண்டாகின்றது. பூமியை என்பார்கள். மதுகைடபர்களைத் திருமால் கொன் ழிக்கும்போது, இந்தப்பூமி ஜலத்தில் மறைந்து கிடந்தது. அதைக்கண்ட அவ்வசுரர்கள், ''இனி நமக்குப் பயமில்லை, மரண மில்லை'' என்று மகிழ்ந்திருந்தனர். அந்தச் சமயத்தில் பூமி வெளிப்பட்டது. உடனே, திருமால் அவ்வசுரர்களைக் கொல்லும் போது அவர்களது உடம்பிலுள்ள மேதை பூமியில் கலந்தது என்றும் அதனால் பூமிக்கு மேதினி என்று பெயர் வந்தது என்றும் சொல்லு வார்கள். அதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. இதைப் பற்றி எனக்குத் தருமர் வேறு வகையில் கூறியுள்ளார். அதாவது, இந்தப்பூமி, ஜலத்திலிருக்கும் மகாவிராட் புருஷனுடைய உடல் முழுவதும் வியாபித்து, அவனது ரோமகூபம் தோறும் நிறைந் திருந்து அனேக காலம் கழிந்தபிறகு வெளிப்படுகிறது என்றும், இவ்வாறு பலதடவைகள் நிகழ்கிறது என்றும், இதுபோலவே, பல முறைகள் ஜலத்தால் மறைவுபட்டு பின்னர் வெளிப்படுவ தென்றும் அவர் சொன்னார். இந்தப்பூமியோ, சப்தத் த்வீபங்கள், சப்த சமுத்திரங்கள், புண்ணிய தீர்த்தங்கள், மேல் உலகங்கள், கீழ் உலகங்கள், இமயமலை முதலான அரும்பெரும் மலைகள், தேவர்கள், நவக்கிரகங்கள் முதலான அனைத்தும் தங்கியிருப் பதற்கு ஆதார மேன்மையுள்ளது. பூமியை இரணியாக்ஷன் அப கரித்துக் கொண்டு பாதாளத்திற்கு எடுத்துப்போய் வைத்தபோது, விஷ்ணுபகவான் வராக உருவமெடுத்துப் பாதாளத்திற்குச் சென்று, பூமியைத் தாமரை மொட்டைப்போல் நீரின் மீது மிதக்கும்படிக் கொண்டு வந்தார். அதைக்கண்டு தேவர்கள் அனைவரும் ஆனந் தித்தார்கள். அப்போது பூமாதேவியானவள் தன் மனோகரமான உருவத்தோடு மிகவும் பேரழகியாய்த் தோற்றமளித்தாள். அந் நிலையில் அவளைக்கண்டதும் வராகவுருப விஷ்ணு அவள் மீது காமங்கொண்டு, சுயஉருவமெடுத்து அவளோடு கூடிக்கலந்தார். இருவருமே மன்மதக்கலையில் வல்லவர்களாக இருந்ததால் இருவரும் தத்தமது நிலைமறந்து காமச்சுவையில் ஈடுபட்டு இரவு பகலென்றும் எதுவும் பாராமல் இடையறாது ஒரு வருஷகாலம் காம லீலைகள் புரிந் தார்கள். அதன் விளைவாக கடேசன் என்ற புத்திரனைப் பெற்றார்கள். பிறகு காம மயக்கம் நீங்கித் தெளிவுபெற்ற மகாவிஷ்ணு, தமது முந்திய உருவத்தையும் நிலையையும் அறிந்து மீண்டும் வராக வடிவங்கொண்டார். அவர்கூடியின்புற்ற அவளைப் பூமாதேவி என்று

தெரிந்து, அவளுக்கான ஆடைகளையும் அணிகலன்களையும், சுவையிக்க உணவுகளையும் மிகவும் கனிவோடு கொடுத்து, "பூதேவி! நீ எனக்கு ஸ்ரீதேவியைப்போல், மற்றொரு மனைவியாகி விட்டாய் நீ அனைத்திற்கும் ஆதாரமாக இருந்து மகரிஷிகளாலும், மனுக்களாலும், தேவர்களாலும், தானவர்களாலும், சித்தர்களாலும் போற்றி பூஜிக்கப்படுவாய் தானஞ்செய்யும் தினத்திலும், பிரயாண காலத்திலும், வித்தை, வீடு, குளம் முதலியவற்றைத் தொடங்கும் போதும், விவசாயத்தைத் துவங்கும் போதும் நீ பூஜிக்கப்படுவாய். இந்தக் காலங்களில் உன்னை பூஜிக்காத அறிவிலிகள் நரகத்தை அடைவார்கள்!" என்று அருள் செய்தார்.

அதைக் கேட்டதும் பூமிதேவியான வசுதாதேவி, "பரமாத்மாவே! உமது கட்டளையினால் வராகவடிவில், தாவர ஜங்கமங்களோடு கூடிய உலகங்களனைத்தையும் ஒரு விளையாட்டாகத் தாங்குகிறேன். ஆனால், முத்து, சிப்பி, சிவலிங்கம், தேவிபிம்பம், விஷ்ணு பிம்பங்கள், சங்கு, தீபம், யந்திரம், யக்ஞ சூத்திரம், ஜபமாலை, புத்தகம், துளசி, மலர்கள், மலர் மாலை, மாணிக்கம், வைரம், பொன், கோரோசனம், சந்தணம், தீர்த்தம், சாளக்கிராமம், முதலானவற்றை ஆசனத்தில் வைக்காமல் என்மீது வைப்பார்களானால் அவற்றைத்தாங்கும் வலிமையற்று நான் மிகவும் வருந்துவேன்." என்றாள். அதற்கிணங்கி பகவான், "பூமியழகியே நீ சொல்லிய வைகளை ஆசனத்தின் மீது வைக்காமல் உன்மீது வைக்கும் மூடர்கள் நூறாண்டுகள் காலசூத்திரம் என்ற நரகத்தில் உழலக்கடவர்!" என்றார்.

## வசுதாதேவி மந்திரம் - த்யானம் - துதி

ஸ்ரீ விஷ்ணுவின் கட்டளைப்படி வசுதாதேவியை பூஜிக்கும் முறையாவது—கண்ணுவ சாகையிலுள்ள 'ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் கிலீம் வசுதாயை ஸ்வாஹா' என்ற மந்திரத்தாலும், வெள்ளைத்தாமரை நிறமும் சரத்காலச் சந்திரன் போன்ற முகமும் சந்தனம் பூசப்பட்ட சர்வாங்கமும் உடையவளாகவும், நவமணி அணிகளால் அலங்கரிக்கப்பட்டவளாயும், ரத்தினத்தைக் கர்ப்பத்தில் உடையவளாயும், நெருப்பினாலான தூய்மையான ஆடைகள் பூண்டவளாயும், புன்னகையுடன் பூஜிக்கத் தக்கவளாகவும் விளங்கும் பூதேவியே! உன்னை நமஸ்கரிக்கின்றேன்! "என்ற தியானத்தாலும்," ஜலத்தை அளிப்பவளே! அந்த நீரின் சொரூபமாக இருப்பவளே! தண்ணீருக்கெல்லாம் ஆதாரமாக இருப்பவளே! நீரைப் போல பரிசுத்தம் செய்பவளே! யக்ஞ வராஹ ரூபியான பகவானின்

பத்தினியே! நீ எமக்கு வெற்றியை அளிப்பாயாக! வெற்றியைக் கொடுப்பவளே! நலன்களுக்கெல்லாம் ஆதாரமானவளே! மங்களத்தலைவியே! மாங்கல்யரூபிணியே! ஸம்சாரத்தில் எனக்கு மங்களமுண்டாகச் செய்வாயாக! எல்லாம் அறிந்தவளே; சர்வ சக்தியே! சகல விருப்பங்களையும் வழங்குபவளே! என் விருப்பங்களை நிறைவேற்று! புண்ணியவடிவினளே! புண்ணியத்துக்குப் பீஜரூபமானவளே! அறுதியானவளே! எல்லாப் பயிர்களுக்கும் இருப்பிடமானவளே! பயிர்கள் உருவானவளே! சகல சக்திகளையும் தருபவளே! பூதேவியே! அரசர்களுக்கு எல்லாப் பொருள் வடிவாகவும் முக்கிய ஸ்தானமாகவும் இருப்பதோடு, சுகத்தையும் நிலத்தையும் வழங்குபவளே! எனக்கும் நிலம் கொடுப்பாயாக!'' என்கிற தோத்திரத்தினுலும் முதலில் வராஹனும் அதன் பின்னர் பிரமனும், மனுக்களும் முனிவர்களும் மானுடர்களும் வசுதாதேவியைப் போற்றிப் பூஜித்தார்கள்.

இந்த வசுதாதேவித் துதியை எவன் ஒருவன் காலையில் வாசிக்கிருனே அவன் கோடிப் பிறவிகளில் பலசாலியாகவும் அரசர்க்கும் அரசனுகவும் பிறப்பான். ஒருதரம் படித்தாலே தானமாகக் கொடுத்த பூமியை வாங்கியதாலுண்டாகிய பாபம் போய்ப் பூதானங்கொடுத்த புண்ணிய பலன் கிடைக்கும். கிணறு வெட்டல், பூமியைக் கவர்தல், பூமியில் இந்திரியத்தை விடுதல், தீபத்தை பூமியில் வைத்தல் முதலிய பாபங்கள் நீங்கி, நூறு அசுவமேத யாகப் பலனை அடையலாம்! இதில் சந்தேகமில்லை?''

## 10 பூமிகு தீவினை புரியாதே!

நாரதர் நாராயணரை நோக்கி, ''பூதானத்தால் விளையும் புண்ணியத்தையும் அதை அபகரிப்பது போன்ற குற்றங்களால் ஏற்படும் பாபங்களையும், அதனுல் நேரிடும் நரகங்களையும் அக்குற்றங்களைப் போக்கும் சாந்திகளையும் எனக்கு க் கூறவேண்டும்!'' என்று கேட்டார்.

நாராயணர் கூறலானுர்:

''பூதானம் என்பது மிகவும் உன்னதமானது! வேதம் விதித்த கர்மங்களை விதிமுறைப்படி அனுஷ்டித்து வரும் நல்லதோர் அந்தணனுக்குத் தனக்குள்ள பூமியில் சாணளவாவது தானமாகக் கொடுப்பவன் சிவலோகத்தை அடைவான். பயிர்கள் விளைந்திருக்கும் பூமியைத் தானம் கொடுப்பவன், அந்தப் பூமியில் எவ்வளவு அணுக்கள் உண்டோ, அவ்வளவு காலத்திற்கு விஷ்ணுலோகத்தில்

வசிப்பான். கிராமம், பூமி, தான்யம் இவற்றைத் தானம் செய்பவன் தேவியின் உலகத்தையும், இத்தகைய தானங்களைப் புகழ்ந்து போற்றுகிறவன், தன் குடும்பத்தோடு வைகுண்டத்தையும் அடைவான்.

தன்னாலாவது பிறராலாவது தானம் செய்ததும், பிராமணர் உழைப்பில் சம்பாதித்ததுமான நிலத்தை அநியாயமாக அபகரிக்கிறவன் சந்திர சூரியர்கள் இருக்கும் காலம்வரை காலசூத்திர நரகத்தையடைவான். மேலும் அவனது புத்திர பௌத்திராதியரும் பூமியும் செல்வமும் சந்ததியும் அறுந்துபோய் பரமதரித்திரத்தையும் அனுபவித்துக் கோரமான நரகங்களையும் அடைவார்கள். பசுக்கள் மேய்ச்சலுக்குச் செல்லும் வழியைத் தடுத்துப் பயிரிடுகிறவன் நூறு ஆண்டுகள் நரகத்தில் கும்பீபாகத்தில் கிடந்து அவஸ்தைப்படுவான். மாட்டு மந்தைகள் இருக்கும் இடத்தையும், தடாகத்தையும், பயிரிடும் நிலமாக்கிப் பயிர் செய்பவன் பதினான்கு இந்திரரின் ஆயுட்காலம் வரை நரகத்தை அடைந்து அங்கு அசிபத்திரவனத்தில் தள்ளப்பட்டுக் கிடப்பான். அம்பு முனையால் பூமியை வெட்டுபவன் நான்கு யுகங்கள் வரை கிருமிதம்சம் என்ற நரகத்தையடைவான். பிறருடைய கிணறு குளம் முதலியவை பாழடைந்து சிதிலமாக இருப்பதைக் கண்ட பிறகும் அவற்றை சீர்ப்படுத்தாமல் வேறு கிணறு முதலியவற்றை வெட்டுபவன் அவற்றாலுண்டாகும் புண்ணியத்தைச் சிதிலமான கிணற்றுக்காரனுக்கு கொடுத்து விட்டு நரகத்திற்குச் சென்று அங்கு பதினான்கு இந்திரர்களின் ஆயுட்காலம்வரை தப்த குண்டத்தில் கிடந்து துன்புறுவான். பிறரது கிணற்றில் குளிக்கச்சென்றவன் முதலில் ஐந்து பிடி மண்ணை வெளியே எடுத்து வீசாமல் குளித்தால் அவன் தனது ஸ்நானப் பயனையும் இழந்து, நரகத்தையும் அடைவான். காம மிகுதியினால் தன் சுக்கிலத்தைப் பூமியில் விட்டவன், அந்தப் பூமியினுடைய தூள் ஒன்றுக்கு ஒரு வருஷம் வீதம் ரௌரவநரகத்தில் வாதனைப்படுவான். பிறரது தடாகத்திலுள்ள சேற்றை எடுத்து வெளியே போடுபவன், அந்தச் சேற்றின் துளி ஒன்றுக்கு ஒரு வருஷம் வீதம் பிரம்ம லோகத்தை அடைவான். சிராத்தம் செய்யும் பூமியின் உடமைக்காரனுக்குப் பணம் ஏதும் கொடுக்காமல் பிதுர்களுக்கு பிண்டம் போடுபவன் நரகத்தை அடைவான். பூமியின் மீது ஆசனமில்லாமல் தீபத்தை வைப்பவன் ஏழு ஜன்மங்கள்வரை குடிகாரனாகவும், பூமியின் மேல் புத்தகத்தை வைப்பவன், தன் பிறவியின் முடிவில் குஷ்டரோகியாகவும், முத்து, ரத்தினம் தங்கம் முதலியவற்றை பூமியின்மீது வைப்பவன் ஏழு பிறவிகள் வரை அந்தகனாகவும், சிவலிங்கம் தேவியின் பிரதிமை ஆகியவற்றை ஆசனமில்லாமல் பூமிமீது வைப்பவன் நூறு மன்வந்தரம் புழுக்களைத் தின்பவனாகவும் ஜனிப்பான். சங்கு, யந்திரம், மலர், துளசி, ஜபமாலை, மலர்மாலை, கற்பூரம், கோரோசனை, சந்தனக்

கட்டை, ருத்திராட்சம், தர்ப்பை முதலியவற்றை ஆசனமில்லாமல் பூமியின்மீது வைப்பவர் மன்வந்தர காலம்வரையில் நரகத்தில் உழல்வார்கள் யக்ஞசூத்திரத்தையும் புத்தகத்தையும் ஆசனமில்லா மல் பூமியில் வைப்போர் இந்தப் பிறவியில் பிரம்மஹத்தி செய்த பாவத்தையடைவது மட்டுமல்ல, பிறவியின் முடிவில் பிரமயோனி யில் பிறக்கமாட்டார்கள். யாகஞ்செய்ததனால் உண்டாகிய உஷ் ணத்தைப் பாலினால் நனைக்காதவன் ஏழு பிறவிகள்வரை கொதிப் புடைய பூமியை அடைந்து தவிப்பான். பூகம்ப காலத்திலும் கிரகண காலத்திலும் பூமியை வெட்டுபவன் மகா பாபியாகவும் உறுப்புக்கள் குறைந்தவனாகவும் பிறப்பான்.

இந்தப் பூமிதேவியானவள் எல்லோரும் இருக்கும் ஸ்தானமாக இருப்பதால் பூமி என்றும், காஸ்யபருடன் சம்பந்தமுடையவளா கையால் காஸ்யபி என்றும் சர்வ விஸ்வத்தையும் தாங்குவதால் விஸ்பம்பரை என்றும், அளவற்ற உருவங்களையுடையவளாகையால் அனந்தை என்றும், பிருது சக்கரவர்த்தியின் புதல்வியாகவும் விசாலமாய்ப் பரந்து பெரிதாகவும் இருப்பதால் பிருத்வி என்றும் வழங்கப்படுகிறாள்.

## 11 கங்கையின் தோற்றமும் ஸ்நான பலன்களும்

"சரஸ்வதியின் சாபத்தை ஏற்ற கங்காதேவி பூவுலகத்தில் எந்த யுகத்தில், எவரால் பிரார்த்திக்கப் பெற்று, எவரது ஆணை யால் எப்படி அவதரித்தாள்?'' என்று நாரத மகரிஷி கேட்டார். அதற்கு நாராயணர் கூறலானார்:

''அரசர்கள் எல்லோரையும் விடச் சிறந்தவனும் ராஜாதி ராஜ னும் சூரிய வம்சத்தில் பிறந்தவனுமான சகரன் என்பவன், வைதர்ப்பி, சைப்பியை என்னும் மனைவியர் இருவரோடு பூவுலகில் வாழ்ந்து வந்தான். அப்பொழுது சைப்பியைக்கு அஸமஞ்சன் என்ற ஒரு புத்திரன் பிறந்தான். வைதர்ப்பி என்பவள் தனக்கும் ஒரு பிள்ளை வேண்டும் என்று சிவபெருமானைப் பூஜித்துப் பிரார்த் தனை செய்தாள். சங்கரனின் அருளால் அவளுக்குக் கர்ப்பம் உண்டாகி, நூறு ஆண்டுகள் சென்ற பிறகு ஒரு மாமிச பிண்டத் தைப் பெற்றாள். அதைக் கண்டதுமே அவள் அழுது கொண்டே சம்புவான சிவபெருமானை தியானித்தாள். சிவபெருமான் பிராமண வடிவில் வந்து, அந்தப் பிண்டத்தை அறுபதினாயிரம் பாகங் களாகச் செய்தார். அவைகள் அனைத்தும் புத்திரர்களாகிவிட்டன. ஆனால் அவர்கள், கபில முனிவரின் சாபத்தினால் சாம்பலாகிவிட்ட

னர். அதைக் கேட்டதும் அசமஞ்சன் அழுது, அடர்த்தியான ஒரு காட்டுக்குச் சென்று ஆகாச கங்கையைப் பூமிக்கு கொண்டுவந்து வம்சத்தைப் பரிசுத்தி செய்வதற்காக ஒரு லட்சம் வருஷங்கள் அருந்தவஞ் செய்தும், அவன் எண்ணம் நிறைவேறாமல் மாண்டு மறைந்தான். அவனைப் போலவே அவனது மகனான அம்சுமான் என்பவன் லக்ஷம் ஆண்டுகள் தவம்புரிந்து மரணமடைந்தான். அவனது புத்திரனாகிய பகீரதன் என்பவன் லக்ஷம் வருஷம் கடுந் தவம் புரிந்து, கண்ணபிரானைத் தியானித்துப் பிரார்த்தித்துத் தன் வம்சத்தை கரையேற்றுவதற்கான வரத்தைப் பெற்றான். பிறகு, கிருஷ்ணபரமாத்மா கங்கையை நோக்கி,''சுரேஸ்வரீ! இப்போது நீ சரஸ்வதியின் சாபத்தின்படி பாரத நாட்டிற்கு விரைந்து சென்று சகரனுடைய புத்திரர்களையெல்லாம் உன்னுடைய பரிசுத்தமான காற்றினால் தூய்மைப்படுத்துவாயாக அவர்கள் பிறவிமுடிவில் செய் திருந்த பாவங்களெல்லாம் நீங்கி ஒழிந்து, என்னிடம் பரிசாரகர் களாய் வந்து ஒரு துயரமும் இல்லாமல் என் அருகில் வாழ்வார் களாக! நீயும் பூலோகத்தில் மகிமையுள்ளவளெனப் பெருமையாகப் பூஜிக்கப்படுவாய்!'' என்றார்.

பிறகு அப்பெருமைகளை விரித்துக் கூறினார்:

''பல கோடிப் பிறவிகளில் மனிதர்கள் செய்து வந்த பாவங்கள் எல்லாம் உனது நதிக்கரைக் காற்றின் தீண்டலால் நீங்கிவிடும். உன்னைத் தரிசிப்பதைக் காட்டிலும் உனது ஸ்பரிசம் பத்து மடங்கு புண்ணிய பலனை வழங்கும். உன்னுடைய நீரில் சாதாரண நாளில் மௌசல ஸ்நானம் செய்தாலே பிரம்மஹத்தி முதலிய முற்பிறவிப் பாபங்களும், அறிந்து செய்த பாவங்களும் நீங்கியொழிந்துவிடும் என்று வேதம் குறிப்பிடுகிறது. அப்படியிருக்கும் உன்னுடைய நதி ஜலத்தில் புண்ணிய தினத்தில் ஸ்நானம் செய்வதால் கிடைக் கும் பயனை வேதங்களாலும் தேவர்களாலும் சொல்ல முடியாதாகை யால் அவை தம்மால் முடிந்தளவு கூறியுள்ளன. கங்கையே! சாமான்ய தினத்தில் சங்கல்பஞ்செய்து உன் நதி நீரில் ஸ்நானம் செய்வதால் உண்டாகும் புண்ணியம், மௌசல ஸ்நானப்பலனை விடப் பத்து மடங்கு அதிகம். சூரிய சங்கிரமண காலங்களிலும் அமாவாசையிலும் செய்யும் ஸங்கல்ப ஸ்நானபயன், சாதாரண நாட்களில் செய்யும் சங்கல்ப ஸ்நான பலன்களைவிடமேலானதாகும் தக்ஷிணாயன ஸ்நானபயன் இரண்டு மடங்கு அதிகப்பலன் தரும். அதைவிடப் பத்துமடங்கு அதிகம் உத்தராயண புண்ணிய காலத் திற்செய்யும் ஸ்நானமாகும். சாதுர் மாஸ்ய பௌர்ணமியில் செய் யும் ஸ்நான பலனை அளவிட்டுக் கூறமுடியாது. அக்ஷயமாம் உத்தராயண காலத்திற்செய்யும் ஸ்நான புண்ணியத்திற்கு சமம் என்று வேதங்களில் கூறப்பட்டிருக்கிறது. மேலே சொன்ன தினங் களில் ஸ்நானத்தின் பொருட்டு செய்யும் தானதருமமோ சாதாரண நாட்களில் செய்யும் புண்ணிய பலனைவிட நூறு மடங்கு அதிகம்.

மன்வந்த்ராதிகளிலும் மாசிமாதத்து சுக்ல பக்ஷ சப்தமியிலும் பீமாஷ்டமியிலும் அசோகாஷ்டமியிலும் நவமியிலும் நந்தாதிகளிலும் ஸ்நானம் செய்தால் மேலே சொன்ன பயனுக்கு இருமடங்கு அதிகமாகும் தசராவிலும் தசரா தசமியிலும் ஸ்நானம் செய்தால் யுகாதியில் செய்த பயனும், வாருணியில்செய்தால் நந்தநதிபயனும், மகத்திர்வத்தில் செய்தால் மேலே சொன்ன பயனைவிட நான்கு மடங்கு புண்ணியமும் கிடைக்கும். துவிமகத்திர்வத்தில் ஸ்நானம் செய்தால் அதைவிட நான்கு பலன் உண்டாகும். சாதாரண நாட்களில் செய்யும் ஸ்நானத்தைவிட சந்திர கிரகண காலத்தில் செய்யும் ஸ்நானத்தின் புண்ணியபலன் கோடிப் பங்கு அதிகமாகும். சூரிய கிரகண ஸ்நானம் அதைவிடப் பத்துமடங்கு அதிகமாகும்!'' என்று கிருஷ்ணர் விளக்கினார்

அப்போது கங்கை அவரை நோக்கி, 'லோக நாதரே! சரஸ்வதியின் சாபத்தாலும் பகீரதனின் அருந்தவத்தாலும் உமது கட்டளையாலும் நான் பாரத நாட்டிற்குப் போய்ச் சேர்ந்து நதியுருவமாக ஓடும்போது பாபிகள் என்னிடம் ஸ்நானம் செய்து எண்ணற்ற பாபங்களை என் ஜலத்திலே கழுவி அப்பாவங்களையெல்லாம் என் மீது சுமத்துவார்களே? அவையெல்லாம் எந்த வழியால் ஒழியுமோ அந்த உபாயத்தையும் பாரத நாட்டில் நான் எத்தனை காலம் கங்கை நதியாக இருந்து எப்போது பரமபதத்திற்கு மீண்டும் வந்து சேர்வேனோ அதையும், என் விருப்பங்களுக்குரிய வழிமுறைகளையும் எனக்குக் கூறவேண்டும்!'' என்று வேண்டினாள். அதற்கு விஷ்ணு, ''கங்கையே! உனது நோக்கங்களை நான் அறிவேன்! நதியுருவமாக நீ சென்றதும் உனக்கு லவண சமுத்திரம் கணவனாகும் ஏனெனில் அந்தக் கடல் எனது அம்சமேயாகும்! நீயோ மகாலக்ஷ்மியின் அம்சம். மகா சாதுரிய வல்லவனான ஆடவனுடன் அதே மாதிரி சாமர்த்தியக்காரியான மங்கை சேர்வதுதான் சுவையாக இருக்கும்! அதுதான் சிறப்புமாகும்! பாரத நாட்டில் சரஸ்வதி முதலிய நதிகளைவிட நீ ஒருத்தியே பேரழகியாக இருப்பதால் கூடல் காலத்தில் நீ கடலரசனுக்கு இனியவளாக இருப்பாய்! தேவ கங்கையே! நீ சரஸ்வதியின் சாபத்தினால் இன்று முதல் கலியுகத்தில் ஐயாயிரம் ஆண்டுகள் பாரத தேசத்தில் கங்கை நதியாக இருப்பாய்! நீ நாள் தோறும் சமுத்திர ராஜனோடு கூடி மகிழவும் போகிறாய்! சிருங்காரச் சுவையில் நீ சாமர்த்தியம் காட்டி மிகவும் ரசித்து மகிழ்வாய்! பகீரதன் செய்த தோத்திரத்தால் பாரத நாட்டு மக்களெல்லாம் உன்னை தோத்தரித்துப் பூஜிப்பார்கள். கண்ணுவ சாகையில் கூறிய விதிப்படி எவனொருவன் உன்னை பூஜிக்கிறானோ, அவன் அசுவமேத யாகம் செய்வதால் கிடைக்கக் கூடிய புண்ணிய பலனை அடைவான். எவன் நூறுயோசனை தூரத்திலிருந்து ''கங்கை! கங்கை'' என்று உன்னை நினைத்து துதிக்கிறானோ, அவன் எனது உலகத்தை அடைவான். ஆயிரம் பாவிகள் உன்னுடைய நதி

ஜலத்தில் ஸ்நானம் செய்வதால் உனக்குச் சுமத்தப்படும் பாபங்கள் பிரகிருதி தேவியின் பக்தர்களின் ஸ்பரிசத்தாலும் ஆயிரம் பாபிகளின் ஸ்பரிச பாபங்கள் பிரகிருதி தேவியின் மந்திரத்தை உச்சரிப்பவன் செய்யும் புண்ணிய ஸ்நானத்தாலும் உன்னை விட்டு நீங்கிப் போகும். இவ்விதமாக உனது பாவங்களையெல்லாம் ஒழித்து விட்டு, சரஸ்வதி முதலிய நதிகளோடு நீயும் பாரத நாட்டில் ஒரு நதியாகச் சஞ்சரித்துப் பிறகு காலக் கிரமத்தில் என்னிடம் திரும்பி வருவாய். எங்கெல்லாம் உனது குணங்களை புகழ்ந்து பாடுகிறார்களோ அவர்களெல்லாம் தூய்மையடைவார்கள். உனது நீர்த்திவலைகள் எத்தனை மனிதர்கள் மீது படுகின்றதோ, அத்தனை காலம்வரையில் அம்மனிதர்கள் தேவருலகில் வந்து வாழ்வார்கள்! அறிவார்ந்த பக்தியோடு எனது பெயரை நினைத்த வண்ணம், எவர் உன் ஜலத்தில் மடிந்து விழுகிறார்களோ அவர்களெல்லாம் எனது உலகத்தை அடைந்து, பிராகிருதம் என்ற பலப் பல பிரம்ம பிரளயத்தைப் பார்ப்பார்கள். பல புண்ணியங்களைச் செய்தவதனின் பிணவுடல்கள் உன் நதி ஜலத்தில் வந்து விழும். அந்தப் புண்ணியத்தைக் கொண்டே நான் அவனை வைகுண்டத்தில் சேர்த்து, அங்குள்ள அநேக சுகங்களை அனுபவிக்கும் புதிய உடலை அவனுக்கு வழங்கி, எனது சபையில் சேர்த்துக் கொள்வேன். அறிவிலி உன் தண்ணீரின் சம்பந்தத்தால் உயிர் நீப்பானேயாகில் அவனுக்கும் சாலோகம் கொடுத்து என் சபையில் சேர்த்துக்கொள்வேன். எந்த இடத்திலாவது உன்னை நினைத்துக் கொண்டே எவனாவது மடிவானேயாகில் அவனுக்கும் பிரும வயதளவு சாலோகப் பதவி கொடுத்து இரத்தினவிமானத்தில் கோலோகத்தில் சேர்ப்பிப்பேன்! என் மந்திரத்தை உபாசிக்கும் பக்தர்கள் ஜீவன் முக்தர்களாக விளங்குபவர்களாகையால் அவர்கள் மூவுலகையும் பரிசுத்தம் செய்ய வல்லவர்களல்லவா?' என்று கிருஷ்ணர் கூறிவிட்டு, பகீரதனை நோக்கி, "நீ கங்கையைத் துதித்து பூஜிப்பாயாக" என்று கூறினார். பகீரதன் அவ்வாறே பூஜை செய்து விட்டு கௌதம முனிவர் கூறியுள்ள தியானத்தால் கிருஷ்ணரைப் பலதடவைகள் வணங்கினான் பிறகு, அனைவரும் அவரவரிடத்திற்கு சென்றார்கள்.'' — இவ்வாறு நாராயணர் கூறினார்.

பகீரதன் செய்த பூஜைக் கிரமத்தையும் கூற வேண்டுமென்று நாரத முனிவர் கேட்டார். அதற்கு நாராயணர் கூறலானார்! "ஒருவன் தனது காலைக் கடன்களை முடித்துக் கொண்டு விநாயகர், சூரியன், அக்கினி, விஷ்ணு, சிவன், தேவி, ஆகியவர்களைப் பூஜித்து, அதன் பிறகுதான் தனது இஷ்ட தேவதையைப் பூஜிக்க வேண்டும் விக்கினங்களை நாசஞ் செய்வதற்காக விநாயகரையும், ஆரோக்கியத்திற்காகச் சூரியனையும், தூய்மைக்காக அக்கினியையும், சம்பத்திற்காக விஷ்ணுவையும் ஞானத்திற்காக சிவனையும்

மோட்சத்திற்காக தேவியையும் பூஜித்தால் கேடு நேராமல், தியானம் முடியும்!

## 12 கங்கையின் வடிவமும் தியானமும் துதியும்

பாபங்கள் அனைத்தையும் அகற்ற வல்ல கங்கை நதியின் தியானத் துதி கண்ணுவ சாகையிலுள்ளது. அதைக் கூறுகிறேன்.

• தியானக் கருத்து:—வெள்ளைத் தாமரை நிறமுடையவளே! பாபநாசினியே! பதிவிரதையே! கண்ணபிரானின் தேகத்தில் தோன்றிய அவருக்குச் சமதையானவளே! தூய ஆடைகள் உடுத்தியவளே! நூறு சரத்காலச் சந்திரனைப் போன்ற ஒளியுடையவளே! புன்சிரிப்பு பூப்பவளே! எப்போதும் இளமையாக இருப்பவளே! நாராயணப் பிரியையே சாந்தவதியே! சௌபாக்கியவதியே! மாலபூ மலர் சூடிய கூந்தலையுடையவளே! சந்தண கஸ்தூரி, சிந்தூரப் பொட்டுடையவளே! மனோகரியே! கொவ்வைப் பழ வாயிதழ்கள் வாய்ந்தவளே! முத்துப் பல் வரிசையுடையவளே! பிரகாசவதனியே! கருணை ததும்பும் மோகன விழியுடையவளே! வில்வப் பழம் போன்ற கடினமான தனங்களையுடையவளே! மென்மையான இடையும், வாழைத் துண்டுகளைப் பழிக்கும் தொடைகளையும், பாதுகையணிந்த தாமரை மலர் பாதங்களையும் கொண்டவளே! குங்குமமும் மருதாணிப் பற்றும் பூசியவளே! இந்திரன் முடி மீதுள்ள மந்தார மலரின் சாற்றினால் சிவந்த பாதங்கள் அமையப் பெற்றவளே! தேவர்களும் முனிவர்களும் சித்தர்களும் கொடுக்கும் அர்க்கியத்தை ஏற்பவளே! முமுட்சுக்களுக்கு மோட்சத்தையும் காமிகளுக்குச் சகல சுகத்தையும் பக்தர்களுக்கு கருணையோடு வரங்களையும் கொடுப்பதில் உன்னதமானவளே! விஷ்ணுவின் வியாபக ஸ்தானத்தில் உதித்தவளே! விஷ்ணுபதி என்ற பெயரையுடைய உன்னை நமஸ்கரிக்கிறேன்!''

இந்தத் தியானத்தினால் கங்கையைத் தியானித்து, ஆஸனம், பாத்யம், (திருவடி கழுவு நீர்) அர்க்யம் (மந்திர நீர்) அனுலேபனம், தூபம், தீபம், நைவேதியம், தாம்பூலம் குளிர் ஜலம், ஆடை, ஆபரணம், மால்யம், கந்தம், ஆசமனியம், அழகும், மென்மையும் வாய்ந்த படுக்கை ஆகிய பதினாறு உபசாரங்களையும் செய்த பிறகு, தோத்திரமும் நமஸ்காரமும் செய்ய வேண்டும்.

தோத்திரம்—''பாபத்தை அழித்து, புண்ணியத்தைப் பெருக்கும் சிவபெருமானின் இன்னிசையில் மோகிப்பவளாயும், கிருஷ்ணரு

டைய அங்கத்திலும் ராதாதேவியின் தேகத்திலும் ஜலவடிவமாகப் பிறந்தவளாயும் உள்ள கங்காதேவிக்கு நமஸ்காரம்! ராதாதேவி யிடமிருந்து எந்த தேவியின் பிறப்பு படைக்கப்பட்டு ராசா மண்ட லத்திலும் சிவ சமுகத்திலும் பூலோகத்திலும் இருக்கிறதோ அந்தக் கங்காதேவிக்கு நமஸ்காரம்! கோபாலர்களாலும் கோபிகைகளா லும் கொண்டாடப்பட்ட சுபமான ராதா மகோற்சவத்தினமான கார்த்திகைப் பௌர்ணமியில் எந்தத்தேவி உற்பத்தியானுளோ, அந்தக் கங்காதேவிக்கு நமஸ்காரம்' கோடி யோசனையளவு பரப்பும் கோடியோசனை ஆழமும், லக்ஷம் யோசனை நீளமும் உள்ளவளாய் கோலோகத்தைச் சூழ்ந்திருக்கும் கங்காதேவிக்கு நமஸ்காரம்! அறுபது லக்ஷம் யோஜனை அகலமும், அதைவிட நான்கு பங்கு அதிகங் கொண்ட நீளமுமாக எந்தத் தேவியானவள் வைகுண்டத் தில் வியாபித்திருக்கிருளோ அந்தக் கங்காதேவிக்கு நமஸ்காரம்! முப்பது லக்ஷம் யோசனைப் பரப்பளவும் அதற்கு ஐந்து மடங்கு நீளமுங்கொண்டு எந்தத் தேவி பிரம்மலோகத்திலும், முப்பது லக்ஷம் யோசனை அகலமும் அதற்கு நான்கு பங்கு நீளமுங்கொண்ட வளாக சிவலோகத்திலும், லக்ஷம்யோஜனை அகலமும் அதற்கு ஏழு பங்கு நீளமும் கொண்டவளாக சந்திரமண்டலத்திலும், அறுபதினு யிரம் யோஜனை அகலமும் அதைவிடப் பதின்மடங்கு நீளமுங் கொண்டு சூரிய மண்டலத்திலும், லக்ஷம் யோஜனை அகலமும் அதற்கு ஐந்து பங்கு நீளமும் கொண்டு தபோலோகத்திலும், ஆயிரம் யோஜனை அகலமும் அதைவிடப் பத்து மடங்கு நீளமும் கொண்டு ஜனர்லோகத்திலும், பத்துலக்ஷம் யோஜனை அகலமும் ஐம்பது லக்ஷம் நீளமும் கொண்டு மகாலோகத்திலும், ஆயிரம் யோசனை நீலமும் லக்ஷம் யோசனை அகலமும் கொண்டு கைலாயத்திலும் நூறு யோஜனை அகலமும் ஆயிரம் யோசனை நீளமும் கொண்டு மந்தாகினி என்ற பெயருடன் இந்திரலோ கத்திலும், பத்து யோஜனை அகலமும் நூறு யோஜனை நீளமும் கொண்டு போகவதி என்ற பெயரோடு பாதாளத்திலும், இரண்டு தூரம் அகலமும் அதற்குக் குறைவாயும் உள்ள அளகநந்தை என்ற பெயரில் பூமியில் கிருதயுகத்தில் பால் போலவும் திரே தாயுகத்தில் சந்திரன் போலவும் துவாபரத்தில் சந்தனம் போலவும் கலியுகத்தில் தண்ணீர் போலவும் சுவர்க்கத்தில் எப்பொழுதுமே பால்போலவும் இருக்கும் கங்காதேவியை நான் வணங்குகிறேன். எவளின் நீர்த்திவலைபட்டவுடனேயே பாபிகளின் பிரம்மஹத்தியாதி பாவங்களெல்லாம் பறந்தொழிந்து மெய்யறிவுச் செல்வம் பெருகுகிறதோ அந்த கங்கா தேவிக்கு எனது வணக்கம்!''

...வாறு பாபத்தை நீக்கிப் புண்ணியத்தை விளைவிக்கும் கங்கையின் தோத்திரமான இருபத்தோரு சுலோகங்கள் கூறப் பட்டுள்ளன. இதைத் தினந்தோறும் துதிப்பவன் அசுவமேத யாகப்

பயனை அடைவான். மனைவி, மகன். புகழ் இவைகளற்றவன் அவ்வவற்றைப் பெறுவான். நோயாளி குணமடைவான். கட்டுப் பட்டவன் விடுதலையடைவான். மூர்க்கனும் முழு மூடனும் அறிஞன் ஆவான். கெட்ட கனவுகள் நன்மையாக முடியும். இந்தத் தோத் திரத்தினால் பகீரதன் ஆகாசக் கங்கையைப் பூமிக்குக் கொண்டு வந்து சகரனின் பிள்ளைகள் இறந்த இடத்திற்கு அழைத்துச் சென்றான். கங்கையின் காற்றுப்பட்டதுமே, சகரபுத்திரர்கள் பரம பதத்தை அடைந்தார்கள்.

பகீரதனால் பூமிக்குக் கொண்டுவரப் பட்டதால் பாகீரதி என்று கங்கைக்கு ஒரு பெயர் உண்டாயிற்று. இவ்விதமாகப் புண் ணியத்தையும் மோட்சத்தையும் தருகின்ற கங்கையின் வரலாற் றைக் கூறினேன். இனிமேல் நீ எதைக் கேட்க விரும்புகிறாய்?'' —இவ்வாறு நாராயணர் கேட்டார்.

நாரத மகரிஷி அவரை நோக்கி, ''இந்த உலகைத் தூய்மைப் படுத்தும் கங்கை எந்தக் காரணத்தால் திரிபதகை என்று பெயர் பெற்றாள். அங்கு இருப்பவர் யாவர்? அவர்களைப் பற்றி எனக்கு விபரமாகச் சொல்லுங்கள்!'' என்றார்.

நாராயணர் கூறினார்:

''கார்த்திகைப் பௌர்ணமியில் ராதைக்கு மஹோத்ஸவம் நடைபெற்றது. அப்போது கிருஷ்ண பரமாத்மாவும் சவுன காதி முனிவர்களும் பிரம்மா முதலானவர்களும் ராதையைப் பூஜித்து மகிழ்ந்திருந்தனர். அப்படியிருக்கும் சமயத்தில் கிருஷ்ண ரால் ஏவப்பட்ட கலைமகளான சரஸ்வதி, அழகான தாளத்தில், வீணையிசை இசைத்து, மிகவும் இனிமையாகப் பாடினாள். அதைக் கேட்டு மகிழ்ந்த பிருமதேவர் ரத்னஹாரத்தையும் ருத்திரர், அபூர்வ மான மணி மாலையையும் கிருஷ்ணர் கௌஸ்துப மணியையும், லக்ஷ்மி விலைமதிப்புற்ற ரத்னக் காதோலையையும், விஷ்ணு மாயை யும் துர்க்கையும் நாராயணியும் மூலப் பிரகிருதியுமானவர்கள் பிரம்ம பக்தியையும் தர்ம புத்தியையும், யமன் புகழையும், வாயு தேவன் மணியாலான நூபுரத்தையும் பரிசளித்தார்கள்.

இந்நிலையில் பிரம்மா ருத்திர மூர்த்தியைப் பாடும்படி வேண்ட அவர் உற்சாகத்தோடு சிறந்த ராகத்தில் மிகவும் இனிமையாகப் பாடினார். அந்தச் சங்கீதத்தைக் கேட்டுச் சகல தேவர்களும் மயங்கி மூர்ச்சித்தனர். பிறகு மயக்கம் தெளிந்து சுய நினைவு பெற்றுச் சுற்றிலும் பார்த்தார்கள். அப்போது ராதையும் கிருஷ்ண ரும் காணப்படவில்லை. எங்கும் ஒரே ஜலமயமாக இருந்தது. அதைக்கண்டு கோபியரும் கோபாலரும் விம்மி விம்மி அழுதார்கள். ராதையும் கிருஷ்ணரும் ஜலமயமாகிவிட்டதை பிருமதேவர் தமது தியானத்தால் அறிந்தார். பிறகு பிருமா முதலான தேவர்கள்

அனைவரும் பரமனைக் குறித்து வணங்கி "உமது திருவுருவைக் காட்டும். அது ஒன்றையே நாங்கள் விரும்புகிறோம்!" என்றனர். அப்பொழுது வானொலி வாக்கு ஒன்று இனிமையாகவும் தெளிவாக வும் ஒலித்தது. அந்த வாக்கு: "நான் சர்வாத்மாவாக இருப்பவன். சக்திதேவி பக்தர்களுக்கு அருளும் பொருட்டு தேகத்தைக் கொண்டவன். எங்களது தேகங்களால் உங்களுக்கு ஆகவேண்டியவை என்ன இருக்கும்? மனுக்கள், முனிவர்கள், வைஷ்ணவர்கள் முதலியோர் எங்களது மந்திர உச்சாரணையினால் தூய்மையடைந்து எமது பதத்தையடைவார்கள் நீங்கள் எங்களைப் பார்க்க விரும்பினால் தேவ சபையில் சிவபெருமான் விஷ்ணுமாயையோடு கூடி எல்லாப் பயன்களையும் அளிக்கவல்ல அபூர்வமான மந்திரங்களையும் தியான சுலோகங்களையும் பூஜை முறைகளையும் கவசங்களையும், வேதாங்கங்களையும் உன்னத சாஸ்திரங்களையும் வேதசாரத்தையும் சிருஷ்டித்து, குருவாக இருந்து காப்பதாக திடமாக உறுதியளித்தால் உங்களுடைய எண்ணம் நிறைவேறும். பக்தியற்றவர் எம்மைப் பூஜிக்கமாட்டார்கள். என் மந்திரத்தை உபாசித்து தூய்மையானவர் எனது உலகத்தை வந்தடைவார்கள். இந்த மந்திரோபாசனை இல்லையெனில் இந்தப் பிரம்மாண்டமெல்லாம் பயனற்றதாகிவிடும். படைப்புக் காலந்தோறும் மானிடரை ஐவகையாகப் படைத்து, சிலரைச் சுவர்க்கத்திலும் சிலரைப் பூமியிலும் வசிக்கச் செய்வாயாக!" என்று பிரமனறியக் கூறியது.

இதைக்கேட்ட பிரமன், சிவபெருமானிடம் சொல்ல, ஞானசேகரரான சிவபெருமான் முன்னின்று, "எவன் கங்கை நீரைக் கையில் எடுத்துக் கொண்டு பொய்யைச் சொல்லுகிறானோ அவன் பிரமனின் வயது எவ்வளவோ அவ்வளவு ஆண்டுகள் காலசூத்திரம் என்ற நரகத்தை அடைவான்" என்று கூறிக் கங்கை நீரைக் கையில் எடுத்து அசரீரி மொழிந்தவாறு பிரதிக்ஞை செய்தார். கிருஷ்ணர் ராதையோடு தோன்றினார். அவர்களைக் கண்ட தேவர்கள் மகிழ்ந்தனர். மீண்டும் அந்த மகோத்சவத்தைத் தொடர்ந்து கொண்டாடினார்கள். பிறகு சிவபெருமான், முக்தி தீபம் என்ற பெயரில் இரகசியமும் அபூர்வமும் வாய்ந்த நூல் ஒன்றை உருவாக்கினார்.

நதிநீர் உருவமாகக் கோலோகத்தில் வசிப்பவளாகவும் ராதா கிருஷ்ணர்களிடம் பிறந்தவளாகவும் புத்தியையும் முக்தியையும் தருபவளாகவும் விளங்கும் கங்கையானவள், பரமாத்மாவினால் அங்கங்கு ஸ்தாபிக்கப்பட்டு பிரம்மாண்டம் எங்குமே போற்றி பூஜிக்கப்படுகிறாள்.

## 13 கங்கையின் மோக மயக்கமும், ராதையின் பொறுமைக் கோபமும்

நாரதமுனிவர் நாராயணரை நோக்கி, ''எல்லாம் அறிந்தவரே! கலியுகத்தில் ஐயாயிரம் ஆண்டுகள் கழிந்த பிறகு கங்கை எங்கு சென்றாள்?'' என்று கேட்டார்.

அதற்கு நாராயணர் கூறலானார்:

''சரஸ்வதியின் சாபத்தினால் பாரத தேசத்தையடைந்த கங்கை அந்தச் சாபத்தின் முடிவில் வைகுண்டம் சேர்ந்தாள். அது போலவே, சரஸ்வதியும் பதமாவதியான லட்சுமியும் வைகுண்டம் சேர்ந்தனர். விஷ்ணுவுக்கு* கங்கை, சரஸ்வதி, லக்ஷ்மி, துளசி என்று நான்கு மனைவியர்கள் உண்டு'' என்றார். உடனே நாரதர், அவரை நோக்கி, "சுவாமி! அந்தக் கங்கை விஷ்ணுவின் பாதத்தில் உற்பத்தியானவள் என்றும் பிரமனின் கமண்டலத்தில் உதித்தவள் என்றும் சிவபெருமானுக்குப் பிரியமானவள் என்றும்







மகா விஷ்ணுக்குப் பிரியமானவள் என்றும் சொல்லப்படுகிறுள்; அது ஏன்?'' என்று கேட்டார்.

நாராயணர் கூறலானுர்:

''முன்பு ஒரு காலத்தில் ராதாகிருஷ்ணரின் உடம்பிலிருந்து ஜலரூபமாகத் தோன்றிய கங்கை ராதாகிருஷ்ண அம்சமாகவும் ஜலத்துக்கு அதிதேவதையாகவும் ஒப்புவமையற்ற பேரழகியாகவும் கவர்ச்சி வனிதையாகவும் காமம் மிகுந்தவளாகவும் கிருஷ்ணரின் அருகில் வந்து, நாணத்தோடு மேலாடையால் தன் தனது முகத்தை மூடி மறைத்துக்கொண்டு, தனது கண்களால் அவரது முகத்தை கண்ணிமை கொட்டாமல் பார்த்துப் பார்த்து அவரது அழகில் மிகவும் மயங்கி, அடங்கா மோகங் கொண்டு கூடிக் குலாவும் சேர்க்கை இச்சையில் மிகவும் ஆசைப்பட்டு மெய்சிலிர்க்க, ரோமங்கள் குத்திட்டு நிற்க, அப்படியே மூர்ச்சித்துவிட்டாள். அந்தச் சமயத்தில் ராதாதேவி சண்பகமலரைப் போன்ற மேனியோடும் யானையின் நடைபோன்ற மதர்ப்பு நடையோடும், விலையற்ற நவரத்தின ஆபரணங்களும் ஆடை அலங்காரங்களும் புனைந்துகொண்டும் இரண்டு பீதாம்பரங்களை இணைத்துத் தரித்து, சிந்தூரம், சந்தனம்'





கஸ்தூரி என்ற மூவகைத் திலகங்களை நெற்றியில் இட்டுக் கொண்டும் மிக்க பரிமள பாரிஜாத மலர்களை நிறைய அணிந்த கூந்தல் உடையவளாய் கமகமவென வாசனை வீச, கோடி சந்திரர்கள் ஒரே சமயத்தில் உதித்ததைப் போன்று ஒளிவீச, கிருஷ்ணர் கொடுக்கும் அர்க்கிய ஜலத்தை ஏற்கும் பாதாம்புயங்களை பையப் பைய வைத்து, ரத்தன விமானத்தை விட்டு இறங்கி மாமுனிவர்களும் மங்கையரும் இருபுறத்திலும் வெண்சாமரை வீசவும், முப்பது கோடி கோபிகா ஸ்திரீகள் சூழ்ந்துவரவும் ஆத்திரத்தோடு வந்தாள். அவள் கண்கள் கோபத்தால் சிவந்தன. உதடுகள் துடிதுடித்தன. அவள் கிருஷ்ணரின் அருகிலிருந்த அரியணையில் ஏறியமர்ந்தாள். கிருஷ்ணர், அவளைப் பார்த்ததும் விருட்டென்று எழுந்து, இனிப்பான சொற்களால் இனிமையாகப் பேசிப் புன்சிரிப்போடு அவளைப் புகழத் தொடங்கினர். கோபிகாப்பெண்களோ அதிகமாகப் பயந்து நடுங்கி தலைகுனிந்து மிகவும் பக்தி சிரத்தையோடு கும்பிட்டார்கள். அந்தச் சமயம் கங்காதேவியும் மூர்ச்சை தெளிந்து விருட்டென்று

எழுந்தாள். குசலப்பிரசன்னம் செய்து அவள் தாழ்வான இடத்தில் நின்று பயத்தினால் நெஞ்சும் முகவாயும் உதடுகளும வறண்டு உலர, கிருஷ்ணரின் திருவடிகளில் சரண் அடைந்து பிரார்த்தித்தாள். கிருஷ்ணர் அவளுக்கு அபயங்கொடுக்கவே கங்கை நிம்மதியடைந்தாள்.

பிறகு கோபத்தோடு இருக்கும் ராதையை கங்கை மனம் வாடியவளாய் பார்த்துக் கொண்டே நின்றாள். அப்போது ராதை சாந்தமடைந்து புன்னகையுடன் கிருஷ்ணரை நோக்கி, ''ஜகநாதரே! உமது முகத் தாமரையையும் பேரழகையும் புன்னகையும் கண்டு மயங்கி மூர்ச்சையடைந்து, பிறகு வெட்கத்தோடு ஆடையினால் முகத்தை மறைத்துக் கொண்டு அடிக்கடி உம்மையே பார்க்கும் இந்தப் பெண்மணி யார்? நீரும் இவளைப் பார்த்துக் காமுகராய்ப் புன்னகை செய்கிறீர், நான் இருக்கும் போதே நீர் இத்தகைய துர் நடத்தைகளை அடிக்கடி செய்துவருகிறீர் நான் உம்மீது வைத்திருக்கும் காதலினால் பொறுமையாக இருக்கிறேன். பொதுவாகவே பெண் இனத்தினர் இளகிய மனதையுடையவர்கள் என்றும் அற்பத்துக்கெல்லாம் ஆசைப்படுகிறவர்கள் என்றும் சொல்வது உண்மைதான்! பிரபுவே! இனிமேலும் நீர் மோகித்திருக்கும் பிரியபெண்மணியை அழைத்துக் கொண்டு இந்தக் கோலோகத்தைவிட்டுப் போகாமலிருந்தால் உமக்கு நல்லதல்ல. ஆகையால் நீர் மோகங் கொண்டிருக்கும் அவளை அழைத்துச் சென்றுவிடும்! முன்பு ஒருமுறை. சந்தனவனத்தில் நீர் விரஜை என்பவளோடு கூடியிருக்கும்போது நான் கண்ணாரப் பார்த்தேன். அப்போது என் தோழிகள் கூறிய சமாதான வார்த்தைகளால் நான் பொறுமையாக இருந்தேன். நீரோ நான் வந்ததை உணர்ந்ததும் நழுவி மறைந்து விட்டீர்! அந்த விரஜையென்ற பெண்மணியோ! கோடி யோஜனை அகலமும் நான்கு கோடி யோஜனை நீளமுங் கொண்ட ஒரு நதி உருவமாகி விட்டாள்! அவளும் இப்போது இங்கு வந்திருக்கிறாள். நான் அந்தப்புரத்திற்குப் போகும் போது நீர் ஆசையோடு ''விரஜை, விரஜை!'' என்று கூவி அழுதீர். அந்த விரஜை நதியுருவம் மாறி சுய ரூபத்தோடும் கவர்ச்சிகரமான அலங்காரத்தோடும் உம்மிடம்வரவே அவளுடன் கூடிக் குலாவி ஒன்றாகக் கலந்தீர். அவள் ஒருத்தி மட்டுமா? ஒரு சமயம் சண்பக வனத்தில் சோபை என்ற கோபிகா ஸ்திரியோடு கூடிக் குலாவினீர்! அப்போதும் நான் பார்க்கவே என் சப்தத்தைக் கேட்டு நீர் ஓடி மறைந்துவிட்டீர்! அந்த கோபிகையோ சந்திரமண்டலத்திற்குச் சென்று சந்திரகாந்தியாகி விட்டாள்! அவள் மீது வைத்திருந்த ஆசையினால் மிகவும் மன வருத்தமடைந்து, அவளுடைய காந்தியை வேறு வேறாகப் பிரித்து, ரத்தினம், பொன், மணி, மங்கையரின் முகம், அரசன், தளிர், இலை, மலர், பழம், பயிர், அரண்மனை, தேவமாளிகை, கோட்டை முதலானவற்றில்

கலந்திருக்கும்படிச் செய்து அவற்றையெல்லாம் பார்த்துப் பார்த்து குதூகலப்பட்டீர்! அது மட்டுமா?''

''ஒரு காலத்தில் பிருந்தாவனத்தில் பிரபை என்ற கோபிகை யோடு கூடி மகிழ்ந்தீர்! அப்போதும் நான் பார்த்தேன். நீரோ எனது வருகையை அறிந்ததும் நழுவி மறைந்து கொண்டீர். உம் மோடு கூடிக் குலாவிய கோபிகையான பிரபையோ தேஜோ ரூபமாகிவிட்டாள். அப்போது நீர் அவளுடைய தேஜஸைப் பிரித்து கண்கள், அக்கினி, யக்ஷர், கிம்புருஷர், உத்தம மனிதர்கள், வைணவர்கள், சர்ப்பங்கள், பிராமணர்கள், மகரிஷிகள், தபஸ்வி கள், அழகுடைய மங்கையர்கள், புகழுடையவர்கள் ஆகியவர் களிடத்தில் கலந்திருக்கச் செய்து அவற்றைப் பார்த்து சொக்கினீர்! அப்பொழுதும் ஆசையடங்காமல் வருத்தப்பட்டீர்! அதிருக்கட்டும்! இன்னொரு சமயம் ராஜா மண்டலத்தில், வசந்த காலத்தில், ரத்தின மாளிகையில், ரத்தின தீபங்களோடு கூடிய மலர் மஞ்சத்தில் காந்தி என்ற கோபிகையை இருத்தி அவளுக்கு நீர் இரத்தினாபரணங்கள் முதலியவற்றைக் கொடுக்கவும், அவள் உமக்குத் தாம்பூலம் கொடுக்கவும், அந்தக் கோலத்தில் நீங்கள் மகிழ்ந்திருக்கும் சமயம் பார்த்து நான் அங்கு வந்தேன். அப் போதும் என் சப்தத்தைக் கேட்டு நீர் அங்கிருந்து நழுவி மறைந்து விட்டீர்! அவளும் உம்மிடமே மறைந்து சத்குண ரூபியானாள். நீரோ துக்கத்தோடு அவளைப் பிரித்து ஆரண்யம், லக்ஷ்மி, யமன், மந்திர உபாசனையாளர்கள், தபஸ்விகள், தருமசீலர்கள் வள்ளல்கள் ஆகியவரிடத்தில் சிறிது சிறிதாக வசிக்கும்படிச் செய்தீர். மற்றொரு சமயம் க்ஷமை என்ற கோபியுடன் நீர் கூடியிருந்தீர். அதையும் நான் பார்த்தேன்! நீரோ என் வருகையை அறிந்ததும் மெல்ல நழுவித் தலை மறைவாக அவளுடன் தனி அந்தப்புரத்திற்குச் சென்று சந்தனாதிப் பூச்சுக்களாலும் நறுமண மலர்களாலும் அலங் கரிக்கப்பட்ட படுக்கையில், கூடி மகிழ்ந்து இருவருக்கும் உண்டான புதிய கூடல் சங்கமத்தின் மயக்கத்தில் அப்படியே இருவரும் மெய் மறந்து தூங்கி விட்டீர்கள். நான்தான் வந்து உங்களையும் அவளையும் எழுப்பினேன். அதை நீர் இப்பொழுது மறந்திருக்கக் கூடும். நினைவுபடுத்திப் பாரும்! சங்கமப் படுக்கையிலிருந்து எழுந்த பிறகு, நீர் அணிந்திருந்த பீதாம்பரம், முரளி, வனமாலை, கௌஸ்துவ மணி, ரத்தின குண்டலம் முதலானவற்றையெல்லாம். நான் உம்மிடமிருந்து பிடுங்கிக் கொண்டேன். பிறகு என் தோழிகள் கூறிய சமாதான வசனங்களினால் நான் பொறுமையைக் கைக் கொண்டு அவற்றை மீண்டும் உம்மிடமே திருப்பிக் கொடுத் தேன்! அப்போது நீர் மிகவும் பயந்து உடம்பு கிருஷ்ண வர்ணமாக மாறி நின்றீர்! கூச்சத்தால் ஒதுங்கினீர்!- உம்மோடு கூடிக் களித்த அந்தக் கோபிகை க்ஷமையும் உம்முடைய தேகத்தை விட்டு பூமியோடு கலந்து உன்னதமுடைய குணமாக மாறினாள்!

நீரோ அமுது கொண்டே, விஷ்ணு, வைஷ்ணவர், தர்மசீலர்கள் வள்ளல்கள், தர்மம், பலஹீனர்கள், தபஸ்விகள், தேவர்கள், பண்டிதர்கள் முதலானவர்களுக்கு உம் க்ஷமையைப் பிரித்துக் கொடுத்தீர். அத்தகையவரான உம்முடைய குணத்தையும் செயல்களையும் நான் நன்ருக அறிந்து வைத்திருக்கிறேன்!'' என்று கூறிவிட்டு, அங்கு வெட்கத்தோடு தலை வணங்கி நிற்கும் கங்கையை உற்றுப் பார்த்தாள். அதை உணர்ந்ததும் கங்கை சட்டென்று தண்ணீருக்குள் மறைந்துவிட்டாள்.

அப்போது ராதை அந்த நதி நீரை அள்ளிக்குடித்து வெளியே கொப்பளிக்க முயன்ருள். கங்கை, கிருஷ்ணரின் திருவடிகளைச் சரணடைந்து மறைந்து விட்டாள். தண்ணீராக மாறிய அந்தக் கங்கையை எங்குமே காணுமல் ராதை அவளைத் தேடலானுள். ஜல ஆதாரமுள்ள இடங்கள் எல்லாம் தண்ணீர் இல்லாமல் வறண்டும், நீரில் வாழும் பிராணிகளெல்லாம் செத்துமடிந்து கிடப்பதையுமே ராதை கண்டாள். மும்மூர்த்திகள் முதலான தேவர்களும் ஆதிசேஷன் முதலிய நாகலோக வாசிகளும், மனுக்கள் முனிவர்கள், முதலான பூவுலகவாசிகளும் நீரற்று நெஞ்சு உலர்ந்தவர்களாய் கோலோகத்திற்கு விரைந்து வந்தார்கள். பிரகிருதி பரமாகவும் ராதையின் வக்ஷஸ்தலத்திலும் இருக்கும் கிருஷ்ணபகவானை வணங்கித் துதித்தார்கள். அப்போது தேவர்கள் ஒருவரையொருவர் பார்த்துவிட்டு பிரமனை நோக்கி, ''நமது நோக்கத்தைப் பரமாத்மாவுக்குத் தெரிவித்தீரா?'' என்று கேட்டார்கள். உடனே பிருமதேவர் முனைந்து திருமால், ருத்திரர் முதலானவர்களோடு கிருஷ்ண பகவானை நெருங்கிப் பார்த்தார். அப்போது கிருஷ்ண பரமாத்மாவோ பலப் பல கிருஷ்ணர்களாகத் தோற்ற மளித்தார். அதனுல் பிருமதேவர் மதி குழம்பித் திகைத்தார். இக்கிருஷ்ணர்களில் யார் வணங்கத் தக்க கிருஷ்ணர் யார் பணியாளர் என்று நிதானிக்க முடியாமல் தடுமாறினுர். பல கிருஷ்ணர்களாகத் தோற்றமளித்த பரமாத்மாவோ ஒரு கணம் ராதையோடும், ஒருகணம் தனித்தும், ஒருகணம் தன் ரூபத்தை ராதையைத் தரிக்கச் செய்தும் இருப்பதைக் கண்டு, அவர்களில் எது உண்மையான ஆண் உருவம் எது பெண் உருவம் என்று பிரித்தறியமுடியாமல் பிருமா திகைத்தார்.

பிறகு பிருமா தம் ஞானதிருஷ்டியினுல் இதய கமலத்திலிருக்கும் கிருஷ்ண பகவானை பக்தியோடு தியானித்து துதித்தார்.

அப்போது ராதையின் வக்ஷஸ்தலத்தில் இருந்த கிருஷ்ண பரமாத்மா அவர்களுக்குக் காட்சியளித்து அவர்களுடைய கருத்தை விசாரித்துத்தெரிந்து கொண்டு, ''உங்களுக்கு மங்களம் உண்டாகட்டும்!'' என்று ஆசீர்வதித்தார். பிறகு விளக்கம் கொடுத்தார். ராதையைப்பற்றிய பயத்தால் என் பாதத்தில் கங்கை மறைந்திருக்கிருள். அந்தக் கங்கை ஜலரூபமாக வெளிப்பட்டால், அவளை வாயில்

உண்டு உமிழ்வதற்கு ராதையும் காத்திருக்கிருள். ஆகையால் கங்கையை உங்களிடமே ஒப்படைக்கிறேன் அவளைப்பயப்படாமல் இருக்கும்படி நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள்.'' என்றுர் கிருஷ்ண பரமாத்மா. அதைக்கேட்டதும் பிருமதேவர் ராதா தேவியை வேத மந்திரங்களால் துதித்து, ''ராதையே! அந்த கங்கையானவள் ராசமண்டலத்தில் உன்னிடமிருந்தும் உன் நாயகரிடமிருந்தும் ஆக இருவரிடமிருந்தும் உதித்தவளல்லவா? முன்பு ருத்திரர் பாடிய வீணையிசையில், நீங்கள் மெய்ம்மறந்த போது உங்களிடமிருந்து கங்காதேவி ஜலரூபமாக வெளிப்பட்டுத் தோன்றிஞள்! ஆகையால் அவள் உனது புதல்வியாயிற்றே? இந்தக் கங்கை எந்தெந்த உலகங்களில் எந்தெந்தப் பெயருடன் இருந்தாலும் உன் புத்திரியே யாவள். ஆகவே, கங்கை உன் மந்திரத்தைக் கிரகித்து அந்த மந்திரத்தைக் கொண்டே உன்னைப் பூஜிக்கட்டும்!'' என்றுர். அதைக் கேட்டதும் ராதை புன்னகைசெய்து சமாதானமடைந்தாள். உடனே கங்கையும் கிருஷ்ணரின் கால் கட்டை விரலிலிருந்து ஜல ரூபமாக வெளிப்பட்டாள். பிருமதேவர் அந்தக் கங்கை நீரில் சிறிது எடுத்த தமது கமண்டலத்தில் நிரப்பிக் கொண்டார். பிறகு அவர் ராதிகா தேவியின் மந்திரம், பூஜை, தோத்திரம், கவசம் முதலிய வற்றையும், சாமவேதத்தில் சொல்லப்பட்டுள்ள புரச்சரியாதிகளை யும் கங்கைக்கு உபதேசித்தார். அவற்றை கங்கை கடைப்பிடித்து விஷ்ணுவின் உலகத்தையடைந்தாள். ஆகையால் லக்ஷ்மி, சரஸ் வதி, கங்கை, துளசி ஆகிய நால்வரும் விஷ்ணுவின் பத்தினிகளா வார்கள்!

''பிரமனே! இதுவோ ஜலப்பிரளய காலம். தேவாதி தேவர் களும் முனிவர்களும் என்னைப் பார்ப்பதற்காக இங்கே வந்திருப்ப தால் அவர்கள் ஜலப்பிரளயத்தால் அழியாது இருக்கின்றனர். எத்தனையோ பிரம்ம விஷ்ணுக்கள் என்னிடம் லயமடைந்துள்ளனர். நானே பிரமனுய், பிரபஞ்சங்களைப் படைத்திருக்கிறேன். இந்த இடத்தில் பிரளயகாலங்கள் எனப்படும் காலக்கிரமங்கள் கிடை யாது. இன்னும் பலப் பல பிரளயங்கள் வரப்போகின்றன பிரும தேவனே! இனிமேல் நீயே உலகங்களையெல்லாம் படைப்பாயாக. கங்கை நான் கூறிய வண்ணம் உன்னிடம் வருவாள்'' என்றுர் கிருஷ்ண பரமாத்மா.

இவ்வாறு நாராயணர் கூறிஞர்.

## 14 கங்கை விஷ்ணு காந்தர்வ விவாகம்

நாரத முனிவர் நாராயணரை நோக்கி, ''கங்கை, வைகுண்டம் சென்றுள் என்று சொன்னீர்களே. அவள் விஷ்ணுவின் மனைவி

யானதை என்னிடம் சொல்லவில்லையே?'' என்று கேட்டார். நாராயணர் அதைக் கூறினார்:

''நாரதரே! கங்கை வைகுண்டத்திற்குச் சென்றபோது பிரும தேவனும் அங்கு சென்று வைகுண்டநாதரான மகாவிஷ்ணுவை வணங்கி, ''இதோ வந்திருக்கிறாளே கங்காதேவி! இவளைப் பார்த்தீரா?'' என்று அவள் சம்பந்தமாக கோகுலத்தில் நடந்த வரலாற்றையெல்லாம் கூறி, ''இவள் மிகவும் ரசனையுடையவள். நீரும் எங்களையெல்லாம் விடச் சிறந்த ரசிகர்! ஆகையால் இவளை நான் இங்கே அழைத்துவந்தேன். காந்தர்வத் திருமணமுறைப்படி இவளை நீங்கள் மணந்து மனைவியாக்கிக் கொள்ளவேண்டும். இவள் தானாகவே வந்து உமக்கு வலுவில் கிடைத்த வனிதை தானாகக் கிடைத்ததொரு கன்னிகையை ஒருவன் ஏற்காமல் தள்ளிவிடுவானாகில் அவனிடமிருந்து லக்ஷ்மி கோபித்துக் கொண்டு விலகிவிடுவாள். ஏனெனில் மங்கையர் எல்லோருமே பிரகிருதியின் கலையம்சங்களாகும்! ஆகையால் அறிஞனாக இருப்பவன் அத்தகைய கன்னிகைகளை வேண்டாமெனத் தள்ளி அவமதிக்கமாட்டான்! ஆகையால் இந்தக் கங்காதேவியை நீர் தள்ளிவிடாமல் ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்றார்.

பிரமன் கூறிய வண்ணமே காந்தர்வ விவாக முறைப்படி கங்கையின் கரம்பற்றி மகாவிஷ்ணு அவளோடு கூடிமகிழ்ந்தார்.

அதைக்கண்ட சரஸ்வதி துக்கமடைந்தாள். லக்ஷ்மியினால் தூண்டப்பட்டும் துக்கம் அதிகரிக்கப்பட்டும் நாள்தோறும் கங்கை மீது பொறாமை கொண்டும் சாபத்திற்கு இடமளித்தாள்.

இவ்வாறு நாராயணர் கூறியதும் நாரத முனிவர் அவரை நோக்கி, ''சுவாமி! மகாவிஷ்ணுவுக்கு துளசியோடு நான்கு பத்தினிகள் என்று சொன்னீர்களே? இனி அந்தத் துளசியின் சரிதத்தை எனக்குச் சொல்ல வேண்டும்!'' என்று வேண்டினார்.

## 15 நந்திக் கொடியோனும சூரியனின் சாபமும்

நாராயணர் கூறலானார்:

தக்ஷசாவர்ணி என்ற மனு, ஒரு விஷ்ணு பக்தன். விஷ்ணுவின் அம்சபூதன். அவனது புதல்வன் பிரமசாவர்ணி: அவனது புத்திரன் தர்மசாவர்ணி! அவனது புத்திரன் ருத்திரசாவர்ணி. அவனது மகன் தேவசாவர்ணி; அவன் மகன் இந்திரசாவர்ணி; அவன் மகன் விருஷபத்துவஜன் எனப்படும் நந்திக் கொடியோன்.

அவன் சிவ பக்தன். அவனுக்கு
மு ற் ப ட் ட ர்களோ விஷ்ணு
பக்தர்கள். இந்த விருஷபத்து
வஜனை நந்திக் கொடியோ
னின் ஆசிரமத்தில் மூன்று தேவ
யுகம் சிவபெருமான் தங்கியிருந்
தார். அவர் மிகவும் அன்பு
கொண்டிருந்தார். நாராயணர்,
, சரஸ்வதி ஆகியவர்களை
க் கொடியோன்
மனத்தாலும் நினைக்காதவன்.
தன்னுடைய ஆட்சியில் சகல
தேவர்களின் பூ ஜை யையும்
விட்டான். புரட்
டாசி மாதத்தில் வரும் மகா
பூஜையையும், மாசி
மாதத்தில் வரும் சரஸ்வதி
பூஜையையும் விஷ்ணு பூஜை
யையும் யக்ஞத்தையும் செய்யா
ம லு ம் பொருட்படுத்தாமலும்
இருந்தான். இ தை ய றி ந் த
சூரியன் கோபங் கொண்டான்.
சிவபெருமான் தான் நந்திக்
கொடியோனுக்கு ஆதார கார





ணர் என்பதை உணராத சூரியன், "அவன் சம்பத்தில்லாமற் போகக் கடவது!" என்று சபித்து விட்டான் அதைக் கண்டதும் சங்கர பகவானுன சிவபெருமான் சூரியனைத் தமது சூலாயுதத்தால் விரட்டினுர். சூரியன் பிருமலோகத்திற்கு ஓடிச் சென்று பிருமா முதலானவர்களையும் அழைத்துக் கொண்டு வைகுண்டத்திற்குச் சென்று நாராயண மூர்த்தியைச் சரணடைந்து அவரிடம் நடந்தவற்றைக் கூறி முறையிட்டான். நாராயண மூர்த்தி அவனுக்கு அபயமளித்து, "இனிமேல் உனக்குச் சிவ சங்கரரால் பயமில்லை. அவர் சர்வேஸ்வரர். பக்தர்களுக்கு வசப்படுபவர்! பக்தர்களின் ஆத்மாவாக இருப்பவர். பக்தப் பிரியர். எனக்கு என் உயிரை விட பிரியமானவர். சர்வ உலகங் களிலும் அவரைப் போன்ற தேஜசுடையவர் இல்லை. அந்த மகேஸ்வரர் நினைத்தால் கோடி சூரியரையும் பிரம்மாக்களையும் வேடிக்கையாகவே படைக்க வல்லவர். அவரால் முடியாத காரியம் எதுவும் இல்லை! நான் அவரது கல்யாண குணங்களையே நினைத்துக் கொண்டிருக்கிறேன். அவர் மங்களங்களுக்கு நிலைக் களனுக இருப்பதால் அவரைச் 'சிவன்' என்று வழங்குகிறுர்கள்' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே திரிசூலமேந்திய சிவ பெருமான் விடைமீதூர்ந்து வந்து ரிஷப வாகனத்தை விட்டிறங்கி அங்குள்ள ஆசனத்தில் அமர்ந்தார். அனைவரும் அவரை வழிபட்டு வணங்கிப் பூஜித்தார்கள்.

விஷ்ணு அவரை நோக்கி, "பரமேஸ்வரரே! நீங்கள் இவ் வளவு கோபத்துடன் இங்கே வந்திருக்கும் காரணம் என்னவோ?" என்று கேட்டார். அதற்குச் சங்கரர் "என் பக்தனுகிய ரிஷபத் வஜனை (நந்திக் கொடியோனை) சூரியன் சபித்துவிட்டான். அவன் இங்கே வந்திருப்பதால் அவனைக் கொல்லவே இங்கே நான் வந் தேன். என் பக்தனை சூரியனது சாபம் என்ன செய்ய முடியும்? அவன் சாபத்தால் என் பக்தனின் செல்வத்தை அழிக்க முடியுமே தவிர என் மீதுள்ள பக்தியை அழிக்க முடியுமா? எனது பக்தர்களுக் குச் செல்வம் இருந்தால் என்ன? இல்லாமற் போனுல் என்ன? செல் வத்தை அவர்களே வெறுத்துத் தள்ளுகிறுர்கள். அவர்கள் செல்வத்தைக் கொடு என்று என்னிடம் கேட்பதுமில்லை!" என்றுர். உடனே மகாவிஷ்ணு, "நீங்கள் சொல்வது உண்மைதான்! ஆயினும் உம் பக்தனுக்கு ஆயுள் முடிந்து அவன் உம் திருவடி பதவியை அடைந்து விட்டான். இனிமேல் அந்தச் சூரியனைக் கொல்வதால் என்ன பிரயோஜனம்? ஆகையால் நீங்கள் சூரியனை மன்னிக்க வேண்டும்" என்றுர். அவரின் கோரிக்கையால் சிவ பிரானின் கோபம் தணிந்தது. பிறகு அவர் சென்று விட்டார்.

நாரதரே! பிறகு விஷ்ணு தேவர்களை நோக்கி, "விருஷபத்து வஜனின் புத்திரனுன ரதத்துவஜனும் அரசாண்டு மடிந்தான்.

அவன் புதல்வர்களான தர்மத்துவஜன், குசத்துவஜன் என்ற இருவர், செல்வத்தில் ஆசையுடையவர்களாய் எனது பக்தர்களா னார்கள். லக்ஷ்மியை முன்னிட்டு அவர்கள் தவம் புரிந்தார்கள். அதனால் லக்ஷ்மி அவர்களுக்கு மகளாகப் பிறந்து, சகல சம்பத்துக் களையும் உண்டாக்குவாள்'' என்று சொல்லி தேவர்களுக்கு விடை கொடுத்து விட்டுத் தமது அந்தப்புரத்திற்கு சென்றார்.

## 13 வேதவதியின் கதை

நாராயணர் மேலும் தொடர்ந்து கூறலானார்: தருமத்வஜன், குசத்துவஜன் என்ற இருவரும் கடுமையான தவஞ் செய்து தங்கள் விருப்பம் போல் லக்ஷ்மியிடம் வெவ்வேறு வரம் பெற்று, செல்வம் மிககவராகவும் புண்ணியசாலிகளாகவும் புத்திர பாக்கியமுடையவ ராகவும் விளங்கினார்கள். குஸத்துவஜனின் மனைவியான மாலா வதி, லக்ஷ்மியின் அம்சமான ஒரு பெண்ணைப் பெற்றாள். அந்தப் பெண் சிறிது நேரத்திற்கெல்லாம் ஞானவதியாகி வேத சப்தங்களைத் தெளிவாக உச்சரித்துக் கொண்டு, பிரசவ அறையை விட்டு வெளியே வந்தாள். பிறந்தபொழுதே, வேதத்துவனியைச் செய்ததால், அவளை அறிஞர்கள் வேதவதி என்று வழங்கினர். வேதவதி குளித்து விட்டுத் தவஞ்செய்யக் காட்டுக்கு புறப்பட்டாள். அப்பொழுது ஹவினர்கள் அவளைத் தடுத்தனர். அவர்கள் தடுத்தும் வேதவதி கேளாமல் சென்று புஷ்கர க்ஷேத்திரத்தில் ஒரு மன்வந்தர காலம் விளையாட்டாகவே கடுமையான தவஞ் செய்தாள். அப் படித் தவம் செய்தும் அவள் உடல் வாடி இளைக்கவில்லை. வருந்தவு மில்லை. கட்டுக் குலையாத இளமையோடு கன்னி தபஸ்வினியாகவே இருந்தாள். அப்போது ''பெண்ணே! உனது மறுபிறவியில் விஷ்ணுவே உனது கணவராவார்!'' என்று வானொலி எழுந்தது. அந்த அசரீரி வாக்கைக் கேட்டதும் வேதவதி மிகவும் மனமகிழ்ந்து மீண்டும் கந்தமாதன மலைச்சாரலில் மேலும் நீண்ட காலம் தவம் புரிந்து, பிறகு இளைப்பாறுவதற்காக ஒரு க்ஷண காலம் சும்மா இருந்தாள். அப்பொழுது இராவணன் அவள் எதிரே வந்தான். அவனுக்கு வேதவதி சுவை மிகுந்த பழங்களையும் மிகக் குளிர்ந்த நீரையும் கொடுத்து உபசரித்தாள். ஆனால் மகாப் பாவியான ராவணனோ அவற்றை அருந்தி விட்டு வேதவதியின் அருகிலேயே உட்கார்ந்து கொண்டு, ''நீ யார்?'' என்று கேட்டான். கன்னி யிளமையான வேதவதியின் பருமனான பிருஷ்ட பாகத்தையும் மார்பகங்களையும் மற்றைய அங்கங்களையும் கண்டு மோகங் கொண்டு காம இச்சை அதிகரிக்க அவளோடு கூடிக் கலந்து மகிழ முயன்றான்.




மகாப் பதிவிரதையான வேதவதி மிகவும் கோபம் கொண்டு ராவணன் திரும்பவோ அசையவோ முடியாதபடி தன் கைகளாலேயே ஸ்தம்பிக்கச் செய்தாள். ராவணன் மலைத்து ஊமையாகித் தன் மனத்திலுல் லக்ஷ்மியைத் துதிக்கவே, லக்ஷ்மி தேவி அவன் மீது இரக்கங் கொண்டு, அவனை முன் போலாக்கினுள். அதன் பிறகு வேதவதி ஆற்ருமையோடும் ராவணனை நோக்கி, "நீ என் விஷயமாகவே உறவினர்களோடு மரணமடைவாய்" என்று சபித்துவிட்டுத் தனது உடலை நீத்து விட்டாள். இராவணன் அவளது உயிரற்ற உடலைக் கங்கையில் விட்டு, "ஐயோ! என்ன காரியம் செய்தேன்!" என்று புலம்பி அழுது கொண்டே சென்று தன் இருப்பிடம் சேர்ந்தான். அந்த வேதவதியான லக்ஷ்மியே காலக் கிரமத்தில் ஜனக மகாராஜனுக்கு குமாரத்தியாகப் பிறந்து சீதை என்ற பெயர் பெற்று பேரழகனை ஸ்ரீராமபிரானைக் கணவனுகக் கைப்பற்றி ராமனோடு நெடுங்காலம் கூடி மகிழ்ந்திருந்தாள். பிறகு ஸ்ரீராமர் தன் தந்தையின் வாக்கைக் காப்பாற்றக் காட்டுக்குச் சென்றபொழுது அவர் தம்பி லக்ஷ்மணனும் பத்தினி சீதையும் அவருடன் வனவாசத்திற்குச் சென்ருர்கள். ராம லக்ஷ்மணர்களும் சீதையும் வனசஞ்சாரம் செய்து, கடற்கரையை அடைந்தார்கள்.

அப்போது, அக்கினித் தேவன், ஒரு பிராமண உருவத்தோடு ராமனிடம் சென்று, அவரைக் கண்டு மனம் துக்கப்பட்டு, "ஓ ராமமூர்த்தியே! சீதையை இராவணன் அபகரித்துச் செல்லக் கூடிய காலம் நெருங்கி விட்டது. தெய்வச் செயலை யாராலும் தடுக்க முடியாது. ஆகையால் லோக மாதாவான சீதா தேவியை என்னிடம் ஒப்படைத்து வைத்தால் நான் சாயாதேவியை உமக்குக்

கொடுக்கிறேன் அவளையே சீதையாக வைத்துக் கொள்ளும். எல்லாம் முடிந்த பிறகு, சீதையை மறுபடியும் உம்மிடம் கொண்டு வந்து ஒப்படைக்கிறேன். நான் தேவர்களனுப்பிய அக்கினி தேவன்!''என்றான். அவன் இவ்விதம் கூறியதை, ராமர், தம் தம்பி, லக்ஷ்மணருக்கு அறிவிக்கவில்லை. பிறகு அக்கினித் தேவன், சொன்னது போலவே, மாயையால் ஒரு போலிச் சீதையை உருவாக்கி ராமரிடம் கொடுத்து விட்டு, உண்மையான சீதையை அவரிடமிருந்து அழைத்துக் கொண்டு போனான். அவ்வாறு அவன் போகும்போது, ''ராமா இந்த இரகசியததை நீங்கள் வேறு ஒருவரிடமும் சொல்ல வேண்டாம்'' என்று சொல்லி விட்டுப் போனான். •இது லக்ஷ்மணருக்கே தெரியாதபோது வேறு யாருக்குத் தெரிய முடியும்? பிறகு வனத்தில் மாயமாய் வந்த ஒரு பொன் மானைப் பிடித்துத் தரச் சொல்லி சீதை வற்புறுத்திக் கெஞ்சினாள். அவளுடைய் வேண்டுகோளை நிறைவேற்றுவதற்காக ராமர் வில்லேந்தி, சீதையை லக்ஷ்மணரின் காவலில் ஆசிரமத்தில் இருக்கச் செய்து விட்டு பொன் மானைத் துரத்திச் சென்று அதன் மீது அம்பு எய்த போது, அந்த மாய மான் வஞ்சகமாக ''ஏ லக்ஷ்மணா!'' என்று கூச்சலிட்டு விட்டு மடிந்தது. பிறகு அது வைகுண்டம் சென்று துவார பாலகருள் ஒருவராகி விட்டது. ''லக்ஷ்மணா!'' என்று மானின் கூவலைக் கேட்டதும் தன் கணவருக்குத்தான் ஏதோ ஆபத்து என்று நினைத்து லக்ஷ்மணரை ராமரிடம் அனுப்பினாள். அப்போது ராவணன் வந்து தனியாக இருந்த சீதையைத் தூக்கிக் கொண்டு இலங்கைக்குப் போய்விட்டான். ராமரும் இலட்சுமணரும் சீதையை எங்கும் தேடியலைந்தார்கள். எங்கும் சீதையைக்காணாமல் ராமர் வருந்திக் கண்ணீர் வடித்துக் கொண்டே சென்று காவிரிக் கரையில் தங்கியபோது சீதையின் இருப்பிடத்தைத் தெரிந்து கொண்டு வானரர்களை உதவிக்கு அழைத்துக் கொண்டு, சமுத்திரத்தில் பாலம் அமைத்து இலங்காபுரியை அடைந்து ராவணனை யுத்தத்திலே கொன்று, சீதையைச் சிறை மீட்டுவந்து அவளை அக்கினிப் பிரவேசமாகும் பரிசோதனைக்கு உள்ளாக்கிய போது அக்கினித் தேவன் தான் வைத்திருந்த உண்மையான சீதையை வெளிவரும் படிச் செய்தான். அப்போது போலிச் சீதையாக இருந்த சாயா தேவி அக்கினி தேவனையும் ராமரையும் நோக்கி, ''எனக்கு வழி என்ன?'' என்று கேட்டாள். அதற்கு ராமர், ''நீ புஷ்கரத்துக்கு சென்று, தவம் செய்து சுவர்க்கலக்ஷ்மியாவாய்!'' என்று ஆணையிட்டார். அதன்படியே சாயாதேவியும் தவம் புரிந்து சுவர்க்க லக்ஷ்மி ஆனாள். பிறகு அவள் நீண்டநாட்கள் கழித்து, யக்ஞ குண்டத்தில் பாஞ்சாலியாகப் பிறந்து பஞ்சபாண்டவருக்குப் பத்தினியானாள். அவள் கிருதயுகத்தில் வேதவதியாகவும், திரேதாயுகத்தில் சீதையாகவும், துவாபரயுகத்தில் பாஞ்சாலியான திரௌபதியாகவும் இருந்ததால், 'திரிகாயனி' என்ற பெயர் பெற்றாள்.''

—இவ்வாறு நாராயணர் கூறியதும் நாரதர் அவரை நோக்கி ''அவள் பாஞ்சாலியாகப் பிறந்து பஞ்சபாண்டவர்களான ஐந்து கணவர்களை அடைவதற்கு காரணம் என்ன?'' என்று கேட்டார்.

அதற்கு நாராயணர் கூறினார்: ''சாயாதேவி சங்கரரைக் குறித்து தவம்புரிந்து சங்கரர் தோன்றிக் காட்சியளித்த போது காம இச்சை மிகுந்தவளாகி, ''எனக்குக் கணவரைக் கொடு! கொடு! கொடு! கொடு! கொடு!'' என்று ஐந்து முறைகள் கேட்டதால், சங்கரர் அவளை நோக்கி, ''பெண்ணே! நீ விரும்பி ஐந்து தடவைகள் கேட்டதால் உனக்கு ஐந்து கணவர்கள் வருவார்கள்!'' என்று வரங்கொடுத்து மறைந்தார். அதனால் அவள் திரௌபதியாகப் பிறந்து பஞ்சபாண்டவருக்குப் பத்தினியானாள். அது ஒருபுறம் இருக்கட்டும். ராமர் ராவணனைக் கொன்றதும் அவன் 'தம்பி விபீஷணருக்குப் பட்டஞ் சூட்டிவிட்டு சீதையோடு அயோத்திக்குச் சென்று பதினோராயிரம் ஆண்டுகள் அரசாண்டு பிறகு வைகுண்டம் சென்றார். லக்ஷ்மியம்சமான வேதவதி லக்ஷ்மியிடம் சேர்ந்தாள். நாரதரே! வேதவதியின் சரிதையைச் சொன்னேன். இனிமேல் தருமத்துவஜனின் புத்திரி கதையைக் கூறுகிறேன்.'' என்றார்.

## 17 துளசி தோன்றிய கதையும காதல் தவமும்

''தருமத்துவஜ மன்னனின் மனைவியான 'மாதவி' என்பவள், தன் காதற்கணவனோடு கந்தமாதனத்தில் மலர் மஞ்சத்தில் சந்தனப்பூச்சுடன் மலர் மணங்கமழும் தென்றலில் லயித்திருந்தாள். இருவரும் இன்பலீலையில் அதிக இச்சை கொண்டு, திருப்திகாண முடியாமல் நூறு தேவ ஆண்டுகள் இரவு பகல் தெரியாமல் கூடி மகிழ்ந்து கொண்டேயிருந்தார்கள். ஒருநாள், அரசன், தன் அரசாட்சியை நினைத்துக் கொண்டு தன் நாயகியை விட்டுப் பிரிந்து போய்விட்டான். நாயகி மாதவி மட்டும் திருப்தியடையாமல் நூறு ஆண்டுகள் கர்ப்பமாக இருந்து, கார்த்திகை மாதப் பௌர்ணமியில், வெள்ளிக்கிழமையன்று சுபமுகூர்த்தத்தில் ஒரு பெண்ணைப் பெற்றாள். அந்தப் பெண் லக்ஷ்மியம்சமாகையால் அங்க அவயங்கள் எல்லாம் அனைத்தும் அழகாக அமையப் பெற்று கண்களுக்கு மிக ரம்மியமாக இருந்தாள். அவளுடைய அழகுக்கு ஈடு இணை சொல்ல முடியாததால் துளசி என்று அந்தப் பெண்ணுக்குப் பெயரிட்டார்கள். (துள என்றால் ஈடு; சி என்றால் இல்லாதது




என்று பொருள்) அந்தப்பெண் தவம்செய்ய நினைத்து பதரி வனத்திற்குப் போய் தன் மனதிற்குள் ஸ்ரீமந் நாராயணரையே நாயகனாக அடைய வேண்டும் என்ற திடசங்கற்பத்தோடு வேறொன்றையும் பாராமல் ஒரேகாலால் நின்று மழையில் நனைந்தும் வெய்யிலில் காய்ந்தும் பஞ்சாக்கினி மத்தியில் நிற்பதால் சுடப்பட்டும் இருபதினாயிரம் ஆண்டுகாலம் ஜலத்தையும் பழத்தை மட்டும் புசித்தும், முப்பதினாயிரம் ஆண்டுகள் இலைகளை மட்டும் புசித்தும், நாற்பதினாயிரம் ஆண்டுகள் வெறும் காற்றைமட்டும் புசித்தும் பதினாயிரம் ஆண்டுகள் ஆகாரம் எதுவும் இன்றியும் கடுந்தவம் புரிந்தாள்.

அதனால் பிரும தேவன் அவள் முன்பு தோன்றி, ''துளசி உனக்கு நாராயண மூர்த்தியிடம் பக்தி வேண்டுமா? தாசத் தன்மை வேண்டுமா? அமரத்தன்மை வேண்டுமா?'' என்று கேட்டார். அதற்கு ''துளசி. நீங்கள் யாவற்றையும் அறிந்தவராகையால் நான் வெட்கமில்லாமல் கூறுகிறேன். நான் கோலோகத்தில் கோபிகாப் பெண்ணாக விளங்கி கிருஷ்ணனுக்குப் பிரியையாயும் தோழியாயும் லீலா விநோதியாகவும் நாயகியாகவும் இருந்தேன் அவருடைய சம்போகத்தில் நான் திருப்தியடையாமல் மோகித்திருந்தேன். அப்போது ராதை என்னைப் பார்த்துக் கோபித்து, கோவிந்தரையும் அதட்டி மிரட்டிவிட்டு, என்னை நோக்கி ''நீ மானிட குறியில் போய் பிறப்பாயாக!'' என்று சபித்துவிட்டாள். கிருஷ்ணபகவான் என்னைப் பார்த்து, ''நீ பூலோகத்தில் தவமிருந்து பிரமனின் வரத்தால் என்

அம்சமும் நான்கு கண்களும் உள்ள ஒருவனைப் பர்த்தாவாக அடைவாய்!'' என்று சொல்லிவிட்டு மறைந்து போனார் அதன்படியே நான் இந்த உலகில் பிறந்தேன். ஆகையால் பரமாத்மாவையே பதியாக அடையும்படியாக எனக்கு வரம் தரவேண்டும்!'' என்று வேண்டினாள். அதைக் கேட்டதும் பிருமதேவன் ''துளசியே, முன்பு ஒரு காலத்தில் கிருஷ்ணரின் தேகத்திலிருந்து பிறந்த 'சுதர்மன்' என்ற கோபாலனும் உன்னைப் போலவே உன்னைப் பார்த்து மோகமுற்று அந்தக் கர்மத்தை நிறைவேற்றிக் கொள்ளும் சக்தியற்றவனாக இருந்தான். அப்போது ராதை அவனைப் பார்த்து வெகுண்டு உன்னைச் சபித்ததைப் போலவே அவனையும் சபித்தாள். ஆகையால் அவனும் பூவுலகில் மனு வம்சத்தில் சங்கசூடன் என்ற பெயருடன் பிறந்திருக்கிறான். அவனுக்குப் பூர்வ ஜன்ம வாசனை தெரியும், நீயும் பூர்வஜன்ம வாசனையுடையவள்! ஆகையால் நீ அவனுக்கு பத்தினியாகி பிறகு நாராயணரை நாயகராக அடைவாய்! நீ விருட்ச உருவமாகவும் பிறக்கப் போகிறாய்! அப்போது நீ எல்லா மதிப்புடையவளாவாய். விஷ்ணுவுக்கு உயிராகவும் பிரியையாகவும் இருக்கப் போகிறாய். நீ இல்லாமல் பூஜித்தால் தேவ பூஜைகள் அனைத்தும் பலனற்றதாகவே போய்விடும்! நீ பிருந்தாவனத்தில் பிருந்தாவனி என்ற பெயருடன் இருப்பாய். கோபாலர்களும் கோபிகளும் உன்னைக் கொண்டே கிருஷ்ணனை வழிபட்டுப் பூஜிப்பார்கள். மரங்களின் இனத்திற்கு அதிஷ்டான உருவமான நீ, கிருஷ்ணருடனேயே எப்போதும் கூடி மகிழ்வாய்'' என்று அருள்புரிந்து கூறினார். அதைக் கேட்டதும் துளசி, ''எனக்கு இரண்டு கைகளோடு உள்ள கிருஷ்ணனிடம் இருக்கிற ஆசை நான்கு கரங்களையுடைய நாராயணர்மீது இல்லை. ஆனால் பகவானது ஆக்ஞையினால், நான் நான்கு கைகளையுடையவனை நாயகனாகக் கைப்பிடிப்பேன். உமது கருணையால் கிடைப்பதற்கரிதாகிய கிருஷ்ணனையே எனது காதல் கணவனாக அடைந்து என் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்வேன். ஆகையால் ராதையிடம் எனக்குள்ள பயத்தை நீங்கள் நீக்கிவிட வேண்டும்'' என்று வேண்டினாள். பிரமன் அவளை நோக்கி, ''உனக்கு, பதினாறு அக்ஷரமுள்ள ராதிகா மந்திரத்தை உபதேசிக்கிறேன். அதனால் நீ ராதையின் பிராணனுக்குச் சமானமானவளாவாய். உனக்கும் கிருஷ்ணனுக்குமிடையே இருக்கும் காதலின் சிருங்காரச்சுவை அந்த ராதைக்குத் தெரியாது! கிருஷ்ணனுக்கும் அவள் மீதிருக்கும் பிரியமும் பிரேமையும் உன் மீதும் இருக்கும்!'' என்று சொல்லிவிட்டு அந்த மந்திரத்தை அவளுக்கு உபதேசித்தார். பிறகு பூஜை முறைகளையும் கவசத்தையும் புரஸ்சரணை விதியையும் உபதேசித்து அவளை ஆசீர்வதித்துவிட்டு மறைந்தார். பிரமன் தந்த வரத்தால் லக்ஷ்மியைப் போல் துளசியும் சித்திகள் அனைத்தையும் அடைந்து, உலகங்களனைத்திற்கும் கிடைத்தற்கரிய போகத்தை விஷ்ணுவோடு அனுப

வித்து, தவத்தினாலுண்டான சிரமம் நீங்கி, சுகம் தரும் உணவுகளை உண்டு ஆனந்தத்தோடு மலர் மஞ்சத்தில் படுத்தாள்.

## 18 துளசியும் சங்கசூடனும் சந்தித்தல்

துளசி ரதியைப் போல் இளமையோடு குலுங்கியவளாய் மலர் மஞ்சத்தில் படுத்திருக்கும் போது, மன்மதன் அவள்மீது காம பாணங்களான பஞ்சபாணங்களையும் எய்யவே அவள் சிறிதுநேரம் வரை மயங்கி மூர்சித்துக்கிடந்தாள் ஒருகணம் பயந்தாள். ஒருகணம் சோம்பல் முறித்தாள். ஒருகணம் தாபங்கொண்டாள். ஒருகணம் சுகமுற்றவள் போலானாள்! ஒருகணம் தெளிவையும் ஒருகணம் கலக்கத்தையும் அடைந்து படுக்கையை விட்டு எழுந்து வெளியே அலைவாள். மறுபடியும் வந்து படுப்பாள். மலர்களாலும் சந்தனத் தாலும் நிரம்பிய படுக்கை அவளுக்கு முட்களைப் போலவும், மனோ கரமான மாளிகை குகையைப் போலவும், பட்டாடைகள் சுடும் அக்கினியைப் போலவும், சிந்தூரப்பொட்டு ரணம் காயப்பட்டது போலவும் உறுத்தின. அப்படிப்பட்ட நிலையில் இருந்தபோது அவளுடைய கனவில் இளமையும் அழகுப் புன்னகை உள்ள ரசிகன் ஒருவன் ரத்தின ஆபரணங்களும் மலர் மாலைகளாலும் தன்னை அலங்கரித்துக் கொண்டு தன் உடம்பில் சந்தனப் பூச்சு கமகம வென வாசனை வீச மிகவும் சுந்தரபுருஷனாக தோன்றினான். கனவில்



தோன்றிய அந்த வாலிப ரசிகன் குனிந்து துளசியின் முகமலரை முத்த மிடுபவனுகவும், ஆசை பொங்கக் காதல் கதைகளைச் சொல் பவனுகவும் மிகவும் இனிமையாகப் பேசுகிறவனுகவும் படுக்கையில் தன்னேடு ரமித்தவனுகவும், மறுபடியும் கட்டியணைத்துக் கொண்டே பேசுகிறவனுகவும் போகிறவனுகவும் வருகிறவனுக வும் விளங்கினுன்.

அவனைக் கனவில் பார்த்து துளசி மனமிளகி, ''பிராண காந் தரே! எங்கே போகிறீர்! போகவேண்டாம். நில்லும்!...... ''என்று ஆசையோடு கூவினுள். மறுபடியும் தூக்கம் தெளிந்து அடிக்கடி அழுது கொண்டிருந்தாள். அப்பொழுது சங்கசூடன் என்கிற அந்த யோகி, ஜைகிஷ்வ்யர் என்பவரிடமிருந்து கிருஷ்ண மந்தி ரத்தை உபதேசம் பெற்று, அதைப் புஷ்கரத்தில் சித்திசெய்து, அந்தக் கவசத்தைத் தன் கழுத்தில் தரித்துக் கொண்டு, பிரமனது வரத்தால் தன் நோக்கம் நிறைவேறப் பெற்றுப் பதரிகாவனத்திற்கு வந்தான். அத்தகைய அழகனைத் துளசி கண்டாள். கண்டதும் துளசி நாணத்தால் தன் முகத்தை ஆடையினுல் மூடிக்கொண்டு, புன்னகையுடன் அடிக்கடி சங்கசூடனைப் பார்த்துக் கொண்டும் புத்திளம் ஆடவனேடு கூடி மகிழ விரும்பும் காம இச்சையில் தலை குனிந்து கொண்டும் நின்றுள். சங்கசூடன் அவள் அருகில் உட் கார்ந்து, ''நீ யார்? யாருடைய பெண்? பெண்களுள் பெரிதும் மதிக்கத் தக்க மங்கையாக விளங்குகிருய்! உனக்கு நான் அடிமை யாகி விட்டேன்! எனக்குப் பதில் சொல்!'' என்றுன்.

அதைக் கேட்டதும் துளசி மிகவும் காம இச்சையோடு புன்னகை செய்து, ''நான் தருமத்துவஜரின் புதல்வி! காட்டில் தவஞ் செய்கிறேன். நீர் யார்? வந்த வழியே திரும்பிப் போய் விடும்! நற்குலத்தில் பிறந்த ஒரு கன்னிகை தனியாக இருக்கும் போது, நற்குலத்தில் பிறந்த ஆடவன் அவளை யார் என்று கேட்கக் கூடாது! அப்படி வேதத்தில் கூறியிருப்பதாகக் கேள்விப்பட்டிருக் கிறேன்! அதிக காமம் உள்ளவனும் நற்குலத்தில் பிறவாதவனும், தரும சாஸ்திரம் விசாரணையும் வேதப் படிப்பும் இல்லாதவனுந் தான் தனியாளான அக்கன்னிகையை இச்சிப்பான். மேலுக்கு வெளியுடம்பில் அழகியாகவும் உள்ளே கர்வத்தோடு மதம் பிடித்த வளாகவும், கணவனுக்கு யமரூபமாகவும் வாக்கு நுனியில் அமிர் தத்தையும் உள்ளே விஷ கும்பத்தையும் வைத்திருப்பளாகவும், இருதயத்தினுள் கத்தியை வைத்துக் கொண்டு வெறும் வாயால் தித்திப்போடு பேசுபவளாகவும் தன் காரியத்தைச் சாதித்துக் கொள்வதிலேயே எப்போதும் ஆசைப்படுபவளாகவும் தன் காரியம் முடியும்வரைக் கணவன் சொல்லைக் கேட்பவளாகவும், காரியம் முடிந்த பிறகும் காரியம் இல்லாதபோதும் பழித்துத் தூற்றுபவளாக வும், பாபகாரியத்தையே மனத்தில் வைத்திருப்பவளாகவும்

விளங்கும் மங்கையரின் வரலாறுகளை வேதங்களும் புரா ணங்களும் இகழ்கின்றன. அத்தகைய பெண்களை யார்தான் நம்புவார்கள்? அவர்களுக்கு யார்தான் பிரியமானவர்கள்? யார்தான் பிரியமற்ற வர்கள்? அத்தகைய சபலப் புத்தியுள்ள பெண்கள் அப்போதைக் கப்போது புதிது புதிதாகக் கணவன்மார்களைத் தேடுவார்கள். அழகான ஆடவனைக் கண்டால் அவனை அடைய வேண்டுமென்று உள்ளூர ஆசைப்படுவார்கள். வெளிக்குப் பதிவிரதா சிரோன் மணிகள் போல் நடித்து தாங்கள் கற்பரசிகள் என்று விளம்பரப் படுத்துவார்கள். அத்தகைய பெண்களெல்லாம் பெரும் காம வுணர்ச்சி கொண்ட மோகாந்தகாரிகளாகவும் காமதேவனுக்கு விளையாட்டுத்தனமாகவும் இருப்பார்கள். அவர்களில் பலர் மன துக்குள் மைதுன இச்சையுடையவளாகவும், ரகசியத்தில் தனக்கு விருப்பமான ஆடவனைப் பார்த்துச் சிரிப்பவர்களாகவும் இருப் பார்கள். மற்றவர்களின் பார்வைக்கு வெட்கப்படுவோரைப் போலவும், சம்போகத் திருப்தி கிடைக்காமற் போனால் சண்டையிடு வோராகவும், கூடிக் குலாவி அதிகமாகச் சம்போகம் நடக்கும்போது மிகவும் மகிழ்ச்சியடைவோராகவும் குறைவான சம்போகத்தால் குறைப்பட்டுத் துக்கப்படுவோராகவும், நல்ல சுவையான உண வையும் சுகமான நித்திரையையும் விரும்புவோராகவும் இருப் பார்கள். அழகையும் சிருங்கார ரசமறிந்த காமக் கலை வல்ல வனையும், இளமையானவனையும் குணசாலியாகவுமுள்ள புரு ஷனையே இடைவிடாமல் நாடித் தவிப்பார்கள். பிள்ளையை விட,கூடல் வித்தை தெரிந்த புருஷனிடமே அதிகப் பிரியம் வைப்பார்கள். கிழட்டுப் புருஷனையும் சம்போகம் செய்யும் வல்லமையில்லாதவனையும் சதா கலகஞ் செய்து கோபத்தோடு சண்டைக்கு இழுப்பார்கள். பாம்பு, எலியை விழுங்குவதைப் போல, வாய் வார்த்தைகளால் புருஷனைத் தின்று விழுங்கு வார்கள். அசாத்தியமான வேலைகளைச் செய்வோராகவும், சகல பாப தோஷங்களுக்கும் மூல ஸ்தானமாகவும், பிரும்ம விஷ்ணுக் களாலும் சாதிக்கத் தகாத மோகம் உடையவர்களாகவும், தவ மார்க்கத்திற்குத் தாழ்ப்பாளாகவும் மோட்ச வாசலுக்கு அடைப்புக் கதவாகவும், பக்தியைத தொலைவில் ஒதுக்கி வைத்தவர்களாகவும், சகல மாயைகளுக்கும் இருப்பிடமாகவும், சம்சாரம் என்கிற சிறையில் தள்ளப்படுவோருக்கு கை விலங்கு கால் விலங்குகளாக வும், மாய மந்திர இந்திர ஜால வடிவங்களாகவும், பொய்யே உருவமாகவும், கெட்ட வீச்சம் உள்ளவர்களாகவும், வெளிப் பார்வைக்கு அழகாகவும் உள்ளே விகாரமான அங்கமுள்ளவர் களாகவும் நோய்க்காதாரமான மல ஜலங்களுக்கு இடமானவர்களா கவும் இருப்பார்கள். பிருமனாலேயே இப்பெண்கள் படைக்கப்பட்ட வர்களாக இருந்துங் கூட, முமுட்சுக்களுக்கு விஷமாக விளங்கு வார்கள்; இத்தகைய பெண்களை அவர்கள் கண்களாலும் பார்க்க மாட்டார்கள். மனதாலும் நினைக்க மாட்டார்கள்''' என்றாள்.

அதைக் கேட்டதும் சங்கசூடன் சிரித்தான். "நீ கூறியவை யாவுமே பொய்யல்ல! அவற்றில் உண்மைகள் சில; பொய்கள் சில! ஆகவே நானும் சிலவற்றைக் கூறுகிறேன்; நீ கேள்!" என்று கூற ஆரம்பித்தான்.

"எல்லா உயிர்களையும் மோகிக்கச் செய்யும்படியான பெண் வடிவத்தைப் போற்றவும் தூற்றவும் தக்கவிதத்தில் சிருஷ்டிகர்த்தா வான பிருமன் படைத்திருக்கிறான். லக்ஷ்மி, சரஸ்வதி, ராதிகா தேவி, துர்க்கை, சாவித்திரி ஆகியவர்களின் அம்சத்தால் சில பெண்கள் படைக்கப்பட்டிருக்கிறார்கள் அவர்கள் எல்லோரும் உண்மையான ஸ்திரீகள் என்று வழங்கப்படுகிறார்கள். அவர்கள் பாராட்டத் தக்கவராகவும் சர்வமங்களத்தையும் வழங்குவோ ராகவும் இருப்பார்கள். சதரூபை, தேவஹூதி, சுவதா, சுவாஹா தக்ஷிணை, சாயாவதி, ரோகிணி, வாருணி, சசி, குபேர பத்தினி, அதிதி, திதி, லோபமுத்திரை, அநுசூயை, கோடபி அக லிகை, அருந்ததி, மேனை, தாரை, மண்டோதரி, தமயந்தி, கங்கை, சமனஸா, புஷ்டி, துஷ்டி, ஸ்மிருதி, மேதாகலிதா, வசுந்தரை, ஷஷ்டி, மங்களசண்டி, தருமகாமினி, சுவஸ்தி, சிரத்தா, சாந்தி, காந்தி, சிராந்தி, நித்திரா, தந்திரா, க்ஷுத், பிபாஸா, சந்தியா, ராத்திரி, திவா, சம்பத்து, த்ருதி, கீர்த்தி, திரியா. சோபா, பிரபா, சிவா என்ற பெண்களும் அவர்களைப் போன்ற வர்களும் தெய்வத் தன்மையுள்ள உத்தமிகள் எனப் போற்றப் படுவார்கள். விபசாரி ரூபமாய் எந்தெந்த பெண் உருவங்கள் இருக்கின்றனவோ, அவை போற்றத் தகுந்தவை அல்ல. எந் தெந்தப் பெண் உருவங்கள் சத்துவ குணத்தை முதன்மையாகக் கொண்டுள்ளனவோ அவையெல்லாம் போற்றிக் கொண்டாடத் தகுந்தவை. அவை சகல உலகங்களுக்கும் பதிவிரதா ரூபங்கள் என்று பிரம்மனால் படைக்கப்பட்ட மெய்யான பெண் ரூபங்கள் என்றும் சொல்லப்படும். ஸ்திரீ ரூபம் என்பது தமோ ரூபம் என்றும் ரஜோ ரூபம் என்றும் இருவகைப்படும். ரஜோ அம்சத்தில் பிறந்த பெண்கள் கூடிக் களிக்கும் போகத்தில் அதிக ஆசை யுடையவர்களாகையால் அவர்கள் மத்திம ஸ்திரீகள் என்று வழங்கப்படுவார்கள். அத்தகைய பெண்கள் தங்கள் கூட்டுறவு இன்பத்தினாலேயே ஆடவரைத் தன் வசப்படுத்திக் கொள்வார்கள். எப்போதும் சுய காரியத்திலேயே கவனமாக இருப்பார்கள். நய வஞ்சகம் மிகுந்தவர்களாகவும் கபடக்காரிகளாகவும் இருப்பார்கள். அதிகமாக மோகமூட்டுவார்கள். தருமம் பார்க்க மாட்டார்கள். பதிவிரதா தருமத்தைக் கைவிட்டு அப்பதிவிரதா தருமத்தை இகழ்ந்து ஏளனமும் செய்வார்கள். தமோ குணத்தில் பிறந்த மங்கையர்களோ ஒருவருக்கும் அடங்க மாட்டார்கள். அவர்கள் அதர்ம ஸ்திரீகள் என்று வழங்கப்படுகிறார்கள். நல்ல குலத்தில் பிறந்தவனோ படித்த அறிஞனோ பரஸ்திரீயை 'நீ யார்' என்று

கேட்க மாட்டான். ஜலம் இல்லாத இடத்திலும் ஜனங்கள் இல்லாத இடத்திலும் ரகஸ்யத்திலும் பரஸ்திரீயை யார் என்று கேட்கக் கூடாது'' என்று சங்கசூடன் சொல்லிவிட்டு துளசியைப் புன்முறுவலோடு நோக்கி, ''நானே பிரும தேவரின் கட்டளையினால் இங்கே உன்னிடம் வந்தேன். காந்தர்வ விவாக முறைப்படி உன்னைக் கைப்பற்றப் போகிறேன்! நான் மனு வம்சத்தில் பிறந்த அரசன்; என் பெயர் சங்கசூடன்!'' என்று அறிவித்து தனது பூர்வ ஜன்மத்தையும் துளசியின் பூர்வ ஜன்மத்தையும் முற்பிறவியில் நடந்தவற்றையும் எடுத்துக் கூறிவிட்டு, ''நான் உன் மீது ஆசை கொண்டிருக்கிறேன். இனிமேல் உனக்கு ராதிகாவைப் பற்றிய பயம் வேண்டாம்!' என்றான்.

துளசி புன்னகை செய்தாள். 'இத்தகைய புருஷனே போற்றத் தகுந்தவன்! இத்தகைய புருஷனை அடையவே உலகத்தவர் விரும்புவார்கள்!' என்று துளசி உள்ளூர நினைத்து அகம் மகிழ்ந்தாள். பிறகு அவள் சங்கசூடனை நோக்கி ''இப்போது நாம் இருவரும் பேசிய பேச்சில் நான் உம்மை வென்றதாகவும் நீரும் என்னை வென்றதாகவும் சொல்லலாம் அதாவது நாம் இருவரும் நம்மைப் பற்றிய செய்திகளை அறிந்து கொண்டோம். எவன் ஒருவன் மங்கையரால் வெல்லப்படுகிறானோ, அவன் அசுத்தனாகவும் நிந்திக்கப்பட்டவனாகவும் இருப்பான். அவனைப் பிதுர்க்கள், தேவர்கள், மனுக்கள், மானுடர், தாய் தந்தை, உடன் பிறந்தோர் முதலான எல்லோருமே இகழ்வார்கள். தூய்மையான பிராமணன் ஜனன மரணத் தீட்டுகளைப் பத்து நாட்களிலும், அரசன் பன்னிரண்டு நாட்களிலும், வைசியன் பதினைந்து நாட்களிலும், சூத்திரன் ஒரு மாதத்திலும், சங்கர ஜாதியான், தன் தாயின் சாதியை அனுசரித்தும் சுத்தியடைகிறான். ஆனால் ஸ்திரீயினால் வெல்லப்பட்டவனோ சிதையில் எரிக்கப்படும் காலத்தில் தான் சுத்தியும் சக்தியும் அடைவானே தவிர, அவன் உயிரோடு இருக்கும் காலத்தில் ஒருபோதும் அடைய மாட்டான். அவன் வழங்கும் பிண்டம், தர்ப்பணாதிகளை பிதுர்க்கள் இனிதாக ஏற்கமாட்டார்கள். ஒருவன் ஞானம், தவம், ஜபம், கோபம், பூஜை, வித்தை முதலியவற்றையுடையவனாக இருந்தாலும் அவற்றால் அவனுக்கு என்ன பயன்? அறிவு, வித்தை, பெருமை முதலானவற்றை நன்கு தெரிந்து வைத்திருக்கும் உன்னை நான் பரீட்சித்துப் பார்த்தேன். பெண்ணும் ஒருவனைப் பரீட்சித்த பிறகே, அவனைத் தனது கணவனாகக் வரிக்க வேண்டும். குணமில்லாதவனாகவும் வறண்டவனாகவும் வயோதிகனாகவும், அறிவிலியாகவும் தரித்திரனாகவும், மூர்க்கனாகவும், வியாதிக்காரனாகவும், குஷ்டனாகவும் அதிக கோபமுள்ளவனாகவும், நொண்டியாகவும் துஷ்டனாகவும், மிகவும் துர்முகனாகவும், அங்கஹீனனாகவும் குருடனாகவும், செவிடனாகவும், கபடனாகவும், கசடனாகவும், ஊமையாகவும், ஆண்மை சக்தியற்ற நபும்சகனாகவும் பாபியாகவும்

இருக்கிற ஆடவனுக்கு எவன், தன் பெண்ணைக் கட்டிக் கொடுக்கிறானோ, அவன் பிரம்மஹத்தி என்னும் பாபம் செய்தவனுக்குச் சமமாவான். நல்லவனையும் சாந்தனையும், குணவானையும் படித்த அறிஞனையும், சாதுவாயும் இருக்கிற ஆடவனுக்குத் தன் பெண்ணைக் கொடுப்பவன், பத்து யக்ஞங்கள் செய்த பலனை அடைவான். யார் தனது கன்னிகையை ரக்ஷித்து, விக்ரயஞ் செய்கிறானோ அவன் கும்பீபாகம் என்ற நரககுண்டத்தில் தள்ளப்பட்டு, அங்கு அந்தக் கன்னிகையின் மல ஜலத்தையே புசித்த வண்ணம் பதினான்கு இந்திரப்பட்டம் காலம்வரை புழுக்களும் ஈக்களும் பிடுங்கித் தின்னப்பட்டுப் பலவாறாகவும் துன்புற்றுத் தவிப்பான். இறுதியில் பூமியிற் பிறந்து, வியாதியுடன் அவதிப்பட்டு மாமிசத்தைச் சுமந்து விற்றுத் திரிவான்!'' என்றாள்.

அப்பொழுது பிருமதேவன் தோன்றி, ''சங்கசூடனே! அதிகம் ஏன் பேச வேண்டும்! நீ இவளைக் கந்தர்வ விவாகத்தால் கரம் பற்றிக்கொள்! நீயோ ஆடவர்களில் உயர்ந்தவன்; அந்த துளசியோ மங்கையரில் மாணிக்கம். சமர்த்தனான ஆடவன், சமர்த்தையான பெண்ணோடு கூடுவதே சிறந்ததாகும். தடையின்றி வரும் சுகபோகத்தை எவன் தான் கைவிடுவான்? விரோதத்திற்கு இடமின்றிவரும் சுகத்தை கைவிடுகிறவன் மிருகத்திற்கே சமானமாவான். அதில் சந்தேகமில்லை!'' என்றார். பிறகு அவர் துளசியை நோக்கி, ''பதிவிரதையே! தேவர்களையும் தானவர்களையும் கூட வென்றொழிக்கவல்ல மகா குணசாலியும் பேரழகனுமான ஆடவனை நீ ஏன் பரீட்சிக்கிறாய்? விஷ்ணுக்கு லக்ஷ்மி, சிவனிடத்தில் சிவை; வராஹனிடத்தில் பூமாதேவி, என்னிடம் சாவித்திரி, யாகத்தில் தக்ஷிணை, நளனிடம் தமயந்தி கிருஷ்ணனிடம் ராதிகை, சந்திரனிடம் ரோகிணி, பிரகஸ்பதியிடம் தாரை, மன்மதனிடம் இரதி, மனுவிடம் சதரூபை, அத்திரி மகரிஷியிடம் அனுசூயை, காசிபரிடம் அதிதி, வசிஷ்டரிடம் அருந்ததி, கௌதமரிடம் அகலிகை, கர்த்தமரிடம் தேவஹூதி, அக்கினியிடம் சுவஹா இந்திரனிடம் சசி, கணேசரிடம் புஷ்டி, கந்தனிடம் தேவசேனை, தருமரிடம் சதி ஆகிய இவர்கள் எல்லோரையும் போல நீயும் இந்தச் சங்கசூடனிடத்தில் பிரியமுள்ள சௌபாக்கியவதியாக இருப்பாயாக. இந்த அழகான புருஷனோடு எந்தெந்த இடங்களில் கூடி மகிழ விரும்புகிறாயோ அங்கங்கு கூடி மகிழ்வாயாக. பிறகு கோலோகத்தில் கிருஷ்ணரை அடைவாய் காலகதியில் சங்கசூடன் உலகை நீத்த பிறகு, வைகுண்டத்தில் நான்கு கரமுடைய நாராயணனை அடைவாய்!'' என்றார்.

## துளசி சங்கசூடன் காதல் லீலைகள்

பிரமன் சொல்லிச் சென்ற பிறகு, துளசியை சங்கசூடன் திருமணம் செய்து கொண்டான். வானில் துந்துபிகள் முழங்கின. பூமாரியும் பொழிந்தன. சங்கசூடன் துளசியோடு கூடிமகிழ்ந்து இருவரும் மிகவும் மோகத்துடன் கூடல் இன்பம் என்னும் கடலில் மூழ்கினார்கள். ஜன ஜந்து நடமாட்டமற்ற காடுகளிலும், பூங்காவனங்களிலும் நதிக்கரைகளிலும் சந்தனமஞ்சத்திலும், புஷ்பபஞ்சணைகளிலும் காமநூலில் கூறியுள்ள. அறுபத்து நான்கு கலைலீலைகளும் புரிந்து இன்பத்தைச் சுவைத்தார்கள். ஆனால் அவற்றையெல்லாம் அனுபவித்தும் திருப்தியுண்டாகாதபடி மேலும் மேலும் விரும்பும் வண்ணம் துளசி தன் கணவன் மனதைக் கிரீடையிலே இழுத்துக் கொண்டிருந்தாள் சங்கசூடனும் காமச்சுவையின் தன்மையை அறிந்தவனாகையால் நாயகியின் மனதைக் கிரகித்துக் கொண்டான் அத்தம்பதிகளின் லீலாவிநோதங்கள் அனைத்தையும் கூறிமுடியாது. ஆயினும் சிலவற்றைக் கூறுகிறேன் கேளும்.

சங்கசூடனின் மார்பில் அணிந்திருக்கும் சந்தனத்தோடு, அவனது நெற்றி திலகம் துளசியின் நெற்றியில் அழுந்தி ஒட்டிக் கொள்ளவும், துளசியின் நெற்றியிலிருக்கும் சிந்தூரப்பொட்டு அவனிடத்தில் அழுந்தவும், இரண்டு உருவமாகக் காணப்படாமல் இரண்டு தாள்கள் ஒட்டிக் கொண்டதுபோல் ஒருருவமாகவே இருப்பார்கள். சங்கசூடனின் இடது விலாப்புறத்தில் துளசியின் ஹஸ்தத்தோடு ஆபரண முத்திரைகளும், அவளுடைய ஸ்தனங்களில் அவனுடைய நகக்குறிகளும், துளசியின் உதடுகளில் சங்கசூடனின் பற்குறிகளும் அவனது இரண்டு கன்னங்களில் துளசியின் பற்குறிகளும் பதிந்திருப்பதைப் பார்த்துப் பார்த்து இருவரும் மகிழ்ந்து கூத்தாடுவார்கள். சுரதக் கிரீடைமுறைகளெல்லாம் தெரிந்த அவர்கள் இருவரும் ஆலிங்கனமும் சும்பனமும் அங்கமர்த்தனமும், ஒருவருக்கு ஒருவர் மாறி மாறிச் செய்வார்கள். பிறகு அந்த ஆட்டத்தை நிறுத்தி, இருவரும் எழுந்து தமக்குப் பிரியமான அலங்காரங்களைச் செய்து கொண்டு, குங்குமப்பூ திலகத்தை சங்கசூடன் அவளுக்கு வைப்பான். அவனுக்கு துளசி சந்தனம் பூசி, பரிமளம் மிக்க தாம்பூலத்தைக் கொடுப்பாள். அவள் இரண்டு தூய்மையான ஆடைகளையும் பாரிஜாத மலர்மாலைகளையும், விரல்களில் இரத்தின மோதிரங்களையும் அணிந்து கொண்டு, சங்கசூடனுக்கு எதிரே நின்று, "நான் உனக்குத் தாசி!" என்று கூறி பக்தி சிரத்தையோடு நமஸ்கரித்து, புன்னகையோடு கண்ணிமை கொட்டாமல் அவனைப் பிரியத்தோடு பார்த்து, பிறகு ஆசையோடு தன்

மார்பின்மீது அவனை இழுத்து அணைத்துக் கொண்டு, அவனது முக மலரையும் கண்களையும் உதடுகளையும் முத்தமிட்டுச் சுவைப்பாள். அதனால் சங்கசூடன் மிகவும் மகிழ்ந்து, வருணனிடமிருந்து கொண்டுவந்த இரண்டு பட்டாடைகளையும் மூன்று உலகங்களிலும் கிடைப்பதற்கரிதான இரத்தினாபரணங்களையும் ஸ்வாஹாதேவி தரித்திருந்த இரண்டு கால் தண்டைகளையும் சாயாதேவியின் தோள்வளையங்களையும், ரோகிணியின் குண்டலங்களையும் ரதிதேவியின் மோதிரங்களையும் வளையல்களையும், விஸ்வகர்மாவால் கொடுக்கப்பட்ட விநோதமான சங்கையும் நெற்றிப் பொட்டையும் படுக்கையையும் ஆபரணங்களையும் துளசிக்கு கொடுத்துவிட்டுச் சிரிப்பான். பிறகு அவற்றில் முக்கியமான மங்கள ஆபரணங்கள் சிலவற்றை அவன் எடுத்து தன் கையாலேயே துளசிக்கு அணிவித்து அவளது தலையிலும் கன்னத்திலும் நெற்றியிலும் சிலவகைப் பொட்டுக்களை இட்டு, சந்தனத்தால் சந்திர ரேகைபோல மூன்று ரேகைகளை நெற்றியில் இழுத்துப்பூசி அதைச்சுற்றிலும் குங்குமப்பூவினால் சித்திர வேலைப்பாடுகள் செய்து, அவற்றின் நடுவில் சிந்தூரத்தால் தீபம் போலத் தீட்டி துளசியின் பாதங்களிலும் கைகால்களிலும் மருதாணிப் பூச்சு இட்டு, துளசியின் காலை எடுத்து தன்மார்பில், வைத்துக் கொண்டு ஆசையோடு, "துளசி! நான் உனக்குத் தாசன்!" என்று சொல்வான். ஆரண்யங்களில் மட்டுமன்றி, இமயம், மலையம், மேரு. கந்தமாதானம் முதலான மலைகளுக்கும் வேறு அழகான இடங்களுக்கும் துளசியோடு சென்றும், பூந்தோட்டங்கள் தேவ உத்தியானவனங்கள், குளங்கள், துங்கபத்திரா நதி முதலான ஆற்றங்கரைகள், சுகந்தமான காற்று வீசும் இடங்கள், மணல் மேடுகள், விநோதமான சந்தன தோப்புகள், சண்பகம், தாழை, முல்லை முதலான மலர்கள் படர்ந்திருக்கும் இடங்கள், தாமரைக் குளங்கள், ஜனசஞ்சாரமற்ற நல்ல இயற்கை நிலங்கள் முதலான பற்பல சூழ்நிலைகளிலும் துளசியோடு கூடி மகிழ்வான். அப்படியெல்லாம் இன்புற்றும்கூட, அவர்கள் இருவருக்கும் திருப்தி உண்டாகாமல் ஓமத்தீயில் நெய்யை ஊற்றினால் தீயானது அதிகரிப்பதைப்



போல் அவர்களுக்குக் காமம் அதிகரித்துக்கொண்டே வந்தது. தம்பதிகள் இருவரும் நானாவிதமான இன்ப சுகங்களையெல்லாம் அடைந்து மகிழ்ச்சியாக வாழ்ந்தார்கள். சங்கசூடன் இவ்விதமாக ஒரு மன்வந்தர காலம் இல்வாழ்க்கையில் இருந்து கந்தர்வர்கள், ராட்சஸர்களையெல்லாம் அடக்கி அரசாண்டும் வந்தான். யாகாதிகளும் தருமங்களும் உலகில் நடைபெறாததால் தேவர்கள் அனைவரும் யாசகர்களைப் போலத் திரிந்தார்கள். அவர்கள் அனைவரும் மிகவும் மனம் வருந்தி பிருமதேவனிடம் சென்று தங்கள் குறைகளைச் சொல்லி சங்கசூடனின் சரித்திரத்தையும் கூறியழுதார்கள். பிருமா அவர்களை அழைத்துக் கொண்டு வைகுண்டம் சென்று, பன்னிரண்டு வாசல்களிலும் உள்ள துவாரபாலகர்களால் அனுமதிக்கப்பட்டு ஆயிரம் யோசனை அளவுள்ள மகாவிஷ்ணுவின் சபையை அடைந்து அவரிடம் எல்லாவற்றையும் எடுத்தியம்பினார். அவற்றை மகாவிஷ்ணு கேட்டு விட்டு, "பிரமனே! நீ கூறியவைகளை நான் அறிவேன். சங்கசூடன் என்பவன் முன்பு கிருஷ்ணனுக்கு பரமபக்தனான சுதாமனாவான் கிருஷ்ணனோடு அவன் இருக்கும்போது கிருஷ்ணரின் பிரியையான இராதை மிரட்டினாள். கிருஷ்ணரோ வாய் மூடி ஒன்றும் பேசாதிருந்தார். அதைக்கண்டதும் சுதாமன் இராதை மீது கோபம் கொண்டு கிருஷ்ணரின் எதிரிலேயே அவளை மிரட்டினான். இராதையோ லட்சுமி முதலான தோழிகளை ஏவி அந்த சுதாமனை வெளியேவிரட்டும்படிக் கட்டளையிட்டாள். அவன் எவ்வளவோ கெஞ்சியும் அவர்கள் அவனை வெளியே தள்ளிவிட்டு, சுதாமன் தங்களை அடித்தான் என்று இராதையிடம் முறையிட்டார்கள். உடனே இராதை உண்மையை அறியாமல் மிகவும் கோபம் கொண்டு, "நீ ராக்ஷஸ குறியை அடைவாய்!" என்று சுதாமனைச் சபித்து விட்டாள். சுதாமன் தூஷித்துக் கொண்டும் கிருஷ்ணரை நமஸ்கரித்துக் கொண்டும் அழுது கொண்டும் போனான்.

அதனால் இராதை கருணைகொண்டு, "சுதாமா! நீ போக வேண்டாம்" என்று அவனைத்தடுத்தாள். ஆனால் சுதாமன் போய்க்



கொண்டேயிருந்தான். ''ஆ! குழந்தாய் எங்கேடா போகிறாய்? வேண்டாம்!'' என்று இராதை அவன் பின்னாலே சென்றாள்.

கோபர்களும் கோபியர்களும் கண்ணீர்விட்டுக் கெஞ்சினார்கள். அப்போது கிருஷ்ணர் அவர்களை நோக்கி, ''நீங்கள் அவனைத் தடுக்க வேண்டாம். அவன் ஒரு கணத்தில் தன் சாபத்தை அனுபவித்து விட்டு வந்து விடுவான். என்று கூறி சுதாமனைப் போய்வா என்று அனுப்பினார்'' ஆனால் கோலோகத்தில் ஒரு க்ஷணம் என்பது பூவுலகத்தில் ஒரு மன்வந்தர காலமாகும். இப்போது சங்கசூடனாகப் பிறந்திருக்கும் சுதாமன் திரும்பி வரவேண்டிய காலம் முடியப் போகிறது. அந்த அசுரகுலத்து சங்கசூடன் யோக மாயையை அறிந்தவன். மகா பலவான். பிருமனே! நீ சூலாயுதத்தை வாங்கிக் கொண்டு பூவுலகம் செல்க. சிவபெருமான் அந்த சங்கசூடனைச் சங்காரஞ்செய்வார். அவன் தன் கழுத்தில் மந்திரக்கவசம் அணிந்திருக்கிறான். அதனால் தான் அவன் எப்பொழுதுமே வெற்றியை அடைகிறான். அவனை அழிக்க ஒருவராலும் முடியாது. ஏனெனில் பிருமனே, நீயே அவனுக்கு 'உன் மனைவிக்கு எப்பொழுதும் பதிவிரதாபங்கம் நேருமோ அப்பொழுது தான் உனக்கு மரணம்!' என்று வரமளித்திருக்கிறாய். பிரமனே அந்த வரத்தை நான் முடிப்பேன். எப்படியெனில் நான் பிராமண உருவெடுத்துச் சென்று அவன் பத்தினியான துளசியிடம் என் வீரியத்தை விடப் போகிறேன். உடனே துளசி மரணமடைந்து பிறகு என் மனைவியாவாள்'' என்றார். பிறகு யாவரும் பாரத தேசத்தை அடைந்தார்கள்.

## 20 சங்கசூடனின் போர் முனைப்பும் துளசியின் அழுகைத் திகைப்பும்

''ராக்ஷசர்களை சிவபெருமான் அழிப்பார் என்று வைகுந்தத்தில் மகாவிஷ்ணு கூறியதை, பிருமதேவன் உறுதியாக நம்பித் தேவர்களை அழைத்துக் கொண்டு பூவுலகத்திற்குச் சென்று அங்கு சந்திரபாகா என்னும் நதிக்கரையிலிருந்த ஓர் ஆலமரத்தின் அடியில் அமர்ந்து சிவபெருமானைத் தியானித்திருந்தார். ருத்திரமூர்த்தி பிருமாவின் முன்பு தோன்றினார். பிருமா அவரிடம் சங்கசூடனைப் ''பற்றிய விவரங்களைக் கூறி, ''சம்ஹாரமூர்த்தியே; நீங்கள்தான் அந்த சங்கசூடனை எவ்விதத்திலாவது சம்ஹாரம் செய்யவேண்டும்!'' என்று பிரார்த்தனை செய்து விட்டுத் தம் உலகம் சேர்ந்தார்.

சித்திரரதன் என்னும் புஷ்பதந்தனுகிய ஒரு கந்தர்வனை ருத்திரமூர்த்தி வரவழைத்து அவனை சங்கசூடனிடம் தூதாக அனுப்பிவைத்தார் அவன் சங்கசூடனின் தலை நகரத்தையடைந்தான். அது இந்திரலோகத்தையும் குபேரபுரியையும் விட அழகாய் இருந்தது. ஐந்து யோசனை அகலமும் பத்துயோஜனை நீளமுமாக, ஸ்படிகக் கற்களால் கட்டப்பட்டதாகவும், ஏழு அகழிகள் சூழ்ந்து நூறு நூறு வீதிகளுடையதாகவும், நடுவில் சங்கசூடாசுரனின் அரண்மனையைக் கொண்டதாகவும் அத்தலைநகர் ரத்தின மயமாய் ஜொலித்தது! பகைவருக்கு நெருப்புபோன்ற அந்த அரண்மனை நாற்புறமும் நான்கு அகழிகளால் சூழப்பட்டு ரத்தின சிகரங்களோடும் பன்னிரண்டு வாசல்களோடும் மாபெரும் அசுரவீரர்களான காவலாளிகளோடும் திகழ்ந்தது. அங்கு மகாப் பயங்கர உருவோடு சூலாயுதத்தை ஏந்தியபடி காவல் புரியும் பிங்களாக்ஷன் என்பவனிடம் சித்திரரதன் சென்று தான் தூது வந்திருப்பதைக் கூறி உட்புகுந்தான். உள்ளே முந்நூறு கோடி அசுரர்கள் புடைசூழ்ந்து சேவைபுரிய, சாமரைகள் வீச, பொற்குடையின் கீழே அரியணையில் சங்கசூடன் வீற்றிருந்தான். அவனிடம் தூதன் சென்று "ராஜனே! நான் சிவதூதன் என் பெயர் புஷ்பதந்தன். தேவர்களிடமிருந்து நீ பறித்துக் கொண்ட அவர்களின் ராஜ்யத்தையும் அதிகாரத்தையும் திருப்பிக் கொடுத்துவிடு; இல்லையெனில் அவர்களுடன் போராட வா! ருத்திரர் இப்பொழுது சந்திரபாகா நதிக் கரையிலுள்ள ஆலமரத்தடியில் இருக்கிறுர். அவரிடம் நான் என்ன சொல்ல வேண்டும்? உன் எண்ணத்தைக் கூறுக!" என்றுன். அதைக் கேட்டதும் சங்கசூடன் கலகலவெனச் சிரித்து விட்டு, "நான் விடியற்காலையில் அங்கே வருகிறேன். நீ போவாயாக" என்றுன்.

சிவத் தூதன் திரும்பிவந்து சங்கசூடன் கூறியதை சிவனிடம் கூறினுன்: இதனிடையில் குமரன், வீரபத்திரன் முதலான புத்திரர்களும், நந்தி, மகாகாலர், சுபத்திரன், விசாலாக்ஷன், பரணன், பிங்களாக்ஷன், விகம்பனன், விரூபன், விகிருதி, மணிபத்திரன், பாஷ்கலன், கபிலாக்கியன், தீர்க்கதமிஷ்டன், விகடன், தாம்பரலோசனன் முதலான மகா சிவகணத் தலைவர்களும், காலகண்டன் பரீபத்ரன், காலஜிஹ்வன், குடீசரன், பலோன்மத்தன், ரணஸ்லாகி, துர்ஜயன், துர்கமன் முதலிய அஷ்டபைரவர்களும், ஏகாதச ருத்திரர்களும், அஷ்டவசுக்களும், தேவேந்திரனும் பன்னிரண்டு சூரியரும், சந்திரனும் விஸ்வகர்மனும் அஸ்வினி தேவதைகளும் காமதேனுவும், உத்திர தம்ஷ்டிரனும், உக்கிர சண்டனும், கோடானும் கைடபனும் மூன்று கோடி யோகினிகளோடு பயங்கரப் பத்திரகாளியும், பூதப் பிரேதப் பைசாசங்களும், கூஷ்மாண்டவர்கள் என்னும் பிரம்மராட்சஸர்களும் வேதாளங்களும் யக்ஷர்களும் கின்னரர்களும் வந்து மகாதேவரை வணங்கி அவரரு

கில் அணிவகுத்து நின்றனர். இந்நிலையில், சங்கசூட அசுரன் அந்தப்புரத்திற்குள் சென்று தன் பத்தினியான துளசியிடம் போர்ச் செய்தியை அறிவித்தான். அதைக் கேட்டதும் துளசியின் உடல் சிலிர்த்து நெஞ்சுவறண்டது. அவள் தன் நாயகனை நோக்கி, ''அன்பரே! என் பிராண நாயகரே! என் மார்பின்மீது ஒருக் கணம் இருப்பீராக; என் உயிருக்கு ஆதாரமான பிரியகாந்தரே! நான் மனத்தில் நினைத்துள்ள சுகத்தையெல்லாம் அனுபவிக்க உம்மை எனது கண்களால் பார்த்துக் கொண்டே இருக்கிறேன். என் மனம் அலைகிறது. என் உயிர் ஊசலாடுகிறது இன்று விடியற் சாம வேளையில் நான் ஒரு கெட்டகனவு கண்டேன். அந்த துர் சொப்பனத்தின்படியே போர்ச் செய்தியும் கேட்டேன்!'' என்று விம்மினாள். சங்கசூடனோ சிறிதும் கவலைப்படாமல் வீராவேசத் திலே துணிந்து குளித்து, உணவருந்தி விட்டு துளசியை நோக்கி உண்மையான சில வார்த்தைகளைக் கூறலானான்.

''சுகமும் துக்கமும், இன்பமும் துன்பமும், பயமும் துயரமும் காலத் தத்துவத் தொடர்பினாலேயே தோன்றுகின்றன. ஒருமரம் தோன்றுவதும், தளிர்ப்பதும் கிளைகளாகப் பிரிவதும், மலர் அரும்பி மலர்வதும் காய்ப்பதும், பழுப்பதும், பிறகு உலர்ந்துப் பட்டுப் போவதும் காலத் தத்துவத்தாலேயே நிகழ்கின்றன. இதுபோலவே பிரபஞ்சமும் கால தத்துவத்தாலேயே தோன்றிச் செயல்பட்டு அழி கிறது. மும்மூர்த்திகளும் காலத்தைக் கொண்டே தத்தமது தொழில் களைச் செய்கின்றனர். காலத்தை விட்டுத் தாங்களே கர்த்தர்கள் என்று செய்வதில்லை. ஏனெனில், அவர்கள் காலமின்றிச் செயல் புரிய முடியாது: அந்தக் காலத் தத்துவமே பிரகிருதியான பரா சக்தியின் இச்சா சக்தியால் நிர்மாணிக்கப்பட்டது பராசக்தியும் அவளது நாதனும் விஸ்வாத்மாவுமான பரமேஸ்வரனுமே காலத் தத்துவத்திற்கு அப்பாற்பட்ட அதீதர்கள் அவர்கள். காலத்தத்து வத்தை இயற்றி அதன்மூலம் அந்தந்த உயிர்களைக் கொண்டே ஒவ்வொன்றையும் படைத்தும், காத்தும் அழித்தும் வருகிறார்கள். நீ அவர்களைச் சரணடை! உயிர்கள் மட்டுமல்ல, இந்திராதி தேவர் களும் சூரிய சந்திர கிரகங்களும் திக்பாலகர்களும் அந்தக் காலத் தத்துவத்திற்குக் கட்டுப்பட்டே அவரவர் தொழில்களைச் செய்து வருகிறார்கள். இவ்வாறு காலத் தத்துவத்தை இயற்றி இயக்குகிற பார்வதியும் பரமேஸ்வரருமே உண்மையான உறவினர்களே! மற்ற வர்களை உறவினர்களாக நினைப்பது அறிவின்மையாகும். ஆகவே அவர்களையே உனக்கு உறவினர்களாகச் சரணடை! நீ யார், நான் யார்? நம்மிருவரையும் கூட்டிவைத்தது கால தத்துவமேயல்லவா? அதுதான் இப்போது நம்மைப் பிரிக்கவும் முற்பட்டுள்ளது எல்லாம் காலத் தததுவத்தின் வயப்பட்டது என்பதால், அறிஞர்கள் எதற்குமே அஞ்சுவதில்லை, வருந்துவதும் இல்லை. இனி நீ நாராய ணரை அடையுங் காலம் நெருங்கிவிட்டது. அவர் பதரிகாசிரமத்

திற்கு வருவார். நீயும் அவருக்குப் பிரிய மனைவியாகப் போகிறாய். பிறகு நானும் எனது சாபம் ஒழிந்து அங்கு வருவேன். இதில் ஐயமில்லை. அப்படியிருக்க ஏன் பயப்பட வேண்டும்?'' என்று சங்கசூடன் எடுத்துரைத்து துளசியின் மனதைத் தேற்ற முயன்று, அவளுக்குத் தன் கையாலேயே சந்தனம் பூசி, மலர்களைச் சூட்டி, அவளுடன் அன்று இரவு மலர்மஞ்சத்தில் கூடிக்குலாவி இன்பமாகக் இரவைக்கழித்து, உதய காலத்தில் எழுந்தான் துளசி முன் போலவே அழத்தொடங்கினாள். ஆகாரமும் சாப்பிடாமல் துக்கத்திலேயே சோகப் பதுமையாகக் கிடந்தாள். சங்கசூடன், அவளைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டு, மறுபடியும் பலத் தத்துவ ஞானங்களை கூறி, அவள் மனதைத் தெளிவாக்கி, சமாதானப் படுத்தி விருப்பமான கிரீடைகளில் கூடிக் கலந்து, அவளுக்கு ஏற்பட வேண்டிய இன்ப ரசங்களையெல்லாம் உண்டாக்கித் தானும் அதில் இன்புற்றான். இருவரும் அர்த்தநாரீஸ்வரரைப் போல் ஒரே உடம்பினராகி, பிரிவற்ற ஆனந்தத்தில் மயங்கி, அவளுக்கு இவன் உயிராகவும் இவனுக்கு அவள் உயிராகவும் சுரதலீலைகளில் தோல்வியற்ற வெற்றிகளோடு சுகானுபவம் பெற்றார்கள்.

## 21 சங்கசூடனும் சங்கரும் வார்த்தையாடல்

கிருஷ்ணரிடம் பக்திமிக்க சங்கசூடன், மறுநாள் தூய நீரில் தீர்த்தமாடி காலைக் கடன்களை முடித்துக் கொண்டு இஷ்ட தேவதைகளை வணங்கிக் கும்பிட்டு விட்டு வழக்கம் போல் தானதருமங்களைச் செய்து உயர்ந்த நவமணிகளாலான ஆபரணங்களை, யாத்திரா மங்களத்தின் பொருட்டுத் தன் குரு நாதருக்குத் தானம் வழங்கித் தனது பிள்ளைக்குப் பட்டங்கள் கட்டினான். வறுமையுடைய அந்தணருக்கு, ரத்தினங்கள், பாத்திரங்கள், லக்ஷம் பட்டணங்கள் நூறு கோடி கிராமங்கள் ஆகிய வற்றையும் மனோவுற்சாகத்தோடு தானமாகக் கொடுத்து விட்டு, சதுரங்க சேனைகளோடு ராஜ்யத்தைத் தன் குமாரன் வசமாக்கி, தன் மனைவியையும் பாதுகாக்கும்படி நியமித்து விட்டு எல்லோருக்கும் சொல்ல வேண்டியவற்றைச் சொன்னான். பிறகு போர்முயற்சிகளில் ஈடுபட்டான். தூதர்களை அனுப்பி, அளவிறந்த சேனைகள், லக்ஷம் குதிரைகள், லக்ஷம் யானைகள், பதினாயிரம் தேர்கள், மூன்று கோடி வில்லாளிகள், மூன்று கோடி கவச வீரர்கள், மூன்று கோடி சூலதாரிகள் முதலானவர்களை வரவழைத்துத் திரட்டித் தன் படைகளை அணி வகுத்தான். போர் முறையில் வல்லவனான ஒரு மஹாரதனை மூன்று லக்ஷம் அக்ஷௌஹிணிக்குச் சேனாதிபதியாக்கி, முப்பது கோடி அக்ஷௌஹிணி சேனைகளை வைத்து விட்டு, நாரா

யணரைத் தியானித்துத் தனது பாசறையிலிருந்து வெளியே வந்தான். பிறகு சங்கசூடன் ரத்தின விமானத்தில் ஏறி பெரியோர்களை வணங்கி விட்டு யுத்த முனைக்குப் புறப்பட்டான் பாரத கண்டத்தின் மேலைக் கடலுக்குக் கிழக்கிலும், மலைய பர்வதத்திற்கு மேற்கிலும், ஸ்ரீசைலத்திற்கு வடக்கிலும், கந்தமாதன மலைக்குத் தெற்கிலும். ஐந்து யோசனை அகலம், ஐநூறு யோசனை நீளம் உள்ள பத்திரா என்னும் ஸ்படிகத் தூய்மையான ஜீவ நதியால் சூழப்பட்ட மனோரம்மியமான நதிக் கரையை அடைந்தான். அங்கு சித்ததலமான ஆலமரத்தின் அடியில், பரமேஸ்வரன் கோடி சூரியப் பிரகாசமாக, யோகாசனராக, புன்னகை முகத்தினராக, தூயப் பளிங்கு போலத் திகழ்பவராக, பிரும்ம தேஜோரூபராக, திரிசூலம் தரித்தவராக, பக்திமிருத்யுஹாரராக, திரிசூலம் தரித்தவராக கௌரி காந்தராக, மனோஹரராக, தவப்பலப் பிரதானராக, மலர்ந்த திருமுகத்தினராக, பக்தருக்கு அருள் புரிபவராக, எளிதில் மகிழ்கின்ற எளிய கருணாநிதியாக விஸ்வநாதராக, விஸ்வ பீஜராக, விஸ்வரூபராக, விஸ்வத்தைத் தோற்றுவித்தவராக, விஸ்வரக்ஷகராக, விஸ்வ சங்கரராக, காரண காரணராக, ஞானப் பிரதராக ஞானபீஜராக, ஞான ஜோதியாக, ஞானானந்தராக அமர்ந்திருந்தார். அந்தப் பரமேஸ்வரரைக் கண்டதுமே சங்கசூடாசுரன் தன் விமானத்திலிருந்து கீழேயிறங்கி, பக்தியால் மெய் சிலிர்த்து, ''நான் அடைய வேண்டிய பேறெல்லாம் அடைந்தேன்!'' என்று உருகி தலையால் தண்டகாரமாய் அவரை வணங்கினான். மகேஸ்வரரின் இடப் புறத்திலிருந்த பத்திர காளியையும் திருமுருகனையும் கும்பிட்டான். அவனை அம்மூவரும் ஆசிர்வதித்தனர் பிறகு நந்தீஸ்வரர் முதலிய சிவகணத்தார் எல்லாம் வந்து, சங்கசூடனோடு கலந்து, ஒருவரை யொருவர் கட்டித் தழுவி ஆலிங்கனம் செய்து ஆனந்தப்பட்டார்கள். பிறகு, சங்கசூடன் அனைவருக்கும் இன்பமொழி கூறிவிட்டு மகாதேவரின் எதிரில் வந்து நின்றான்.

அப்போது சிவபெருமான், அவனை நோக்கி, ''சங்க சூடனே! நீ பெரியதொரு சம்பிரதாயத்தில் வந்தவன். உன் வமிசத்தின் முதல்வன், பிருமபுத்திரனான மரீசி என்பவன்: அவன் மகன் கஸ்யபன்: அந்த கஸ்யபனுக்குப் பதின்மூன்று பத்தினிகள். அவர்களில் தனு என்னும் மனையாளுக்கு, நாற்பது பிள்ளைகள். அவர்களுள் விப்ரஜித்து என்பவனின் குமாரன் தம்பன் என்பவனாகும். அந்த தம்பனின் மகன்தான் நீ உன் வமிசத்தினரும் நீயும், பராக்கிரமம், தவம், மந்திர சித்தி, செல்வச் செழிப்புகள் முதலானவற்றில் ஈடு இணையற்றவர்கள். உன் வமிசத்தின் புகழ் உலகில் பரவ நீ கோலோகத்திலிருந்து இங்கு வந்த காரணம் உனக்கே தெரியும்! உனக்கு பூர்வஜன்ம ஞானமும் எதிர்கால நடப்புகளை அறியக் கூடிய சக்தியும் பாக்கிய வசமாக உண்டு!

எந்த உலகத்திலும் உன்னால் ஆசைப்படத் தகுந்தது எதுவு மில்லை. ஆகையால் தேவர்களுக்குரிய ராஜ்ய போகங்களால் உனக்கு ஆக வேண்டிய காரியம் என்ன? ஆகையால் அவர்களது ராஜ்யத்தை அவர்களிடமே திருப்பிக் கொடுத்து விடு. தேவருலகை விடச் சிறந்த உலகங்கள் எத்தனையோ உனக்கு இருக்கின்றன. அவற்றை நீ சுகமாக ஆண்டு வரலாமே? தேவர்களின் பொரு ளுக்கு ஆசைப்படாமல் அவர்களைச் சுகமாக வாழச் செய். எந்த உயிருக்கும் ஹிம்சை புரியாதே! ஹிம்சை செய்வதே பிரம்மஹத்தி என்று கூறப்படுகிறது. ஏனெனில் எல்லா உயிர்களிலும் நானே நிறைந்திருக்கிறேன்: ஆகவே பிருமஹத்தி என்று சொல்லப்படும் அது கூட இந்த தேவரிம்சைக்கு பதினாறில் ஒரு பங்கு கூட இணை யாகாது. உயிர்களைப் பகைப்பதும் ஹிம்சிப்பதும் எதற்காகவென்று சிந்தித்துப் பார். பிறர் செல்வத்தின் மீதுள்ள ஆசையால்தான் தான் ஹிம்சிக்க நேரிடுகிறது. ஆனால் அந்தச் செல்வம் ஒருவரிட மாவது நிலைபெற்று இருந்தது உண்டா? முன்பும் இருந்ததில்லை; இப்போதும் இல்லை; இனியும் இருக்கப் போவதில்லை. நிலையற்ற அந்தச் செல்வத்திற்காகப் பிறரை இம்சிப்பது அறிவுடைமையா, அறியாமையா, நீயே ஆலோசித்துப் பார்! வறுமைக்குக் காரணம் பிறரது செல்வத்தை விரும்புவதேயாகும். அதனை யொழித்தால் யாவரும் எப்போதும் செல்வமுடையவராகவே இருப்பார்கள். பிரும னுங்கூட ஒரே நிலையாக, தன் அதிகாரச் செல்வத்தை அனுப விப்பதில்லை. அவன் அப்போதைக்கப்போது படைக்கத் தெரி யாமல் தவிப்பதுண்டு. அப்போதெல்லாம் பிரகிருதி தேவியாகிய பராசக்தியின் கருணையினால் அந்த மயக்கந் தெளிந்து மீண்டும் படைக்கத் துவங்குவான். படைத்தல் தொழில் மட்டுமின்றிக் காத்தல் அழித்தலான தொழில்களும் அப்படியே ஆகின்றன. சந்திரனின் தேய்வும் வளர்ச்சியும் கிரகணத்தன்று அவனது மறைவும் நிலையற்ற தன்மையை அறிவிப்பன. சூரியன் கூட, காலையில் மந்தமான பிரகாசத்தோடும் நடுப் பகலில் கடுமை யான ஒளியோடும் மாலையில் அவ்விரண்டுமற்ற ஒளியைப் போலவும் காணப்படுகிறான். இம்மூவகை மாற்றங்களையும் தவிர கிரகண காலங்களில் ஒரு பொன் வில்லையைப் போலக் குறைந்து பிரகாசிக்கிறான். குன்றாத தருமம் என்பது கூட கிருத யுகத்தில் பூர்ணமாகவும், திரேதா யுகத்தில் முக்கால் பங்காகக் குறைந்தும் துவாபர யுகத்தில் அரைப் பங்காகக் குறைந்தும், கலியுகத்தின் ஆரம்பத்தில் காற்பங்காகக் குறைந்தும் வருஷந் தோறும் தேய்து முற்றிலும் மறைந்துபோய் தர்மம் என்ற பெயர் வாசனை மட்டுமே மிஞ்சியிருக்கும்! ஆகையால் யாவுமே நிலை யற்றவைதான். பரமாத்மாவாக இருக்கும் நான் ஒருவனே கால பேதமின்றி ஒரே நிலையாக இருக்கிறேன் ஆகையால்தான் பிர பஞ்சங்கள் லயமாருந்தோறும் நான் பார்த்துக் கொண்டிருக் கிறேன். இனியும் பார்க்கப் போகிறேன். நான் ஒரு தொழிலுஞ்

செய்யாதவன். எவன் ஒருவன் என் நாமங்களையும் வைபவங்களையும் குணங்களையும் அனுபவங்களையும் பாடித் துதிக்கிறானோ அவனைத்தான் சக்தி ரூபன், புருஷ ரூபன், ஆன்மா, ஜீவன், நானுவிதமான பரமாத்மா என்று கூறுகிறார்கள். அவனுக்குப் பிறவி, பிணி, பயம், மூப்பு முதலியன இருப்பதில்லை கால ரூபமாக விளங்கும் மரண தேவனும் (மிருத்யுவும்) அத்தகையவனைக் கண்டால் பயந்து ஓடுவான். அவன் பிரும்மாவினால், திருமாலினால் ஸ்திதியும் ருத்திரனால் சங்காரமும் இல்லாதவன். சங்கசூடனே! நீயும் அத்தகையவனாவாய்!'' என்றார். அதுவரை மௌனமாகவும் பவ்யமாகவும் கேட்டுவந்த சங்கசூடன் அவரைப் பலமுறை வணங்கிப் போற்றி விட்டுத் தானும் சிலவற்றை கூறலானான்.

''இறைவனே! நீங்கள் சொல்லியவை என்றுமே மாறாத உண்மைகள். ஆனால் எங்கள் அசுர குலச் சக்கரவர்த்தியான மகாபலியிடம் திருமால் நயவஞ்சகமாக வாமனாவதாரம் எடுத்துச் சென்று மூன்று காலடி நிலம் யாசித்து, பிறகு விசுவ ரூபமெடுத்து இரண்டு காலடிகளால் அளந்து பிறகு பலியின் ஐசுவர்யங்களையெல்லாம் அபகரித்துக் கொண்டு மூன்றாவது காலடிக்காக அவனைத் தனது காலால் மிதித்து கீழ்லோகமான சுதல லோகத்தில் அழுத்தி விட்டார். அதன் பிறகு அங்கிருந்த செல்வங்களை நான்தான் கொண்டு வந்தேன் திருமாலும், அப்படிக் கொண்டுவர முடியாது! எங்கள் இனத்தவரான இரண்யன் இரண்யாக்ஷன் என்பவர்களும் தேவர்களின் வஞ்சனையால் பிராதாவினால் கொல்லப்பட்டனர். அமிர்தத்திற்காகத் தேவர்களும் எங்கள் அசுர இனத்தவரும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்தபோது, திருமால் மோகினியாய் உருவெடுத்து வந்து, எங்கள் இனத்தாரை மயக்கி, அமிர்த கலசத்தை அபகரித்து தேவர்களுக்கு மட்டுமே கொடுத்து எங்களை வஞ்சித்து விட்டார். இது போலவே, எங்களினத்தவர் ஒவ்வொருவரையும் தேவர்கள் மாறி மாறி வஞ்சித்துக் கெடுத்தது கொஞ்சமல்ல. இதனால்தான் தேவர்களிடத்தில் எங்கள் இனத்தாருக்குத் துவேஷம் உண்டாயிற்று. தேவர்கள் எங்களினத்தாருக்குச் செய்த வஞ்சனையால்தான் அவர்களை எங்களினத்தார் போரிட்டு ஹிம்சிக்கின்றனர் கர்மபலத்துக்கு ஈடாக இருவருக்கும் வெற்றி தோல்விகள் மாறி மாறி உண்டாகின்றன. அப்படி மாறி மாறி வந்துங்கூட தேவர்களின் உள்ளத்தில் வஞ்சனையும் அசுரர்கள் உள்ளத்தில் இம்சையுணர்ச்சியும் மாறவில்லை. தேவர்களின் வஞ்சனையைப் பிரகிருதி தேவியே நன்கறிவாள். அதை நினைக்கும்போதெல்லாம் என் நெஞ்சம் பதைத்து கொதிக்கிறது! ஆனால் உமக்கோ இவையெல்லாம் ஒரு விளையாட்டு மகேஸ்வரரே! தேவர்களுக்கு ஐஸ்வரியம் வருவது அவர்கள் செய்யும் வஞ்சனையாலல்ல. அசுரர்களுக்கு ஐஸ்வரியம் வருவது அவர்களின் ஹிம்சையாலும் அல்ல. ்ரவரிடத்து தேவியின் தயவு எதுவரை இருக்கின்றதோ, அதுவரை அவர்களிடம்

ஐஸ்வரியம் நிலைத்திருக்கின்றது! நீரோ எங்களுக்கு வேண்டும் போதெல்லாம் செல்வத்தை வழங்கி வந்தீரே தவிர எங்களிட மிருந்து பறிக்க வேண்டுமென்று எண்ணியதுமில்லை! எங்களை வஞ்சித்ததும் இல்லை. அப்படியிருக்கத் தாங்கள் தூதனை அனுப்பி என்னை யுத்தத்திற்கு அழைத்தது ஏன்? ஆனால் தாங்களும் போருக்கு வந்துவிட்டீர். நானும் போராட வந்து விட்டேன். இனி யுத்தஞ் செய்யாமல் இருந்தால் உலகினர் பழிப்பார்கள். உமக்கும் அழகல்ல: எனக்கும் சிறப்பல்ல; ஆனால் நீரோ எங்களிடம் உறவினர் என்ற முறைமையில்லாமல் கடவுள் என்ற முறைமை யுடையவர். கடவுளாக இருக்கும் நீர் என்னோடு போர் செய்யக் கூச்சப்படலாம்: நீங்கள் கடவுள் என்ற எண்ணமுண்டானால் எனக்கும் யுத்தம் செய்வது எப்படி என்ற தயக்கம் உண்டாகும். ஆகையால் நீர் கடவுள் என்ற நினைப்பை விட்டுவிட வேண்டும்! நீரும் பந்து என்ற முறையிலேயே அந்த நினைப்பில்தான் என்னோடு போர் செய்ய வேண்டும். ஆனால் வெற்றி தோல்விகளைப் பற்றிய புகழும் இகழும் எனக்கே சேருமே தவிர உமக்கு ஒன்றுமில்லை!'' என்றான் சங்கசூடன்.

திரிநேந்திரரான மஹாதேவர் அவனை நோக்கி ''அசுரகுல வேந்தனே! நீ சொல்லியவை யெல்லாம் விந்தையானவை. உன்னுடைய வமிசமோ பிரும்ம வமிசமே தவிர வேறில்லை. அந்த பிரும்ம சப்தத்திற்கு உரியவன் நான். ஆகவே, வம்சத்திற்குக் கர்த்தாவாகிய யான் பந்து முறை கொண்டாடி போர் செய்ய ஏன் கூச்சப்பட வேண்டும்? இந்த நியாயத்தாலேயே நான் முன்பு திரிபுரர்களோடும் போர் புரிந்தேன். தேவியும் இந்த நியாயத்தாலேயே சும்ப நிசும்பரர்களோடும் போரிட்டாள்: மதுகைடபர், இரணியன், இரணியாஷன் முதலியவர்களோடு, மகாவிஷ்ணு யுத்தம் புரிந்ததும் இந்தத் தாயாதி முறையினால்தான்! ஆகையால் நான் போர் செய்ய வந்த காரணத்தைச் சொல்லி விட்டதால் உன்னோடு போராடுவதில் எனக்கு கூச்சம் இராது என்பதைத் தெரிந்து கொள்! ஆனால் நீ எல்லோரையும் விட மிகச் சிறந்தவன்!'' என்று சொல்லி விட்டு மௌனமாக இருந்தார். சங்கர ஆலமரத்தின் அடியிலிருந்து சொன்ன குறிப்பை சங்கசூடா சுரன் உணர்ந்து கொண்டு தன் மதியமைச்சர்களோடு அதிவேக மாய் எழுந்தான்.

## 22 சங்கசூடன் போராட்டம்

''சங்கசூடன் சிவ சங்கரரை வணங்கி விட்டு, தன் அமைச்சர் களோடு விமானத்தில் ஏறித் தன்னுடைய படைகளைப் போரிடத்

தூண்டினான். அவனும் சங்கரபரமேஸ்வரரும் எதிர்த்து போராடத் துவங்கினார்கள். எனவே, சேனைத் தலைவர்கள் முறையே போர் செய்யலானார். சிவபெருமானின் சேனாதிபதியான மஹேந்திரன் என்பவன் சங்கசூடனின் படைத் தலைவனான விருஷபர்வனோடும் சூரியன் விப்ரசித்தியோடும் சந்திரன் தம்பனோடும், யமன் காலேஸ்வரனோடும் அக்னி கோகர்ணனோடும் குபேரன் காலகேயனோடும் விசுவகர்மா மயனோடும் மிருத்யு பயங்கரன் சங்காரமயனோடும், வருணன் விகங்கணனோடும், வாயு சஞ்சலனோடும், புதன் த்ருத பிரஷ்டனோடும், சனி ரக்தாக்ஷனோடும், ஜயந்தன் ரத்னசாரனோடும், வசுக்கள் வர்ச்சோகணங்களோடும், தருமன் துரந்தரனோடும், அசுவனி தேவர்கள் திப்திமானோடும் நளகூபரன் தூம்பரனோடும் பானு சோபாகரனோடும், மன்மதன் பிடாரனோடும், மங்களன் உசாஷனோடும் விஸ்வன் சபவாசனோடும், ஏகாதச ருத்திரர் மஹாபயங்கார என்ற பதினொருவரோடும் மகாமாரி உக்ரசண்டனோடும் நந்தி தேவர் முதலானவர் ராக்ஷசக் கூட்டங்களோடும் பிரளய காலத்திலும் மகாபயங்கரமான யுத்தம் புரிந்தார்கள். இவ்விதமாக இரண்டு சேனைகளும் ஒருவரோடொருவர் யுத்தம் புரியும் போது, சம்பு மகேஸ்வரர் வடமூலத்தில் கால்யாசுதனோடும், சங்கசூடன் அநேக அசுரர்களுடன் அரியணையிலும் வீற்றிருந்தார்கள். சங்கரரின் படைகளும் தேவர்களும் யுத்த முனையில் அசுரர்களால் தோற்கடிக்கப்பட்டுக் காயப்பட்டுச் சிதறி ஓடினார்கள்.

அதைக் கண்ட முருகர் கோபங் கொண்டார் அவர் தேவர்களுக்கு அபயம் கொடுத்துத் தமது தேஜஸினால் சிவ கணங்களுக்கு அமைதியளித்து வன்மையுண்டாக்கி, தான் ஒருவராகவே அசுரர் படைகளை எதிர்த்து யுத்தம் செய்து நூறு அக்ஷோணி அசுரச் சேனைகளை ஒரே கணத்தில் கொன்றொழித்தார். பத்ரகாளி பகைவர்களான அசுரர்களை அழித்து மிகவும் உக்கிரங் கொண்டு, ராக்ஷச ரத்தத்தை உறிஞ்சியும் பத்து லக்ஷம், நூறு லக்ஷம் கோடி கோடியாய் யானைகளைக் கையிலெடுத்து முகத்தில் அறைந்து, வாயில் விட்டுத் தின்றும் திரிந்தாள்: கந்தப் பெருமானின் பாணங்களால் அடிபட்டு அசுரர்கள் பலர் பயந்து ஓடிப் போனார்கள். அதைக் கண்டதும் அசுரத் தளபதிகளான விருஷபர்வன், விப்ரசித்து, தம்பன், விகங்கணன் முதலிய யாவரும் திருமுருகனை எதிர்த்துப் போர் புரிந்தனர். மகாமாரியும் சளைக்காமல் போர் செய்தாள். அரக்கர்கள், முருகரின் சக்தி ஆயுதத்தால் பொறி கலங்கி ஓடினார்கள். வானிலிருந்து பூமாரிகள் பொழிந்தன. சங்கசூடன் தன் வான விமானத்தில் ஏறி மழையைப் போலப் பாணங்களை எய்தான். அதனால் எங்கும் இருட்டும் பாணங்கள் ஒன்றோடொன்று உராய்வதால் நெருப்பும் படர்ந்தன. இதனால் நந்தி முதலான தேவர்கள் ஓடினார்கள் போர்க்களத்தில் கார்த்திகேயரான கந்தப் பெருமான் மட்டுமே இருந்தார்! சங்கசூடனோ யாராலும் தடை செய்ய முடி

யாத பயங்கரமான மலைகள், பாம்புகள், அம்புகள், மரங்கள் முதலியவற்றை மழையைப் போலப் பொழிந்து தள்ளினான். அதனால், பனி மூடப்பட்ட சூரியன் போல, முருகர் மறைபட்டிருந்தார். அவரது வில்லை சங்கசூடன் அறுத்து, தேரையும் உடைத்து, மயிலையும் அலைப்புறச் செய்து, சக்தியாயுதத்தையும் விடாதவாறு செய்தான். அவனது வெற்றிப் போக்கைக் கண்டதும் சுப்பிரமணியரான முருகர் வேறொரு தேரில் ஏறி, மற்றொரு வில்லை வளைத்து, அம்புகளையும் ஆயுதங்களையும் பிரயோகித்தார். தம்மை மறைத்திருக்கும் சர்ப்பங்களையும் மலைகளையும் மரங்களையும் இந்திராஸ்திரத்தால் அறுத்து, மேகாஸ்திரத்தால் நெருப்பை அவித்தணைத்து, சக்திசூடனின் ரதத்தையும், சாரதியையும் மணி மகுடத்தையும் நாசப்படுத்தி, அவனது மார்பில் தமது சந்தியாயுதத்தைச் செலுத்தினார். அது பேரொளி மின்ன அக்னிவேகமாக பாய்ந்தவுடன் சங்கசூடன் மயங்கி விழுந்தான். பிறகு அவன் மீண்டும் மூர்ச்சையிலிருந்து தெளிந்து எழுந்து வேறு ஒரு ரதத்தில் ஏறி தனுசை எடுத்து, மாயையினால் மழை போல அம்புகளை எய்யலானான். அவற்றால் ஸ்கந்தரை மறுபடியும் மறைத்து விட்டு சக்தியாயுதத்தையும் ஏவினான். அது பாய்ந்து வந்து முருகரின் மார்பில் தாக்குவதற்கும் முன்னால் காளிகா தேவி, விரைந்தோடிச் சென்று, அவரைத் தனது மார்பிலணைத்து தூக்கிப்போய் சிவபெருமானிடம் கொண்டு சென்றாள்.

சிவபெருமான், காளியின் அன்பைக்கண்டு அகம் மகிழ்ந்து, "காளியே! என் குமாரனிடம் நீ அன்புடையவளாக இருந்ததால், நீ இவனுடன் இருந்தே போர் செய்" என்று அனுப்பினார். நந்திதேவரும் மற்ற தேவர்களோடு அவளைப் பின் தொடர்ந்து போராட விரைந்து சென்றார்கள். காளி, போர்க்களத்தை அடைந்து சிங்கநாதஞ் செய்தாள். அதனால் அசுரர் எல்லாம் மூர்ச்சித்தனர். காளி, ஓயாமல் அட்டகாசம் செய்தாள். இரத்தத்தைக் குடித்து குதித்துக் குதித்து கூத்தாடினாள். அவளுக்குத் துணையாக மோகினி டாகினி கணங்களும் மதுவருந்தி பயங்கரமான கோரைப் பற்களோடும் தடியும் கோடாரியும் எடுத்துக் கொண்டுவந்து சூழ்ந்து கொண்டன அதைப் பார்த்ததும் சங்கசூடன் வேகமாகப் பாய்ந்து வந்து அசுரர்களுக்குத் தைரிய மூட்டி போராடத் தொடங்கினான். பிரளய அக்கினிக்கு ஈடான நெருப்பைக் காளி பொழிந்தாள். அந்த நெருப்பை சங்கசூடன் மேகாஸ்திரத்தால் அணைத்தான். காளி வருணாஸ்திரத்தைப் பிரயோகித்தாள். அதை சங்கசூடன் கந்தர்வாஸ்திரத்தால் அறுத்தான். பிறகு காளி அக்கினிபோல் ஜொலிக்கும் மஹேஸ்வராஸ்திரத்தை எய்தாள். அதை சங்கசூடன் சதாசிவாஸ்திரத்தால் அறுத்துத் தள்ளினான். காளி, மந்திரத்தை ஜபித்து, மகா வீரபத்திராஸ்திரத்தை விட்டாள். அதைப் பார்த்ததும் சங்கசூடன் தன் ரதத்திலிருந்து இறங்கி, அதன் முன் விழுந்து

கும்பிட்டான். அதனால் பிரளயாக்கினிபோன்ற அந்த அஸ்திரம் வானத்திலே சென்று விட்டது. பிறகு, பிரம்மாஸ்திரத்தைக் காளி எய்தாள். சங்கசூடனும் அதே அஸ்திரத்தைச் செலுத்தி அதைத் தடுத்தான். காளி விடும் அஸ்திரங்களையெல்லாம் சங்கசூடனும் அதே அஸ்திரங்களைக் கொண்டே தடுத்து வந்தான். காளி ஒரு யோஜனை நீளமுள்ள சக்தியை ஏவி முயற்சியோடு அவன்மீது எறிந்தாள். அதை சங்கசூடன் தன் ஆயுதங்களால் ஒடித்தெறிந்தான். காளி, மகாகோபம் கொண்டு பாசுபதாஸ்திரத்தை எடுத்துப் பிரயோகிக்க முயன்றாள். அப்பொழுது அசரீரி வாக்கு ஒன்று எழுந்து ''இதனாலும் சங்கசூடனுக்கு மரணம் நேரிடாது அவனுடைய பத்தினி துளசி எவ்வளவு காலம் பதிவிரதா தர்மத்தோடு இருக்கிறாளோ, அவ்வளவு காலம்வரை அவனுக்கு மரணமேயில்லை என்று பிருமன் அவனுக்கு வரம் கொடுத்திருக்கிறான்!'' என்று வானொலியாக ஒலித்தது. காளியோ அப்போதும் விடாமல் பெரும் பசியினால் விளையாட்டாகவே ராக்ஷசர்களை விழுங்கிய வண்ணம் சங்கசூடனையும் விழுங்க ஓடினாள். அவளை அவன் தன் பாணங்களால் தடுத்து நிறுத்தினான். காளி விடும் அஸ்திரங்களையெல்லாம் அறுத்தெறிந்தான். அவனை ஒரே விழுங்காக 'விழுங்கி விடுகிறேன் என்று பாய்ந்து வரும்போது சங்கசூடன் அவள் விழுங்க முடியாதளவு பேருருவம் எடுத்துக்கொண்டான். அதனால் காளி இன்னும் கோபங்கொண்டு தன் கைமுஷ்டியினாலேயே அவனது தேரையும் நாசப்படுத்தி சூலத்தையும் எறிந்தாள். அதை அவன்தன் இடது கையால் பிடித்து தடுத்தான். பிறகு தேவி தன் கையால் முஷ்டி



பிடித்து மூர்க்கமாக அடித்தாள். அதனால் சங்கசூடன் மூர்ச்சை அடைந்தான் என்றாலும் பிறகு எழுந்து காளியோடு மல்யுத்தம் புரிந்து அவளது ஆடையைத் தனது பராக்கிரமத்தால் அறுத்தான். ஆனால் மாத்ருபக்தியினால் அதன் பிறகு அவன் பாணங்களை எய்ய வில்லை. தேவி கோபங்கொண்டு அவனையெடுத்துச் சுழற்றிச் சுழற்றி மேலே வீசினாள். அவன் அங்கு இருந்து பூமியில் குதித்து ஓடிவந்து, காளியை வணங்கத் தனது விமானத்தில் ஏறி உட்கார்ந்து கொண் டான். காளி, பசியினால் ராக்ஷசர்களுடைய இரத்தத்தை குடித்தும் மாமிசத்தை தின்று கொண்டும் திரிந்தாள். பிறகு அவள் சங்க ரரிடம் சென்று, போர் நிலையைக் கூறி, ''இப்போது ஒருலக்ஷம் வீரர்களே மிஞ்சியிருக்கிறார்கள். அவர்கள் நான் சாப்பிடும்போது என் வாயிலிருந்து நழுவிச் சிந்தியவர்கள்!'' என்று சொன்னாள். சிவனார் சிரித்தார். அப்போது காளி, ''அவரை நோக்கி, ''மஹேஸ்வரரே! நான் அவனைக் கொல்லப் பாசுபதாஸ்திரத்தை எடுத்தபோது, அசரீரி தடுத்தது. அவனும் ஞானியாகையால், என் மீது பாணம் விடவில்லை!'' என்றாள்.



# 23 போர் முனையிலே தானமும் சங்கநாதமும்

காளிகா தேவி கூறியதும், சிவபெருமான் தனது கணங்களுடன் போர்க்களம் சென்றார். அவரைக் கண்டதும் சங்கசூடன் தன் விமானத்திலிருந்து இறங்கி, அவரைப் பக்தி சிரத்தையோடு கும்பிட்டு விட்டு, தனது தேரில் ஏறி வில்லை வளைத்து போர்புரியலானான். ஆனால் இருவரும் ஒரு நூறு வருஷம் இடை விடாமல் யுத்தம் புரிந்தார்கள். அப்படிப் போராடியும் இருவரும் வெற்றி தோல்வியடையவில்லை. அதனால் இருவரும் ஆயுதங்களை வைத்து விட்டு அமைதியாக இருந்தார்கள். போரில் இறந்தவரையெல்லாம் சிவபெருமான் உயிர் பெற்று எழச் செய்தார். இந்நிலையில், மிகவும் வயதான ஒரு கிழப் பிராமணன், பசியோடு யுத்த பூமிக்கு வந்தான். அவன் சங்கசூடனிடம் சென்று, "நான் யாசகன். எனக்குப் பிக்ஷை கொடுக்க வேண்டும்; நீயோ சகல சம்பத்தையும் கொடுக்க வல்லவன். நானோ ஆசை அதிகமில்லாதவன், ஆனால் ஒரே ஒரு பொருளின் மீது ஆசை வைத்திருக்கிறேன். என் கோரிக்கையை நிறைவேற்றுவதாக நீ வாக்குறுதியளித்தால் அதை சொல்கிறேன்!" என்றான். அதற்கிணங்கிச் சங்கசூடன் அப்படியே ஆகட்டும் என்று மலர்ந்தமுகத்தோடுசத்தியம்செய்துவாக்குறுதியளித்தான். உடனே, கிழப் பிராமணன் "எனக்கு உனது மந்திரக் கவசம் வேண்டும்" என்று நயவஞ்சகமாகக் கேட்டான். அதனால் சங்கசூடன் சொன்ன சொல் தவறாமல் உடனே தன் மந்திர கவசத்தைக் கொடுத்தான். அதை வாஙகிக் கொண்டு சங்கசூடனைப் போலவே போலியுருவமெடுத்து சங்கசூடனின் பத்தினியான துளசியிடம் சென்று அவளோடு கூடிக் கலந்துவிட்டுப் போனான். அதனால் பதிவிரதா தர்மம் அழிந்தது. சங்கசூடனுக்கு வரமளித்த மரணகாலமும் நெருங்கியது. அவனும் சங்கசூடனும் வருங்காலத்தை அறிந்தவர்களாகையால் யுத்தம் முடிய வேண்டிய முறைப்படி முடிவதற்காகப் போர் புரியலானார்கள். சங்கரனால் சங்கசூடனை சம்காரம் செய்வதற்காக, பிரளயாக்னியைப் போலும் யாராலும் தடை செய்ய முடியாததாய், கிரீஷ்மகாலச் சூரியனைப் போலப் பிரகாசிப்பதாய், பகைவரை அழிக்க வல்லதாய், ஆயிரம் விற்களின் நீளமும் நூறு முழம் பருமனும் உள்ளதாய், பிரும்ம ரூபமானதாய், பிரம்மாண்டத்தையே சங்கரிக்கும் வலிமையுள்ளதாய் விளங்கும் பெரியதொரு சூலாயுதத்தை விளையாட்டாகச் சுற்றி சங்கசூடன் மீது எறிந்தார். உடனே, சங்கடசூடன் தன் கையிலிருந்த வில்லாயுதத்தை எறிந்து விட்டு வணங்கித் தனது இஷ்ட தெய்வத்தைத் தியானித்திருந்தான். சிவனாரின் சூலம் அவன் மீது பாய்ந்து,

அவனுடலைச் சாம்பராக்கியது. உடனே அவன் திவ்ய உருவ மடைந்து, சுதர்மனாக மாறி கோலோகத்திலிருந்து வந்த ரத்தின விமானத்தில் ஏறிக் கொண்டு கோலோகம் சென்று, பக்திப் பெருக்கோடு ராதாகிருஷ்ணரின் திருவடிகளை வணங்கினான். அவ்விருவரும் முகம் மலர்ந்து சுதாமனை அன்பினால் அணைத்துக் கொண்டார்கள். இவ்வாறு சங்கசூடனைச் சங்கரித்த திரிசூலம் அதை ஏவிய சிவபெருமானிடமே திரும்பிச் சென்றது. சங்க சூடனின் எலும்புகள் பூமியில் சங்குகள் ஆயின. அவை தேவார்ச் சனை செய்வதற்குத் தூய்மையானவை. சங்கு ஜலம் தேவர்களுக் குப் பிரீதியை உண்டாக்கும். சிவபெருமானைத் தவிர, மற்றவர் களுக்கெல்லாம் சங்கு தீர்த்தம் மகா புண்ணிய தீர்த்தம் போல் பரிசுத்தமானதாக விளங்குகிறது. சங்கு சப்தம் எங்கு உண்டா கிறதோ அங்கு லக்ஷ்மிதேவி வாசமாயிருப்பாள். சங்கு தீர்த்தத் தால் ஸ்நானம் செய்பவன் சகல புண்ணிய நதிகளிலும் தீர்த்தங் களிலும் ஸ்நானம் செய்த பலனை அடைகிறான்: எங்கே சங்கு இருக் கிறதோ அங்கே லக்ஷ்மியும் இருக்கிறாள். அங்கே அமங்கல வஸ்துக ளெல்லாம் அகன்று போகும். எங்கே சங்கு இல்லையோ, அங்கே லக்ஷ்மி பயந்தவளாய்க் கோபங் கொண்டு வேறிடத்திற்கு சென்று விடுவாள்.''

சங்கசூடனைச் சிவபெருமான் வென்று சங்கரித்த பிறகு சித்தம் மகிழ்ந்து இடபவாகனத்தில் ஏறித் தம் சிவலோகத்திற்குச் சென்றார். தேவர்கள் பெரிதும் மகிழ்ந்தனர். கந்தர்வக்கினரர்கள் ஆடிப் பாடி ஆரவரித்தனர். வானமாரி பொழிந்தது. சுவர்க்க லோகத்தில் துந்துபி முதலான மங்கல வாத்தியங்கள் முழங்கின: மகரிஷிகள் போற்றித் துதித்தார்கள்—இவ்வாறு நாராயணர் கூறினார்.

## 24 மகாவிஷ்ணுவின் மாயமும் துளசியின் சாபமும்

நாரத மகரிஷி நாராயணரை நோக்கி, ''பூஜ்யரே! மகாப்பதி விரதையான துளசியிடம் மகாவிஷ்ணு எந்த ரூபத்தினால் கர்ப்பா தானஞ் செய்தார்?'' என்று கேட்டார். அதற்கு நாராயணர், கூறலானார்.

''போர் முனையில் சங்கசூடனிடமிருந்து மந்திர கவசத்தை தானமாக மகாவிஷ்ணு பெற்றுக் கொண்டு தந்திரமாக அவனைப் போலவே உருவமெடுத்து சங்கசூடன் போர் முனையிலிருந்து திரும்பி வருவது போல் சேனைகள் புடை சூழ, வெற்றி முழக்கத்தோடு



அவனது அரன்மனைக்குச் சென்றார். வெற்றி முழக்கத்தைக் கேட்டதும் சங்கசூடனின் பத்தினியான துளசி அன்பும் ஆசையும் ஆர்வமும் பொங்கப் பலகணி வழியாகத் தன் கணவன் வெற்றி முழக்கத்தோடு வருவதைப் பார்த்தாள். ஆனந்தத்தால் அந்தணர்களுக்கும் அங்கஹீனர்களுக்கும் தானம் வழங்கினாள். சிறையிலிருந்தவர்களையெல்லாம் விடுதலை செய்வித்தாள். போலி சங்கசூடனாக மாயா வடிவமெடுத்தவரோ நகரினுள்ளே நுழைந்து அரண்மனையை அடைந்து துளசியின் அந்தப்புரத்திற்குள் பிரவேசித்தார். அவரைத் தன் நாயகன் என்றே துளசி நம்பி ஆசையோடு வரவேற்று அவரது கால்களைச் சுற்றி வலம் வந்து கும்பிட்டு ரத்தின சிம்மாசனத்தில் அமரச் செய்தாள். பிறகு அவள் காம இச்சை மிகுந்தவளாகிக் கற்பூரம் சேர்ந்த தாம்பூல வகைகளைப் போலிக் கணவரிடம் கொடுத்து உபசரித்தாள். பிறகு அவள் அவரை நோக்கி, "நாயகரே; யுத்தத்தில் வெற்றி பெற்று ஜெய பேரிகையோடு திரும்பி வந்துவிட்டீர்கள்! அதனால் என் உயிரும் வாழ்வும் மலர்ந்தது. ஆனால் அகிலங்களையெல்லாம் சங்கரிப்பவரான சங்கரரை நீங்கள் எப்படி வென்றீர்கள்?" என்று கேட்டாள் அதற்கு அவர் சிரித்துக் கொண்டே, "பத்தினியே! நாங்கள் இருவரும் ஒரு வருஷம் முழுவதும் ஓயாமல் போர் செய்தோம் எதிரிகள் மாண்டனர். சிருஷ்டி கர்த்தாவான பிருமதேவன் என்னிடமும் சங்கரரிடமும் பிரியமுள்ளவனாகையால் எங்கள் இருவரையும் சமாதானப்படுத்தி, என்னை வேண்டியபடி, நான் தேவர்களுக்கு

அவர்களது ராஜ்யத்தைக் கொடுத்து விட்டு வந்துவிட்டேன்! சிவனும் தம் கைலாயத்திற்குப் போய்ச் சேர்ந்தார்'' என்று கூறினார் பிறகு, அவர் துளசியுடன் கூடி மகிழ்ந்து சுகபோகத்தை அனுபவிக்கலானார். அந்த இன்ப உறவில் தன் நாயகனின் செய்கைகளுக்கு மாறாக எல்லா லீலா விநோதங்களும் வேறு விதமாக இருப்பதாக துளசிக்குத் தோன்றியது: அதனால் அவள் சந்தேகப்பட்டு அவரைப் பார்த்து, ''நீ யார்? அதைச் சொல். நான் உன்னிடம் இன்ப சுகத்தை அனுபவித்து என் பதிவிரதா தர்மத்தைக் கெடுத்துக் கொண்டு விட்டேன்! கற்பு என்பது என் கைக்கு எட்டாத தொலைவிற்கு மறைந்து போய்விட்டது! இவ்வாறு என்னைக் கெடுத்த உன்னைச் சபிக்கப் போகிறேன்'' என்று குமுறினாள். அவளது சாபத்திற்கு அஞ்சிய மகாவிஷ்ணு, தம் சுய உருவை அவளுக்குக் காட்டி நீல மேக சியாமள ரூபராக விளங்கினார். அவரது சுய உருவத்தைக் கண்டதும் துளசி மனங்கூசி, மயங்கிச் சுருண்டு மூர்ச்சித்தாள். பிறகு மூர்ச்சை தெளிந்து, துளசி ஆத்திரத்தோடு திருமாலை நோக்கி, ''மாயாவி! ஆ! என்ன காரியம் செய்து விட்டீர்! நீர் இந்தக் காரியத்தைச் செய்யலாமா? உம்மிடம் கருணையோ ஈவிரக்கமும் சிறிதும் இல்லாமல் போய் விட்டதா? குற்றமற்ற எனது கற்பை, வஞ்சனையால் சூறையாடி விட்டீரே! என் பதிவிரதா தர்மத்தை உணராமல் இப்படிச் செய்து விட்டீரே! உமக்கு அறிவே இல்லை. உமது இருதயம் என்னைக் கெடுப்பதில் கல் போல கடினம் பெற்றிருந்ததால் கல்லாகக் கடவீர்! உம்மை நல்லவர் சாதுவானவர் என்று சொல்லுகிறவர்களுக்கெல்லாம் வெறும் மனப்பிரமையே தவிர, வேறு ஒன்றுமில்லை! உம்மைக் கேட்டால் தேவர்களுக்காக இவ்விதம் செய்தேன் என்பீர். அவர்களுக்கு நன்மை செய்ய நினைத்ததைப் போல எனக்கும் நன்மையை நினைத்தீரா? இல்லையே? எது போனாலும் போகலாம். திரும்பியும் வரலாம்! ஆனால் போன கற்பு வருமா? அழிந்து போன என் பதிவிரதா தர்மம் இனி மீண்டும் வருமா? அந்த அருமை ஒன்றையும் யோசிக்காமல் நீர் இப்படிச் செய்யலாமா?'' என்று உள்ளம் உடைந்து துளசி மிகவும் துயரப்பட்டாள். அதனால் மகாவிஷ்ணு சில உண்மைகளை உணர்த்தலானார்.

''துளசி! நீ என்னை அடைய வேண்டும் என்றுதான் பல காலம்வரை பாரத தேசத்தில் தவஞ் செய்தாய். சங்கசூடனோ, உனக்காகத் தவஞ் செய்தான். அதனால் அவன் உன்னைத் திருமணஞ் செய்து கொண்டு இன்ப வாழ்க்கை நடத்தினான். நீ என்னை அடைய வேண்டுமென்று செய்த தவத்திற்குப் பலனளிக்க வேண்டிய காலம் வந்து விட்டதால், நானும் இப்போது உன்னிடம் வந்து விட்டேன். நீ இந்த உடலை நீத்து விட்டுத் திவ்விய வடிவமெடுத்து என்னுடன் ஆனந்தமாக இருக்கப் போகிறாய்.

உன்னுடைய உடல், பரதகண்டத்தில் கண்டகி என்னும் புண்ணிய நதியாக மாறி மனிதர்களைத் தூய்மைப்படுத்தும். உன்னுடைய ரோமங்களோ மரங்களிற் சிறந்த துளசி என்ற புண்ணிய விருட்சமாக மாறும். அவ்வாறு மாறிய துளசி விருட்சம் மூன்று உலகங்களிலும் கோவுலகிலும், விரஜா நதிக்கரையிலும், ராதா மண்டலம், பிருந்தாவனம், பாண்டீரம், சம்பகப்பூங்கா, சந்தனக்காடு, தாழை, முல்லை, மல்லிகை, மாதவி, மாலதி முதலிய தாவரங்கள் உள்ள இடங்களிலும் வளர்ந்து புண்ணியத்தோற்றமளிக்கும். அந்தத் துளசியின் மகிமையை இன்னும் சொல்கிறேன். அவற்றைக் கேட்டு, பிறகு, உன்னுடைய பதவிரதா தர்மத்தை நான் குலைத்தேன் என்ற உன் துயரையும் கவலையையும் விட்டு விடு.

''புண்ணியத் தலங்களில் துளசிச்செடி இருக்குமானால், அதனடியில் நானும் மற்று எல்லாத் தேவர்களும் வாசம் செய்வோம். அதனடியில் தங்கும் தண்ணீர், மிகவும் பரிசுத்தமான புண்ணிய நீராகக் கருதப்படும். அந்த நீரில் தீர்த்தமாடுபவர்களுக்குச் சகல விதமான புண்ணிய தீர்த்தங்களின் நற்பலன்களெல்லாம் கிடைக்கும். துளசி தீர்த்தத்தால் எனக்கு அபிஷேகம் செய்தால், ஆயிரங் குடங்கள் பாலைப் பொழிந்து அபிஷேகம் செய்ததாக நான் திருப்தியடைவேன். மரணகாலத்தில், யார் துளசி நீரை அருந்துகிறார்களோ, அவர்கள் சகலவிதமான பாபதோஷங்களிலிருந்தும் விடுபட்டு, என்னுடைய விஷ்ணு லோகத்தை அடையப் பெற்று அங்குள்ளவரால் போற்றப்படுவார்கள். புண்ணிய நதிகள் முதலான தீர்த்தங்களில் யார் ஒருவன் விழுந்து தன் உயிரைவிடத் துணிகிறானோ அவன் தன் கையிலாவது உடம்பிலாவது துளசியை வைத்துக் கொண்டு உயிர் விடுவானேயானால், அவனும் விஷ்ணுலோகப் பதம் பெறுவான். துளசிமணிமாலையை அணிந்தவர்களும் துளசி நீரை அருந்துபவர்களும் லட்சம் அஸ்வமேத யாகங்கள் செய்த பலனை அடைவார்கள். துளசியைக் கையில் வைத்துக் கொண்டு, எவன் எதைச் செய்கிறேன் என்று சத்தியம் செய்கிறானோ அதை அவன் செய்யாவிட்டால், காலசூத்திரம் என்னும் கொடிய நரகத்தை அடைவான். துளசியடியில் பொய்ச் சத்தியம் செய்பவன் கும்பீபாகம் என்ற நரகத்தைஅடைந்து அதில்பதினான்கு இந்திரகாலம் வரை அவஸ்தைப்படுவான். பௌர்ணமி, அமாவாசை, தீட்டுக் காலங்கள், அசுத்தமாக இருக்கும் சமயங்கள், துவாதசி, மாதப் பிறப்பு, மத்தியான்னம், ராத்திரி, சந்தி நேரங்கள், எண்ணெய் தேய்த்துக் கொண்டிருக்கும் சந்தர்ப்பம் ஆகியவற்றில் யார் துளசியைத் தீண்டி எடுக்கிறார்களோ அவர்கள் என் தலையையே அறுத்தவர்களுக்குச்சமமாவார்கள். துளசி, மூன்று நாட்களுக்குப் பயன்படும். அந்தத் துளசி, சிரார்த்தம், விரதம், பிரதிஷ்டை, தேவார்ச்சனை முதலிய சந்தர்ப்பங்களிலும், தான காலங்களிலும் தூய்மையானதாகச் சொல்லப்படும். பூமியிலும்

நீரிலும் ஏதாவது துளசி இலை விழுந்திருந்தாலுங்கூட, அதை யெடுத்துச் சுத்தம் செய்து உபயோகிக்கலாம்.

''துளசியெனும் பெயருக்குரிய பெண்ணே! நீ துளசிச் செடியாக மாறுவதால் உண்டாகும் சிறப்புகளையெல்லாம் கேட்டாய் அல்லவா? இது போலவே உனது ரூபமான கண்டகி நதியும் ஓடிகடலரசனுக்கு பத்தினியாக விளங்கும் நீ கோலோகத்திற்குச் சென்று உன் மனதிற்கினிய கிருஷ்ணனோடு கூடி மகிழ்ந்திருப்பாய். நீ என்னைக் கல்லாகச் சபித்தாய் அன்றோ? அதனால் நீ கண்டகி நதியாக மாறி ஓடப்போகும் அந்த நதிக் கரையிலே நானும் கல்மலையாகப் போகிறேன். அந்தக் கல்மலையைக் கோரைப் பற்களுடன் கூடிய கொடிய கிருமிகள் கோடிக் கணக்காக வந்து துளைத்துத் துவாரமாக்கி உட்புகுந்து தமது கோரைப் பற்களால் கோழி போல் கொத்திக் கொத்திச் சேர்த்து, அவற்றில் ஒவ்வொன்றையும் சக்கரம் முதலான சின்னங்களாகச் செய்து, என் அவதாரமூர்த்தங்கள் என்று சொல்லும்படி உருவாக்கும். அவற்றில், ஒரு துவாரத்தினுள் நாலு சக்கரமும் மேலே வனமாலையும் விசித்திரமாகக் காணப்படும். ரதாகாரமும் நீருண்ட மேகம் போல் நிறமுள்ளதும், லக்ஷ்மிநாராயணர் என்றும், வனமாலையில்லாமல் இருப்பவை லக்ஷ்மிஜனார்த்தனர் என்றும் வழங்கப்படும். இரண்டு துவாரத்தினுள் சக்கரம் நான்கும் வனமாலையில்லாமல் ரதாகாரமாக உருக்கொண்டது ரகுநாதர் என்றும், மிகச் சிறியதாய் இரண்டு சக்கரங்களைமட்டும் கொண்டது வாமனர் என்றும், சிறிய தோற்றத்தோடு வனமாலையோடு இரண்டு சக்கரங்கொண்டது ஸ்ரீதரர் என்றும் வழங்கப்படும். இது மனிதர்களுக்குச் சம்பத்தைக் கொடுப்பதாகும். பெரும் விருத்தாகாரத்தோடு இரண்டு சக்கரங்கள் உள்ளது தாமோதரம் எனப்படும். மிகப்பெரிதும் மிகச் சிறியதுமாக இராமல் மத்திமமாயும் நீளமாகவும் ஏழு சக்கரமும் சரத்பூஷணத்தோடு கூடியதுமாக விளங்குவது ராஜ ராஜேஸ்வரர் என்றும் வழங்கப்படும். அது ராஜ சம்பத்தைத் தரவல்லதாகும். மத்தியமாகவும் பெரிதாகவும் விளங்கும் இரண்டு சக்கரங்களோடு அம்பருத்தூணியும் பாண அடியும் கொண்டது ரணராமர் என்றும், பதினைன்கு சக்கரத்தோடு பெரிதாகவும் நீருண்ட மேகம் போன்றதாகவும் விளங்குவது ஆதிசேஷர் என்றும், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தங்களை அது கொடுப்பது என்றும் கூறப்படும். சக்கரவடிவிலும் இரண்டு சக்கரத்தோடும் மேகப் பிரகாசத்தோடும் மத்திமமாக இருப்பது மதுசூதனர் என்றும், ஒரு சக்கரமுள்ளது சுதர்சனர் என்றும், மறைந்திருக்கும் சக்கரமாய் தோன்றுவது கதாதரர் என்னும், இரண்டு சக்கரத்தோடு, ஹயக்ரீவரூபத்தில் விளங்குவது ஹயக்ரீவர் என்றும், இரண்டு சக்கரங்களோடும் திறந்த வாயோடும் பயங்கர உருவம் கொண்டது நரசிங்கர் என்றும்

அது வைராக்கியத்தைத்தரும் என்றும், இரண்டு சக்கரங்களோடு பெரிய வாயும் வனமாலையும் கொண்டது லக்ஷ்மி நரசிம்மர் என்றும், அது இல்லறவாசிகளுக்கும் சுகமளிக்கும் என்றும், துவாரத்தின் முகப்பில் இரண்டு சக்கரமும் காந்தியும் உடையது வாசுதேவர் என்றும், இது எல்லாவிதமான இஷ்ட சித்தி பலன்களையும் கொடுப்பது என்றும் நுட்பமான சக்கரமும் ஒரு துளைக்குள் பல பலத் துளைகளையும், நீருண்ட மேகம் போல் ஒளியும் வாய்ந்தது பிரத்யுமனர் என்றும், அது கிரஹஸ்தர்களுக்கு நலம் தருவது என்றும் வழங்கப்படும். துவாரமத்தியில் இரண்டு சக்கரமும் பின்புறம் பருமனுகவும் விளங்குவது சங்கர்ஷணமூர்த்தியாகும். இது மானுடர்களுக்கு மங்கள சுகம் தருவது. அழகான செம்பட்டு நிறமும் பெரிதான தோற்றமும் உடையது அநிருத்தர். இதுவும் இல்லறவாசிகளுக்குச் சுகம் தருவதாகும். இத்தகைய சாளக்கிராமங்களில் திருமகளோடு திருமால் சமீபமாக இருப்பார். பூஜை செய்பவருக்குச் சாளக்கிராமம் சத்ராசாரமாய் இருந்தால் அது அரசபோகத்தையும், விருத்தமாயிருந்தால் அது பெரும் செல்வபாக்கியங்களையும், சகடம் போலிருந்தால் துக்கத்தையும் சூலநுனிபோலிருந்தாலும் நுனி பின்னப்பட்டிருந்தாலும் அவை மரணத்தையும், விகாரமுகமுடையதாக இருந்தால் தரித்திரத்தையும் பிங்கள நிறமாக இருந்தால் தீங்கையும், சக்கரம் பிளவுண்டிருந்தால் வியாதியையும் கொடுக்கும்

''சாளக்கிராமங்கள் உற்பத்தியாகும் மலையில் கற்கள் ஒன்றோடொன்று கூடிப்புணர்ந்து லீலைகள் புரிந்து கொண்டிருக்கும். அவற்றின் அருகிலுள்ள கண்டகிநதியில் விழுகிற கற்கள் சாளக்கிராமங்களாய் பூஜைக்குப் பயன்படுகின்றன. அவை சூரிய வெப்பத்தாலும் ஒளியாலும் பிங்கல வர்ணமாகவும் பெரிதாகவும் மாறுகின்றன.

சாளக்கிராம பூஜை செய்வோருக்கு அது சம்பந்தப்பட்ட தீர்த்தஸ்பரிசமே சகல தீர்த்த ஸ்நானங்களின் பலனையும் கொடுக்கும். அந்தப் பூஜை செய்வதே சகல யாகங்களும் செய்வதற்கு ஈடாகும். அதுவே யாகதீக்ஷை அடைந்ததுமாகும். விரதம்—தலம், வேதமோதல் முதலான புண்ணிய பலன்களையெல்லாம் அது ஒன்றே உண்டாக்கும் அதன் அபிஷேக தீர்த்தத்தை அருந்தினுல் தெய்வ அருளை நல்கும். தூய்மை ஜீவன் முக்தர்களுக்கு விஷ்ணுபதத்தையும், அதிகாரத்தையும் அடையச்செய்யும். அதுவரை செய்த பாபங்களெல்லாம் கருடனைக் கண்ட பாம்பைப் போலப் பயந்து விலகும். அத்தகையவரின் பிறவிக்கு முந்திய லக்ஷம் பிதுர்க்களையும் அவரையும் கரையேற்றும். அவருடைய பாததூளி பூதேவியையும் புனிதமாக்கி விஷ்ணுபதத்தில் ஒன்றும் பேறு அடைவிக்கும். சாளக்கிராமத்தை வைத்துக் கொண்டு பொய் சத்தியம் புகழ்கிறவன் லக்ஷம் மன்வந்தரகாலம் வரை அசிபத்ரவனம் என்ற நரகத்தில் சேர்ந்து கிடப்பான். சாளக்கிராமத்தின் மீதிருக்கும்

துளசியை எடுப்பவன், வாழ்வின் முடிவில் ஸ்திரீயைப் பிரிந்து துயரப்படுவான். சங்கு மீதிருக்கும் துளசியை எடுப்பவனுக்கு ஏழு ஜன்மம் வரையில் மனைவி வந்து வந்து மடிந்து மடிந்து மகா துக்கத்தை கொடுப்பாள். சங்கையும் துளசியையும் சாளக்கிராமத்தையும் ஒன்றாக வைத்துப் பூஜிப்பவன். மகாஞானி யாகவும் விஷ்ணுபிரியனாகவும் விளங்குவான் துளசியே! நம்மிருவருக்கும் சாபத்தால் உண்டாகும் வடிவங்களால் உலகத்தவருக்கு ஏற்படக்கூடிய நன்மை தீமைகளைச் சொல்லிவிட்டேன்.

''துளசியே! நல்லதொரு நாயகனோடு திருப்தியாய் ஒரே ஒரு நாள் சுகம் அனுபவித்த ஒரு மங்கையானவள், அவனை விட்டுப் பிரிவதென்றாலோ மிகவும் துக்கப்படுவாள். அப்படியிருக்கும் ஒரு மன்வந்த்ரகாலம் வரையில் அளவில்லாத சுகத்தை அனுபவிப்பதற்கு உரியவனாக இருந்த நாயகனைப் பிரிவது என்றால் அதனால் உண்டாகக்கூடிய துக்கத்திற்கும் துன்பத்திற்கு அளவேது?''

இவ்வாறு மகாவிஷ்ணு சொல்லிக் கொண்டிருக்கும் போதே, துளசி, தன் உடலை விட்டுவிட்டுத திவ்விய தேகத்தோடு திருமாலின் திருமார்பில் வசிக்கும் வாழ்வுபெற்றாள். சங்கரூடனாகத் தோன்றிய நாராயணரும் தமதிருப்பிடம் சென்றார். நாரதரே! துளசி எப்படி, மகா விஷ்ணுக்குப் பத்னியானாள் என்பதை நான் கூறிவிட்டேன்!''

## 25 மகா விஷ்ணுவின தாபமும் துளசி பூஜையும்

''துளசி வைகுண்டத்தை அடைந்த பிறகு அங்கே நடந்தவை என்ன என்பதையும், அவளுடைய பூஜைமுறை துதிகளையும் அவளைப் பூஜித்தவர்களைப் பற்றிய விவரங்களையும் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்'' என்று நாரதர் கேட்டார். நாராயணர் கூறலானார்.

''துளசி த்வ்வியமான பேரழகு வடிவத்தோடு வைகுண்டத்திற்குச் சென்றபோது அங்கு இருந்த லக்ஷ்மி, சரஸ்வதி, கங்கை ஆகிய மூவரும் அவளைப்பார்த்தார்கள். அவர்களில் லக்ஷ்மி, கங்கை இருவர் மட்டுமே பொறுமையடையவில்லை. ஆனால் சரஸ்வதியோ துளசியின் கவர்ச்சிகரமான உருவத்தோற்றம் அழகொளிகளையெல்லாம் கண்டதும் மனம் பொறுதவளாய் பொறுமையோடு கொதித்தாள். விஷ்ணு பகவான் தன் அருகிலிருப்பதையும் பொருட்படுத்

தாமல் துளசியைத் தன் கையால் அடித்தாள். அதனால்[1] துளசி வெட்கப்பட்டு அங்கிருக்கும் விஷ்ணு பரமாத்மாவுக்குத் தெரியாமல் மறைந்து துளசி வனத்தில் போய் இருந்தாள். அவளைப் பிரிந்த பிறகு மகா விஷ்ணு பிரிவாற்றாமை வசப்பட்டு சரஸ்வதி மனம் அமைதிப்படும்படி அவளோடு சரச சல்லாபமாக இருந்துவிட்டு துளசியின் அருமை பெருமைகளைக் கூறினார். பிறகு அவளிடமிருந்து விடைபெற்று, துளசி வனத்திற்குச் சென்று, "லக்ஷ்மி மாயா

காமவாணீ பீஜபூர்வம் தஸாக்ஷரம்—பிருந்தாதி

வனீதி ஜேந்தஞ்ச வன்னிஜாயாம் ததேவச:

என்னும் மந்திரத்தைக் கூறி, சந்தண மலர்களைக் கொண்டு பூஜித்து, தூபமும் நெய்த் தீபமும் காட்டி நைவேத்தியம் முதலான உபசாரங்கள் செய்தார். "பிருந்தை என்பது மரங்கள் நெருங்கி அடர்ந்திருப்பதை குறிக்கும். அதனால் என் பிரிய பத்தினியான துளசி ஓரிடத்தில் மிக நெருங்கி அடர்ந் திருப்பதால் அவளைப் பிருந்தை எனப் பண்டிதர்கள் கூறுகிறார்கள். அவளை நான் போற்றுகிறேன். எவள் முற்காலத்தில் பிருந்தா வனந்தோறும் இருந்து பிருந்தாவனீ என்று பெயர் பெற்றாளோ, எவள் அகில பிரபஞ்சத்தினால் பூஜிக்கப்பட்டு விஸ்வ பூஜிதை என்று பெயர் பெற்றாளோ, எவளால் எண்ணற்ற பிரபஞ்சமெல்லாம் பரிசுத்தமாகி விஸ்வபாவனீ என்ற பெயர் பெற்றாளோ, அவளை நான் பூஜிக்கிறேன். துளசியே! உன்னை விரகதாபத்தோடு நினைக் கிறேன்! மலர்களில் மீது பிரீதியுடைய தேவர்களும் அவைகளால் ஆனந்தமடையாமல் உன்னாலேயே ஆனந்தமடைவதால் புஷ்ப ஸாரையென்றும் பெயர் பெற்றாய்! நீ எனக்கு ஆனந்தமளிக்க வேண்டும்! அடைந்ததுமே ஆனந்தத்தை அளிக்கும் தன்மையில் நந்தினி எனப் பெயர் பெற்ற துளசியே! கிருஷ்ணன் உன்னால் உருக் கொண்டு வாழ்வதால் கிருஷ்ண ஜீவினி என்று பெயர் பெற்றாய்! நானும் உன்னால் ஜீவிக்க விரும்பி உன்னைப் புகழ்ந்து போற்றுகிறேன். நான் உனக்காக வாடுகிறேன்! நான் காணும் படி வருவாயாக!" என்று மகாவிஷ்ணு மந்திரத்தால் பூஜித்துப் போற்றியதால், துளசி அகம் மகிழ்ந்து வெளிப்பட்டு வந்து அவரை நமஸ்கரித்தாள். அதனால் மகாவிஷ்ணு சந்தோஷமடைந்து அனை வராலும் துளசிக்குப் புகழும் பூஜையும் உண்டாகுமாறு அவளை வாழ்த்தி விட்டு, அவளையும் அழைத்துக் கொண்டு தம் வை குண்டத்திற்குச் சென்றார். அங்கு சரஸ்வதியின் அனுமதியுடன் துளசியை மகாவிஷ்ணு அழைத்து வந்ததால், சரஸ்வதி தன் பொறுமையையும் கோபத்தையும் விட்டு விட்டு துளசியின் கையைப் பற்றி இழுத்துக் கொண்டுபோய்த் தன் பக்கத்தில் உட் கார வைத்துக் கொண்டாள். அது போலவே லக்ஷ்மியும் கங்கை

யும் துளசியைத் தன் தன் பக்கம் இழுத்து உட்கார வைத்துக் கொண்டு சந்தோஷப்பட்டார்கள். பிறகு நாயகியர் அனைவரும் ஒன்று பட்டு அந்தப் புரத்திற்குச் சென்று மகிழ்ச்சியோடு வாழலானார்கள்.



"நாரதரே! இவ்வாறு மகாவிஷ்ணுவான ஹரியினால் போற்றிப் புகழப்பட்டதால்தான், துளசிவனத்தில் மறைந்திருந்த துளசி, சரஸ்வதியினால் அடிபட்ட அவமானத்தையும் துக்கத்தையும்மறந்து ஹரியின் திருவடியில் விழுந்து வணங்கினாள். ஹரியும் தாம் விரும்பியபடியே அவளைக் கண்டார்.

மகாவிஷ்ணு அவளைப் புகழ்ந்து போற்றிய

"பிருந்தா பிருந்தாவனீ, விஸ்வபூஜிதா, விஸ்வபாவநி,
புஷ்பஸாரா, நந்தனீ, துளஸீ, கிருஷ்ண ஜீவனி,
ஏதந் நாமஷ்டகஞ் சைவ ஸ்தோத்ரம் நாமார்த்த ஸம்யுதம்ய: படேத்
தாஞ்சஸம்பூஜ்ய ஸோஸ்வமேத பலம் லபேத்!

என்னும் மந்திரத்தில் வரும் எட்டு நாமங்களும் காரணப் பெயர்களாகையால், அதை மனனஞ் செய்வோர், அஸ்வமேத யாகம் செய்த பலனை அடைவார்கள். துளசியின் ஸ்தோத்திரம் கண்ணுவசாகையிற் கூறப்பட்டுள்ளது.

துளசி பூஜைக்கு, துளசி விருட்சமே முக்கிய உருவமாகும். அதனால் ஆவாகனம் (தாபித்தல்) முதலானவை செய்யாமலேயே

சந்தன, பஷ்ப, தூப, தீப, நைவேத்யம் முதலான உபசாரங்களினுல் வழிபடலாம்: ''துளசி புஷ்பசாரமானவள், பதிவிரதை; யாவற்றை யும் தூய்மை செய்பவள். மனோரம்மியமானவள். பாவ வினை களைச் சுட்டெரிக்கும் அக்னி ஜ்வாலையாக இருப்பவள்'' என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருப்பதால் அவளுடைய பூஜைக்கு ஆவாஹனம் வேண்டும் என்பதில்லை. துளசியைப் பூஜித்த பிறகு, அதன் இலையைச் சிரசில் வைத்துக் கொள்ள வேண்டும் அது சகல இஷ்ட சித்திகளையும் ஜீவன் முக்தியையும் விதேக முக்தியையும் கொடுக்கும். நான் சொல்லிய பூஜையையும் துதியையும் துளசியின் ஜன்மதினமான கார்த்திகை மாதம் பௌர்ணமியன்று செய்பவர்கள் அவரவரது குறை தீர்ந்து விருப்ப நோக்கங்களை யெல்லாம் அடை யப் பெறுவார்கள்.

## 26 சாவித்திரி பூஜை

''வேதத் தாயான சாவித்திரி என்ன காரணத்தால் பிறந்தாள்? அவள் யாரால் பூஜிக்கப்பட்டாள்?'' என்று நாரதர் கேட்டார். அதற்கு நாராயணர் கூறலானுர்: ''நாரத மகரிஷியே! சாவித் திரியை முதலில் பிருமதேவனும், வேதகணங்களும், பண்டிதர் களும், பாரத தேசத்தின் அஸ்வபதி என்ற சக்ரவர்த்தியும் அதன் பிறகு நான்கு வருணத்தாரும் பூஜித்தார்கள் இவர்களில் அஸ்வபதி என்பவன் பத்திர தேசத்தின் அரசன். அவன் ஸ்திரி களின் வலிமையையும் நண்பினரின் துயரையும் துடைக்கும் திறன் மிகுந்தவன். அவன் மனைவியின் பெயர் மாலதி. அவன் வசிஷ்ட மகரிஷியிடம் சாவித்திரி தேவியின் ஆராதனை மந்திர உப தேசத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டு பக்தி சிரத்தையோடு பல நாட்கள் பூஜித்து வந்தான். ஆனுல் சாவித்திரி தேவி காட்சி யளிக்காததால் மாலதி மனம் வருந்தியவளாய் தன் அரண்மனைக்கு வந்து சேர்ந்தாள். மனைவியின் வருத்தத்தை அறிந்த அரசன், தானே அந்த சாவித்திரி தேவியை வழிபட விரும்பி புஷ்கர க்ஷேத் திரத்தில் நூறு ஆண்டுகள் தவம் புரிந்தான். அவனுக்கும் அந்தத் தேவி பிரத்யட்சமாகவில்லை. அதனுல் அஸ்வபதி மன்னன் மிகவும் வருந்தினுன். அப்போது லக்ஷம் காயத்திரி ஜபம் செய்யச் சொல்லி ஓர் அசரீரி வாக்கு வானில் ஒலித்தது. அந்தச் சமயத்தில் பராசர முனிவர் அவ்வழியே வந்தார். அஸ்வபதி மன்னன் அவரை வணங்கி நின்றுன். முனிவர் அரசனை நோக்கி, ''அரசே! காயத் திரியை ஒரு முறை ஜபித்தால், இரவு பகல் செய்த பாவமும், நூறு தரம் ஜபித்தால் ஒரு மாத காலம் செய்த பாவமும், ஒரு லக்ஷம்

முறை ஜபித்தால் இந்தப் பிறவியில் செய்த பாவமும், பத்து லக்ஷம் முறை ஜபித்தால் வேறு பிறவிகளில் செய்த பாவமும் போகும். பிராமணர்கள் இவ்விதம் பத்துதடவை ஜபித்தால் முக்தி சித்திக்கும். இந்த ஜபத்தை நதியிலிருந்தாவது தேவாலயத்திலிருந்தாவது, கிழக்கு முகமாக உட்கார்ந்து, உடலை அசைக்காது, வணங்கிய தலையோடு கையைப் பாம்பின் படம் போல வைத்துக் கொண்டு அநாமிகையின் (ஆழிவிரலின்) மத்திய ரேகையிலிருந்து, கீழ் நோக்கி வலமாகவும் தர்ஜனி (சுட்டு விரல்) அடிரேகை வரையில் செய்ய வேண்டும். இவை தவிர, வெள்ளைத் தாமரை கொட்டையினுலாவது ஸ்படிகத்தினுலாவது ஜப மாலையாகச் செய்து கொண்டு 'அதைக் கோரோசனையால் பூசி, அரசிலை அல்லது தாமரையிலையின் மீது வைத்து, நூறு முறை காயத்திரியை ஜபித்து பஞ்சகவ்யத்தினுலாவது, கங்கை நீரினுலாவது அபிஷேகம் செய்து பூஜித்து, அந்த மாலையை எடுத்து காயத்திரி மந்திரத்தைப் பத்து லக்ஷம் தரம் ஜபித்தால் சாவித்திரி தேவி பிரத்யட்சமாவாள். மூன்று பிறவிகளில் செய்த பாவங்களும் அகன்றொழியும்.

''புரவலனே! சந்தியாவந்தனம் செய்யாதவன் எக்காரியமும் செய்யத் தகுதியற்றவன். அதைச் செய்யாமல் போனுல் பகலிற்செய்து சந்தி கர்மபயனைத் தராது. எவன் ஒருவன் காலையிலும் மாலையிலும் சந்திசெய்ய வில்லையோ அவன் சூத்திரன்போல, பிராமண கர்மத்திலிருந்து அகற்றப்பட வேண்டியவனுவான். எவன் வாழுங்காலத்தில் மூன்று சந்திகளையும் முறைப்படிச் செய்கிருனே அவன் தேஜசினுலும் தவத்தினுலும் சூரியனுக்கு இணையானவனுவான். எவன் சந்தியினுல் தூய்மையடைந்துள்ளானே அவன் ஜீவன் முக்தன். அவன் தேஜசுடையவனுகத் திகழ்வான். அவன் நீராடுவதால் நதிகளும் அவனது பாததூளியால் பூமியும் தூய்மையடையும். அவனைவிட்டு பாபங்கள் நீங்குகின்றன. சந்தியை விட்டவனிடமிருந்து பிதுர்க்கள் பிண்டத்தையும் தேவர்கள் பூஜையையும் ஏற்கமாட்டார்கள். அந்தணர்களிடையே மூலப் பிரகிருதிக்குப் பக்தனுகாதவனும், அதன் மந்திரத்தை ஜெபிக்காதவனும், அந்தத் தேவிக்கு மகோத்சவம் செய்யாதவனும் மூன்று வேளைச் சந்திகளைச் செய்யாதவனும், ஏகாதசி விரதமில்லாதவனும், தெய்வநிவேதனம் செய்யாமற் சாப்பிடுபவனும், காளைமேல் ஏறுகின்றவனும், சூத்திரான்னத்தைத்தின்பவனும் சூத்திரர் சவத்தை எரிப்பவனும் சூத்திரப் பெண்ணை மணந்தவனும், சூத்திரனுக்குச் சமையல் செய்கிறவனும், அவனிடம் தானம் வாங்குவோனும் அவனுக்காக யாகஞ் செய்பவனும் கத்தியைக் கொண்டு பிழைப்பவனும், கன்னிகையையும், விஷ்ணு நாமத்தையும் வித்தையையும் விக்கிரயம் செய்பவனும், கணவனும் பிள்ளையும் இல்லாத பெண்ணின் அன்னத்தைச் சாப்பிடுபவனும்.



சந்தியாவந்தனம்

ருதுஸ்நானம் செய்த பெண்ணின் அன்னத்தை உண்பவனும், வட்டியினால் உயிர்வாழ்பவனும், சூரிய உதய காலத்தில் நித்திரை செய்பவனும், மீனை உண்பவனும், பூஜை முதலானவற்றை விட்டவனுமான பிராமணன் விஷமற்ற பாம்புக்கு இணையாவான "என்று பராசர முனிவர் கூறி விட்டு சாவித்திரி தேவியின் பூஜை, ஜபம் முதலியவற்றை உபதேசித்து, அஸ்வபதி மன்னனை ஆசீர்வதித்து விட்டுத் தம் ஆசிரமத்திற்குச் சென்றார்.

"நாரதரே! இந்த சாவித்திரி தேவி விரதத்தை கிருஷ்ணத்திரயோசியாகிய சுபகாலத்தில் துவக்கி, சதுர்த்தசியில், பக்தியோடு பதினன்கு ஆண்டுகள் பதினன்கு வகைப்பட்ட பழங்களோடும் பதினன்குவிதமான நிவேதனங்களை விதிப்படிச் சமர்ப்பிக்க வேண்டும் அதன் விளக்கமாவது—முதலாவதாக பிராமண முகமாக கணேசரையும் சூரியனையும் வன்னியையும் விஷ்ணுவையும் சிவனையும் சிவையையும் பூஜித்துப் பிறகு, மாவிலை தேங்காய் முதலியவற்றுடன் கூடிய மங்களகரமான கடத்தை ஸ்தாபித்து, சாவித்திரிதேவியை தியானிக்கவேண்டும். அவள் உருக்கிய பொன்னின் நிறம் வாய்ந்தவள்; பிரம்ம தேஜஸினால் ஜொலிப்பவள் கிரீஷ்ம ருது காலத்து நடுப்பகலில் ஜொலிக்கும் சூரியப் போல் ஆயிரஞ் சூரியர்களின் காந்தியை ஒருங்கே உடையவள். புன்சிரிப்புத் தவழும் மலர்ந்த முகத்தினள். ரத்தினாபரணங்களை அணிந்தவள் பக்தர்களுக்கு அருள் புரியும் திருமேனியுடையவள்; சுகத்தையு முக்தியையும் வழங்குபவள்; சாந்தை காந்தை. பிரம்ம பத்தினி சர்வசம்பத் வடிவினி. சர்வ சம்பத்தையும் வழங்குபவள். வேதத்திற்கு அதிஷ்டான தேவதை வேதசாஸ்திர உருவினள் வேதபீஜ வடிவினள்—இப்படியாக விளங்கும் சாவித்திரி தேவியை நமஸ்கரிக்கிறேன் என்று அவளை நினைத்து தியானித்து, நிவேதனங்கள் செய்து தன் சிரசில் கையை வைத்துக் கொண்டு மறுபடியும் தியானிக்க வேண்டும். கடத்தில் ஆசனம், பாத்யம் (திருவடி அலம்பக்கொடுக்கும்நீர்,(அர்க்கியம்(மந்திரநீர்)ஸ்நாநீயம், அனுலேபனம், தூபம், தீபம், நைவேத்தியம் தாம்பூலம், குளிர்ந்தஜலம், வஸ்திரம், ஆபரணம், மாலை, சந்தனம், ஆசமனீயம் (பானம்) மனோரம்மியமான படுக்கை, என்ற ஷோடச உபசாரத்தோடும்

வேதத்திற்கு இயைந்த மந்திரங்களோடும் பூஜித்து, துதித்துக் கும்பிட்டு முறைப்படி வணங்கி வழிபாடுசெய்யவேண்டும். கடம் இல்லையெனில் தாருவினாலாவது பொன்னாலாவது பிம்பங்களை வைத்துப் பூஜிக்கலாம். அதுவும் மிகப்புண்ணியத்தைக் கொடுக்கும். தூய்மையான நீரும், திருவடி அலம்புவதற்குரிய நீரும் அருகும் மலரும் கூடிய அர்க்கிய ஜலமும், சங்குநீர் அபிடேகமும், புண்ணியத்தையும் அருளையும் கொடுக்கும். சுகந்தமான கந்தோதக அபிடேகம் நட்பையும் வாசனையையும் கந்தத்திரவியம் பிரீதியையும் திவ்விய பரிமளத்தையும் தரும் மந்திரங்களோடு இத்தகைய பூஜையையும் விரதத்தையும் செய்யும் போது, பிராமணர்களுக்குத் தக்ஷிணை வழங்க வேண்டும். லக்ஷ்மிமாயாகாம பீஜங்களை முதலிலும் சதுர்த்தி அந்தமான சாவித்திரியை மத்தியிலும், ஸ்வகா என்பவன முடிவிலும் இருப்பது அஷ்டாக்ஷர மந்திரம் எனப்படும். நண்பகலில் சொல்லப்படும் மந்திரம் சகல காம பலத்தையும் தரும் அது பிராமணனுக்கு ஜீவனரூபமாக விளங்குகிறது. அது கோலோகத்தில் பிருமதேவனுக்கு கிருஷ்ணமூர்த்தியால் கொடுக்கப்பட்டது. கிருஷ்ணரின் ஏவலினால் பிருமா அதைத் துதிக்க, சாவித்திரி மகிழ்ந்து பிருமாவையே பதியாக விரும்பி சத்தியலோகத்தில் பிருமாவோடு இருக்கிருள். அந்த ஸ்தோத்திரத்தைச் சொல்கிறேன். "ஓ சச்சிதானந்த ரூபையே! மூலப் பிரகிருதியின் வடிவே! இரண்யக் கர்ப்ப ரூபிணியே! பிரசன்னமாவாயாக. தேவ சொரூபிணி! பரமானந்த ரூபிணி, நித்தியை! நித்ய புருஷனுக்குப் பத்தினி, நித்யானந்த சொரூபிணியே! பிராமண ஜாதி சொரூபிணி! மிளிரும் அக்கினியைப் போன்றவளே! மந்திர ரூபிணி பராத்பரையே! மோக்ஷத்தையும் பிரும்ம தேஜஸையும் வழங்குபவளே! பிரசன்னமாவாயாக. மனோவாக்கு காயங்களார் செய்யப்படும் பாவங்கள் எல்லாம் உன்னை நினைத்து உன் பெயரை உச்சரித்தவுடனேயே சாம்பலாகி விடும்!" என்று கூறி, பிருமதேவன் அந்தச் சபையில் நிற்கும்போது, சாவித்திரி மகிழ்ந்து பிரும லோகத்தை அடைந்தாள் இந்தத் துதியை அஸ்வபதி அரசன் துதித்துத் தன் மனோ விருப்பங்களை அடைந்தான். எவன் சத்யாவந்தனத்துக்குப் பிறகு இதை வாசிக்கிறனோ, அவனுக்கு நான்கு வேதங்களையும் படித்த பலன் உண்டாகும்.

## 27 யமனைப் பின் தொடரும் சாவித்திரி

"அஸ்வபதி மன்னன் சாவித்திரி தேவியின் தோத்திரத்தைக் கூறித் துதித்தவுடன், சாவித்திரி தேவி அவன் முன்பு தோன்றி புத்திரனைப் பார்த்துக் கூறுவது போல் அன்போடு நோக்கி,

"அரசே! உன் மனைவி தனக்குப் பெண் பிறக்க வேண்டும் எனவும் நீ புத்திரன் பிறக்க வேண்டும் எனவும் வேண்டுகிறீர்கள். உங்கள் விருப்பம் காலக்கிரமத்தில் நிறைவேறும்." என்று கூறிவிட்டு பிரும லோகத்தை அடைந்தாள். அஸ்வபதி அரசன் தன் அரண் மனைக்குச் சென்றான். சில நாட்கள் கழித்து அவனுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவன் அதற்கு சாவித்திரி என்று பெய ரிட்டான். அந்தக் குழந்தை வளர்பிறை போல் வளர்ந்து, யௌவனமடைந்தாள். அவளுக்கு மணப் பருவம் வந்ததும் சத்ய சந்தனுகவும் கணவானுகவும் விளங்கிய துயுமத்சேனனின் குமார னுன சத்தியசேனன் என்பவனைக் கணவனுக அடைய விரும்பினுள். அவளது விருப்பப்படியே அரசன் அவளைச் சுவர்ணகுமாரியாக அலங்கரித்து சத்தியசேனனுக்குத் திருமணம் செய்து கொடுத்தான். சத்தியசேனனும் மகிழ்ச்சியாகத் தன் மாளிகைக்குச் சென்று, ஒரு வருஷம் கழித்துத் தன் தந்தையின் கட்டளைப்படி, கட்டை வெட்ட வும் கனிகள் பறித்து வரவும் காட்டுக்குச் சென்றுன். அவன் பத்தினி சாவித்திரியும் தெய்வவசமாக அவனுடன் காட்டுக்குச் சென்றுள். காட்டில் மரம் வெட்டும்போது சத்தியசேனன் விதிவச மாக ஒரு மரத்தின் மேலிருந்து தவறிக் கீழே, விழுந்து உயிர் இழந்தான். கால தேவனுன எமன் வந்து சத்தியசேனனை பெரு விரல் அளவுள்ள சரீரமுள்ளவனுக்கி கட்டிக் கொண்டு யமலோகத் திற்கு தூக்கிச் செல்லலானுன். சாவித்திரியும் தன் கணவனின் உயிரை மீட்பதற்காக யமனைப் பின் தொடர்ந்தாள். அப்போது யமன் தன் பின்னெல் வரும் சாவித்திரியை நோக்கி, "சாவித்திரீ! மனித உடலோடு நீ எங்கே வருகிருய்? என்னுலகத்திற்கு நீ வர விரும்பினுல் உன் மானுஷ்ய உடலை விட்டு வா, மனிதன் பஞ்ச பூத தேகத்தோடு என் உலகத்திற்கு வர முடியாது. தேகம் என்பது என் உருவகத்தில் எப்போதும் அழிந்தொழியக் கூடியது! பதிவிரதையே! உன் கணவனின் ஆயுட்காலம் முடிந்துவிட்டது. அவன், தான் செய்த கர்ம வினைகளை அனுபவிக்க, இப்பொழுது என் யமலோகத்திற்கு வருகிருன். எந்த உயிரும் கர்மத்தினுல் உண்டாகி, கர்மத்தாலேயே அழிகின்றன. சுகம், துக்கம், பயம், சோகம் முதலியனவெல்லாம் கர்மத்தாலேயே தோன்றுகின்றன. கர்ம பலத்தினுல்தான் இந்திராதி சரீரங்களை ஜீவன் அடைகிறது. எவன் சர்வேஸ்வரனுக்குத் தாசனுகிருனே அவன் இந்தப் பிறவிப் பந்தத்திலிருந்து விடுபட்டு விடுகிருன். உயர்ந்த பிராம்மணுதி, ஜாதிப் பண்புகளும் இழிந்த ஜாதித் தன்மைகளும் சராசரம் முதலான உடல் இயல்புகளும் ராஜபோகம் முதலானவைகளும், எல்லா சித்திகளும், சிவசாரூபம் (சிவனுருவடைதல்) முதலான பதப் பிராப்திகளும், அவரவர் செய்யும் கர்ம பேதங்களாலேயே ஏற்படுகின்றன. இதில் சந்தேகமில்லை என்று மேலோர் கூறு கின்றனர்" என்று கூறினுன்.

# 28. சாவித்திரியின் கேள்விகள்

யமனின் பேச்சைக் கேட்டதும் சாவித்திரி பயபக்தியுடன் அவனை நோக்கி, "கர்மம் என்றால் என்ன? அது எதனால் தோன்று கிறது? அந்தக் கர்மத்துக்கு ஹேது எது? கொடுப்பவர் யார்? தேகம் எது? எவன் கர்மத்தைச் செய்விப்பவன்? தியானம் என்றால் என்ன? புத்தி என்றால் என்ன? ஜீவன்களுக்குப் பிராணன் எது? இந்திரியங்கள் யாவை? அவற்றின் தன்மை எவை? தேவதை கள் யார்? அத்தேவதைகளுக்கு உணவூட்டச் செய்பவன் யார்? உண்பவன் யார்? போகம் என்பது என்ன? பிராயச் சித்தம் என்பது என்ன? ஜீவன் எது? பரமாத்மா யார்? இவையனைத்தை யும் எனக்குத் தெளிவாக விளக்க வேண்டும். நீங்களே அதற்குத் தக்கவர்!" என்றாள். அதற்குத் தர்மராஜனான யமன் கூறலானான்:

"வேதத்தில் எந்தெந்த கர்மங்கள் கூறப்பட்டுள்ளனவோ, அவையே சிறந்த சுபகர்மங்களாகும். வேதத்தின் அங்கீகார மில்லாத கர்மங்கள் அவைதீக கர்மங்களாகும். அவை அசுப மானவை. சங்கற்பமற்றதான பூஜை, கர்மத்தை அழித்து, பரம பக்தியை உண்டாக்கும். அந்தப் பக்தியுடையவன் கர்மத்தை அனுப விப்பதில்லை. அவனுக்குச் சுகதுக்க மயமான சம்சார பந்தங்களும் உண்டாவதில்லை. எவன் பிரம்ம பக்தியுடையவனோ, அவனை, பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி, பயம், துக்கம் முதலானவைகள் இல்லாத ஜீவன் முக்தன் என்று வேதம் குறிப்பிடுகிறது. பதி விரதையான சாவித்திரியே! வேதத்தில் கூறப்பட்டுச் சகலருக்கும் சம்மதமான பக்தி இருவகைப்படும் அவை முறையே நிர்வாண பக்தி, விஷ்ணுரூப பக்தி என்பனவாகும். அவற்றில் உருவ பக்தியை வைஷ்ணவர்களும் நிர்வாண பக்தியை பிரம்ம வித்துக் களும் யோகிகளும் நாடுகிறார்கள். பரமாத்மாவான பிரகிருதி சக்தி, கர்மத்தை விளைவிக்கும் பீஜ ரூபமாகவும் எப்பொழுதும் அந்தக் கர்மத்தைக் கொடுப்பவளாகவும் கர்ம ரூபமாகிய சூத்திரக் கயிறுகளை கைப்பற்றிய வண்ணமும் தானே கர்மரூபணியாகிறாள். அந்தந்த கர்மங்களுக்கு ஏற்ற சராசரமாகிய உடல்களை பஞ்ச பூதங் களாலாக்கி, அந்த உடல் சம்பந்தங்களால் ஆன்மாக்களுக்கு உண் டாகும் அறிவின் பேதத்தால், அனுபவிக்க வேண்டிய கர்மங்களை அனுபவிக்கச் செய்து, அந்த அனுபவ தசையில் கர்ம அனுபவ விலக்குடையவர்களை முக்தி நிலையில் சேர்க்கிறாள். கர்ம அனுபவ முடையவர்களை மீண்டும் பிறப்பெடுக்க வைக்கிறாள். அது எப்படி யென்று விளக்குகிறேன்; கேள். பக்தான்மாக்களைப் பஞ்சபூத காரியமாகவும் (மண், நீர், நெருப்பு, காற்று, விசும்பு எனும் ஐந்து



பருப் பொருள்களின் காரியமாக கவும்) பஞ்ச வாயுக்களாலும் பஞ்ச தன்மாத்திரைகளாலும், (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து நுண் பொருட்களாலும்)மெய், வாய், கண், மூக்கு, செவி எனப் படும் பஞ்சேந்திரியங்களாலும் இயக்கப்பட்டு, அனுபவிக்கப் படும் கருவியாக்கி வாயு வாலும் பிராணனாலும் வலிமை மென்மை பெற்ற சரீரவாசி களாகச் செய்கிருள். பிறகு உடலை நீக்கும்போது இந்த உலகிலிருந்து அவர்களை வேறு படுத்தி, சூரிய மண்டலம் வாயு மண்டலம் முதலிய இடங்களில் வசிக்கச் செய் கிருள். பிறகு அவர்களைப் பிறந்து பிறந்து, இறந்து இறந்து ஓயாத ஜனன மரண பந்தத்தில் கட்டுண்டு வரும் படியாகவும் செய்கிருள். ஆனல் முக்தான்மாக்களை மீண்டும் பிறப்பதற்குக் காரணமான பதங்களில் தங்கச் செய்யாமல், பரம வியாபகமாகவும் நிர்க்குண பரப்பிரம்மமாகவும் சர்வ காரண காரணராகவும் விளங்கும் பிரும்ம சொரூபத்தோடு ஒன்ருகக் கலந்து ஒன்றிக்கும்படியுஞ் செய்கிருள். இந்த உண்மையை அறிந்தவர்கள் ஞானிகளாகி மோட்ச சுகத்தை அனுபவிக்கிருர்கள். இதனை அறியாதவர்களோ அஞ்ஞானிகளாய் அறியாமை வசப்பட்டு பிறவித் துன்பத்தை அனுபவிக்கிருர்கள்.'' என்ருன் யமதேவன். இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டு சாவித்திரி மேலும் கேள்விகள் தொடுத்தாள்.

''தர்மராஜனே! நான் சில கேள்விகள் கேட்க வேண்டியிருப்ப தால் என் கணவனையும் ஞான சமுத்திரமான உம்மையும் விட்டு, நான் எவ்விடம் செல்வேன்? நான் கேட்கும் கேள்விகளுக்கு நீங்கள் சரியான பதில் சொல்ல வேண்டும். ஜீவர்கள் எந்தெந்த கர்ம பேதங்களால் (செய்வினை வேறுபாடுகளால்) யோனி பேதங் களையும் சுவர்க்க நரகங்களையும், மேலான குருபக்தியையும் அடைகிருர்கள்? எந்தெந்த கர்ம வினைகளால் யோகிகளாகவோ ரோகிகளாகவோ மாறுகிருர்கள்? எந்த கர்மத்தால், தீர்க்காயுளையும் அற்பாயுளையும் சுக துக்கங்களையும் பெறுகிருர்கள்? எந்தெந்த கர்மத்

திஞல் அங்கஹீனம்,குருடு, செவிடு நொண்டி, முடம், மூளைக் கோளாறு; புத்திப் பிரமை, பேராசை, சோரத்தனம் முதலியவை நேரிடுகின்றன? எந்தெந்த கர்மங்களால் (செய்வினைகளால்) சித்தியும் சாலோகம் (சிவனுலகு) முதலான பதவிகளும் பிரமத்துவமும் தவத் தன்மையும் சுவர்க்கம், வைகுண்டம் முதலிய சுகங்களும் கோலோகம் முதலியவையும் கிடைக்கின்றன? நரகங்கள் எத்தனை வகை? என்னென்ன பொருள்கள் அவற்றில் உள்ளன? யார் யார் எந்தெந்த நரகையடைந்து எத்தனைக் காலம் அவற்றில் கிடந்து உழல்கிறார்கள்? எதனுல் வியாதி உண்டாகின்றது? இவை எல்லாம் நான் அறிந்து கொள்ள விரும்பிய கேள்விகளாகும். தர்மராஜரே! இவற்றிற்கெல்லாம் நீர் விடை கூற வேண்டும்!'' என்ருள் சாவித்திரி.

## 29 யமதர்மராஜன் உபதேசம்

சாவித்திரியின் வார்த்தைகளைக் கேட்ட யமதருமன் வியந்தான்; சிரித்தான். பிறகு அவன் புன்சிரிப்போடு சாவித்திரியை நோக்கி, "ஓ பெண்ணே! நீ அஸ்வபதியின் தவத்தாலும் சாவித்திரி தேவியின வரத்தாலும் அவளது ஓரம்சமாக பிறந்தவளாகையால், பன்னிரண்டு வயதுடையவளாக இருந்தும், உனது ஞானமானது மாபெரும் மகா ஞானிகளின் ஞானத்தைவிட உயர்ந்து விளங்குகிறது. விஷ்ணுவின் மார்பில் இருக்கும் லக்ஷ்மியைப் போலவும், சிவபெருமானின் உடலில் ஒரு பாதியாக இருக்கும் பார்வதியைப் போலவும் மற்றைய கற்புடைய மங்கையரைப் போலவும் நீயும் சௌபாக்கியவதியாய் சத்தியவானிடம் இருப்பாயாக. இன்னும் உனக்கு வேண்டிய வரங்களை என்னிடம் கேள்!'' என்ருன். அதற்கு சாவித்திரி, "எனக்கு நூறு ஔரச புத்திரர்களும் தகப்பனுருக்கு நூறு பிள்ளைகளும், கண் பார்வை இழந்த என் மாமனுருக்குக் கண்களும் ராஜ்ய போகமும் உண்டாக வேண்டும். லக்ஷம் ஆண்டுகள் கழிந்த பிறகு, என் பர்த்தாவோடு நான் பரமபதத்தை அடைய வேண்டும்'' என்ருள்.

''பெண்ணே! இப்போது நீ கேட்ட வரங்களை மட்டுமல்ல; உன் மனதிலுள்ள யாவையும் நீ அடைவாய்!'' என்ருன் யமன்.

சாவித்திரி சந்தோஷமடைந்து, "யமதர்மராஜனே! கர்ம பேதங்களையும் அவை தோன்றும் வகையையும் அவற்றைச் செய்கின்றவர்கள் யார், அனுபவிப்பவர்கள் யார் என்பதையும், இறை

வன் இவ்வுலகைப் பரிபாலித்து வரும் விதத்தையும் அறிந்து கொள்ள விரும்புகிறேன்!'' என்றாள்.

யமதர்மராஜன் உபதேசம் புரியலானான்:

'பதிவிரதையே! கர்மங்கள், சுபம் அசுபம் என்று இருவகைப் படும். அவை தோன்றுவதற்கும் அவற்றை அனுபவிப்பதற்கும் இடமாக இருப்பது இந்தப் பரதக் கண்டமேயாகும். ஏனைய உலக மெல்லாம் அவை தோன்றுமிடமல்ல. அவற்றின் பெருக்கத்தை அனுபவிப்பதற்கான இடங்களேயாகும் சுரர், தைத்தியர், கந்தர்வர், தானவர்; ராக்ஷசர், மனிதர் முதலியோர் கர்மங்களைச் செய்பவர்களும் கர்மங்களை அனுபவிப்பவர்களுமாவார்கள். கர்மங் கள் தோன்றுமிடத்தில் அவற்றை தோற்றுவிப்பதும் அவற்றைச் செய்வோரைச் செய்ய வைப்பதும், செய்ததை அனுபவிக்கச் செய்வதும் அவ்வனுபவத்திற்கேற்றவாறு அவ்விடங்களில் அனுப விக்க செய்வதுமே சர்வேஸ்வரன் இந்த அகிலத்தை பரிபாலிக்கிற நியதியாகும். ஞான மங்கையே! அதனால் தர்மங்களைச் செய்கிற ஜீவர்கள் அந்தந்த கர்ம அனுபவங்களைத் தாங்களாகவே வகுத்துக் கொண்டு, விரும்பும் இடங்களில் அனுபவிப்பதற்கு அறிய முடியாத வர்கள். எல்லாவற்றையும் இயற்றுபவன் இறைவனேயாகும் ஜீவர்களோ, பாரதகண்டத்தில் சுப அசுப கர்மங்களைச் செய் வதோடு, அந்தந்த கர்மங்களுக்கு ஏற்றபடி சுவர்க்க நரகங்களில் மாறி மாறிச் சுழன்று ஓயாமல் கர்மானுபவங்களை அனுபவிப்பது மாக இருப்பார்கள், இவ்விதத்தில் சுவர்க்க நரகங்களில் மாறி மாறி விழுந்து உழலச் செய்யும் சுப அசுப கர்மங்களை அடியோடு ஒழியச் செய்வது நான் முன்பு கூறிய நிர்வாண பக்தி, பிரகிருதி (உருவபக்தி என்ற இரண்டுமேயாகும் என்பதை நீ அறிவாயாக! இவ்விதம் கர்மபந்தங்களால் கட்டுண்டு அலைகிற ஆன்மாக்கள், சுகமுற்று, இன்புறும்படியாகத் தர்ம அதர்மங்களையும் புண்ணிய பாவப் பலப் பயன்களையும் எடுத்துக் காட்டுவது புராணங்களும் ஸ்மிருதிகளுமாகும். தருமம் முதலியவற்றைச் செய்வதற்கு உரிய இடம் பாரததேசம் ஒன்றேயாகும் எனவும் அவற்றைச் செய் வதற்கு வர்ணாஸ்ரமாதிகளே எல்லைகள் எனவும் வரை யறுக்கப்பட்டிருக்கின்றன. நான்கு வர்ணங்களில் நாற் குலத்தில் பிராமண ஜாதியான் மனித சாதியில் மிக உயர்ந்தவன். அதற்குக் காரணம் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள தர் மங்களை விடாமற் செய்யும் உத்தமனாக அவன் இருப்ப தேயாகும். அத்தகைய உத்தம உன்னத பிராமண ஜாதியில் சகாமன், நிஷ்காமன் என இரு வகையுண்டு சகாமன் பயன் கருதுபவன்: நிஷ்காமன் பயன் கருதாதவன். அவர்களில் அவா அறுத்தவன் நிஷ்காமனான பிரம்ம நிஷ்டன் மிகவும் உயர்ந்தவன். சகாமனோ செய்யும் கர்மத்துக்கு உரிய பலனை நாடுகிறவனாகவும் அவன் அந்தப் பலனை. அடையக் கூடியவனாகவும் கூறப்படுவான்,



ϸகாமன், எந்தக் கருமத்தையும் எந்த விதப் பலனை விரும்பியும், செய்யாமல் அதைச் செய்யும் கடமையாகவே கொண்டு பயன் கருதாப் பணி புரிபவனுவான். அத்தகையன் ஜீவன் காலமுடிவில் தன் உடலைவிட்டு நீங்கும் போது யாதொரு துன்பத்தையும் அடையமாட்டான். மீண்டும் பிறவியெடுக்க மாட்டான். பிரம்ம பதத்தை அடைவான். பயன் கருதிச் செயல் புரியும் சகாமர்களோ தம் தம் கர்மங்களுக்குரிய பதங்களையடைந்து மீண்டும் பரத கண்டத்தில் பிறந்து பிறந்து, பலவித ஜனன மரணங்களை அடைந்து காலக்கிரமத்தில் எதையும் விரும்பா நிஷ்காமர்களாக மாறுகிருர்கள். வைஷ்ணவர்கள் எப்போதும் சகாமர்கள் தான். அவர்களுக்கு நிர்மலமான புத்தி உண்டாவதில்லை. சுயதர்மத்திலும் தீர்த்த யாத்திரைகளிலும் உன்னதமான தவத்திலும் பற்றுதல் வைப்பவர்கள் பிரம்ம லோகத்தை அடைகிருர்கள். சத்கர்மத்தில் (நற்செயலில்) ஆசையும் பக்தியும் உடையவர்கள் சூரிய லோகத்தை அடைகிருர்கள் பிரகிருதி சக்தியான தேவியிடமும், சிவபெருமான் விநாயகர் முதலான தேவர்களிடமும் எவரெவர் பக்தி செலுத்துகிருர்களோ அவரவர்கள் மணித்வீபம் முதலான அந்தந்த தெய்வங்களின் பதவிகளை அடைகிருர்கள். ஆயினும் அவர்கள் மீண்டும் பூமியில் வந்து பிறப்பார்கள். பிறவி எடுத்தல் நீங்காது எப்போது நிஷ்காம சித்தி (அவாவறுத்தல் என்னும் பேறு )

உண்டாகின்றதோ அப்போதுதான் பிறவாப் பேருன முக்தி நிலை சித்திக்கும்.

''இனி பயன் கருதிப் பக்தி செய்யும் காமியர்கள் அடையும் பலன்களைக் கூறுகிறேன், கேள். சுதர்மத்தைக் கடைப்பிடிப்பவர்களும் சுதர்ம பரிபாலகரான பிராமணனுக்குக் கன்னிகாதானம் செய்தவர்களும் பல பலன்களில் விருப்பமுடையவர்களும் பதினன்கு இந்திர ஆயுட்கால அளவு வரையில் இந்திர உலகத்தில் வாழ்வர். பொன், வெள்ளி, முதலான பொருட்கள் ஆடைகள், நெய் முதலியவற்றைச் செந்தண்மையாளர்களுக்குத் தானம் கொடுப்பவர்கள் ஒரு மன்வந்தர காலம்வரையில் சந்திரலோகத்தில் இருப்பார்கள். பொன், தாமிரம், பசு முதலியவற்றைத் தானம் செய்வோர் சூரியன் உலகத்தில் பதினயிரம் ஆண்டுகள் ரோகமின்றிச் சுகமாக வாழ்வார்கள். பூமியையும், தனத்தையும் தானம் செய்வோர் விஷ்ணுவின் உலகத்திலும் ஸ்வேதத் வீபத்திலும் சந்திர சூரியர்கள் உள்ளவரை சுகமாக வாழ்வார்கள். எவரெவர் எந்தெந்தத் தேவதைகளை முன்னிட்டு பூதானமும், உப்பரிகையுடன் கூடிய கிரஹ தானமும் கிராம தானமும் செய்கிருர்களோ அவர்கள் அந்தந்த தேவதைகளின் பதங்களையடைவார்கள். தடாகப் பிரதிஷ்டை (நீர்த் தடாகம் நிலை நாட்டுதல்) செய்பவன், ஜனலோகத்தில் தூசு ஒன்றுக்கு ஓர் ஆண்டு காலம் வீதம் வாழ்வான். உத்தம அந்தணனுக்கு ஒரு கன்னிகையைத் தானஞ் செய்தவன் நாலாயிரம் வில்லளவுள்ள பத்து நடபாவிகளை தானம் செய்த பயனை அடைவான் தடாகத்தைச் செப்பனிட்டாலும் சேறு முதலியவற்றை எடுத்துச் சுத்தப்படுத்தினலும் புதிதாகத் தடாகம் வெட்டிய பலன் சித்திக்கும். அரச மரம் நடுபவன் தபோலோகத்தை அடைவான் நந்தவனத்தைத் தானமாகக் கொடுப்பவன் துருவலோகத்தை அடைந்து பதினறு ஆண்டுகள் சுகமாக வாழ்வான். ஆலயத்துக்கு விமான தானம் செய்கிறவன் பரமபதத்தில் ஒரு மன்வந்தரம் வாழ்வான். சித்திரம் அமைந்த விமான தானஞ் செய்தால் நான்கு மடங்கு அதிகமாகவும், சிவிகை தானஞ் செய்தால் அதிற் பாதியளவும் டோலி தானஞ் செய்தால் நூறு மன்வந்தரமும் வாழ்வான். இறைவன் பவனி செய்வதற்கு ஏற்ற விதமாக வீதியை மாளிகைகளோடு அமைப்பவன் பதினயிரம் ஆண்டுகள் இந்திரலோகத்தில் வசிப்பான். எந்த எந்த சுகத்தை யார் யார் விரும்புகின்றனரோ அவரவர் அதற்குரிய பொருட்களை அந்தணரைக் குறித்தோ, தேவர்களைக் குறித்தோ தானங்கள் செய்தால் அந்தந்த சுகத்தை அடைவார்கள். சுவர்க்க போகம் முதலான உயர்ந்த சுகங்களை அனுபவித்தவன் மீண்டும் பாரத தேசத்தில் பிராமணனகவே பிறந்து முக்தி நெறியை அடைய முயல்வான். அப்படி முயலாவிட்டால் மீண்டும் சுவர்க்கத்தை அடைவான். க்ஷத்திரியர் முதலியவர்களும் பிரம்ம சித்தியை

அடைய விரும்பினுல் பிராம்மணராகவே பிறத்தல் வேண்டும். அந்தப் பிறப்பு கிடைப்பது அரிது. அது ஜன்மாந்திரங்களில் செய்த புண்ணிய பலத்தாலேயே வரத் தக்கதாகும். பதிவிரதையே! இது வரையில் நான் சொல்லி வந்ததிலிருந்து புண்ணிய பாவங்கள் இரண்டு என்றும், அந்தக் கர்மாக்கள்தான் அவரவர்களுக்குச் சுக துக்கங்களை உந்தியூட்டுவது என்றும் ஜீவர்கள் அந்தக் கர்மாக் களைச் செய்யாமல் இருப்பதில்லை என்றும், அது போலவே அந் தந்த கர்மாக்களும் அனுபவிக்கப்பட்டே தீரும் என்றும் துக்க அனுபவத்தால் உண்டாகும் துயரம் தெய்வ சகாயத்தாலும், புண்ணிய நதியில் தீர்த்தமாடுவதாலும், ஞானிகளின் ஸ்பரிசத் தாலும் அகன்று விடும் என்றும் ஆசார தர்மங்களையும் பிறருக்குக் கொடுக்கும் ஈகையையும் நிராசையையும் விட்டவர்கள் நரகத்தை அடைவார்கள் என்றும் பெரியோர்கள் கூறுவார்கள் என்பதை நீ அறிந்துகொள்!'' என்றுன் யமதர்மராஜன்.

## 80 தான தருமப் பலன்கள்

சாவித்திரி, யமதர்மராஜனை நோக்கி, ''தருமரே' தான தருமங்களின் சிறப்புகளைக் கேட்க விரும்புகிறேன்!'' என்றுள். அதற்கு யமதர்மராஜன் கூறலானுன்:

' பாரத கண்டத்தில் அன்னதானம் செய்பவன் ஓர் அன்னப் பருக்கைக்கு ஒரு வருஷம் வீதம் சிவலோகத்தில் வாழ்வான். அன்னதானத்திற்கு மேலானதொரு தானம் என்றும் இருந்தது மில்லை. இனி இருக்கப் போவதுமில்லை. அந்த அன்னதானத் திற்கு அந்தணர்கள் மட்டுமல்ல; வேறு ஜாதியினரும் தகுந்தவரா வார். அந்த அன்னதானத்திற்கு யோக்கியன் அயோக்கியன், நல்லவன், கெட்டவன் என்ற வித்தியாசமில்லை. கால நியமும் கிடையாது. பால் கொடுக்கும் நல்ல பசுவை வேதியருக்குத் தானஞ் செய்கிறவன் கோலோகத்திலும், அந்தப் பசுவைப் புண்ணிய தீர்த்தக் கரையில் தானம் செய்பவன் அந்த உலகில் நூறு ஆண்டுகளும், திருக்கோவிலில் பசு தானம் செய்தவன் அக் கோலோகத்தில் கோடி வருஷமும் வாழ்வான். காமியார்த்த மாகச் செய்தவனும் சயன தானஞ் செய்தவனும் சந்திரலோகத் திலும் இருமுகப் பசுவைத் தானம் செய்தவன் விஷ்ணு உலகிலும் வாழ்வான். வெண்மையான குடையைத் தானஞ் செய்தவன் ஆயிரம் வருஷம் வருணலோகத்திலும் ஆடைகள் கொடுத்து வஸ்திர தானஞ் செய்தவன் பதினுயிரம் வருஷம் வாயுலோகத்திலும், சாளக் கிராமத்தோடு வஸ்திர தானஞ்செய்தவன் சூரிய சந்திர



காலம் வரை வைகுண்டத்திலும் வாழ்வான். ஜீவதானம் செய்தவன் அக்கினி லோகத்திலும், யானைகள் கொடுத்து கஜதானஞ் செய்தவன் இந்திரனோடு அர்த்தாசனத்திலும், குதிரையும் பல்லாக்கும் தானஞ் செய்தவன் பதினான்கு இந்திரரின் காலம் வரை வருண லோகத்திலும், நல்ல தோட்டங்களை தானஞ் செய்தவன் ஒரு மன்வந்தர காலமும் வெண்சாமரை தானம் செய்தவனும் பதினாயிரம் வருஷம் வாயு லோகத்திலும் வாழ்வான். தானியங்களையும் இரத்தினங்களையும், தானஞ் செய்பவர், புத்தி நுட்பத்தையும் சிரஞ்சீவித் தன்மையையும் அடைவார்கள் அவற்றைத் தானமாக வாங்குவோரும் வைகுண்டத்தை அடைவார்கள். பௌர்ணமியில் டோலாற்சவம் செய்பவன் ஜீவன் முக்தனாகி இம்மையில் இவ்வுலக சுகத்தை அனுபவித்து, உடல் வாழ்க்கையின் முடிவில், மறுமையில் பரமபதத்தை அடைவான். அதை, உத்தர பல்குனி நக்ஷத்திரத்தில் செய்தால் இருநூறு ஆண்டுகள் விஷ்ணுபதத்தில் வாழ்வான். தாமிர பாத்திரத்தில் எள்ளைத் தானஞ் செய்பவன் எள் ஒன்றுக்கு ஒரு வருஷம் வீதம் சிவ வசிப்பான். பிறகு பூலோகம் வந்து நற்குலத்தில் சுகமாகவும் சிரஞ்சீவியாகவும் இருப்பான். பதிவிரதைக்குரிய நற்குண நற்செய்கைகளோடும் அழகுப் பொலிவுகளோடும் கூடிய கன்னியைச் சர்வாபரணத்தோடு, நல்ல உத்தம குணம் வாய்ந்த அந்தணனுக்குத் தானஞ் செய்பவன், பதினான்கு

இந்திரர் காலம் வரையில், சந்திரலோகத்தில் தேவதாசிகளான அப்சரஸ்களோடு கூடிக் குலாவி மகிழ்ந்தும், பிறகு கந்தர்வ லோகத்தில் ஊர்வசியோடு இன்ப லீலைகள் புரிந்து பதினாயிரம் வருஷம் சுகித்தும் இருப்பான். அதன் பிறகு ஆயிரம் பிறவிவரை நல்லவளும் உத்தமியுமான பத்தினிப் பெண்ணுடன் இல்லறம் நடத்தி இன்புற்று வாழ்வான். சுவையான நற்கனிகளைத் தானஞ் செய்பவன் கனி ஒன்றுக்கு ஓர் ஆண்டு வீதம் இந்திரனுலகில் வாழ்ந்து, பிறகு பூவுலகில் நல்லதொரு மனைவியையும் நல்ல பிள்ளைகளையும் அடைந்து, நற்கனிகள் நிறைந்த சிருங்கார வனத்தில் சிறப்பாக வாழ்வான். சாதாரணமாக கனிகளைத் தானஞ் செய்பவன் சுவர்க்கத்தில் நீண்ட நாட்கள் வாழ்ந்து, பாரத தேசத்தில் வந்து பிறப்பான். பலவகைப் பழங்களும் பண்டங்களும் திரவியங்களும் சேர்த்து கிரகதானம் செய்பவன் நூறு மன்வந்தர காலம் வரையில் சுவர்க்கத்தில் வசித்துப் பிறகு பாரத கண்டத்தில் பிறந்து மகாதானப் பிரபுவாக விளங்குவான். நல்ல விளை நிலத்தைப் புண்ணிய க்ஷேத்திரவாசியான தர்மாத்மாவுக்கு தானஞ் செய்பவன், நூறு மன்வந்த்ரம் வைகுண்டத்தில் வாழ்ந்து அதன் பிறகு பாரதத்தில் சக்கரவர்த்தியாகிறான். பூமி தேவியும் அவனை நூறு ஜன்மம்வரை அரசனாகவே வைத்திருந்து தன்னை ஆளச் செய்கிறாள்.

எல்லாப் பயன்களையும் கொடுக்கும் ஒரு கிராமத்தைத் தானம் செய்பவன் லக்ஷம் மன்வந்தரம் வைகுண்டத்தில் வாழ்ந்து, அதன் பிறகு பாரத தேசத்தில் நல்ல குலத்தில் பிறந்து, லக்ஷம் கிராமங்களுக்கு அதிகாரியாகிறான். நல்ல பிரஜைகளோடும் பற்பல விருட்சங்களோடும் நல்ல தாமரைக் குளங்களோடும் கூடிய அதி அழகான பட்டணத்தை தானஞ்செய்பவன், பத்து லக்ஷம் இந்திரர் காலம் வரை கைலாயத்தில் வசித்து, பிறகு பாரத தேசத்தில் ராஜபோகியாகி லக்ஷங்கிராமங்களை அடைந்து லக்ஷம் ஆண்டுகள் வாழ்வான். அதில் ஐயமில்லை. அத்தகைய நல்ல நூறு கிராமங்களைத் தானம் செய்கிறவன் வைகுந்த வாசம் புரிந்து ஜம்புத்வீபத்திற்கு ஆட்சியாளனாகி இந்திரனுக்கு சமமான செல்வ போகங்களோடு அரசருக்கரசரையெல்லாம் அடங்கும்படி வாழ்வான். பூமிக்குரிய அதிகார பாத்தியதைகளோடு பூமிதானம் செய்கிறவன் அதைவிட நான்கு மடங்கு அதிகமாக அடைவான் ஜம்புத்வீபத்தையே நல்ல தவ ஞானிக்கு தானம் கொடுப்பவன் சகல தவயாத்திரை தீர்த்தயாத்திரைப் பலன்களையும் அடைந்து எல்லாவற்றையுமே அடையப் பெறுவான்.

தேவி பக்தனுக்கு இம்மையிலும் மறுமையிலும் அடைய வேண்டுவது ஒன்றுமில்லை. ஸ்ரீதேவியின் உத்தம ஸ்தானமாகிய மணித்வீபத்தில் இடையறாமல் வாசம் புரிவதே அவன் அடையத் தகுந்த பேறாகும். அவன் மீண்டும் பிறவியெடுப்பது என்பதையே

அறியான். பிரமர்களுடைய இறப்பையெல்லாம் பார்த்துக் கொண் டேயிருப்பான். தேவி மந்திரத்தை உபாசிப்பவர்கள் பிறவி யெடுக்கும் தொல்லை ஒழிந்து, திவ்ய விபூதிமான்களாய், தேவி யினது சாரூப்யமாகிய திவ்ய உருவத்தை அடையப் பெற்று அத் தேவிக்கு திருவடிச் சேவை செய்வார்கள். சேதன சேதனங்கள் எத்தனை முறைகள் அழிவுற்றாலும் அவர்கள் அழிவடையமாட்டார் கள். கார்த்திகை மாதத்தில் துலாதானம் செய்பவர்கள் மூன்று யுகங்கள் விஷ்ணு பதத்தில் சுகித்திருப்பார்கள். அதன் பிறகு பூமி யில் பிறந்து ஜிதேந்திரியர்களாகி பகவான் பக்தர்களாக விளங்கு வார்கள். அருணோதய காலத்தில் கங்கை நதியில் தீர்த்த மாடு பவர்கள் அறுபதாயிரம் ஆண்டுகள் விஷ்ணு உலகத்தில் வாசம் புரிந்து, பின்னர் பூலோகத்தில் நல்ல பிறவி யெடுத்து விஷ்ணு மந்திரத்தை ஜபித்து மறுபடியும் விஷ்ணுவின் உலகை அடைவார் கள். அப்புண்ணிய நதியில் நாள் தோறும் நீராடுபவர்கள் தூய்மை யானவர்களாய் ஒவ்வொர் அடிக்கு ஒவ்வோர் அஸ்வமேதயாக பயனைப் பெறுவார்கள். அவர்களது பாத தூளியினால் பூமாதேவி யும் தூய்மையடைவாள். அவர்கள் சூரிய சந்திரர்கள் உள்ளவரை, பரமபத வாசிகளாகிப் பிறகு, நல்லகுலத்தில் பிறந்து, தெய்வ பக்தி யுடன் ஜீவன் முக்தர்களாய், பிரம்மதேஜசுடன் சகல தர்மத்திலும் பற்றுதலுடையவர்களாய், இந்திரிய நிக்ரகராய், அறிஞராய், பண்டி தராய் வாழ்வார்கள். சூரியன், மீனம், கடகம் முதலான ராசி களின் நடுவில் இருக்கும் போது நறுமணமுள்ள நல்ல தண்ணீரை மட்டுமே சுத்தான்மாக்களுக்குத் தானஞ் செய்தாலுங்கூட, அவ் வாறு தானம் செய்கிறவன் கைலாயத்தில் பதினான்கு இந்திரகாலம் வரை வாசம் புரிந்து, பிறகு நல்லதொரு குலத்தில் பிறந்து, அழக னாகவும் சுகமுடையவனாகவும் சிவ பக்தனாய் வேத வேதாந்த உணர்வுள்ளவனாகவும் வாழ்வ ன் வைகாசி மாதத்தில் மாதானஞ் செய்பவன் அந்தமாவின் ஒரு துகளுக்கு ஓர் ஆண்டு வீதம் சிவ லோகத்தில் வசித்து, அதன் பிறகு பூலோகத்தில் பிறந்து சிவ பக்தனாகவும், அறிஞனாகவும், புத்திர பாக்கியனாகவும் சீமானாகவும் பூமானாகவும் வாழ்வான். சித்திரை மாதத்திலாவது மாசி மாதத்தி லாவது சிவபெருமானை வழிபடுபவன், கையில் பிரம்பெடுத்துக் கொண்டு பக்தியோடு இரவும் பகலும் ஒரு மாதமோ அரைமாதமோ பத்து நாட்களோ ஏழு நாட்களோ அல்லது இரண்டு நாட்களோ நிருத்தம் புரிந்தால் சிவலோகத்தில் வசிக்கும் பேறு பெறுவான். ஸ்ரீராம நவமியை அனுஷ்டிப்பவன் ஏழு மன்வந்தரகாலம் விஷ்ணு லோகத்திலிருந்து பிறகு பூலோகத்தில் பிறந்து ராமபக்தனாகவும் செல்வச் சிறப்போடு வாழ்வான். பிரகிருதி தேவிக்கு சரத்கால பூஜையை எருமை வெள்ளாடு முதலான நிவேதனங்களோடும் தூபதீப ஆடல் பாடல் உபசாரங்களோடும் பலவித மங்களத் தோடும் செய்கிறவன் சிவலோகத்தில் ஏழு மன்வந்தரகாலம் ஆனந்தமாக வசித்து மீண்டும் பூவுலகில் பிறந்து தூய்மையான

புத்தியையும், இணையற்ற சம்பத்தையும் புத்திரபௌத்திராதி விருத்தியையும் அடைவதோடு யானை குதிரைகள் முதலியவற்று டன் அரசர்களுக்கெல்லாம் பேரரசனாய் பெரும்புகழுடன்வாழ்வான். ஒரு வருஷம் பிரதி சுக்கிலாஷ்டமியிலும் பாரத தேசத்தில் புண்ணிய க்ஷேத்திரததில் ஷோடச உபசாரத்துடன் மகாலக்ஷ்மியைப் பூஜித்துத் துதித்து வழிபடுபவர் கோலோகத்தில் பதினான்கு இந்திரன் காலம் வாசம் புரிந்து பிறகு பூவுலகில் நற்குலத்தில் பிறந்து, மன்னாதி மன்னனாவான்.

''கார்த்திகை மாதத்து பௌர்ணமியில் ராஜமண்டலஞ்செய்து, நூறு கோபர்களையும் நூறு கோபிகைகளையுந் திரட்டி, மண்ணினாலாவது கல்லினாலாவது ராதா கிருஷ்ணரின் படிமங்களை அமைத்து ஷோடச உபசாரத்தோடும், பத்தியோடும் வழிபட்டுப் பூஜிப்பவன் பிருமாவின் ஆயுட்காலம் வரை கோலோகத்தில் வாசம் புரிந்து, அதன் பிறகு, பாரத தேசத்தில் பிறந்து, கிருஷ்ண பக்தனாய், கிருஷ்ண மந்திரததைப் பெற்று, கோலோகமடைந்து கிருஷ்ண சாரூபத்தை (கண்ணன் உருவத்தை) அடைந்து கணங்களுக்கு தலைவனாவான் அவனுக்கு மறு பிறவியில்லை. சுக்ல கிருஷ்ணபக்ஷ ஏகாதசியில் மகா விஷ்ணுவை வழிபாடு செய்பவன், வைகுண்டத்தில் பிரமனின் ஆயுட்காலம் வரை வாசம் புரிந்து அதன் பிறகு பூவுலகில் பிறந்து கிருஷ்ணபக்தனாகி உடலை நீத்து கோலோகத்தை அடைவான். பாத்திரபத சுக்லபக்ஷ துவாதசியில் இந்திரனை உபாசிப்பவன் அறுபதினாயிரம் ஆண்டுகாலம் இந்திர லோகத்தில் இன்புற்றிருப்பான். ஆதிவாரத்திலும் மாசி சங்கிரமணத்திலும் சுக்லபக்ஷ சப்தமியிலும் சூரியனை உத்தேசித்து ஹவிசான்னத்தைப் பயன்படுத்துவோன், சூரியலோகத்தில் பதினான்கு இந்திரகாலம் வரையில் வசித்திருந்து, பிறகு, பூமியில் வந்து பிறந்து, நோய் நொடிகள் இல்லாத ஆரோக்கியத்தோடும் சகல சம்பத்தோடும் வாழ்வான். ஜேஷ்டமாச கிருஷ்ண சதுர்த்தசியில் சாவித்திரி தேவியை ஆராதனை செய்பவன், ஏழு மன்வந்தர காலம்வரை பிரம்மன் உலகிலிருந்து பிறகு பூமியில் வந்து பிறந்து அளவிலாத வலிவாற்றலும் ஆயுளும் அறிவும் மெய்ஞானமும் செல்வ சம்பத்துகளும் அடைகிறான். மாசி மாத சுக்கில பஞ்சமியில் கலைமகளான சரஸ்வதியைக் குறித்து ஷோடச உபசாரத்தோடு பூஜை செய்பவன் மணித்வீபத்தில் பிரமன் ஆயுள்வரையில் பூஜ்யனாக விளங்கி, பிறகு சக்கராதிபதியாய் பூமியில் வாழ்வான். பசு, பொன் முதலியவற்றைத் தானஞ் செய்பவன் பசுவின் ரோமம் ஒன்றுக்கு இரண்டு ஆண்டுகள் வீதம், விஷ்ணு லோகத்தில் வாசம் புரிந்து, பிறகு, பூமியில் பிறந்து புத்திர, மித்திர, களத்திர சம்பத்துகள் நிறைந்தவனாகவும் மன்னாதி மன்னனாகவும் வாழ்வான். பரிசுத்தமான மிருஷ்டான்னத்தை தானஞ்செய்பவன் அவனது ரோமம் ஒன்றுக்கு ஒரு வருஷம் வீதம் விஷ்ணுலோகத்திலிருந்து

பிறகு பூமியில் பிறந்து சுகவாசியாகவும் வள்ளலாகவும் சிரஞ்சீவி யாகவும் செல்வனுகவும் இணையற்ற பலசாலியாகவும் வாழ்க்கையை ஆனந்தமாக அனுபவிப்பான். ஸ்ரீமந் நாராயணருக்குரிய ஹரி நாமங்களை ஜபித்து உபாசிப்பவன் நாமம் ஒன்றுக்கு ஓர் ஆண்டும் வீதம் விஷ்ணுலோகத்தில் வாசம் புரிந்து அதன் பிறகு இந்தவுலகத் திற்பிறந்து சுகத்தோடு தான்யவானுகவும் விளங்குவான் அந்த ஹரி நாமங்களை நாராயண க்ஷேத்திரத்திலிருந்து கூறி ஜபித்தால் கோடி பங்கு அதிகபயனையும் கோடி உரு ஜபித்தால் சகல பாவ நிவர்த்தியும் ஜீவன் முக்தியும் விஷ்ணு சாரூபமும் வைகுண்ட வாழ்வும் சித்திக்கும். பார்த்திவலிங்கத்தை மரணகாலம்வரை வணங்கி உபாசனை செய்பவன் சிவலோகத்தில் ஒரு துகளுக்கு ஒரு வருஷம் வீதம் வாசம் புரிந்து பிறகு பூவுலகில் பிறந்து மன்னுதி மன்னனுவான் சாளக்கிராம சிலையைப் பூஜித்து, அதன் தீர்த் தத்தை பானமாக அருந்துபவன் வைகுண்டத்தில் நூறு பிரமகாலம் வரை வாசம் புரிந்து பிறகு பூமியில் பிறந்து ஹரி பக்தனுகி கிருஷ்ண லோகத்தை அடைவான. விரதம் நோன்புகள் தபசுகள் அனைத்தையும் செய்தவன் வவகுண்ட பதத்தில் பதினுன்கு இந்திரர் காலம் வரை வசித்து பிறகு பாரத தேசத்தில் ராஜபோகியாகப் பிறந்து ஜீவன் முக்தன் ஆகிருன். எல்லா புண்ணிய தீர்த்தங்களி லும் நீராடி பிரதக்ஷிணஞ் செய்பவன் மோக்ஷம் பெறுவான். அவன் மீண்டும் பிறவிப்பந்தத்திற்கு ஆளாவதில்லை. பாரத நாட்டில் அஸ்வ மேதயாகஞ் செய்பவன், குதிரையின் ரோமம் ஒன்றுக்கு ஒரு வருஷம் வீதம், இந்திரனுடன் சம அந்தஸ்தில் வீற்றிருப்பான். ராஜசூயயாகத்தினுல், அதனைவிட நான்கு பங்கு அதிகமான பலன் அடைவான்.

''எல்லா யாகங்களையும் விடத் தேவி யக்ஞமே மேலானதா கும். அதற்கு ஈடானது மூவுலகிலும் கிடையாது. திரிபுரங்களைச் சங் கரிக்குங் காலத்தில் பிரம்மா, விஷ்ணு ருத்திரர்கள் அந்த தேவி யக்ஞம் என்ற யாகத்தை செய்தார்கள். அந்த யாகத்தைத் தக்ஷனும் செய்ததால் தான் தக்ஷப்பிரஜாபதியாகி தான் நினைத்த தையெல்லாம் அடையும் திறன்பெற்று தேவியையே தன் புதல்வி யாக அழைக்கும் பாக்கியத்தையும் பெற்ருன். இதுபோலவே, தர்மராஜன், கஸ்யபர், ஆதிசேஷன், கர்த்தமப் பிரஜாபதி, சுவா யம்புவனு, பிரியவிரதன், சனத்குமாரர், கபிலர், முதலியவர்களும், தேவியசஞம் செய்தார்கள். ஒரு தேவியக்ஞம் செய்தால், ஆயிரம் ராஜசூய யாகங்கள் செய்த பலனை அடையலாம். தேவியக்ஞத் தைப் போல் அதிகப் பலனளிக்கக்கூடியது வேறு எதுவுமில்லை. அந்த யக்ஞத்தைச் செய்தவன் நூறு ஆண்டுகள் சிரஞ்சீவியாக வாழ்ந்து ஜீவன் முக்தனும் ஞான ஜோதியாகவும் திகழ்வான். தேவர்களில் மகாதேவரும், முனிவர்களில் நாரதரும் சாஸ்திரங் களில் வேதமும், நான்கு வருணங்களில் பிராமணகுலமும், புண்



ணிய நதிகளில் கங்கையும், தூய்மையான பொருள்களில் விபூதியும் விரதங்களில் ஏதாதசியும், மலர்களில் துளசியும், கிரக நட்சத்திரங் களில் சந்திரனும், பறவைகளில் கருடனும், மங்கையரில் பிரகிருதி தேவி, ராதாதேவி, வாணி, பூமா தேவி என்போரும்,அந்தக் கரணங் களில் மனமும், பிரஜாபதிகளில் பிரமனும், பிரஜைகளில் ஆட்சி யாளனும் வனங்களில் பிருந்தாவனமும், தேசங்களில் பாரத தேச மும், சம்பத்துகளுக்குள் லக்ஷ்மியும், பண்டித அறிஞர்களில் சரஸ் வதியும், பதிவிரதைகளில் ராதிகையும் எப்படி மேலானவர்களோ



அதுபோலவே சகல யாகங்களிலும் தேவியக்ஞமே மேலானதாகும். நூறு அஸ்வமேத யாகங்களைச் செய்தால் இந்திரபதமும் ஆயிரம் அஸ்வமேதத்தால் விஷ்ணுபதமும் அடையலாம். பிரிதிவி என்பவன் ஆயிரம் அஸ்வமேத யாகங்கள் செய்து, வைகுண்டத்தை அடைந்தான். ஆனால் தேவியுலகை அடையும் பெரும் பதமோ எல்லா விரதங்களையும் தவங்களையும் வேத சிரவணங்களையும் பூப்பிரதக்ஷணங்களைச் செய்து முடித்தவருக்கே கிடைக்கக் கூடியதாகும். தேவியினது திருவடித் தாமரைகளை வழிபாடு செய்வதே வேத புராண இதிகாசங்களின் சாரமாகும். அதனால் தான் தேவியின் வர்ணனையும் தேவியைக் குறித்த தியானமும் நாமமும் குண கீர்த்தனமும் தோத்திரமும் ஸ்மரணமும் சேவையும் வழிபாடும், ஜபமும்; பாதோதகபானமும் நிவேதனப் பக்ஷணமும் நாள் தோறும் செய்வதற்கு எல்லோரும் ஆசைப்படுகிறார்கள். மனப் பூர்வமாக விரும்புகிறார்கள். ஆகையால், பதி விரதையான சாவித்திரியே? நிர்க்குணமான பரப் பிரகிருதி வடிவமாகவும் பரப் பிரம்ம ரூபிணியாகவும் விளங்கும், தேவியை நாள்தோறும் நீ வழிபாடு செய்வாயாக குழந்தாய்! இனி நீ உன் கணவனை மீட்டுச் சென்று

உன் வீட்டில் இன்பமாக வாழ்வாயாக! அனைவராலும் ஏற்கப் பட்டதும் விரும்பப்பட்டதுமான கர்ம பேதங்களை அறிந்துணர்ந்த வர்களுக்குத் தத்துவ ஞானம் ஏற்படும் என்பதையும் அறிந்து கொள்வாயாக!'' என்று கூறி முடித்தான் யமதர்ம ராஜன்.

## 31 யமாஷ்டகம்

யமதர்மராஜன் கூறிய தேவி சங்கீர்த்தனம் சாவித்திரியின் நெஞ்சை உருக்கியது. அவள் கண்களில் நீர் துளிர்க்க, உடம்பு சிலிர்க்க புளகாங்கிதங் கொண்டு யமதர்மனை நோக்கி, "தர்ம ராஜனே! தேவியின் புகழான உத்கீர்த்தனத்தைச் சொல்வோருக் கும் கேட்போருக்கும் பிறப்பு, இறப்பு முதலான கட்டுத்தளைகள் விட்டொழியும். வேத வாக்கியங்கள் அவளது திருவடிகளையே புகழ் கின்றன. அவளது திருவடி வழிபாடு தான் தவமும் யோகமும். அவற்றால் அடையும் பதமும் ஆகும். மோட்சமும் அழிவற்ற அமரத்தன்மையும் சகல அரும் பெரும் சித்திகளும் சக்தி கீர்த் தனஞ்செய்யும் தாசனின் ஒரு கலைக்கு இணையாகாது. ஆகையால் அந்தத் தேவியின் கீர்த்தன விதி முறையைச் சொல்லவேண்டு கிறேன்; தர்மராஜரே! அதுமட்டுமல்ல, மனிதர்களுடைய சுப கர்மத்தை நீர் எனக்கு எடுத்துக் கூறியதைப் போல அசுப கர்மத்தையும் கூறவேண்டும்!'' என்று இறைஞ்சி யமாஷ்டகம் கூறி யமனைத் துதித்தாள்.

அந்த யமாஷ்டகம்:—

"முன்பு சூரியன் தவஞ்செய்து தர்மத்தை ஆராதனைசெய்து உம்மைப் பெற்றதால் தர்மராஜன் என்று பெயர் பெற்றீர். உமக்கு நமஸ்காரம்! சகலவற்றிற்கும் சாட்சியாக விளங்கும் உமக்குச் சர்வப்பிராணிகளிடத்திலும் சமத்துவம் இருப்பதால் சமன் என்று பெயர் பெற்றீர்! உம்மை நான் நமஸ்கரிக்கிறேன்! பிரபஞ்சத்தில் எல்லா பிராணிகளுக்கும் இறுதியழிவு உண்டாக்குவதனால் யமன் என்றுபெயர் பெற்றீர்! உம்மை நான் வணங்குகிறேன். காலத்திற்கு ஏற்றவாறு எல்லாப் பிராணிகளையும் நீர் நாசஞ்செய்வதால் கிருதாந்தகன் என்ற பெயரைப் பெற்றீர்! உம்மை வணங்குகிறேன். பாபிகளைச் சுத்தப்படுத்தத் தண்டாயுதத்தைத் தரித்துள்ளதால் தண்டதரன் என்னும் பெயர் பெற்றீர்! உம்மை நமஸ்கரிக்கிறேன். தபஸ்வியாகவும் பிரம்ம நிஷ்டராகவும் ஜிதேந்திரியராயும் ஜீவர் களுக்குக் கர்மபலத்தைக் கொடுப்பவராயும் இருப்பதால் யமன் என்று பெயர் பெற்ற உம்மை நமஸ்கரிக்கிறேன். எல்லாம் உணர்ந்த சர்வஞராயும் பாவிகளுக்குத் துயரத்தை வழங்குபவராகவும் புண்

ணியசாலிகளுக்கு சினேகராகவும் இருப்பதால் புண்யமித்திரன் என்னும் பெயர் பெற்றீர். உமக்கு நமஸ்காரம்! பிரம்ம அம்சம். பிரம்மதேஜஸ் ஆகியவற்றால் பிரகாசித்து, பிரம்மத்தையே தியானிக்கும், இறைவரான உம்மை நமஸ்கரிக்கிறேன்.''

இந்த யமாஷ்டகத்தை அதிகாலையில் வாசிப்போருக்கு யம பயம் நீங்கி விடும். அதோடு சகல பாபங்களும் விலகி விடும். மகா பாபி கூட இதைப் படிப்பானேயாகில் அவனுடைய பாவத்தால் அனுபவிக்க வேண்டிய உடல் தண்டனைகள் யமனால் அவனுக்கு விதிக்கப்பட மாட்டாது!

## 32 நரக குண்ட வகைகள்

யமதருமன் மாயாபீஜமான தேவியின் மகா மந்திரத்தைச் சாவித்திரிக்கு முறைப்படி உபதேசித்து, பதிவிரதையே! ''ஜீவாத்மாக்கள் செய்யும் புண்ணிய பாவகர்மங்களுக்கு ஏற்ற வண்ணம் சுவர்க்கமும் நரகமும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. புண்ணிய பேதங்கள் எத்தனை வகையுண்டோ அத்தனை வகை சுவர்க்க லோக சுகானுபவ பேதங்களும் உண்டு. பாவ பேதங்கள் எத்தனை வகையுண்டோ அத்தனை வகை துக்க அனுபவ நரக பேதங்களும் உண்டு. ஆகையால் புண்ணியகர்மாவையே செய்தவர்கள் நரகத்தையோ பாபகர்மாவையேசெய்தவர்கள் சுவர்க்கத்தையோ அடைய மாட்டார்கள். புண்ணியம் பாவம் இரண்டையுஞ் செய்தோர், அந்தந்த கர்மங்களின் பலாபலனுக்கு ஏற்றவாறு முன்னாலோ பின்னாலோ இரண்டையும் அடைவார்கள். முன் பின்னாகவே இரண்டையுமே அனுபவிக்கும் பேதங்களை இந்தப் பூலோகத்திலும் பார்க்கலாம். சிலர் பிறந்த நாளிலிருந்து சாகும் காலம்வரை சுகத்தையே அனுபவிப்பவராகவும் சிலர் துயரங்களையும் துக்கத்தையுமே அனுபவிப்பவராகவும் சிலர் முன் பகுதி துக்கத்தையும் பின் பகுதி சுகத்தையும் சிலர் பின் பகுதி துக்கத்தையும் முன் பகுதி சுகத்தையும் சிலர் இரண்டையும் மாறி மாறி அனுபவிப்பவர்களாகவும் இருப்பதைப் பார்க்கலாம். சுவர்க்க நரகங்களாக வகுக்கப்பட்டுள்ள இடங்களைப் போலவே இப்பூவுலகிலும் சுகத்தையே கொடுக்கக் கூடிய இடங்களும் ஊர்வன நீர் வாழ்வன, விலங்குகள், பறவைகள் முதலான உடற் பேதங்களும் காணப்படுகின்றன. அந்தச் சரீர பேதங்கள் துன்பஞ் செய்வனவாகவும் செய்யாதனவாகவும் சுகத்தை அனுபவிப்பவனாகவும் துக்கத்தை அனுபவிப்பவனவாகவும் இருப்பதுண்டு. தாவரங்கள், பயன் படக் கூடியனவாகவும் பயன்படத் தகாதவையாகவும் இருக்கின்றன. இவையெல்லாம் மரணத்திற்குப் பிறகு சுவர்க்க

நரக அனுபவங்கள் உண்டு என்று முன்னரே உணர்ந்தறிவதற் காகவே அமைக்கப்பட்டுள்ளன. இவை தவிர, சுவர்க்க நரக அனுபவங்களை அனுபவிப்பவரும் இவ்வுலகில் இருப்பதால் அவர் களுக்காகவும் ஏற்பட்டுள்ளன.

''இனி புராண பேதங்களால், பெயர் வித்தியாசப்படும் நரகங்களின் பெயர்களைக் கூறுகிறேன் கேள். வன்னி (தீ) குண்டம், தப்த (கொளுத்தும்) குண்டம், க்ஷார (உப்புக்) குண்டம், மலக் குண்டம், மூத்திர (சிறு நீர்) குண்டம், சிலேஷ்ம (சளிக்) குண்டம், விஷ (நஞ்சுக்) குண்டம், தூஷிகா (கண்மலக்) குண்டம், வஸா குண்டம், சுக்ல குண்டம், ஸ்ருக (ரக்த) குண்டம், அஸ்ரு (கண்ணீர்) குண்டம், காத்ரமல (உடம்பழுக்கு) குண்டம் கர்ணவிட (செவிக்குரும்பிக்)குண்டம், மஞ்ஞா(கொழுப்பு) குண்டம், மாமிச குண்டம், நரக குண்டம் லோபகுண்டம், கேச குண் டம், அஸ்தி(எலும்புக்) குண்டம், தப்த தாம்ர குண்டம், லோஹ குண் டம், சர்மகுண்டம், கொதிக்கக் காய்ச்சிய கட்குண்டம், முள்மயமான முட்குண்டம், விஷநீர்க் குண்டம், காய்ச்சிய (எண்ணெய்க் குண்டம்) இடித்து இடித்து நொறுக்கிக் கொண்டேயிருக்கும் உலக்கைக் குண்டம், புழுக் குண்டம், பூய குண்டம், சர்ப்ப குண்டம், கொசுக் குண்டம், பயங்கர விஷகுண்டம், வஜ்ரதம்ஷ்டிர குண்டம், தேள் குண்டம், சரக் குண்டம், சூல குண்டம், கொடூர மான கத்திக் குண்டம், கோள குண்டம், முதலைக் குண்டம், காக்கை கள் பிடுங்கும் காக குண்டம், மந்தான குண்டம், பீஜ குண்டம், வஜ்ஜிர குண்டம், தப்த பாஷாண குண்டம், தீக்ஷ்ண்ய பாஷாண குண்டம், லாலா குண்டம், மஸீ குண்டம், சூர்ண (தூள்) குண்டம், சக்கிர குண்டம், வக்கிர குண்டம், கூர்ம குண்டம், மகோற்பணம், ஜ்வாலா குண்டம், பஸ்ம குண்டம், தப்த குண்டம் தப்த சூரி (காய்ச்சிய நிலையிலுள்ள ஊசிக்) குண்டம், அசிபத்திர (வாள் அலகு) வனம், க்ஷுர தாரம் (கத்திப்பிடி), ஆட்டு முகம், கோசா (செந்நாய்) முகம், நக்ர (முதலை) முகம், யானை கடிக்கும் கஜதம்சம், கோ (பசு) முகம்; கும்பீ பாகம், கால சூத்ரம், மத்சியோதம், கிருமி கந்துகம், (புழுப் பந்து) பாம்ஸு போஜ்யம் (தூளியைத் தின்னல்) பாச வேஷ்டம் (கயிறால் கட்டுண்டு கிடத்தல்; சூலப்ரோதம் (சூலத்தில் கோர்த்தல்) பிரகம் பனம் (கட்டிசைத்தல்) உல்சா முகம் (கொள்ளிக் கட்டை) அந்த கூபம், வேதனம். (குத்தல்) தாடனம் (அடித்தல்), ஜாலாந்திரம் (ஜன்னலிடுக்கு) தேக சூரணம் (தேகத்தைப் பொடிப் பொடி யாக்குதல்) தலனம் (தேகத்தைப் பிளத்தல்) சோஷணம் (வற்றி வதங்கச் செய்தல்) கஷம் (தேய்த்து தேயச் செய்தல்) சூரப்பம் (முறமடித்தல்) ஜ்வாயர் முகம் (தீ ஜ்வாலை); தூமாந்தம் (புகை யிருள்) நாக வேஷடனம் (பாம்பு சுற்றுதல்) இவ்வாறு பாவி களுக்கு துன்பத்தையும், துக்கத்தையும் வருத்தத்தையும் பயத்தை

யும் கேவலத்தையும் கொடுக்கக்கூடிய நரகங்கள் எண்பத்தாறு இருக்கின்றன. சாவித்திரி! பதிவிரதையே! இவற்றை யமகிங்கர்களும் பதினாயிரம் பேர் பரிபாலனம் செய்து தண்டித்து வருகிறார்கள். பாபிகளுக்குத் துன்பத்தைக் கொடுப்பவர்கள் மதமத்தர்கள் பயங்கரர்கள் கைகளிலே தண்டமும் பாசக் கயிறும் சூலாயுதமும் கதாயுதமும் ஏந்தியவர்கள் தேஜசுள்ளவர் பயமோ, தயையோ இல்லாதவர்கள் சிவப்பேறிய பச்சை நிறக் கண்கள் வாய்ந்தவர்கள் குரூரமானவர்கள். தமோ குணத்தினர்கள். யோக சித்தியோடு கூடியவர்கள் பலவித உருவங்களும் கொண்டவர்கள். எதையும் அஞ்சாமற் செய்யும் பாபிகளால், மரண காலத்தில் இத்தகைய எம கிங்கரர்கள் காணப்படுவார்கள். தன் கடமை கர்மத்திலே பற்றுள்ளவர்களாலும், சாக்தர்களாலும் சௌள்களாலும் காணுபத்யர்களாலும் புண்ணிசாலிகளாலும் சித்தர்களாலும்



யோகிகளாலும் சுதந்தரமற்றவர்களாலும் இத்தகைய எமகிங்கரர்கள் காணப்பட மாட்டார்கள் பலசாலிகளாலும் பயமற்றவர்களாலும் கனவுகளில் காணப்படுவார்கள். இத்தகைய படர்களாலும் பதினாயிரம் கிங்கரர்களாலும் மேற்கூறிய நரகங்கள் எப்போதும் பாதுகாக்கப்படுகின்றன. இனி எந்த எந்தப் பாவம் புரிந்தோர் எந்தெந்த நரகத்தில் உழலவேண்டுமோ அவற்றைக் கூறுகிறேன். கேள்!'' என்றான் யமதர்ம ராஜன்.



## 33 நரக தண்டனைகள்

யமதர்மராஜன் சாவித்திரியை நோக்கி மேலும் கூறியதாவது: "தெய்வத் தொண்டில் ஆசையுள்ளவனும் தூய்மையானவனும் யோக சித்தனும் விரத சீலனும் தவம் செய்தவனும் உத்தம பிரம சாரியும் நரகத்தை அடைய மாட்டார்கள். அது உறுதி! வாடியிளைத்து வருந்தும் உறவினரைச் சுடு சொற்களால் சுட்டு வதைப்பவன் நரகலோகத்து வன்னி குண்டத்தில் தள்ளப்பட்டு அவனது உடம்பில் எவ்வளவு ரோமங்கள் இருக்கின்றனவோ அவ்வளவு ஆண்டு காலம் அந்தக் குண்டத்திலே கிடந்து வதைப்பட்டு பிறகு பாபிகளால் உயிருடன் கொளுத்தப்படும் மிருகப் பிறவியை மூன்று தடவை அடைகிறான். பசியோடும் தாகத்தோடும் மிகவும் துயரப் பட்டுத் தன் இல்லத்திற்கு வந்த அந்தணனுக்கு உணவிடாத வன்னெஞ்சப் பாபி துக்கம் விளைவிக்கும் தப்த குண்டத்தில் தள்ளப் பட்டு தன் ரோமத்திற்கு ஒரு வருஷம் வீதம் நீர் வற்றிய இடத்தி லும் நெருப்பினால் வாட்டப்படும் இடத்திலும் ஏழு பிறவிகள் வரை பறவையாகப் பிறக்கிறான். ஞாயிற்றுக் கிழமை, மாதப் பிறப்பு, அமாவாசை, சிரார்த்த நாள் ஆகிய நாட்களில் ஆடை

களின் அழுக்கைப் போக்குவதற்காக உப்பைச் சேர்ப்பவன் நரக லோகத்தை அடைந்து உப்பு மயமான க்ஷார குண்டத்தில் தள்ளப் பட்டு நூறுக்கு ஒரு வருஷமாக அதில் கிடந்து உழன்று பிறகு ஏழு பிறவி வரை துணி துவைப்பவனுகப் பிறக்கிருன். மூலப் பிரகிருதி சக்தியையும் வேதசாஸ்திர புராணுதிகளையும் பிருமா மகாவிஷ்ணு, சிவபெருமான், பார்வதி சரஸ்வதி முதலான தெய்வங்களைத் தூஷிக்கும் வெறியர்கள் பயங்கரமான அந்தக்ஷார குண்டத்தில் தள்ளப்பட்டு பல கல்ப காலம் கஷ்டப்பட்டுப் பிறகு கர்ப்ப யோனியை அடைகிருர்கள். தேவியை நிந்திக்கும், தீவினைக்கு பிராயச் சித்தமே இல்லை. ஒருவன் தன்னுலும் பிறராலும் உண் டாக்கப்பட்ட அபிவிருத்திகளைப் பங்கிட்டு அவர்களுக்குப் பயன் படுத்தாமல் தான் ஒருவனுகவே பறித்துக் கொண்டால் அறுபதினு யிரம் ஆண்டுகள் மல குண்டத்தில் தள்ளப்பட்டு மலத்தை அருந்திக் கொண்டேயிருந்து, பிறகு மலத்தில் புழுத்த புழுவாகிருன். கீலக மான நீர்நிலையைப் புதுப்பிக்காமல் வேறு புதிதாக வெட்டுபவன் சிறுநீர்க் குண்டத்தையடைந்து வெட்டு மண் தூசிக்கு ஒரு வருஷம் வீதம் அதையே குடித்து நூறு ஆண்டுகள் எருதாய்ப் பிறக்கிருன். பக்ஷ்ய போஜ்யத்தோடு கூடிய அன்னத்தைப் பகிர்ந்துண்ணுமல் தான் ஒருவனுகவே தின்பவன் சளி பீழை மயமான சிலேஷ்ம



குண்டத்தில் தள்ளப்பட்டு அதையே நூறு ஆண்டுகள் தின்று பாரத தேசத்தில் நூறு வருஷம் பிரேதமாக இருந்து சிலேஷ்மத்தையும் சிறு நீரையும் சிலைத் தண்ணீரையும் சாப்பிட்டுப் பிறகு பரிசுத்தமடைவான். தாய், தந்தை, குரு, மனைவி, புத்திரன், புதல்வி, கணவனற்றவள் முதலானவர்களைக் காப்பாற்றுதவன், விஷ குண்டத்தில் தள்ளப்பட்டு அதையே நூறு வருஷம் சாப்பிட்டுப் பிறகு நூறு ஆண்டுகள் பூதயோனியை அடைந்து பிறகு தூய்மையாகிறான். அதிதியைப் பார்த்து ஏளனமாகக் கண்களால் கோணங்கித்தனம் செய்து அவமதிக்கிற பாபியினால் கொடுக்கப் படும் தர்ப்பண ஜலத்தை தேவர்களும் பிதுர்க்களும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். பிரம்மஹத்தி முதலான கொடும் பாவங்கள் இழைப்போர், தூக்ஷிகா குண்டத்தில் தள்ளப்பட்டு அதிலேயே நூறு ஆண்டுகள் கிடந்து அதையே அருந்திப் பிறகு நூறு ஆண்டுகள் பூதயோனியை அடைந்து தூய்மையாவான். பிராமணனுக்குப் பொருள் தானம் செய்து விட்டு மறுபடியும் அதை வாங்கி மற்றவருக்கு கொடுப்பவன், சிலை நீர் நிறைந்த வஸா குண்டத்தில் தள்ளப்பட்டு நூறு வருஷம் அதிலே கிடந்து அதையே புசித்துப் பாரத தேசத்தில் ஏழு முறைகள் ஒணுகைப் பிறவியெடுத்துப் பிறகு கொடூரனுகவும் அற்ப ஆயுள்காரனுகவும் வறுமையாளனுகவும் பிறப்பான். புருஷனைப் பெண்ணுவது பெண்ணை புருஷனுவது விபரீதமான மோக இச்சைகளுககு வற்புறுத்தி சுக்கிலத்தைக் குடிக்கும்படிச் செய்பவர்கள், சுக்கில குண்டத்தில் விழுந்து நூறு ஆண்டுகள் அதையே குடித்து நூறு ஆண்டுகள் புழுவாய்ப் பிறந்து பிறகு புனிதமடைவார்கள். குருவையும் அந்தணரையும் இரத்தம் கசியும்படி அடிப்பவன் இரத்த குண்டத்தில் தள்ளப்பட்டு நூறு ஆண்டுகள் ரத்தத்தையே குடித்து பிறகு பாரதத்தில் புலிப் பிறவியாக ஏழு முறை பிறந்து பிறகு சுத்தியாகிறான். இறைவனின் திருநாமங்களையும் குணங்களையும் புகழ்ந்து ஆடிப் பாடி மெய்யன்போடு விளங்குகிற பக்தனைப் பார்த்து ஏளனமாக கண்ணீர் வர இடியிடியெனச் சிரிப்பவன், கண்ணீர்க் குண்டத்தில் நூறு ஆண்டுகள் கிடந்து, அதிலுள்ள கண்ணீரையே குடித்து மும்முறை சண்டாளனுகப் பிறவியெடுத்து பிறகு பரிசுத்தமடைகிறான். உண்மையான நண்பனிடம் நாள் தோறும் விரோதம் புரியும் தீவினையாளன் தேகத்திலுண்டாகும் அழுக்குக் குண்டத்தில் நூறு ஆண்டுகள் கிடந்து அதையே தின்று மூன்று பிறவிகள் கழுதையாகவும் நரியாகவும் பிறந்து பிறகு தூய்மையடைகிறான். செவிடனைக் கேலி செய்து வருத்தும் பாபி காது குரும்பிக் குண்டலத்தில் நூறு ஆண்டுகள் கிடந்து அதையே புசித்துப் பிறகு ஏழு பிறவிகள் வெறியனுகவும் ஏழு பிறவிகள் அங்க ஹீனனுகவும் பிறக்கிறான். கோபத்தால் தன்வாழ்க்கையைக் காத்துக்கொள்வதற்காக, மற்றொருவனது பிழைப்பைக் கெடுப்பவன் மஜ்ஜை (கொழுப்பு) குண்டத்தில் லக்ஷம் ஆண்டுகள்

கிடந்து அதிலுள்ள கொழுப்பையே தின்று தின்று பிறகு ஏழு வருஷம் மீனாகவும் மூன்று ஆண்டுகள் பன்றியாகவும் ஏழு ஆண்டுகள் முயலாகவும் ஏழு ஆண்டுகள் கோழியாகவும் பிறந்து, பிறகு மான் முதலிய பிறவிகளையும் பெற்றுத் தூய்மையாகிறான். தன் கன்னிகையை வளர்த்துப் பொருளாசையால் விற்பனை செய்கிற அறிவிலியான பாபி மாமிச குண்டத்தில் தள்ளப்பட்டு அந்தக் கன்னிகையின் ரோமத்துக்கு ஒரு வருஷம் வீதம், அதிலுள்ள மாமிசத்தையே தின்று நூறு ஆண்டுகள் அதிலே கிடந்து என்னுடைய கிங்கரர்கள் அடிக்கும் அடிகளால் அவதிப்பட்டுப் பிறகு பூவுலகில் பிறந்து, ரக்த மாமிசங்களை தலையிற் சுமந்து திரிந்து அதிலிருந்து ஒழுகும் இரத்தத்தையே பசியினால் நக்கிக் குடித்துப் பிறகு, அறுபதினாயிரம் கன்னியரின் மலத்தில் புழுவாகவும் ஏழு பிறவிகள் வேடனாகவும் மூன்று பிறவிகள் பன்றியாகவும் ஏழு பிறவிகள் கோழியாயும் ஏழு பிறவிகள் தவளையாகவும் ஏழு பிறவிகள் அட்டையாகவும் ஏழு பிறவிகள் காகமாகவும் பிறந்து தூய்மையடைவான். விரதம், சிரார்த்தம் முதலிய புண்ணிய நாட்களில் கலவி புரிகிறவனும் க்ஷவர கர்மஞ்செய்து கொள்பவனும் எல்லாக் கர்மத்திலும் அசுத்தனாக இருப்பவனும், நகம், ரோமம் நிறைந்த லோமக் குண்டங்களில் கிடந்து பாவம் புரியும் நாள் ஒன்றுக்கு ஒரு தேவ ஆண்டு வீதம் அவற்றையே தின்று தடியாலடிக்கப் பட்டுத் தவிப்பார்கள். மயிரோடு கூடிய மண்ணினால் அமைத்த பார்த்திப லிங்கத்தை உபாசிப்பவன், அந்த லிங்கத்தின் தூள் ஒன்றுக்கு ஓர் ஆண்டு வீதம் கேச குண்டத்தில் கிடந்து கடைசியில் சிவபெருமானின் சினத்தால் மிலேச்சனாகப் பிறவியெடுத்து, நூறு ஆண்டுகளுக்கு பிறகு ராட்சஸப் பிறவியை அடைந்து பரிசுத்தமடைகிறான். பிதுர்க்களுக்கு விஷ்ணுபாதத்தில் பிண்டம் கொடுக்காதவன், ரோமத்துக்கு ஓர் ஆண்டு வீதம் அஸ்தி (எலும்புக்) குண்டத்தில் கிடந்து பிறகு, நாயாக ஏழு தடவை பிறவியெடுத்து எலும்பைக் கடித்துத் தின்று பிறகு பெரும் வறியனாகப் பிறந்து பரிசுத்தம் பெறுகிறான். கர்ப்பவதியை, வற்புறுத்தி அனுபவிப்பவன் கொதிக்கும் தாமிரகுண்டத்தில் நூறு ஆண்டுகள் கிடக்கிறான். கணவனும் பிள்ளையும் இல்லாத ளிடமும் ருதுஸ்நானம் செய்தவளிடமும் அன்னம் உண்பவன். லோககுண்டத்தில் நூறு வருஷங்கள் இருந்து பிறகு துணி துவைப்பவனாகவும் பிறகு ஏழு பிறவிகள் காக்கையாகவும் ரணமுள்ளவனாகவும் பரம தரித்திரனாகவும் பிறந்து தூய்மையடைகின்றான். சந்த தேவ திரவியங்களை, (தேவ பூஜைக் குரியசந்தனம், மலர், பழம் முதலானவற்றை) அசுத்தமான கையினால் தொடுபவன் நூறு ஆண்டுகள் சரும குண்டத்தில் கிடக்கிறான். சூத்திரனது கட்டளையை ஏற்று, சூத்திரான்னத்தை தின்னும் அந்தணன் நன்றாகக் காய்ச்சப்பட்டுக் கொதிக்கும் மதுக் குண்டத்தில் நூறு ஆண்டுகள் கிடந்து பிறகு ஏழு பிறவிகள் சூத்திர சிரார்த்த சோற்றை சாப்பிடுகிறவனாகப் பிறந்து பிறகு தூய்மை



யடைகிறன். வாய்ச்சொல்லால் மூர்க்கனாய் கொடுமையாய்ப் பேசுகிற தீயவனும் தலைவனை அடிக்கும் தீவினையாளனும் தீக்ஷண்யமான முட் குண்டத்தில் கிடந்து அதிலுள்ள முட்களையே தின்று அவனடித்த அடியைவிட நான்கு மடங்கு அதிகமான அடிகளை யமதூதர்கள் அடிக்க. அடிபட்டு, பிறகு உயர்ந்த குதிரையாகப் பிறவியெடுத்து தூய்மையாகிறன். மனிதனைக் கொலை புரிபவன் விஷ குண்டத்தில் தள்ளப்பட்டு, அதையே ஆயிரம் ஆண்டுகள் சாப்பிட்டு, பிறகு மனிதனைக் கொலை செய்யும் வெறி குணத்தினனாகவும், ரணமுடையவனாகவும் நூறு ஜன்மங்கள் எடுத்து, பிறகு ஏழு ஜன்மங்கள் குஷ்டரோகியாக அவதிப்பட்டு தவிப்பான். பசுவையோ எருதையோ, தானோ அல்லது தன் ஏவலாட்களைக் கொண்டோ தடியினல் அடிதது வதைப்பவன் நான்கு யுகங்கள் வரை, நெருப்பினல் காய்ச்சப்பட்டுக்கொதிக்கும்எண்ணெய்க் குண்டத்தில் கிடந்து அந்த மாடுகளின் ரோமத்துக்கு ஓர் ஆண்டு வீதம் எருதாகப் பிறந்து திரிவான். பிராணிகளைக் குந்தா யுதத்தாலாவது நெருப்பிற் காய்ச்சிய உலோகத்திலைலாவது சித்திரவதை செய்து கொல்பவன், குந்த குண்டத்தில் பதினயிரம் வருஷம்கிடந்து, அதன் பிறகு கர்ப்பவாசம் புரிந்து நோயாளியாகப் பிறவியெடுத்து துன்பப்பட்டு பிறகு தூய்மையடைகிறன். வீணாக மாமிசத்தைத் தின்கிற பிராமணனும் தெய்வத்திற்கு நிவேதனமாகாத அன்னத்தை உண்ணும் அந்தணனும் கிருமி குண்டத்தில் தள்ளப்பட்டு தன் ரோமம் எவ்வளவோ, அவ்வளவு காலம்வரை அதிலுள்ள கிருமிகளையே தின்று மூன்று பிறவிகள் மிலேச்சனாகப் பிறவியெடுத்து அதன் பிறகே மறுபடியும் பிராமணனாகப் பிறப்பான். சூத்திரனுக்காக யாகம் புரிவிக்கிறவனும் சூத்திரான்னத்தைச் சாப்பிடுபவனும் சூத்திரனது சவத்தை எரிப்பவனுமான அந்தணன் ஆவியோடி அவிந்த பூய குண்டத்தில் தன் ரோமம்

எவ்வளவோ அவ்வளவு வருஷங்கள் கிடந்து அதில் அவிந்த வற்றையே அருந்தி யமகிங்கரர்களால் அடித்து நொறுக்கப்பட்டு பிறகு ஏழு பிறவிகளுக்கு சூத்திரனுகவும் பெரும் வியாதிக்காரனுக வும் தரித்திரனுகவும் செவிடனுகவும் ஊமையாகவும் பிறக்கிருன். தலையில் தாமரை இருக்கும் பாம்பைக் கொல்பவன், தன் ரோமம் எவ்வளவோ, அவ்வளவு வருஷங்கள் சர்ப்ப குண்டத்தில் கிடந்து பாம்புகளால் கடிக்கப்பட்டும் யமகிங்கரர்களால் அடிக்கப்பட்டும் பாம்புகளின் மலத்தையே தின்று பிறகு பாம்பாகப் பிறவியெடுத்து பிறகு ராட்சஸதனுகவும் சர்ப்பத்திஞல் கடிபடுகிறவனுகவும் அற்ப ஆயுளில் துயரமான மரணமடையவனுகவும் திரிவான். தெய்வத் துக்கு வழங்கப்பட்ட விருத்தியைக் கொண்டு வாழ்பவர்களும் சாதுப்பிராணிகளைக் கொல்பவர்களால் அவர்களால் எத்தனை சாதுப் பிராணிகள் மரணமடைந்தனவோ அத்தனை காலம் தப்த குண்டத்திலும் கொசுக் குண்டத்திலும் தள்ளப்பட்டு அவைகளால் தின்னப்பட்டும், உணவின்றி தவித்தும் கிடந்து பிறகு அதே அற்ப பிராணிகளாகவும் மிலேச்சர்களாகவும் உடற்குறைபாடுள்ள ஹீனர் களாகவும் பிறவியெடுத்து அதன் பிறகே தூய்மையாவர். தேனீக் களைக்கொன்று அவற்றின் தேனைத் திருடிக்குடிக்கிற மூர்க்கன் விஷ குண்டத்தில் தள்ளப்பட்டு ஒரு ஜீவனுக்கு ஒரு வருஷம் வீதம் அதிலே கிடந்து அதிலுள்ள விஷத்தைக் குடித்து விஷத்திஞலேயே கொளுத்தப்பட்டு, யமதூதர்களால் புடைக்கப்பட்டு, பிறகு ஈயாகப் பிறவியெடுத்து அதன் பிறகே பரிசுத்தம் பெறுகிருன். தண்டனைக் குப் பாத்திரமாகாத நிரபராதியை அநியாயமாக தண்டிப்பவனும் அந்தணனை அக்கிரமமாகத் தண்டிப்பவனும் வஜ்ர தம்ஷ்டிரம் எனப்படும் புழுக் குண்டத்தில் விழுந்து, ரோமத்துக்கு ஒரு வருஷம் வீதம் கிடந்து அக்குண்டத்திலுள்ள புழுக்களால் கடிபட்டு, கூவிக் கூவி யழுது புலம்பி, யமதூதர்களிடம் அடிவாங்கி, அழுதழுது அவதிப்பட்டு பிறகு ஏழு முறைகள் பன்றிப் பிறவிகளெடுத்துப் பிறகு மூன்று பிறவிகள் காக்கையாகப் பிறந்து அதன் பிறகே பரிசுத்த மடைகிருன். பணப்பேராசையாக பிரஜைகளை அக்கிரமமாகத் தண்டிப்பவன் அரசனுயினும் அவன், தேள் குண்டத்தில் தள்ளப் பட்டு அவனுல் தண்டிக்கப்பட்ட மனிதர்களின் உரோமங்கள் எவ்வளவோ, அவ்வளவு வருஷங்கள் வரை அந்நரகிலே கிடந்து ஏழு பிறவிகள் தேளாக மாறிப் பிறகு அங்கஹீனனுகவும் வியாதி யுள்ளவனுகவும் பிறந்து அதன் பிறகே தூயவனுகிருன். ஆயுதங் களைக் கைக்கொண்டு அக்கிரமமாகப் பிறரைத் துரத்துகிற பிராமணன், சந்தியாவந்தனம் செய்யாமல் திரியும் பிராமணன், தெய்வபக்தியில்லாமல் வாழ்கிறவன் தங்கள் ரோம அளவுக்காலம் சராதி குண்டங்களில் கிடந்து அடிக்கடி யமதூதர்களால் அடி யுண்டு தூய்மையடைகிருர்கள். பொது மக்களை இருட்டு அறையில் அக்கிரமமாக அடைத்து வைக்கும் கொடூரமான அரசன், சேற் ருேடும் சுடு நீரோடும் இருளோடும், கூர்மையான பற்களுள்ள

புழுக்களோடும் கூடிய கோள குண்டத்தில் தள்ளப்பட்டு தண்டிக்கப்பட்டவரின் ரோமத்துக்கு ஒரு வருஷம் வீதம் அதிலே கிடந்து அதிலுள்ள புழுக்களால் துன்புற்று, பிறகு பணியாளனுகப் பிறந்து முறையாகச் சுத்தி பெறுவான். முதலை முதலான ஜீவப்பிராணிகளைக் கொன்றெழிப்பவன் முதலை முள்ளுக்கொரு வருஷமாக முதலைக் குண்டத்தில் கிடந்து பிறகு முதலை ஜன்மமாகவே பிறந்து, சுத்திபெறுகிறுன். பிறஸ்திரீயின் மார்பையும் சுரோணித பாகத்தையும் முகத்தையும் காமத்தோடு பார்ப்பவனும், புண்ணிய ஸ்தலத்தில் காமத்தினுல் காமமுள்ள பெண்ணை இச்சித்துப் பார்ப்பவனும், காக குண்டத்தில் கிடந்து காக்கைகளால் கண்கள் கொத்தப்பட்டுத் தன் ரோமத்திற்கு ஒரு வருஷம் வீதம் தவித்துப் பிறகு மூன்று பிறவிகளுக்கு எரிக்கப்படுவான். தேவர்களுக்கும் அந்தணசிரேஷ்டர்களுக்கும் உரிய பொன்னைத் திருடுபவன் மந்தான குண்டத்தில் ரோமத்துக்கு ஒரு வருஷம் வீதம் கிடந்து தூதர்களால் அடிக்கப்பட்டும் மத்தால் குத்தப்பட்டும் தன் மலத்தையே தின்றும் பிறகு மூன்று பிறவிகள் மிலேச்சனுகவும் ஏழு ஜன்மங்கள் தரித்திரனுகவும் பெரும் கொடூரப் பாவியாகவும் பிறந்து அதன் பிறகு தட்டானுகவும் தங்கத்தை விற்பவனுகவும் பிறவியெடுப்பான். தாம்பிரத்தையாவது வேறு உலோகப் பொருட்களையாவது கொள்ளையிடுபவன் தன் ரோமத்திற்கு ஒரு வருஷம் வீதம் பீஜ குண்டதத்தில் கிடந்து பீஜமலத்தையே தின்று, யமதூதர்களால் அடிக்கப்பட்டுத் தூய்மை யடைகின்றுன். தெய்வ விக்கிரகங்களையும் தேவதைக் குரிய பொருள்களையும் கவர்ந்து கொள்ளும் அபகாரி தாண்டத்தில் தள்ளப்பட்டு ரோமத்துக்கு ஒரு வருஷம் வீதம் அதிலேயே கிடந்து, ஆகாரமின்றி அவதிப்பட்டும் யமகிங்கரர்களால் அடிக்கப்பட்டுக் கூச்சலிட்டுத் தவித்துப் பிறகு சுத்தனுகிறுன். அந்தணேத்தமர்களின் பொன் பொருளையும், பால் தயிர் முதலானவற்றையும் ஆடைகளையும்





திருடுபவன் பாஷாண குண்டத்தில் தன் ரோமத்திற்கு ஒரு வருஷம் வீதம்கிடந்து மூன்று பிறவிகள் வெள்ளை உருவினனாகவும் ஒரு பிறவி வெள்ளைக் குறியுள்ளவனாகவும் ஜன்மங்களெடுத்து பிறகு வெள்ளைப் பறவையாகவும் ஜனித்து, பிறகு ரத்த விகாரமுள்ளவனாகவும் சூலை வியாதிக்காரனாகவும் பிறகு ஏழு பிறவி அற்பாயுளையுடைய வனாகவும் ஜனித்துப் பிறகு சுத்தி பெறுவான். வெள்ளி, வெண்கலப் பாத்திரங்களைத் திருடுபவன், தீக்ஷண்யமான பாஷாண குண்டத்தில் ரோமத்துக்கு ஒரு வருஷம் வீதம் கிடந்து ஏழு பிறவி களுக்குக் குதிரை ஜன்மமாகவும் அதிக உறுப்புள்ள பாதரோகி யாகவும் ஜனித்துச் சுத்தனாவான். விபசாரியின் அன்னத்தைத் தின்பவனும் விபசாரியின் பிழைப்பினால் தன் வாழ்வை நடத்து பவனும் தன் ரோமத்திற்கு ஓர் ஆண்டு வீதம் சொள்ளுக் குண்டத்தில் கிடந்து யம தூதர்களால் அடிக்கப்பட்டுத் துக்கப் பட்டு கண்நோயும் சூலை நோயுமுடையவனாய் அவதிப்படும் ஜன்மமெடுத்து பிறகு சுத்தமாகிறான். மிலேச்சனிடம் பணியாற்று கிறவனும் கஷ்டப்படுத்தி ஜீவிப்பவனும் உருக்கிக் காய்ச்சிய ஈயக் குண்டத்தில் தள்ளப்பட்டு யமபடர்களின் தண்டனை வேதனை களோடு ஈயத்தையே அருந்தி மூன்று பிறவிகள் கறுப்புப் பசுவாகவும் மூன்று பிறவிகள் கறுப்பு ஆடாகவும் ஜனித்துப் பிறகு பனைமரமாகவும் பிறந்து சுத்தமடைவான். தேவ அந்தணோத்தமர் களின் உடமைகளை அபகரிப்பவன் சூர்ண குண்டத்தில் தள்ளப் பட்டு யம படர்களால் பொடிப் பொடியாக அடித்து நொறுக்கப் பட்டு பிறகு ஆட்டு ஜன்மமும் ஏழு பிறவிகளுக்கு கோழி ஜன்மமும் பிறகு குரங்கு ஜன்மமும் எடுத்து, பிறகு காச வியாதிக்காரனாகவும், வம்சஹீனனாகவும், வறியனாகவும், அற்பாயுளுடையவனுமாக மனிதப் பிறவியெடுத்து சுத்தி பெறுவான். சக்காரங்கிதஞ் செய்கிற வனும் ஹத்தியினால் பொருள் சம்பாதிப்பவனும் நூறு ஆண்டுகள் சக்ர குண்டத்தில் கிடந்து யம தண்டனைகளால் அவதிப்பட்டு மூன்று பிறவிகள் எண்ணெய் வாணியனாகவும், பிறகு வியாதியஸ்த னாகவும் ரோகியாகவும் ஜனித்துப் பிறகு சுத்தியடைகிறான். சாதுவான பசுவினிடமும் அந்தணரிடமும் வக்கிரமாக நடந்து கொள்பவன், வக்கிர குண்டத்தில் நூறு யுகங்கள் கிடந்து, பிறகு ஏழு பிறவிகள் உக்கிரமான அங்கமுடையவனாக வும் தரித்திரனாகவும் வம்சமற்றவனாகவும் மனைவியற்றவனாகவும் வாழ்ந்து அதன் பிறகு சுத்தமாவான். ஆமை மாமிசத்தைப் புசிக்கின்ற பிராமணன் கூர்ம (ஆன்மக்) குண்டத்தில் தள்ளப் பட்டு நூறு ஆண்டுகள் அவற்றால் கடிக்கப்பட்டு, மூன்று பிறவிகள் ஆமையாகவும் பூனையாகவும், பன்றியாகவும் மயிலாகவும் பிறவி யெடுத்துச் சுத்தமாவான். பிராமணோத்தமர்களின் தயிர், நெய், முதலானவற்றை திருடுபவன் ஜ்வாலா குண்டத்திலும் பனும குண்டத்திலும் தள்ளப்பட்டு நூறு ஆண்டுகள் அதிலேயே -ந்து கொதிக்கும் எண்ணெயில் வேக வைக்கப்பட்டு பிறகு ஏழு

பிறவிகளுக்கு மீனாகவும் எலியாகவும் ஜனித்து சுத்தியடை கிறான். சுகந்தமான தைலம், நெல்லிக்காய், வாசனைப் பொருள்கள் ஆகியவற்றைப் புண்ணிய தேசமாகிய பாரத தேசத்தில் திருடு பவன் காய்ச்சிய தக்த குண்டத்தில் தள்ளப்பட்டு இரவு பகலாக தன் ரோமத்திற்கு ஒரு வருஷம் வீதம் கொளுத்தப்பட்டு, ஏழு பிறவிகள் மூஞ்சூறாகவும் மூன்று பிறவிகள் கஸ்தூரி மிருகமாகவும், ஏழு பிறவிகள், புனுகுப் பூனையாகவும் ஜனனமெடுத்து அதன் பிறகு மனிதனாவான். பாரத நாட்டில், தன் தந்தையின் காலம் முதலாக அனுபவித்து வரும் பிறன் பூமியைத் தன் வலிமையாலோ வஞ்சனையாலோ ஹிம்சையாலோ அக்கிரமமாகப் பறித்துக் கொள்பவன் தக்த சூசி (காய்ச்சிய ஊசிக்) குண்டத்தில் தள்ளப் பட்டு, இரவும் பகலும் தவித்து, காய்ச்சிய எண்ணெயில் விழுந்த உயிர் துடிப்பது போல் துடித்து, உண்ண உணவுமின்றிக் கூவி யழுது, யமகிங்கரரால் அடிபட்டு துன்புற்று அறுபதினாயிரம் ஆண்டுகள் மலப் புழுவாக நெளிந்து, பிறகு பூமியில் தரித்திரனாகப் பிறந்து, துன்பங்களை அனுபவித்து, மீண்டும் அந்த சூசிக் குண்டத்திலேயே ஏழு மன்வந்த்ரம் வரை அவதிப்பட்டு பிறகும் பூமியற்ற தரித்திரனாய் பிறந்து, துன்பங்களால் அவதிப்பட்டுச் சுத்தனாகிப் பிறகு தன் சுயப் பிறவியை அடைந்து, சுய தர்மத்தை செய்ய முனைவான். கர்மானுபவமுள்ளவர்கள் எவ் வளவு இம்சைப்பட்டாலும் அழிவதில்லை!

## 34 பிரும்மஹத்தி, கோஹத்திக்குச் சமமான பாவங்களும் தண்டனைகளும்

யமதருமராஜன் மேலும் கூறியதாவது:—

''ஜீவிரக்கமில்லாமல் ஒரு ஜீவனைக் கத்தியால் வெட்டுபவனும் பணத்தாசையால் மனிதனைக் கொலை செய்பவனும் நரகலோகத் தில் கத்திகளையும் கொடுவாளையும் இலைகளாகக் கொண்ட அசிபத்ர (வாள் அலகு) வனத்தில், பதினான்கு இந்திரர் காலம் வரை கிடப் பான். அத்தகைய கொலைகாரப் பாபிகளில் எவர் பிராமணோத்த மரைக் கொலை புரிந்தார்களோ அவர்கள் நூறு மன்வந்தரகாலம் வரை, அந்த அசிபத்ர வனத்தில் கிடந்து கத்தியினால் நறுக்கப் பட்டும் உணவின்றி தவித்தும் யமதூதர்களால் அடிக்கப்பட்டும் நூறு பிறவிகள் புனுகுப் பூனையாகவும் நூறு பிறவிகள் பன்றியாகவும் ஏழு பிறவிகள் கோழியாகவும் ஏழு பிறவிகள் நரியாகவும், ஏழு பிறவிகள் புலியாகவும், மூன்று பிறவிகள் செந்நாயாகவும் ஏழு



பிறவிகள் தவளையாகவும் ஜனித்து எருமைக் கடாவாகவும் ஜன்மமெடுத்துப் பிறகு சுத்தி பெறுகிறார்கள். பட்டினங்களையோ நகரங்களையோ கிராமங்களையோ தீ வைத்துக் கொளுத்துகிறவன் க்ஷாரக் குண்டத்தில் தள்ளப்பட்டு மூன்றுயுகங்கள்வரை பாப தண்டனையை அனுபவித்து பிறகு கொள்ளிவாய்ப் பிசாசாக ஜனித்து, உலகெங்கும் திரிந்து. பிறகு ஏழு பிறவிகள் மலம் தின்னும் பிராணியாகவும், ஏழு பிறவிகள் புழுவாகவும், பெரும் சூலை வியாதிக்காரனாகவும் ஏழு பிறவிகள் குஷ்டரோகியாகவும் பிறந்து, பிறகு சுத்தமாவான். பிறர்மீதுபழிதூற்றி துன்புறுத்துபவனும் பிறரது குறையை வெளிப்படுத்துவதில் மகிழ்ச்சியடைபவனும் தெய்வங்களையும் பிராமணோத்தமர்களையும் நிந்திப்பவனும் சூசிமுகம் எனப்படும் ஊசி நுனிக் குண்டத்தில் மூன்று யுகங்கள்வரை அவதிப்பட்டுப் பிறகு தேள், பாமபு, ஆகிய பிறவிகளெடுத்துப் பிறகு வஜ்ர கிரீடப் புழுவாக ஏழு பிறவியும், ஏழு ஜன்மம் பஸ்மகீடப் புழுவாயும் ஜனித்துப் பிறகு பெரு வியாதிக்காரனாகவும் பிறந்து சுத்தமாவான் இல்லற தர்மிகளின் வீட்டில் ஆடுமாடுகளையும் இதரப் பொருட்களையும் திருடுபவன், நரகலோகத்தில் கோகா முகத்தில் தள்ளப்பட்டு மூனறு யுகம் தூதர்களால் அடிக்கப்பட்டு, பிறகு ஏழு பிறவிகள் வியாதியுள்ள பசுவாகவும் மூன்று பிறவிகள் ஆடாகவும் மூன்று பிறவிகள் செம்மறியாடாகவும் அலைந்து பிறகு மனித ஜன்மமெடுத்து நித்ய தரித்திரனாகவும், உற்றார் உறவினர் மனைவி மககள் எதுவும் இல்லாத சூன்யனாகவும் விரோத மனப்பான்மையாளனாகவும் திரிந்து அதன் பிறகு சுத்தமாவான். பசு, யானை, குதிரை, மரம் முதலியவற்றை வெட்டியொழிப்பவன் கஜதம்சம் என்ற யானை நரகில் தள்ளப்பட்டு யமகிங்கரர்களில் அங்குசத்தால் குத்தப்பட்டு மூன்று பிறவிகள் யானையாயும் குதிரையாயும் ஜன்மமெடுத்து பிறகு மிலேச்சனாகவும் பிறந்து சுத்தனாகிறான். நீரை அருந்தும் பசுவைத்

தடை செய்பவன் கோமுகத்தின் ஆகாரமுள்ளதும் புழுக்களுடன் காய்ச்சப்பட்ட ஜலமுள்ளதுமான கோமுகார நரகில் தள்ளப்பட்டு ஒரு மன்வந்தரம் தவித்து பிறகு பசுமாடில்லாத பரமதரித்திரனாக வும் ஏழு ஜன்மம் நீசனாகவும் ஜனித்துப் பிறகு சுத்திபெறுகிறான்.

பசுவதை பிரம்மஹத்திக்குச் சமமான பாவங்களைச் செய்பவ னும் புணரக்கூடாத மங்கையைப் புணர்பவனும் ஸ்திரீஹத்தி (பெண்வதை) புரிகிறவனும், யாசகனைக் கொல்பவனும் கர்ப்பத் தைச் சிதைப்பவனும் பதினான்கு இந்திரபதம் காலம் வரை நெருப் பால் காய்ச்சப்படும் கும்பீபாகம் என்னும் நரக குண்டத்தில் தள்ளப்பட்டு யமதூதர்களால் துன்புறுத்தப்பட்டு, நெருப்பிலும் முள்ளிலும் காய்ச்சப்பட்ட எண்ணெயிலும் கொதிக்கும் ஜலம், இரும்பு, தாம்பிரம் ஆகிய ஒவ்வொன்றிலும் மாறி மாறி ஒருகண நேரம் கிடந்து ஆயிரம் பிறவிகள் கழுதையாகவும் நூறு பிறவிகள் பன்றியாகவும் ஏழு பிறவிகள் காக்கையாகவும் ஏழு பிறவிகள் பாம்பாகவும் அறுபதினாயிரம் ஆண்டுகள் புழுவாகவும் பல பிறவிகள் குஷ்டரோகியாகவும் தரித்திரனாகவும் பிறந்து தவிப்பான்!

—இவ்வாறு யமதர்மராஜன் கூறிவரும் போது சாவித்திரி குறுக் கிட்டு யமனை நோக்கி, "தரும ராஜனே! பிரம்மஹத்திக்கும் கோ ஹத்திக்கும் (பசுவதைக்கும்) சமமான பாவங்கள் என்ன? எந்த மங்கை ஆடவனால் அனுபவிக்கத் தகாதவள், எவன் சந்தியை கைவிட்டவன். தீக்ஷிதம் இல்லாத பிராமணன் யார்? கிராம யாஜி யார்? விப்பிரன் யார்? தேவங்கன் யார்? சூத்திரனுக்குச் சமை யல் செய்பவனும், அவர்களுக்கு அடிபணிபவனும் சூத்திரமங்கைக் குக் கணவனாகின்றவனும் எப்படிப்பட்ட அடையாளம் உள்ளவர் கள்? இவற்றை விளக்கமாகச் சொல்லவேண்டும்!" என்று கேட் டான்.

யமதர்மன் கூறலானான் :—

"பரப்பிரம்மம் பரப்பிரம்மத்தின் இதர அர்ச்சனைப் பிம்பம் சிவம், சிவலிங்கம், சூரியன், சூரிய காந்திக்கல், விநாயகர், துர்க்கை, குரு, இஷ்ட தேவதை, தாய், பிரம்மஞானிகள், விப்ரபாததீர்த்தம், சாளக்கிராமத் தீர்த்தம், சிவ விஷ்ணு நிவேதனங்கள், சர்வேஸ் வரர், கிருஷ்ணமூர்த்தி சகல காரணங்களுக்கு காரணகர்த்தராக வும் அனைவருக்கும் ஆதியாயும் சகல தேவர்களுக்கும் தலைவராயும் சர்வாந்தர்யாமியாயும் மாயையினால் பற்பல உருவினராகவும் நிர்க் குணராயும் ஏகரூபியாயும் இருக்கும் கடவுள் சக்தி பக்தர்களான சாக்தர்கள் சக்தி சாஸ்திரங்கள் முதலானவற்றிடமும் பேத புத்தி யினால் தீவினைபுரிபவர்களும் வேதப் பிரதி பாத்யமான நித்தா் கடன்களையும் தேவதா பூஜைகளையும் கைவிட்டவர்களும் தூய்மை யான பொருட்களில் அதித் தூய்மையாயும் ஞானானந்த சொரூபி யாயும் அநாதியாயும் தேவர்களுக்கெல்லாம் தலைமையாகவும்

விளங்கு ஈசனே வழிபடாதவரும், நிந்திப்போரும் சர்வகாரணரூபி யாயும், காரணப் பிரம்ம சொரூபிணியாயும் சர்வசக்தி வடிவினளாகவும் அனைவருக்கும் அன்னையாகவும் விளங்கும் பிரகிருதி மகா தேவியை பழித்து தூற்றுவோரும், கிருஷ்ண ஜன்மாஷ்டமி, ஸ்ரீராம நவமி, மகா சிவராத்திரி, ஏகாதசி, ஞாயிற்றுக்கிழமை, பஞ்சபருவம் முதலான நாட்களில் விரத அனுஷ்டானங்களை கைவிட்ட சண்டாளராகிய பெரும் பாபிகளும், அம்புவாசியால் பூமியை வெட்டுவோரும், நீரில் சௌசம் முதலியவற்றைச் செய்வோரும், குரு, தாய், தந்தை கற்புகரசியான மனைவி, பிள்ளை, பெண், முதலானவர்களைக் காப்பாற்றமல் இருப்போரும், கலியாணமாகாதவரும், பிள்ளையின் முகத்தை ஏறெடுத்துப் பாராதவர்களும், ஈஸ்வரபக்தி யற்றவரும், இறைவன் வழிபாடு செய்யாதவரும், ஆண்டனுக்கு நிவேதனமாகாத அன்னத்தைப் புசிப்பவரும் ஈஸ்வரபக்தி இயற்ருதவரும் புண்ணியமான பார்த்திப லிங்க பூஜை செய்யாதவர்களும். பிரம்மஹத்தி செய்தவனுக்கு சமமாவார்கள் பசியோடு வந்தவனை துரத்தியவனும், பசு மந்தை நடுவிலும் பிராம்மணர் மத்தியிலும் குறுக்கிடுகிற தீயவனும் எருதின்மீது ஏறுகிறவனும் பசுவிற்கு எச்சில் இலைகளைக் கொடுப்பவனும், பசுவைத்தடியால் அடிப்பவனும் காலால் உதைப்பவனும் எருதின்மேல் ஏறுகிறவனுக்கு தின்னக் கொடுப்பவனும் எருதின்மீது ஏறுகிறவனின் அன்னத்தைப் சாப்பிடுபவனும் சூத்திரனுக்கு யாகஞ்செய்விப்பவனும் அவனுடைய அன்னததைச் சாப்பிடுபவனும் நெருப்பில் தன் பாதங்களை சூடுபடுத்திக் கொள்பவனும், கால்களைக்கழுவாமல் வீட்டுக்குள் பிரவேசிப்பவனும் காலில் எண்ணெயைப் பூசிக்கொண்டு படுப்பவனும் சூரியோதயத்தில் தின்பவனும், பிள்ளையும் கணவனும் இல்லாதவளது அன்னத்தைத் தின்பவனும் மூன்று சந்திகளை அனுஷ்டிக்காதவனும், கணவனிடமும் தெய்வத்திடமும் பேதப் புத்தி நினைக்கிற பெண்ணும், கொடூரமான வார்த்தைகளோடு குரூரமாகக் கணவனையே அடிக்கிற ஸ்திரீயும், பசுக்கள் மேயவருவதற்கு வழியில்லாமல் பயிரிடுவோனும் கோட்டையில் பயிரிடுபவனும் பசுவதை செய்ததற்குப் பிராயச் சித்தம் செய்யாதவனும் பாதுகாப்புக்குப் புத்திரனில்லாததாலோ மூடத்தனத்தாலோ பசுவை மாற்றிவிடுகிறவனும் பசுவை உண்டாக்கி வளர்த்து அரசனாலும் தெய்வத்தாலும் ஆபத்து வரும் காலங்களில் அப்பசுவைக் காப்பாற்றமல் துன்புறுத்தும் வெறியனும், தேவ பிம்பங்கள் பிராணிகள் அக்கினி, ஜலம், நைவேத்தியப் பொருட்கள், அன்னம் ஆகியவற்றைத் தாண்டுபவனும் ஸஸ்வன், நாஸ்தி என்று வாதிப்பவனும் வஞ்சிப்பவனும், பொய்யை மெய்யென்று விவாதித்து சாதிப்பவனும் பிராமணோத்தமர்களையும் ஆசிரியரையும் வெறுத்துத் தூற்றுபவனும் தெய்வவடிவமான பிம்பங்களையும் குருவையும் பதிவிரதையையும் கண்டவுடன் கும்பிடாதவனும், வணங்குபவரை வாழ்த்தி ஆசீர்வாதம் கூறுதவனும், மாணவனுக்கு



வித்தை கற்பிக்காதவனும் கோஹத்தி (பசுவதை) செய்தவருக்கு சமமானவராவார்கள்.

''மேலும் மனிதர்கள், வருணாசிரம முறைப்படி தத்தமது கு தர்மத்திற்குரிய மங்கையரையே அடையவேண்டும் என்று வே வித்துக்களும் வேதங்களும் விதித்திருக்கும் போது அதைப்பற்றி சிந்தனை செய்யாமல் அதற்கு மாறாகச் செய்வதும், சூத்திரர்க

பிராமணப் பெண்களையும், பிராமணர்கள் சூத்திரப் பெண்களையும் அடையக்கூடாது என்று வரையறுத்திருக்கும் போது, அதையும் எண்ணிப் பாராமல் அதையும் மீறி செய்வதும், செய்யக்கூடாதன வற்றைச் செய்வதும் பசுவைக்கொன்ற கோஹத்தி பாவத்தைக் கொடுக்கும் என்று பெரியோர்கள் சொல்வார்கள். சூத்திரன் பிரா மண மங்கையை அடைந்தாலும்; பிராமணமங்கை சூத்திரனை யடைந்தாலும் நூறு பிரம்மஹத்தியின் பலனை அடைந்து இருவரும் நரகலோகத்தில் கும்பிபாகத்தில் விழுவார்கள். சூத்திரமங்கை பிராமணனை அடைவாளானால் அவன் சூத்ரதின் தான் என்றும் அவன் பிறவியில் பிராமணனே என்றாலும் சண்டாளனிலும் மிக நீசனாகக் கருதப்படுவான். என்றும் பிதுர்களுக்கும் மற்றைய தேவர் களுக்கும் அவன் கொடுக்கும் பிண்டம் மலத்துக்குச் சமமானது என்றும் அவன் செய்யும் தர்ப்பணம் சிறுநீருக்கு சமமானது என் றும் அவனால் கொடுக்கப்பட்டவை பிதுர்க்களுக்கும் தேவர்களுக் கும் சேர்வதில்லை என்றும், கோடிப் பிறவிகளில் தேவார்ச்சனையினா லும் தவத்தாலும் சம்பாதித்த அவனது புண்ணியங்கள் எல்லாம் சூத்திர மங்கையின் மீது வைத்த காமமோகங்களாலும் சம்போகத் தாலும் நசித்து விடுகின்றன என்றும் சொல்வார்கள். சுராபானம் (மதுபானம் அருந்திய பிராமணன், மலத்தை தின்றவனும் சூத்திரனு மாவான் என்றும், தப்த முத்திரையினாலும் தப்த சூலத்தினாலும் தகிக்கப்பட்ட உடம்பையுடையவனும் ஏகாதசி விரத நாளில் அன்னம் உண்பவனும் கும்பீ பாகத்தை அடைவான் என்றும், குருபத்தினி, அரசனின் பத்தினி, மாமன் மனைவி, மாற்றாந்தாய், மருமகள், தகப்பனைப் பெற்ற பாட்டி, தாயின் சகோதரிகள்; மாமி, கர்ப்பஸ்திரீ, உடன் பிறந்த சகோதரிகள் சகோதரனின் மனைவி, பிதாக்களுடைய கன்னிகைகள், சிஷ்யை, மாணவனின் மனைவி, புத்திரனின் மனைவி, சகோதர புத்திரனுடைய மனைவி இவர்கள் எல்லாம் அடையத் தகாதவர்கள் என்று பிரமதேவர் கூறுவதால், அவர்களோடு கூடி மகிழ்கிறவனும் நூறு பிரம்மஹத்தி பாவ பலனை அடைவான் என்றும் வேதங்கள் விளக்குகின்றன. இத் தகைய பாபிகள் யாருமே ஒரு கர்மத்துக்கும் அருகதையற்றவர். தொடத் தக்கவருமல்ல. இவர்கள், உலகினராலும் வேதத் தாலும் இகழப்படுவார்கள். இவர்கள் நரகலோகத்தை அடைந்து கிஞ்சித்தும் கடக்க முடியாத கும்பீபாகத்தில் விழுந்து கிடப் பார்கள். எந்தப் பிராமணன் சந்தியை அசுத்தமாகச் செய்கிறானோ அல்லது செய்யாமல் கை விடுகிறானோ அவன் சந்தியா ஹீனன் என்று கூறப்படுகிறான். வைஷ்ணவம், சைவம், சாக்தியம், சௌரம், காணாபத்யம் முதலிய சம்ஹிதைகளை ஆணவத்தால் மதித்துப் போற்றாதவர்களும் அகங்காரத்தால் மந்திரங்களைக் கிரகிக்காதவர்களும் தீக்ஷிதமற்றவர்கள் என்று கூறப்படு வார்கள்.

பிரவாகத்தில் நான்கு முழங்கள் வரை எல்லையாக வைத்துக் கொண்டு ஸ்ரீ நாராயணர் வாசம் புரிவதால், அந்த நாராயண க்ஷேத்திரத்தில் மடிந்து போகிறவன் விஷ்ணு பதத்தை அடைவான். காசி, பதரிகாஸ்ரமம், கங்கை சமுத்திரத்தோடு சங்கமமாகும் இடம், புஷ்கரம், ஹரிஹரக்ஷேத்திரம், பிரபாசம், காமரூபஸ்தலம், ஹரித்துவாரம், கேதாரம், மாத்ருபுரம், ஸரஸ்வதி நதிக் கரை, பிருந்தாவனம், கோதாவரி, கௌசக நதி, திரிவேணி, இமாலயம் முதலிய தீர்த்தங்களிலும் வேறு தீர்த்தக் கட்டங்களிலும் பேராசையினால் தானம் வாங்கிக் கொள்பவன் கும்பீ பாகம் என்ற நரகத்தை யடைவான். சூத்திரனிடம் சேவகம் புரிபவனும், சூத்திரனுக்கு யாகஞ் செய்பவனும், கிராமப் புரோகிதனும், தேவதையால் பிழைப்பவனும், தேவலகனும் சூத்திரன் சமையலை சாப்பிடுபவனுமான அந்தணனும் சூபகாரன் என்று வழங்கப்படுவான். சந்தியக்ஞம் பூஜை முதலானவற்றைச் செய்யாத பிராமணர்கள் பிரமத்தர் பதிதர் என்று கருதப்படுகிறார்கள். பதிவிரதையான சாவித்திரியே! சூத்திர மங்கையுடன் தொடர்பு கொண்ட பிராமணனின் அடையாளங்களைக் கூறினேன். இனி குலடை முதலானவரின் சாபத்தைப் பற்றிக் கூறுகிறேன்; கேள்!'' என்றான் யமதர்மன்.

## பாபிகளும் நரக தண்டனைகளும்

யமதருமன் மேலும் தொடர்ந்து கூறலானான்:.

''தெய்வத் தொண்டு இல்லாமல் கர்ம நீக்கம் ஏற்படாது. சுத்தமான கர்மத்தால் சுத்தமான சுவர்க்கம் முதலான பயன்களும் கேடான கர்மத்தினால் நரக வாசமும் ஏற்படுகின்றன. பதிவிரதையான சாவித்திரியே! பும்ஸலி ரகப் பெண்ணின் சோற்றைத் தின்பவனும் பிற ஸ்திரீகளை கவர்ந்து கொள்பவனும் காலசூத்திரம் என்னும் நரகில் நூறு ஆண்டுகள் கிடந்து அதன் பிறகு மீண்டும் பிறந்து, வியாதிக்காரனாக அந்தக் கர்மத்தை அனுபவித்து சுத்தி பெறுகிறான். ஒரே கணவனுடன் சுகித்து வாழ்பவள் பதிவிரதை என்றும் இரண்டு புருஷரோடு குலாவியிருப்பவள் குலடை என்றும் மூவரோடு இருப்பவள் தர்ஷணி என்றும் நான்கு புருஷர்களை வைத்திருப்பவள் பும்ஸலி என்றும் ஐந்தாறு புருஷர்களை வைத்திருப்பவள் வேசி என்றும் ஏழுபேரோடும் எட்டு புருஷர்களோடும் இருப்பவள் யுங்கி என்றும் அதற்கும் அதிகமான புருஷர்களை வைத்திருப்பவள் மகாவேசி என்றும் வழங்கப்படுவார்கள். பதிவிரதையைத் தவிர மற்ற ரகப் பெண்களை அடைந்தனுபவிப்பவன் மச்யோத நரகத்தை அடைகிறான். மேற்கூறிய முறைப்படி

குலடை முதலான பெண் ரகங்களோடுக் கூடிக் குலாவிக் கிடப்பவர்கள் முறையே நூறு, நானூறு, அறுநூறு எண்ணூறு, ஆயிரம், பதினாயிரம் ஆண்டுகள் கும்பீபாக நரகில் யமபடர்களால் கடுமையான நரக வேதனைகளை அனுபவிக்கிறார்கள். அதுவுந் தவிர குலடையை அடைந்தவன் தித்திரிப் பறவையாகவும் தர்ஷணியை அடைந்தவன் காக்கையாகவும், பும்ஸலியை அடைந்தவன் குயிலாகவும் வேசியை அடைந்தவன் செந்நாயாகவும் புங்கையை அடைந்தவன் பன்றியாகவும் ஏழு பிறவிகளெடுத்து திரிவார்கள். மஹாவேசியை அடைந்தவன் இலவம் பஞ்சாகப் பிறக்கிறான். சந்திர, சூரிய காலங்களில் அன்னம் சாப்பிடுபவன் அன்னப் பருக்கை ஒன்றுக்கு ஓர் ஆண்டு வீதம் கிருமிகந்துகம் என்ற நரகில் கிடந்து உழல்வான். பிறகு பூமியில் வயிற்று வலியுடைய அந்தணனாகவும், குன்ம வியாதியை யுடையவனாகவும் பல்லில்லாதவனாயும் பிறந்து சுத்தி பெற்று பாவ நீக்கம் அடைவான். ஒருவனுக்குக் கொடுப்பதாக வாக்குறுதியளித்து விட்ட கன்னிகையை மற்றொருவனுக்குக் கொடுப்பவனும் அக்கன்னிகையை ஏற்றுக் கொள்பவனும் நரக லோகத்தில் பாம்ஸ குண்டத்தில் விழுந்து, அதையே தின்று நூறு ஆண்டுகள் யமதூதர்களால் அடித்து வதைக்கப்படுவான். பக்தியோடு பார்த்திலலிங்கத்திற்கு பூஜை செய்து வழிபடாத பிராமணன், யமகிங்கரர்களால் அடித்து வதைக்கப்பட்டு சரசை என்ற நரகில் கிடந்து சிவபெருமானின் கோபத்தால் சூலப்புரோதம் என்ற நரகத்தை அடைந்து அதில் நூறு ஆண்டுகள் கிடந்து, பின்னர் ஏழு பிறவிகள் கொடிய மிருகங்களாகவும் அதன் பிறகு ஏழு பிறவிகள் கூலிக்கு வேத பூஜை செய்பவனாகவும் ஜனித்து பரிசுத்தமடைவான் பிராமணோத்தமனை மிரட்டிப் பயமுறுத்தி அடக்குபவனும் பயத்தால் நடுநடுங்கச் செய்பவனும் பிரகம்பனம் என்ற நரகத்தில் ஒரு ரோமத்துக்கு ஒரு வருடம் வீதம் கிடப்பான். கணவனை அளவு மீறிய ஆத்திரத்தோடு பார்ப்பவளும் கொடூரமாகப் பேசுபவளும் உல்காமுக நரகில் தள்ளப்பட்டு, யமகிங்கரர்களால் வாயில் கொள்ளிக்கட்டை வைக்கப்பட்டு, தலையிலடிக்கப்பட்டு, பெருந் துன்பத்தை அனுபவித்து, ஏழு பிறவிகள் வரை அமங்கலிபோல் விளங்கும் விதவைத்தன்மையோடும் வியாதியோடும் கிடந்து சுத்தமடைகிறாள். சூத்திரனோடு கூடி அனுபவிக்கும் பிராமண மங்கை காய்ச்சிக் கொதிக்கும் சௌச நீரும் இருளும் நிறைந்த அந்த கூபம் என்ற நரகில் கிடந்து இரவும் பகலும் அந்த ஜலத்தையே குடித்து, என் தூதர்களால் அடிக்கப்பட்டு பதினான்கு இந்திரர் காலம்வரை அந்நரகிலே அவஸ்தைப்பட்டு பிறகு ஆயிரம் பிறவிகள் பெண் காக்கையாகவும், நூறு பெண் பன்றியாகவும் நூறு பெண் நரியாகவும் நூறு பெட்டைக் கோழியாகவும் பிறவிகளெடுத்து அதன் பிறகு ஏழு பிறவிகள் பெட்டைப் புறவாகவும், ஏழு பிறவிகள் பெண் குரங்காகவும், பிறகு நீசக் குலச் சண்டாளி



யாகவும், வண்ணுத்தியாகவும் க்ஷயரோகியாகவும் பும்சலியாக வும் குஷ்டரோகியாகவும், வாணிச்சியாகவும் பிறந்து அதன் பிறகு பரிசுத்தமடைவாள். வேசியோ வேதனம் என்ற நரகிலும், புங்கி ரகப் பெண் தாடனம், தண்டம் என்ற நரகங்களிலும் குலடை ரகப் பெண் தேவசூர்ண நரகிலும், மகாவேசி சாயாந் தரம் என்னும் நரகிலும், தன் மனம் போனபடியெல்லாம் திரியும் துஷ்டையான சுவைரிணி என்பவள் தனனம் என்ற நரகிலும், தர்ஷணி ரக ஸ்திரீ சோஷபனம் என்ற நரகிலும் கிடந்து ஒரு மன்வந்தர காலம்வரையில் யமகிங்கரர்களால் அடித்து வதைக்கப்பட்டு, மல ஜலங்களையே தின்று லக்ஷம் ஆண்டுகள் மலப் புழுக்களாகப் பிறந்து அதன் பிறகு சுத்திகரிப்பு அடை வார்கள். நாற்குலத்தினரில் அவரவர் குலத்திலேயே பரஸ்திரீ களைக் கூடியனுப்பவிப்பவர்கள் கஷம் என்ற நரகில் விழுந்து, பன்னிரண்டு ஆண்டுகள் அந்த நீரையே குடித்து பிறகு சுத்த மாவார்கள். அவ்வாறே பெண்களும் தன் தன் குலத்திலேயே பரபுருஷர்களை அனுபவித்தால் அவர்களும் அந்த நரக வேதனை களையே அடைவார்கள். க்ஷத்திரியரோ வைசியரோ பிராம்மண ஸ்திரீயைக் கவர்ந்தனுபவிப்பார்களேயானால், தாயை அனுபவித்த பாபிகளைப் போல பதினன்கு இந்திரர் காலம்வரையில் சூர்ப்ப நரகில் கிடந்து, சூர்ப்பாகாரமான புழுக்களால் கடிக்கப்பட்டு, கொதிக்க வைத்த சிறுநீரைக் குடித்து, நரககிங்கரர்களால் அடி பட்டு அவஸ்தைப்பட்டு ஏழு பிறவிகள் பன்றியாகவும் ஏழு பிறவிகள் சூத்திரராகவும் ஜன்மமெடுத்து அதன் பிறகு சுத்த மாவார்கள். கையில் துளசியை வைத்துக் கொண்டு சத்தியம்

செய்து விட்டுப் பிறகு அதை மீறிப் பொய் சத்தியம் செய்பவனும் கங்கை நீரையோ தெய்வம் பிம்பம் சிலை முதலானவற்றையோ கையில் வைத்து சத்தியம் என்று கூறி பிரதிஞ்ஞை செய்து விட்டுப் பிறகு சொன்னபடி செய்யாமல் கைவிடுபவனும் தன் வலது கையால் பிராமணோத்தமன், பசு, நெருப்பு முதலியவற்றைத் தொட்டும், திருக்கோயிலில் இருந்தும் சத்தியம் செய்து வாக் குறுதி கொடுத்ததைக் காப்பாற்றாதவனும், நட்புத் துரோகியும் நன்றி மறந்தவனும் நம்பியவரைக் கொன்றவனும் ஜ்வாலாமுகி என்ற நரகில் பதினான்கு இந்திரர் காலம்வரையில் விழுந்து கிடந்து, தீக்கொழுந்தால் கொளுத்தப்பட்டு என் தூதர்களால் அடிக்கப்பட்டு உபாதைப்படுவார்கள்; துளசியைத் தொட்டுச் சத்தியஞ் செய்து, அதை மீறியவர் ஏழு பிறவிகள் சண்டாள ராகவும், கங்கையைத் தொட்டு செய்த சத்தியத்தை மீறியவர் ஐந்து பிறவிகள் வரை மிலேச்சராகவும், தெய்வச் சின்னத்தை தொட்டுச் செய்த சத்தியம் தவறியவர் ஏழு பிறவிகள் மலப் புழு வாகவும், தேவ பிம்பத்தைத் தொட்டு சத்தியம் தவறியவர் ஏழு பிறவிகள் பிரமர கிருமியாகவும் வலக் கையைத் தொட்டுச் செய்த சத்தியம் தவறியவர் ஏழு பிறவிகள் பாம்பாகவும், தேவாலயத்தில் செய்த சத்தியம் தவறியவர் ஏழு பிறவிகள் கூலிக்குத் தெய்வ பூஜை செய்பவராகவும் பிராமணர் முதலானவர்களைத் தொட்டுக் கூறிய சத்தியத்தில் தவறியவர் ஏழு பிறவிகள் வரை புலியாகவும் மூன்று பிறவிகள் செவிடாகவும் ஊமையராகவும் உற்றார் உறவினர் இல்லாத வம்ச பரம்பரையற்ற சூன்யராகவும் பிறந்து, அதன் பிறகு பரிசுத்தராகிறார்கள். நட்புத் துரோகம் செய்தவன் கீரிப் பிள்ளையாகவும் நன்றி மறந்தவன் முட்செடியாகவும் நம்பியோரை கொன்ற விசுவாச காதகன் ஏழு பிறவிகள் புலியாகவும், பொய் சாட்சிக் கூறிய கொடியவன் ஏழு பிறவிகள் தவளையாகவும் ஜன்ம மெடுத்து அதன் பிறகு சுத்தி பெறுகிறார்கள்.

நித்திய கர்மங்களைக் கைவிட்ட பிராமணன் தன் குலத்தில் முன் ஏழு சந்ததிகளையும் பின் ஏழு சந்ததிகளையும் பாதிப்பவனாகி, ஜடவஸ்து போன்ற தன்மையுடையவனாய், வேத வாக்குகளில் நம்பிக்கையற்ற விரோதியாய், விரதங்கள் முதலானவற்றைக் கை விட்டவனாய், சத்புருஷருடைய சொற்களை இகழ்பவனாய், வீண் சிரிப்புடையவனாய், காரணமின்றிப் பிறரை நிந்தித்து தூற்று பவனாய், பூவுலகில் தடுமாறி கெட்டலைந்து பிறகு புகையிருள் சூழ்ந்த தூமாந்த நரகில் தள்ளப்பட்டு அதிலேயே நூறு ஆண்டுகள் விழுந்து கிடந்து அங்கு புகையையே விழுங்கித் தின்று, மறுபடியும் நூறு பிறவிகள் மீன் முதலிய நீர் வாழ்வன வாகவும் ஜனனமெடுத்து அதன் பிறகு பரிசுத்தமாகிறான். வேதப் பிராமணனை ஏளனம் செய்து வருத்துபவன் தன் குலத்தைச் சேர்ந்த பத்துத் தலைமுறை முன்னோர்களையும் பத்துத் தலை

முறைப் பின்னோர்களையும் நரகில் தள்ளியவனும், தானும் அந்த தூர்மாந்த நரகத்தில் விழுந்து கிடந்து அந்நரகில் மண்டியிருக்கும் புகையிருளினால் வாட்டப்பட்டு வருந்தி அந்த புகையையே விழுங்கித் தின்று நானூறு ஆண்டுகள் வசித்து அவஸ்தைப்பட்டு அதன் பிறகு ஏழு பிறவிகள் எலி ஜன்மமாகப் பிறந்து, பலவிதமான பறவைகள், புழுக்கள், மரங்கள், மிருகங்களாகவும் ஜன்மங்கள் எடுத்து அதன் பிறகே மறுபடியும் மனிதனாகப் பிறக்கிறான். பிராமணனாகப் பிறந்து ஜோதிடத்தினாலும் வைத்தியத்தாலும் அரக்கு முதலிய உலோகங்களையும் பழரசங்களையும் விற்று வருவதாலும் பிழைப்பு நடத்துகிறவன் நாகப் பாம்புகள் சூழ்ந்திருக்கும் நாக வேஷ்ட நரகில் தள்ளப்பட்டு நானாவிதச் சர்ப்பங்களால் சுற்றப்பட்டு, ரோமத்துக்கு ஓர் ஆண்டு வீதம் அந்நரகிலே கிடந்து அதன் பிறகு பறவை ஜன்மங்களாகப் பிறந்து, ஏழு பிறவிகள் கணக்கனாகவும் வைசியனாகவும் இடையனாகவும் வேலைக்காரனாகவும் ஜனனமெடுத்து அதன் பிறகே சுத்தனாகிறான். பதிவிரதையான சாவித்திரியே! பிரபலமான முக்கிய நரக குண்டங்களையும் அவற்றை அடையக் கூடிய பாவிகளையும் பற்றி நான் கூறினேன். இன்னும் பல சிறு நரக குண்டங்கள் உள்ளன. அவற்றில் சாதாரணமான பாவச் செயல் புரிந்தோர் போய் விழுந்து துக்கம் அனுபவித்து, :பலவித பிறவிகளை எடுக்கிறார்கள். இனி நீ என்ன தெரிந்து கொள்ள வேண்டுமோ அதைக் கேட்கலாம்!'' என்றான் யமதர்ம ராஜன்.

## 86 நரக வேதனை இல்லாதவர்கள்

சாவித்திரி யமதர்ம ராஜனை நோக்கி, ''மகாத்மாவே! வேத வேதாந்தங்கள் அனைத்தின் திறனையும் அறிந்த தர்ம தேவரே! புராணங்களின் சாரமாயும் இதிகாசங்களின் ஆதாரமாயும், கர்மபந்தத்தை அகற்றியொழித்து அனைவருக்கும் ஆனந்தம் தருவதாயும், போற்றிப் புகழ்வதற்கு உரியதாயும் சுகத்தையும் சர்வாபீஷ்டத்தையும் சகல மங்களங்களையும் வழங்கத்தக்கதாயும் எது இருக்கிறது? எதனால் மனிதர்கள் அச்சமும் துயரமும் அடைய மாட்டார்களோ, நீங்கள் வர்ணித்த நரகங்களில் எதனால் விழாமல் இருப்பார்களோ, அவற்றைக் கண்ணாலும் பார்க்கவும் மாட்டார்களோ, எதனால் ஜனன மரணம் முதலான கட்டுத்தளைகள் ஏற்படாவோ அதைச் சொல்ல வேண்டுகிறேன். மேலும் நரக குண்டங்கள் எவ்விதம் அமைக்கப்பட்டன? அந் நரகங்களில் பாவிகள் எந்தெந்த உருவங்கொண்டு அனுபவிக்கிறார்கள்? பூலோகத்தில் மனிதர்கள் சாம்பலாகும்போது வேறு லோகங்களுக்கு எப்படிப் போய்ச்



சேர்கிறார்கள்? அங்கு போனதும் எந்தெந்த தேகங்களால் சுப அசுப கர்மங்களை அனுபவிக்கிறார்கள்? நெடுங்காலம் துயரத்தை அனுபவித்தும் எது அழிவதில்லை? அந்தத் தேகம் எப்படிப்பட்டது? இவற்றை எனக்குத் தெளிவாகச் சொல்ல வேண்டும்!'' என்று கேட்டாள்.

யம தர்மன், இறைவனை நினைத்து விட்டு, கூறலானான்.:

''வேதங்கள் முதலியவற்றில் கூறப்பட்டதாயும், பக்தி என்ற மரத்தை முளைக்கச் செய்வதாயும், கர்ம உருவமான வினை மரத்தை வெட்டிச் சாய்ப்பதாயும், முக்தியுலகத்திற்கு ஏறும் சோபானமாயும், சாலோகம் (சிவவுலகு) சாமீப்யம் (சிவனுருவம்) சாரூப்யம் (இறைவனருகிருப்பு) சாயுச்சியம் (சிவப் பேறடைவு) முதலான பதவிகளை வழங்குவதாயும் உள்ளவற்றைக் கூறுகிறேன்; கே

''கணேசர் முதலிய பஞ்ச தேவதா பூஜை, தேவி பகவதியின் திருப்பெயர்களைப் பாடும் நாம சங்கீர்த்தனம், தேவியை மறவா ஆழ்ந்த பக்தி, புண்ணிய தீர்த்த ஸ்நானம், பகவானுக்கு தினசரி பூஜை, திரிசந்திகளிலும் செய்ய வேண்டிய நித்திய கர்மங்கள், தேவி திருத்தொண்டில் அக்கறை, தன் வர்ண (குல) தர்மத்திலும் ஆஸ்ரம தர்மத்திலும் தவறாதிருத்தல், சிவபெருமானை உபாசித்தல், சிவன் முதலான தேவதா மந்திரோபாசனை, எல்லாத் தெய்வங்களையும் விட மேலான தேவி மந்திர உபாசனை, தேவ பூஜைகளில் அடிக்கடி மதுவர்க்க நிவேதனஞ் செய்தல் முதலியனவற்றைத் தொடர்ந்து தவறாமல் செய்து வருபவர்கள் யமதூதர்களால் தண்டிக்கப்படமாட்டார்கள். என்னுடைய நரக லோகத்திற்கும்

வரமாட்டார்கள். பாபக் கணக்கு எழுதும் சித்திர குப்தன் அவர்களுடைய பாவ புண்ணியங்களை எழுதுவதற்கும் பயப்படுவான். பூலோகத்தை விட்டுக் கால முடிவில் பிருமதேவரின் சத்திய லோகத்திற்கு மேம்பட்ட இடத்திற்கே செல்வார்கள். அவர்களுடைய ஸ்பரிசம் பட்டதுமே சகல பாவங்களும் அழிந்தொழிந்து விடும். ஆயிரங் குலத்தைத் தூய்மை செய்யத் தக்க அவர்கள் தான் பாக்கியசாலிகள். சுடர் விட்டெரியும் பெரு நெருப்பில் உலர்ந்த கட்டைகளையும் சருகுகளையும் போட்டால், அவை எப்படிச் சாம்பலாகி, உருத் தெரியாமல் அழிந்து போகுமோ, அது போலவே அவர்களைப் பார்த்தாலே பாபங்கள் எரிந்தொழியும்! காமம், குரோதம் முதலானவையெல்லாம் அவர்களைப் பார்த்ததும் பறந்தோடி மறைந்து விடும். பயம், ரோகம், சோகம், காலம், அசுபம், துக்கம், மதப்பு முதலானவை அனைத்தும் அவர்களைக் கண்டால் விலகி ஒளிந்து கொள்ளும்.

"இனி தேகத்தைப் பற்றிக் கூறுகிறேன்: கேள். பிரிதிவி (நிலம்) முதலிய பஞ்ச பூதங்களின் காரியச் சேர்க்கையிலிருந்துதான் மனித தேகம் காரிய உருவாயிற்று: பூதங்கள் நாசமடையக் கூடியவை. ஆகையால் காரிய உருவமான தேகவுருவும் நாசமுறும். ஆகையால் தேகியான ஜீவன் தன் தேகத்தை விட்டுப் போனால், தேகம் நாசமடைந்து சாம்பலாகி விடுகின்றது. பூத சம்பந்தமான ஸ்தூல தேகத்தை (பருவுடலை) நீத்துவிட்ட தேகியான ஜீவன் அங்குஷ்ட (பெரு விரல்) அளவுள்ள சூக்ஷ்ம தேகத்தோடு (நுண்ணுடலோடு) யமலோகத்தை அடைந்து, அங்கு அக்கினி மயமாகப் பிரகாசிக்கும் யாதனா சரீர வாசியாகிறான். அந்த சரீரத்தின் வலிமையினால், அங்கு செய்யப்படும் முன் நரக தண்டனைகளாலும் நரக குண்ட வேதனைகளாலும் விளையக் கூடிய சகிக்கவொண்ணா மிகப் பெரிய துன்பங்களையெல்லாம் தாங்கிக் கொண்டு அனுபவிக்கும்படியான நிலையை அடைகிறான். அந்தச் சரீரம் எவ்வளவு துன்பங்களாயினும் அந்நரகங்களில் அனுபவிக்குமே தவிர, அவற்றால் அழிவுறுவதில்லை. இனி, நரக குண்ட அளவைகளைக் கூறுகிறேன், கேள்.

## 37 நரக குண்டங்கள் 86

பிரளயம் துவங்கும் காலம்வரையில் அழிவுறாமல் இருக்கும்படி நரக குண்டங்கள் பகவானால் ஏற்படுத்தப்பட்டன. அவை முழு நிலாவின் மண்டலம் போல் மிகப் பெரியதாகவும் ஆழமான பள்ளம் உள்ளனவாகவும், பலவிதமான வேறுபாடுகள் வாய்ந்த

பாஷாணக் கற்களால் நெருப்பைப் போல் சுட்டெரிப்பனவாகவும், பாவிகள் கண்டாலே பயத்தை யுண்டுபண்ணுவனவாகவும் அமைந் திருக்கின்றன. அவற்றில் அக்னி குண்டம் என்பது இரண்டு காத தூர அகலமும் நூறு முழம் உயரமும் கொண்ட அளவிற்கு கொழுந்து விட்டெரியும் நெருப்புக் கனல்களைக் கொண்டிருக்கும். அதன் நாற்புறமும் நெருங்குபவரையெல்லாம் சுட்டெரிக்கும். அதில் பாபிகள் தள்ளப்பட்டு பாபிகளாலேயே நிறைந்து அவர்கள் அலறல்கள் பெரிதாக எழுந்து கொண்டேயிருக்கும். அதில் பாபி களை யமகிங்கரர்கள் அடித்துத் தள்ளிக் கொண்டே காவல் புரிவார்கள் தப்த குண்டம் என்பது ஒரு காத தூரம் அகலமுடையது. அதில் கொதி நீரும் துஷ்ட ஜந்துக்களும் யமபடர்களின் பலமான அடிகளால் பாபிகள் எழுப்பும் ஆ ஊ என்ற கூச்சல்களும் நிறைந் திருக்கும் க்ஷார குண்டம் என்பது ஒரு காத தூரம் விஸ்தீரண முடையது. நெருப்பில் காய்ச்சிய உப்பு நீர் அதில் நிறைந்திருக்கும். அதில் தள்ளப்படும் பாவிகள் காக்கைகளால் சூழப்பட்டும், தூதர்களால் அடிப்பட்டும், "ஐயோ காப்பாற்றுங்கள்! ஐய்யய்யோ காப்பாற்றுங்கள்!" என்று கூச்சலிட்டுக் கொண்டிருப்பார்கள். மல குண்டம் என்பது இரண்டு காத தூரம் பரப்புடையது. புழுக்க ளோடு சகிக்கொண்ணாத துர்நாற்றமும் நிரம்பியது. தூதர்களிடம் அடிபட்டு மலப் புழுக்களை தின்கிற பாபிகளும், அதிலுள்ள புழுக்களால் தின்னப்படும் பாபிகளும் அந்நரகில் உபாதைப் படுவார்கள். சிறுநீர்க் குண்டம் என்பது நான்கு காத விஸ்தீரண முள்ளதாய், கொதிக்க வைத்த சிறு நீராலும் கிருமிகளாலும் நிரம்பி யிருக்கும். அக்கிருமிகளால் பாபிகள் அரித்துத் தின்னப்பட்டவர் களாய் காய்ந்து வறண்ட தாடை கழுத்து முதலானவற்றோடு யம தூதர்களால் அடிக்கப்பட்டு அலறித் துடித்துக் கூச்சலி வார்கள். சிலேஷ்ம (சளிக்) குண்டம் என்பது சிலேஷ்மத்தாலும் புழுக்களாலும் பாபிகளாலும் நிறைந்திருக்கும். விஷ குண்டம் என்பது ஒரு காத தூரம் அகலமுடையது. அதில் தள்ளப்படும் பாவிகள் அதிலுள்ள விஷத்தைச் சாப்பிட்டும், விஷப் பூச்சிகளால் தின்னப்பட்டும், பாம்பு போன்ற ஆகாரத்தோடும் வைரம் போன்ற பற்களுள்ள பாபிகளால் நிரம்பியிருக்கும். நேத்ர குண்டம் என்பது ஒரு காத தூர அகலத்தோடு பொறுக்க முடியாத சிலை நீரால் நிரப்பப்பட்டு அதையே புசிக்கிற பாபிகளால் நிரம்பியிருக்கும். சுக்கில குண்டம் என்பது ஒரு காத விசாலமுள்ளதாய் சுக்கிலமும் புழுக்களும் நிரப்பப்பட்டிருக்கும். அப்புழுக்களால் அரிக்கப்பட்டு பாபிகள் அதில் நரக வேதனை அனுபவிப்பார்கள். ரத்த குண்டம் என்பது மிகவும் ஆழமான ஒரு ரததக் குளமாகவும் பாபிகள் நிறைந்தும் காணப்படும். காதரமல குண்டம் என்பது மானுட உடம்பின் மலத்தாலும் தூதரால் அடித்து வதைக்கப்பட்டு வருந்தும் பாவிகளாலும் நிரம்பியிருக்கும். அவர்களைப் புழுக்கள் தின்று கொண்டிருக்கும். கண்ணீர்க் குண்டம் என்பது நான்கு



தடாக அளவு விஸ்தீரணத்தோடும் புழுக்களோடும் அவைகளால் உண்ணப்பட்டுக் கதறியழும் பாவிகளோடும் நிறைந்திருக்கும். கர்ணமல (காதுக் குறும்பிக்) குண்டம் என்பது நான்கு தடாக அளவு அகலத்தோடும் காதுக் குறும்பி மலத்தாலும் பெரிய புழுக் களாலும், அவற்றால் அரித்துத் தின்னப்படும் பாவிகளாலும் நிறைந் திருக்கும். மஞ்ஜை குண்டம் என்பது நான்கு ஏரி அளவு விஸ்தீ ரணத்தோடும் வெள்ளை மாம்சத்தோடும் அதன் கெட்ட வீச்சத் தோடும் நிரம்பியிருக்கும். மாமிச குண்டம் என்பது ஒரு குளம் அளவு விஸ்தீரணத்தோடு உருகிய மாமிசமுடையதாகவும் அதையே தின்னும் பாபிகளாலும் புழுக்களால் தின்னப்படுகிற பாபிகளாலும், கன்னிகைகளை விற்பனை செய்த பாபிகளாலும் நிறைந்திருக்கும். நக குண்டம், லோம குண்டம், கேச குண்டம், அஸ்தி குண்டம் என்பவை நான்கு வாவி அளவு விஸ்தீரணத்தோடு பயங்கரமான யமகிங்கரர்களால் ஓயாமல் அடிபடும் பாவிகளோடும் நிரம்பி யிருக்கும். தாம்பர குண்டம் என்பது நான்கு காத தூர விஸ்தீ ரணமுள்ளது. மேலே நன்றாய்க் கொழுந்து விட்டெரியும் கொள்ளிக் கட்டைகளையும் நெருப்பில் பழுக்கக் காய்ச்சிய லக்ஷக் கணக்கான பதுமைகளையும் கொண்டது. அப்பதுமைகள் ஒவ்வொன்றையும் பாபிகள் கட்டித் தழுவிக் கொண்டும் கதறியழுது கொண்டும் கிடப்பார்கள். லோஹ குண்டம் என்பது நான்கு காததூர அகல நீளமுடையது. நன்றாகப் பழுக்கக் காய்ச்சிய இரும்பை ஆதார மாகக் கொண்டது. பொறி பறக்கும். நெருப்புத் தணலும் அத் தகைய இரும்புப் பதுமைகளாலும் நிறைந்தது அப்பதுமைகளால் பாபிகள் கட்டித் தழுவப்பட்டு, அழுது கொண்டிருப்பார்கள். சர்ம (தோல்) குண்டம் என்பதும் தப்த சுரா குண்டம் என்பதும் அரை வாவி அளவுடையதாய், தூதர்களால் அடிக்கப்பட்டு,

அவற்றையே தின்னும் பாவிகளால் நிறைந்திருக்கும். சான்மலி குண்டம் என்பது லட்சம் ஆள் அளவு ஆழமும் இரண்டு காத தூரம் அகலமும் கொண்டு வில் போல் வளைந்த கூர்மையான முட்களால் சூழப்பட்டுப் பயங்கரமாக மின்னும் அங்கு பாபிகள் யமதூதர்களால் மரங்களிலிருந்து தள்ளப்பட்டு, கீழே விழுகிறவர்களாகவும் காயம் பட்டவர்களாகவும் ''குடிக்க நீர் கொடுப்பீர்களா?'' என்று கூச்சலிடுபவர்களாகவும் தாகத்தால் நெஞ்சு வறண்டு கூக்குரலிடுபவர்களாகவும் யமகிங்கரர்களின் தடிகளால் பிளக்கப்பட்ட தலைகளையுடையவர்களாகவும், கொதிக்கும் எண்ணெயைக் குடித்து உயிர் வாழ்பவர்களாகவும் காணப்படுவார்கள். விஷநீர்க் குண்டம் என்பது தக்ஷ சர்ப்பங்களின் விஷ நீர்கள் நிரப்பப்பட்டதாகவும் இரண்டு காத தூரம் அகலமுள்ளதாகவும் அங்குள்ள விஷ நீரையே குடித்து, யமதூதர்களால் அடித்து வதைக்கப்படும் பாபிகள் நிறைந்ததாகவும் விளங்கும். தைல குண்டம் என்பது கொதிக்க வைத்த எண்ணெய் நிரம்பியதாய், தளதளவென எரியும் தணல்கள் சூழ்ந்து நிறைந்ததாய், பயத்தால் விகாரமாய் கூச்சலிடும் பாபிகளாலும் யமகிங்கரர்களால் அடிக்கப்பட்டு ஓடுகிற பாபிகளாலும் நிறைந்திருக்கும். குந்த குண்டம் என்பது இரண்டு காத தூரம் அகலமுடையது. காட்டுத்தனமான கும்மிருட்டோடு கூடியது. பயத்தையும் துக்கத்தையும் வலிந்தூட்டுவது: அது சூலாகாரமாகவும் கூர்மையான நுனியுள்ளதாகவும் இரும்பாயுதங்கள் நிரம்பியதாகவும் கத்தி, முதலிய ஆயுதங்களால் உருவாக்கிய படுக்கைகள் மயமாகவும், பாபிகள் நிறைந்ததாகவும் விளங்கும். கிருமி குண்டம் என்பது எட்டு காத அளவு விஸ்தீரணமுள்ளது. கட்டுவிரியன் பாம்புகளைப் போல் நீளமாகவும் பயங்கரமாகவும் கூர்மையான பற்களோடு, விகாரமாகவும் சஞ்சரிக்கும் புழுக்களும், தூதர்களால் துன்புறுத்தப்பட்டுக் கழுத்தும் தாடைகளும் வறண்ட பாபிகளும் இக்குண்டத்தில் நிரம்பியிருப்பார்கள். பூய—குண்டம் என்பது எட்டு காத தூரம் விஸ்தீரணமுள்ளது; அதையே புசிக்கும் பாபிகளால் நிரம்பியது. சர்ப்ப குண்டம் என்பது பனை மரம் போன்ற கோடிக் கணக்கான சர்ப்பங்களால் உடல் கட்டுண்டு கிடக்கும் பாபிகளாலும் அச்சர்ப்பங்களால் கடித்து தின்னப்பட்டும், தூதர்களால் அடிக்கப்பட்டும் அலறும் பாவிகளாலும் நிறைந்திருக்கும். மசக குண்டம்; தப்த குண்டம், விருஷ குணடம் என்பன ஒவ்வொன்றும் அரை குரோசம் அளவுடையதாகவும், கொசுக்கள் நிறைந்ததாகவும்; யமகிங்கரரால் கை கால்கள் கட்டப்பட்டு அடிக்கப்படும்போது அவ்வடிகளைத் தாங்க முடியாமல் கூச்சலிடும் பாவிகளும், அடிகளால் பீறிட்டு வரும் இரத்த வெள்ளத்தில் முழுகி; ''ஆ! ஐய்யோ!'' என்று அலறும் பாவிகளும் நிரம்பியதாக இருக்கும். வஜ்ரதம்ஷ்ட்ர குண்டம்; விருச்சிக (தேள்) குண்டம் என்பன அரை வாவி பரப்புள்ளதாய் பாவிகளால் நிறைந்திருக்கும் பாண குண்டம், சூல குண்டம் கத்தி குண்டம் என்ற மூன்று குண்டங்கள் ஒவ்



வொன்றும் அரை வாவி பரப்புடையதாகவும் அவ்வவ்வாயுதங்களால் நெருக்கப்பட்டு, ரத்த மயமான உடம்போடு வேதனைப் படும் பாவிகளால் நிறைந்ததாகவும் விளங்கும். கோளகுண்டம் என்பது அரை வாவி பரப்புடையதாகவும் பயங்கர இருளும், கொதிக்கக் காய்ச்சிய நீரும் பாவிகளைத் தின்னும் புழுக்களும் நிறைந்ததாகவும் இருக்கும். நக்ர குண்டம் என்பது ஒரு குரோசம் விஸ்தீரணமுள்ளது. அது அநேக முதலைகளால் நிரப்பப்பட்டு, துர்நாற்றம் மண்டி பாவிகளுக்குப் பெரும் துயரமூட்டும். காக (காக்கை) குண்டம் என்பது அரை வாவி பரப்புள்ளது. மலமூத்திர சிலேஷ்மங்களும் அவற்றை தின்னும் பாவிகளும், காக்கைகளால் கொத்தப்பட்ட விகாரமான தோற்றமுள்ள பாவிகளும் அந்தக் குண்டத்தில் நிறைந்திருப்பார்கள். மந்தான குண்டம் என்பதும் பீஜகுண்டம் என்பதும் நூறுவில்லளவு விஸ்தீரணத்தோடு அவற்றிலுள்ள இழிபொருட்களையே தின்று கூச்சலிடும் பாவிகள் நிறைந்திருக்கின்றன. வஜ்ர குண்டம் என்பது நூறு வில்லளவு பரப்புடையதாகவும் இருளும் வஜ்ர பூச்சிகளும் நிறைந்திருப்பதாகவும் அவற்றால் தின்னப்படும் பாவிகள் வேதனைப்படும் இடமாகவும் அமைந்திருக்கிறது. தப்த பாஷாண குண்டம் என்பது இரண்டு வாவி பரப்புள்ளது. அது சிவந்த தணலை வீசும் சுடு கற்களாலும் அவற்றால் வேதனைப்பட்டுத் துடிதுடிக்கும் மகாபாவிகளாலும் நிறைந்திருக்கும். தீக்ஷ்ண பாஷாண குண்டம் என்பது கூர்மையான கத்தி முனைகளைப் போன்ற கூட்டுக் கற்களாலும், அவற்றால் வேதனைப்படும் பாவிகளாலும் நிறைந்திருக்கும். லாலா குண்டம் என்பது ஒரு குரோச பரப்புடையது. மசீ குண்டம் என்பது நூறு வில் அளவை பரப்புடையதாகவும், கொதிக்கக் காய்ச்சிய மையாலும் அதில் தள்ளப்பட்டுத் தவி தவிக்கும் மலை

போன்ற கருநிற பாவிகளாலும் நிறைந்திருக்கும். சூரண குண்டம் என்பது ஒரு குரோச பரப்புடையதாய் அதையே புசிக்கும் பாவி களால் நிறைந்திருக்கும். சக்கர குண்டம் என்பது குயவனின் சக்கரம் போன்ற பதினாறு வட்டைகளோடும் அதில் அகப்பட்டுத் துன்புறும் பாவிகளோடும் எப்போதும் சுற்றிச் சுழன்று கொண்டே யிருக்கும் வக்ரகுண்டம் என்பது இரண்டு கவ்யூதி அளவோடு ஆழமாகவும் பலப்பல வளைவுகளமைந்த குகைகளைக் கொண்ட தாகவும், கொதி நீரும் பாவிகளைப் புசிக்கும் புழுக்கள் நிறைந்த தாகவும் விளங்குகிறது. கூர்ம குண்டம் என்பது பளபளவெனப் பிரகாசித்து பயங்கரமாயும் பாவிகளைக் கடித்துத் தின்று இரை கிற எண்ணற்ற ஆமைகள் நிறைந்ததாயும் இருக்கும். ஜ்வாலா குண்டம் என்பது ஒரு குரோசம் பரப்பளவோடு அமைந்து. அதில் தள்ளப்படும் பாவிகள் பயந்தும் வருந்தியும் கூச்சலிடுகிற துயரக் கூக்குரல்களோடும் நிறைந்திருக்கும், பஸ்ம குண்டம் என்பது ஒரு குரோசம் அளவு ஆழமுடையதாக அமைந்து சுடு சாம்பலும் அதையே சாப்பிடும் பாவிகளும் நிறைந்ததாக இருக்கிறது. தக்க குண்டம் என்பது சுடு கற்களும் கொதிக்கும் இரும்பும், அதில் வேகப்படும் பாவிகளும் நிறைந்து, ஒரு குரோசம் பரப்போடும், இருள் நிறைந்ததாகவும் பயங்கரமாகவும் இருக்கும். தப்த சூசி என்பது இரண்டு கவ்யூதி பரப்போடு அமைந்து பழுக்கக் காய்ச்சிய உப்பு நீராலும் அந்தகாரத்தாலும் நீர்ப் பிராணிகளாலும் அவை களால் தின்னப்படும் பாவிகளாலும் நிறைந்திருக்கும். அசிபத்திர வனகுண்டம் என்பது அரை குரோசம் விஸ்தீரணமுடையதாய் வாள் அலகு இலைகளைக் கொண்ட யானை விளங்கி என்ற மரத்தின் அடியில் இருக்கும். அந்த மரத்திலிருந்து விழுகிற கத்தி போன்ற இலைகளால் தாக்குண்டு வேதனைப்படும் பாவிகளாலும், மரத்தின் உச்சியிலிருந்து தள்ளப்பட்டு, 'ஐய்யய்யோ! காப்பாற்றுங்களேன்!' என்று கூவிக் கூச்சலிடும் பாவிகளாலும் நிறைந்திருக்கும். க்ஷுர தாரம் என்பது, நூறு வில் அளவு பரப்போடு கூரிய கத்தி முனைகள் போன்ற பலவிதமான ஆயுதங்களையுடையதாய், அதில் தள்ளப் பட்டு இரத்தத்தில் மூழ்கித் தத்தளிக்கும் பாவிகளுடன்பயமுறுத்தும். சூசி முகம் என்பது ஐந்து வில் வளவு உயரமும் ஊசி முனை முள்ளும் உடையதாய் மிகவும் பயத்தை விளைவிக்கும். கோகா முகம் என்பது இருபது வில்லளவுள்ளதாகவும் வாயைப் பிளந்து கொண் டிருக்கும் கோகா என்ற செந்நாய்ப் பிராணிகள் நிறைந்து கிணறு வடிவமாகவும் மகா பயங்கரமாயிருக்கும். நக்ர முகம் பதினாறு வில்லளவில் தேள் வடிவாயிருக்கும். கஜதம்சம் நூறு வில்லளவு உயரமுள்ளது. கோமுகம் முப்பது வில்லளவுப் பரப்புள்ளது. கும்பீபாகம் இரண்டு கவ்யூதி அளவுடையதாகவும் லட்சம் ஆள் அளவு ஆழமும் அகலமும் உடையதாய் காலச் சக்கரத்தோடு அமைந்து மற்ற குண்டங்களை விட நான்கு மடங்கு துன்புறுத்த லுடையதாகவும் பெரியதாகவும் இருக்கும். கால சூத்திர குண்டம்

என்பதில் தூதர்களால் கட்டப்பட்ட பாவிகள் தள்ளப்பட்டு வதைக்கப்படுவார்கள். அவர்கள் மூர்ச்சித்து பிரக்ஞை தப்பும் நிலையில் மீண்டும் மீண்டும் எழுப்பப்பட்டும் தள்ளப்பட்டும் அவதிப் படுவார்கள். மச்யோத குண்டம் என்பது ஒரு கிணற்றின் அளவு ஆழமும் இருபத்து நான்கு கிணறுகளின் அகலமும் உள்ளது. அதில் வாழும் நீர்வாழ் பிராணிகளால் பாவிகள் தின்னப் படுவார்கள். தொட்டவுடனேயே எல்லா வியாதிகளையும் ஒட்டி விடும் சுடு நீரும் நிறைந்தது. கிருமி கந்துகம் என்பது நூறு வில்லளவு கொண்டது. அருந்துதம் என்ற பெயரும் பெற்றது. பாவிகளைத் தின்னும் புழுக்களோடும் 'ஆ! ஐய்யோ?' என்ற பாவி களின் பெருங்கூச்சல்களோடும் காணப்படும். பாம்சுபோச்யம் என் பது நூறு வில்லளவையுடையதாய் அமைந்து உமிக் கனல் போன்ற நெருப்பில் வறுத்த மணலாலும் அம்மணலையே சாப் பிடுகிற பாவிகளாலும் நிறைந்திருக்கும். சூலப்புரோதம் என்பது இருபது கிணறுகளின் அளவையுடையதாகவும் சூலை நோயை உண்டாக்குவதாகவும் அமைந்திருக்கிறது. பாசவேஷ்டம் என் பது அரைக் குரோசம் அளவையுடையதாகவும் அதில் விழுந்த வுடனேயே பாவிகள் கட்டுண்டு கிடப்பதாயும் அமைந் துள்ளது. பிரகம்பனம் என்பது அரை குரோசம் அளவையுடைய தாக அமைந்து பனி நீராலும் அதில் வீழ்ந்து உடல் நடுக்குறும் பாவிகளாலும் நிரம்பியிருக்கும். உல்காமுகம் என்பது இருபது வில்லளவையுடையதாகவும் பாவிகளின் முகத்தை எண்ணற்ற கொள்ளிக் கட்டைகளால் சுடுவதாகவும் அமைந்துள்ளது. அந்தக் கூபம் என்பது லட்சம் லட்சம் ஆள் அளவு நீளமும் அகலமும் நூறு வில்லளவு ஆழமும் உடையதாய், ஒருவரை யொருவர் இனம் புரிந்து கொள்ள முடியாத பயங்கர இருள் உடையதாய், புழுக் களால் தின்னப்படும் பாவிகளோடும் நிறைந்திருக்கும். வேதனம் என்பது இருபது வில்லளவை யுடையதாய் அமைந்து பலவித ஆயுதங்களால் துன்புறுத்தப்படும் பாவிகளால் நிறைந்திருக்கும். ஜாலரந்தரம் என்பது இருபது வில்லளவை யுடையதாயிருக்கும். அதில் தள்ளப்படும் பாவிகள் வலையில் சிக்கிய மீன்கள் போல் அகப் பட்டு அவதிப்படுவார்கள். தாடனம் என்பது பதினாறு வில்லளவை யுடையதாய் அமைந்து தண்டாயுதத்தால் அடிபட்டு அவதிப் படும் பாவிகளால் நிறைந்திருக்கும். தேக சூரணம் என்பது இரு பது வில்லளவு அகலமும், கோடி ஆள் அளவு ஆழமும் உடைய தாகவும் இருளோடு கூடியதாகவும் அமைந்து பாவிகளின் உடம்பு களை பொடிப் பொடியாக்கிச் சூரணப்படுத்தும். தலனம் என்பது பதினாறு வில் அளவை யுள்ளதாக அமைந்து யம தூதர்களால் அடித்துப் பிளக்கப்படும் பாவிகள் நிறைந்ததாக இருக்கும். சோஷணம் என்பது முப்பது வில்லளவையுடையதாகவும் நூறு ஆள் அளவு ஆழமுள்ளதாகவும், இருளோடும் நெருப்பில் வறுத்த மண லோடும் அமைந்து பாவிகளை வாட்டி தண்டிக்கும். கஷம் என்பது

நூறு வில்லளவை யுடையதாகவும் பலவிதத் தோல்களையுடையதா கவும் அவற்றையே தின்னும் பாவிகள் நிறைந்ததாகவும் இருக்கும். சூர்ப்பம் என்பது பன்னிரண்டு வில்லளவுடையதாக அமைந்து வறுத்த இரும்புப் பொடியால் நிரப்பப்பட்டு, யமதூதர்களால் தண்டிக்கப்படும் பாவிகளால் நிறைந்திருக்கும். ஜ்வாலாமுகம் என்பது இருபது வில்லளவில் உட்புறத்திலும், வெளியிலும் தீ ஜ்வாலைகளை வீசிக் கொண்டிருக்கும். அதில் பாவிகள் விழுந்த வுடனேயே மூர்ச்சித்துப் போவார்கள். தூமாந்தம் என்பது அரைக் குளம் அளவுப் பரப்பும், நூறு வில்லளவு ஆழமும் உள்ளதாக அமைந்து, இடிபாடுகளோடு புகையும் மண்டியிருந்து பாவிகளைத் திணறச் செய்யும். நாகவேஷணம் என்பது நூறு வில்லளவை யுடையதாய் அமைந்து அதில் பாம்புகள் நிறைந்திருக்கும். இவை தான் என்பத்தாறு நரக குண்டங்களின் அமைப்புகளாகும். பதி விரதையான சாவித்திரியே! பாவிகளே இல்லாத நரகங்களும் இனி வரும் பாவிகளுக்கு இடமில்லாத நரகங்களும் இல்லை'' என்று யம தர்மன் கூறினான்.

## 38

## பிராகிருத பிரளய காலமும் தேவி பக்தியின் மகிமையும்

சாவித்திரி யமதருமனை நோக்கி!'' யமதர்ம தேவரே! சாரம் சத்திற்கெல்லாம் அதிசாரமான தேவி பக்தியை எனக்கு தந் தருளும். அது மனிதர்கள் அடைய வேண்டிய முக்தி மார்க்கத் திற்குப் பீஜமாகவும், சாரமான முக்திக்குக் காரணமாகவும், சர்வ துக்கத்தையும் அழிப்பதாகவும் நரகில் இடர்ப்படாமல் நரக அவஸ்தைகளை தாண்டச் செய்வதாகவும் தினசரி செய்யும் பாவ வினை மரத்தை வெட்டிச் சாய்ப்பதாகவும் இருப்பதால் அந்தத் தேவி பக்தியை எனக்கு தந்தருளும்படி கேட்கிறேன். கால தருமத்தின் காவலரே! தேவியின் பக்திக்கு இலக்கணம் யாது? அது எத்தனை வகைப்படும்? அந்தப் பக்திக்கு முரணான செயல்களைக் கண்டிக்க வேண்டிய கண்டனங்கள் யாவை? அவற்றையும் நீங்கள் எனக்குச் சொல்ல வேண்டும். ஏனெனில் பெண் இனமானது தத்துவ ஞான மில்லாமல் பிரும தேவனால் படைக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், அந்த உன்னதமான ஞானத்தை நீங்கள் சொல்வது அத்தியா வசியமாகும். தானம், யாகம், விரதம், தவம், தலயாத்திரை, தீர்த்தமாடல் முதலியவற்றைச் செய்வதனால் வரும் புண்ணிய யத்தை விட அறியாமையுள்ள அஞ்ஞானிக்கு உபதேசம் செய்கிற புண்ணியமானது பதினாயிர மடங்கிற்கும் அதிகம் என்று சொல்



லப்பட்டிருக்கிறது. தருமரே! பிதாவை விடத் தாயையும், தாயை விட ஞான உபதேசஞ் செய்யும் குருவையும் நூறு மடங்கு உயர்வாக மதிக்க வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் நீர் தான் எனக்கு கண் கண்ட கடவுள்!' என்றாள்.

அதற்கு யமதர்மன் கூறலானான்:

"சாவித்திரி! நீ முன்பு கேட்ட வரங்களையெல்லாம் நான் தந்தேன். இப்போது நீயோ, கேட்பவர் கூறுபவர் பிரஸ்னை செய்வோர் முதலானவரின் குலத்தையெல்லாம் மேன்மையடையச் செய்வதான தேவியின் உன்னதப் பண்புகளையும் திருப்பெயர்களின் இசையையும் கேட்கப் பிரியப்படுகிறாய்! உனக்கு அந்த பக்தி விருத்தி யடையட்டும்! தேவியின் குணச் சிறப்புகளை ஆயிரம் வாயுள்ள ஆதிசேஷனாலும் ஐந்து வாயுள்ள மிருத்யுஞ்ஜெயராலும், ஆறுவாயுள்ள முருகனாலும், நான்கு வாயுள்ள பிரமனாலும், நான்கு வேதங்களாலும் மகாவிஷ்ணுவினாலும் மகா கணபதியாலும் யோகீந்தர்களாலும், சாஸ்திரங்களாலும் பதினாறில் ஒரு பங்கு கூடச் சொல்ல இயலாது. கலைமகளும் சொல்லச் சக்தியற்றவளானாள். பிரம்மாவின் புத்திரர்களும் தர்ம சீலர்களுமான சனத்குமாரர், சநந்தனர், சநாதனர், ஜனகர் முதலானவர்களும் கபில ஞானியும் சூரிய தேவனும் கூட எடுத்தியம்ப சக்தியற்றவர்களாயினரென்றால் நான் ஒருவனே சொல்லச் சக்தியுடையவனாவேன்?

திரிமூர்த்திகளும் தேவியின் திருவடித் தாமரைகளை தியானிக்கிறார்களேயன்றி, அவளது குணாதிசயங்களை முற்றிலும் சொல்வோமெனத் துணியவில்லை. தேவியின் குணச் சிறப்புகளைச் சொல்ல சக்தியற்று, யாரொருவர் அத்தேவியை வழிபட்டுத் தியானிக்கிறார்களோ, அவர்களுக்குச் சித்தியாகாதது எதுவுமில்லை. வேத வித்துக்களான பிரம்ம ஞானிகள் அத்தேவியின் குணச் சிறப்புகளில் சிறிதளவு அறிவார்கள். அவர்களை விடப் பிரமதேவரும், அவரைவிட விநாயகரும் அவரை விட ஞான குருவாகிய திருமுருகப் பெருமானும் அவரை விட சாம்பமூர்த்தியான சிவ பெருமானும் அதிகமாய் அறிவர். அந்த சிவபெருமானே தேவியைப் பற்றி தருமருக்கு உபதேசித்தார். அதை தருமர் சூரிய தேவனுக்கு உபதேசித்தார். என் தந்தையான அவர், தேவியை வழிபட்டு பூஜை செய்து தவத்தின் பயனையடைந்துள்ளார். பதிவிரதையான சாவித்திரியே! ஆதியில் நான் நரக லோகத்தை விட்டு, விஷயங்களில் ஆசையற்று பற்றற்றவனாகி வைராக்கியத்துடன் தவஞ் செய்யத் துவங்கினேன்: அப்போது என் பிதா தேவியின் குண கீர்த்தனங்களை என்னிடம் கூறினார், நான் அவற்றை உனக்குக் கூறுகிறேன். கேள்;

தேவி தன் குணச் சிறப்புகளைத் தானே அறிந்தவள். அத்தகைய தேவியின் குணச் சிறப்புகளை வேறு யாரால்தான் அளந்து கூற முடியும்? வானத்தை அளக்க முடியுமோ? அது போலவே தேவியின் குணச் சிறப்புகளை மனமானது அளக்கத் துணிந்தாலும் இயலாது எல்லாவற்றின் ஆத்மாவாகவும் சர்வேஸ்வரராகவும் அனைத்தின் காரண காரணமாகவும் அனைத்தின் மூல முதல்வராகவும் அனைத்திற்கும் வித்தாகவும் எல்லாவற்றையும் பரிபாலனம் புரிபவளாகவும் நித்திய ரூபியாகவும் நித்திய உடலினராகவும் நித்தியானந்தராகவும் நிர்க்குண நிராகிருதமாகவும், நிரங்குச மாயும், கர்மக் கட்டற்றவராகவும் அனைத்திற்கும் சாட்சியாகவும், அனைத்திற்கும் ஆதாரமாகவும் விளங்கிடும் சர்வேஸ்வரருக்கு இத்தகைய அரும்பெரும் சக்தியானவள் மாயா வசிஷ்ட பிருகிருதிச்சக்தியாக இருக்கிறாள். அக்னியும் அக்கினியினின்று வேறாகத் தனித்திராது உஷ்ண சக்தியும் போல, சக்தியே புருஷனாகவும் பிரகிருதியும் சுபேதமாக இருக்கிறாள். அந்தப் பிரகிருதி சக்திதான் சச்சிதானந்த (மெய்யறிவின்ப) வடிவினளான மகா மாயையாகும். காணவொண்ணா சச்சிதானந்தத் தன்மையையுடைய அந்தச் சக்தி, பக்தர்களுக்கு அருள் புரிவதை முன்னிட்டு உருவங் கொண்டு விளங்குகிறாள். சுந்தரியான சாவித்திரியே! அனுக்கிரக காரணியாக விளங்கும் அந்தச் சக்தியானவள், முதலில் ராதை உருவில் ஓர் அழகான பெண்ணையும் கிருஷ்ண உருவமான ஒரு புருஷனையும் படைத்தாள். அந்த கிருஷ்ண பகவானைப் பக்தர்கள் தியானித்துப் பூஜித்து வருகிறார்கள்.



அந்த ராதாகாந்தனைப் படைத்தவளான அந்தத் தேவியின் கட்டளையாலே பிருமா எல்லா ஜீவன்களையும் சிருஷ்டித்து அவரவர் கர்மானுசாரத்தை யொட்டி அவரவர் அனுபவிக்க வேண்டியவைகளை அவரவர் தலையில் எழுதி விடுகிறார். மகாவிஷ்ணுவோ அவரவர் செய்யும் தவம் முதலிய கருமாக்களுக்கு ஏற்ற பலன்களை தேவியின் கட்டளையினாலேயே வழங்கி வருகிறார். காலாக்கினி ருத்திரரும் அது போலவே தேவியின் கட்டளையினாலே சங்காரம் எனும் அழிக்கும் தொழிலைச் செய்து வருகிறார் சங்கரரான சிவ பெருமான் பரமானந்த யுக்தராய், பக்தி வைராக்கியத்தோடு, யோகியைப் போல இருந்து, யோகிகளுக்கு ஞானத்தை அருளும் தலைவராக விளங்குகிறார். வாயுதேவன் அதிவேகமாய்ச்சுழன்று வீசியுமசூரியன் இடை விடாமல் பிரகாசித்தும் வருணன் குளிர்வித்தும்,

இந்திரன் மழையைப் பெய்வித்தும் மிருத்யு எல்லா ஜீவன் களிடமும் புகுந்தும் அக்கினி அனைத்தையும் தஹித்தும், திக்பால கர்கள் திக்குகளைக் காத்தும் வருவது தேவியின் நியதிப்படியே யாகும். ராசிச் சக்கரமும் கிரகங்களும் சுழன்றும் மரங்கள் எல்லாம் மலர்களையும் கனிகளையும் கொடுத்தும் வருவது கால தத்துவத்தால் வெவ்வேறு வகையில் பேதப்பட்டும் இயங்கி வருகின்றன. நீரிலும் நிலத்தாலும் உள்ள உயிர்கள் வாழ்ந்தும், போராலும் விஷங்களாலும் காலா காலங்களில் மடிந்தும் வரு கின்றன. மலைகள் நிறைந்து, கடலால் சூழப்பட்டுள்ள இந்தப் பூமியானது ஆதிசேடனாலும், அதன் கீழ் கூர்மத்தாலும் (ஆமை யாலும்) அதன் கீழ் நீராலும் காற்றாலும் அந்தத் தேவியின் கட்டளை நியதிப்படியே தாங்கப்படுகிறது. இருபத்தெட்டு இந் திரர்களின் காலம் முடிந்தால் சிருஷ்டிகர்த்தாவான பிருமாவுக்கு இரவு பகல் சேர்ந்த ஒரு நாளாகும். அவ்வாறு முப்பது நாட்க ளாயின் ஒரு மாதம். இரண்டு மாதமானால் ஒரு ருது. பன்னிரண்டு மாதமானால் ஒரு வருஷம். அப்படியே நூறு வருஷமானால் பிர மனது ஆயுள் முடிவுறும். அவரது முடிவு கிருஷ்ணருக்கு கண்ணிமை கொட்டும் காலமாகும். இது பிராகிருத பிரளயம் என்று கூறப்படும் அந்தப் பிரளய காலத்தில், சகல தேவர்களும், சராசரங்களும் பிருமாவும் கிருஷ்ணருடைய நாபி கமலத்திலும் திருப்பாற்கடலிலும் ஸ்ரீ வைகுண்டததிலுமுள்ள மகா விஷ்ணு இடப் பாகத்திலும் தியானேஸ்வரரான ருத்திரர் ஞானத்திலும் ஒடுங்கிலயம டைவார்கள். நாராயணரின் அம்சமான கந்தப் பெருமான் அவரது மார்பிலும் கிருஷ்ணரின் அம்சமான கணபதி அவரது தோளிலும் மறைந்து லயமடைகிறார்கள். துர்க்காதேவியான விஷ்ணு மாயை யிடம் சகல சக்திகளும் அடங்கி மறைகின்றன. அந்த மாயா தேவியும் கிருஷ்ண புத்தியிலும் மறைந்து, புத்திக்கு உறைவிடமான தேவியாகிறாள். லக்ஷ்மியின் அம்சமான அனைவரும் கோபியரும் தேவமங்கையரும் ராதையிடம் அடங்கி மறைகிறார்கள். அந்த ராதை கிருஷ்ணருடைய பிராணனிலும் சாவித்திரி சரஸ்வதியிட மும் லயமடைகிறார்கள். சகல வேதங்களும் சாஸ்திரங்களும் அற நூல்களும் கலைமகளான சரஸ்வதி தேவியிடம் அடங்கி ஐக்கியமா கின்றன. அந்த சரஸ்வதி பரமாத்மாவின் நாவிலும், கோபாலர் அவரது ரோமத்திலும் எல்லா ஜீவன்களும் அவரது பிராணனிலும் அக்னி ஜடராக்கினியிலும், வருணன் அவரது நாக்கு நுனியிலும், சகல பக்தர்களும் அவரது திருவடித் தாமரைகளிலும் விராட் அம்சமானவரெல்லாம் அவரது உருவத்திலும் அடங்கி ஒன்றிப்பு ஆகின்றனர். அந்த கிருஷ்ண பரமாத்மாவின் ரோம கூபங்களில் பிரபஞ்சங்கள் இருக்கின்றன. அவ்வுலகங்கள் அவர் கண்ணிமை கொட்டும் நேரம் கண்ணைத்திறக்கும் போது, சிருஷ்டியையும் கண்ணை மூடும்போது பிரளயத்தையும் அடைவதால், இவ்வளவு பிரமப் பிரளயம் ஆனதென்று வரையறுத்துக் கூற இயலாது. பூமி

யின் தூள் எவ்வளவென்று சொல்லமுடியுமோ அதுபோல் தான் சொல்ல முடியும்! அந்த கிருஷ்ண பரமாத்மாவோ பிரளய காலத்தில் பிரகிருதியிடம் மறைந்து ஐக்கியமடைகிறார். அந்தப் பிரகிருதியாகிய பராசக்தி தேவியே இறுதியில் மீதமாவள் நிர்க்குணமான பரம புருஷன் என்று சொல்லப் படுவதும் அந்தத் தேவியேயாகும். ஆதியில் அந்தப் பிரகிதி தேவியே சத்ருபமாக (மெய்யுருவாக) இருந்தாள் என்று வேத ஞானிகள் அறிந்துரைக்கிறார்கள். இவ்வாறு அவ்யக்தை யாகவும் அவ்யாக்கிரதையாகவும் ஆதியிலும் அந்தத்திலும் இருக்கும் சித்ருபியான (அறிவுருவான) தேவியின் பெருமையை யாரால் தான் அளந்துரைக்க இயலும்? ஆகவே அவளிடம் பக்தி செலுத்தி வழிபடுதலே மேலாகும். அதைவிட நான்கு மறைகளும் கூறும் சாலோக (சிவலோக இருப்பு) சாமீப(சிவன் இருப்பு)சாரூப சிவனுருவில் ஒன்றிப்பு முதலான நிர்வாணங்களும் உன்னதமானவை யல்ல. ஆகவே, பக்தர்கள் அந்தப் பரம்பொருளுக்குப் பக்தித் தொண்டு புரிவதையே விரும்புவார்களே தவிர பிரமத்தன்மை யையோ, அமரத்தன்மையையோ, திவ்விய வடிவம் பெறுவதையோ மோக்ஷத்தையோ விரும்புவதில்லை. ஏனெனில், அவை பரமாத்மாவிற்கு பக்தி தொண்டற்றவை. பக்தியே அந்தப் பரமாத்மத் தொண்டை விருத்தி செய்கிறது. இதுதான் முக்தியினால் விளையும் ஆனந்தத்திற்கும் பக்தியில் விளையும் ஆனந்தத்திற்கும் உள்ள வித்தியாசமாகும். இனிமேல் நிஷேத (விலக்கு) கண்டனத்தைப் பற்றி சொல்கிறேன். பக்திக்கு நிஷேதம் என்பது போகங்களை விரும்பிச் செய்யும் கர்மங்களேயாகும் ஆகையால் அவற்றை விட்டு விட்டு எதையும் விரும்பாத பற்றற்ற பரமாத்மாவிற்குச் சேவை செய்வதே மிகவும் உயர்ந்த நற்கருமமும் தத்துவ ஞானமுமாகும்! பதிவிரதையான சாவித்திரியே! இனிமேல் நீ உன் கணவனுடன் உன் இடத்திற்குத் திரும்பிச் செல்வாயாக'' என்று யமதருமராஜன் ஆசி புகன்று அவளுடைய கணவனான சத்தியசேனனுக்கு உயிர் கொடுத்து தானும் தன் லோகம் செல்ல முயன்றான். அப்போது, சாவித்திரி யமனது பாதங்களைப் பிடித்துக் கொண்டு பிரிவாற்றாமையினால் பெரும் சோகத்தோடு அழுதாள்.

அவளழுகையைக் கேட்டு மனமிளகிய யமதருமன் அவளை நோக்கி, ''சாவித்திரி! நீ பாரத தேசத்தில் புண்ணியத்தலத்தில் ஒரு லக்ஷம் வருஷங்கள் நல்ல சுகம் அனுபவித்து, நன்றாக வாழ்ந்து முடிவில் தேவியின் லோகத்தையடைவாயாக! நீ உன் இல்லத்திற்குத் திரும்பிச் சென்றுசாவித்திரி தேவியின் விரதத்தை அனுஷ்டித்து வா! அந்த விரதத்தைப் பதினான்கு ஆண்டுகள் அனுஷ்டித்தால் மங்கையருக்கு மோக்ஷபலன் கிடைக்கும். ஜேயேஷ்டமாதம் சுக்கிலபக்ஷத்து [வளர்பிறை] சதுர்த்தசி தினமே, அந்த விரத

தினமாகும். பாத்ரபத மாசம் சுக்கிலபக்ஷ அஷ்டமிதினம், மஹாலக்ஷ்மியின் விரத தினமாகும். அந்த விரதத்தை பதினறு ஆண்டுகள் அனுஷ்டிக்க வேண்டும். யார் எந்தப் பெண்மணி அந்த விரதத்தை அனுஷ்டிக்கிருளோ, அவள் எங்கும் வியாபித்திருக்கும் இறைவனை விபுவின் திருவடித்தாமரைகளை அடைவாள். மங்களத்தை வழங்குகிற மங்கள சண்டிகையை ஒவ்வொரு செவ்வாய்கிழமையிலும் சஷ்டி தேவியை ஒவ்வொரு சுக்கிலபக்ஷ சஷ்டியிலும், சகல சித்திகளையும் தந்தருளக்கூடிய ராதிகாதேவியை ஆடி மாதச் சங்கிராந்தியிலும், கார்த்திகை மாதத்து சுக்கிலபக்ஷ அஷ்டமியிலும், துக்கத்தை நீக்கக்கூடிய துர்க்காதேவியான பிரகிருதி தேவியை ஒவ்வொரு சுக்கிலபக்ஷ அஷ்டமியிலும் உபாசித்து உபவாசமிருந்து பூஜை செய்து வழிபட வேண்டும். பொன் பொருளையோ மக்கள் செல்வங்களையோ விரும்பும் பெண் சங்கல்பம் செய்து கொண்டு, புத்திரனுள்ள சுமங்கலியான பதிவிரதையினிடத்திலோ அல்லது யந்திரத்திலோ பிம்பங்களிலோ அந்தப் பிரகிருதி தேவியைப் பாவித்து ஆவாகனம் செய்து, முறைப்படி பூஜிப்பாளேயானல் இஷ்ட சித்தி பெற்று இம்மையில் சுகத்தையும் மறுமையில் தேவியின் பதத்தையும் அடைவாள். மகேஸ்வரியான தேவி எப்போதும் பூஜிக்கத்தக்கவளாயும் எல்லாத் தேவிகளின் அம்சமூல வடிவமாகவும் இருப்பதால் எந்தத் தேவியை வழிப்பட்டு பூஜித்தாலும் அந்தப் பூஜை, பிரகிருதி தேவியையே சார்கிறது!'' என்று கூறி விட்டு யமதர்மராஜன் சென்றுவிட்டான். சாவித்திரியும் உயிர்மீண்ட தன் கணவனேடு தன்னிடத்திற்கு திரும்பிச் சென்று, விரதங்களை அனுஷ்டித்து, குமாரர்களைப் பெற்று, லக்ஷம் வருஷம் சுக போகங்களோடு இவ்வுலகில் வாழ்ந்து இறுதியில் தன் கணவனுடன் தேவியின் திருப்பதத்தையடைந்தாள். சாவித்திரியின் தந்தை காலக்கிரமத்தில் புத்திரர்களைப் பெற்றான். சாவித்திரியின் மாமனர் இழந்த ராஜ்யத்தையும் கண்களையும் திரும்பப் பெற்ருர். இத்தகைய பதிவிரதையான சாவித்திரி சூரிய தேவனுக்கும் மந்திரங்களுக்கும் அதிஷ்டான தேவதையாக விளங்குகிறபடியால் சாவித்திரி தேவி எனப் பெயர் பெற்ருள். நாரதரே! சாவித்திரியின் சரிதையும் ஜீவ கர்மப் பிரிவுகளும் நான் சொல்லக் கேட்டீரல்லவா? இனி நீர் கேட்க விரும்புவது என்ன?''

இவ்வாறு நாராயணர் கேட்டார்.

## 39 மகாலக்ஷிமியின் தோற்றமும் பெருமையும்

நாரதர், நாராயணரை நோக்கி, 'மகாத்மா! மஹாலக்ஷ்மியின் சரிதை என்ன? அந்தத் தேவியைப் பூஜித்தவர்கள் யார்?



அவள் எவ்வாறு இருந்தாள்? அவளது குணச் சிறப்புகள் யாவை?'' என்று கேட்டார். நாராயணர் கூறலானார்:

''படைப்புக்கு முன்பு பரமாத்மாவின், இடது பாகத்தில் ஒரு பெண்ணுருவம் தோன்றியது என்றும் நிறம், தேஜஸ், வயது, காந்தி, யஸஸ், ஆடை ஆபரணம், உணவு, குணம், புன்னகை அன்பு, அருள், பிரியம், இனிய சொல் முதலானவற்றில் சமத்துவமாக, வலப்பக்கத்தில் ராதிகா தேவியாகவும் இடது பக்கத்தல்

லக்ஷ்மி தேவியாகவும் அந்த ஆதிப் பெண்ணுருவம் உருவமெடுத்தது என்றும் நான் முன்பே கூறியிருக்கிறேன். அந்த லக்ஷ்மியே மகாலக்ஷ்மி என்று கூறப்படுகிறாள். லக்ஷ்மி என்றால் கருணையோடு பார்ப்பவள் என்று அர்த்தப்படும் அந்த லக்ஷ்மி தேவி, சுத்த தத்துவ வடிவினியாகவும் கோபாலர்களாலும் கோபிகைகளாலும் சூழப்பட்டும், சதுர்புயனாகிய மகா விஷ்ணுவோடு வைகுண்ட லோகத்திற்குச் சென்று அவருக்கு பத்தினியாக இருந்துவருகிறாள். அவள் சுவர்க்கத்தில் இந்திர சம்பத்து உருவமான சுவர்க்க லக்ஷ்மியாகவும் பாதாளத்தில் நாக லக்ஷ்மியாகவும், அரசர்களிடம் ராஜ்ய லக்ஷ்மியாகவும் கிருகஸ்தர்களிடம் கிருக லக்ஷ்மியாகவும், யக்ஞத்தில் தக்ஷிணா ரூபையாவும், தாமரையில் சோபையாகவும், சந்திரனில் சந்திரிகையாகவும், சூரியனிடத்தில் காந்தியாகவும், விளங்குகிறாள் ஆடை ஆபரணம், பழம, ரத்தினம், தண்ணீர், அரசன், ராஜபத்தினி திவ்யஸ்திரீ, நல்ல பெண்மணி, இல்லம், எல்லா வகைப் பயிர்கள் சுத்தம் செய்யப்பட்ட இடங்கள், தெய்வச்சிலை, தேவிப்பதுமை, மாணிக்கம், முத்துமாலை அழகான பாத்திரம் வைர மணி, பால், சந்தனம், மரக்கிளை, புதிய மேகங்கள், முதலியன வற்றிலும் அந்த மகா லக்ஷ்மி வாசம் புரிந்து அதனதனால் விளையக் கூடிய சௌபாக்கிய உருவாக இருக்கிறாள். அந்த லக்ஷ்மிதேவியை மகாவிஷ்ணு பாற்கடலில் சித்திரை, தை, புரட்டாசி, மாதங்களிலும் செவ்வாய்கிழமைகளிலும் பிரமதேவன் புரட்டாசிமாத சுக்கிலாஷ்டமியிலும், மனு வருஷமுடிவிலும், தை மாதச் சங்கராந்தியிலும், மாசி மாதச் சங்கராந்தியிலும் பூஜித்தார்கள். மகேந்திரன், கேதாரன், நீலன், சுபலன், நளன், துருவன், உத்தான பாதன், பலிச்சக்கரவர்த்தி காசிபர், தக்ஷன்,குபேரன்,வாயு, யமன், வன்னி வருணன் முதலியவர்களும் மனிதர்களில் உத்தமர்களும் நல்லவர்களும் இல்லறவாசிகளும், துறவிகளும் முனிவர்களும் கந்தர்வர்களும் நாகங்களும் மகாலக்ஷ்மியைப் பூஜித்திருக்கிறார்கள். இவ்வாறு, எல்லா இடங்களிலும் யாவராலும் பூஜிக்கப்பட்டு, எல்லா சம்பத்துக்கும் அதிஷ்டான தேவதையாகவும் சம்பத்து உருவாகவும் திருமகள் எங்கும் விளங்குகின்றாள்.''

## 40 தேவேந்திரனுக்கு துர்வாசரின் சாபம்

நாரதர், நாராயணரை நோக்கி, ''பாற்கடலில் லக்ஷ்மி எவ்வாறு அவதரித்தாள்?'' என்று கேட்டார்.

அதற்கு நாராயணர் கூறலானார்:

''ஒரு காலத்தில் இந்திரன் மதுபானங் குடித்த போதை மதமதப்போடு அப்சரஸான ரம்பையோடு கூடிக்குலாவி மிகவும் காமத்

தோடு ஒரு காட்டில் லீலைகள் புரிந்து கொண்டிருந்தான். அப்போது கைலாயத்தை நோக்கி யாத்திரை செல்லும் துர்வாச முனிவர் அந்த வழியாக வந்தார். அவரைக் கண்டதும் இந்திரன் அவரையும் அவருடன் வந்த சீடர்களையும் வணங்கிப்போற்றினான். துர்வாச முனிவர் அவனை வாழ்த்தி, தன் கையிலிருந்த பரபிரம்ம சொரூப பரமாத்மாவின் பிரசாதமான பாரிஜாத மாலையை அவனிடம் கொடுத்தார். அதை இந்திரன் வாங்கி தன் யானையின் மத்தகத்தின்மீது வீசினான். அந்த மாலை தன் மீது பட்டவுடனேயே இந்திரனின் யானை உருவிலும் குணத்திலும் தேஜஸிலும் விஷ்ணுவுக்கு இணையாக இந்திரனை விட்டு விட்டுக் காட்டுக்குத் தவஞ்செய்யச் சென்றது. அந்த யானையைக் காட்டுக்குச் செல்லாதபடி தடுக்க, இந்திரனால் முடியவில்லை. துர்வாசர் அதைக்கண்டு மிகவும் கோபங்கொண்டு தேவேந்திரனை நோக்கி, "அடே! நீ அகம்பாவத்தாலும் செல்வ சம்பத்தாலும் இறுமாந்திருக்கிறாய்! அந்த மதச் செருக்கால் தான் நான் கொடுத்த பாரிஜாத மாலையை உன் யானையின் மத்தகத்துமீது வீசி எறிந்து விட்டாய். பரமாத்மாவான பகவானுக்கு படைத்த நிவேதனம்' நைவேத்தியம், காணிக்கை, பழம், மலர், நீர் ஆகியவற்றில் எது எப்போது கிடைத்தாலும், அப்போதே அதைப் பக்தியுடன் வாங்கிப் பயன் படுத்திக் கொள்ளாதவன், பிரம்மஹத்தி என்ற பாவத்திற்குப் பாத்திரனாகி சம்பத்தை இழந்து, புத்தி தடுமாறி, ஸ்தானப் பிரஷ்டத்தையும் இருப்பு நீக்கத்தையும்) அடைவான். அறிவிலியான இந்திரனே! பூர்வ புண்யவசத்தால் கிடைக்கும் நிவேதனத்தை நமஸ்கரித்து பயன்படுத்துவதும் புசிப்பவனும் ஜீவன் முக்தனாவான். எவன் அப்படி நிவேதனத்தை வணங்கிப் புசிப்பானோ துதிப்பானோ அவன் சர்வேஸ்வரனுக்குச் சமமாவான். அவனது ஸ்பரிசம் பட்டவுடனேயே தீர்த்தங்கள் யாவும் தூய்மையடைகின்றன. அவனது பாதம்படியும் பூமியும் பரிசுத்தமடைகிறது. நரக குண்டங்களில் தள்ளப்பட வேண்டிய பாவிகளும் பகவத் பிரசாதமான நிவேதனங்களை வணங்கி உண்பாராயின் அவர்களும் பாபம் நீங்கி பரிசுத்தம் பெறுவார்கள். அத்தகைய பகவத் பிரசாதமான பாரிஜாதமாலையை நீ அகந்தையோடு அவமதித்ததால் உன்னை விட்டு லக்ஷ்மி நீங்கி வைகுண்டத்தை அடைவாளாக!" என்று சாபமிட்டார். பிறகு அவர் தொடர்ந்து "இந்திரா! சர்வேஸ்வரனுக்கு ஆட்பட்டவன் நான். அதனால் உனக்கோ உன்னைப் போன்ற தேவர்களுக்கோ நான் அஞ்சேன். உங்களுக்கே பயப்படாத நான் மற்றவர்களை லட்சியம் செய்யவும் மாட்டேன். உன் தகப்பனை காசிபரும், உன குருவான பிரகஸ்பதியும் என்னை என்ன செய்யமுடியும்? பகவான் பிரசாதத்தை எவர்கள் மதித்து வாங்கிப் போற்றிப் பயன்படுத்துகிறார்களோ அவர்கள் தான் என்னால் போற்றப்படும் ஐஸ்வரியவான்கள். நீ என்னால் போற்றப்படுவதற்கு அருகதையற்றவன்!" என்று கடிந்துரைத்தார். உடனே தேவேந்திரன் அவரது திருவடி

களில் விழுந்து வணங்கி வாய் விட்டு அழுது ''மகரிஷியே! மாயை நீக்க வல்ல மகானுபாவரே! எனக்கு ஏற்ற சாபத்தைத்தான் கொடுத்து விட்டீர்! நான் இப்பொழுது இழந்த சம்பத்தை திருப்பி கேட்கவில்லை. ஞானத்தைத்தான் கேட்கிறேன். செல்வமானது அகம்பாவத்திற்கும் அறியாமைக்கும் ஆபத்திற்கும் காரணமாயும் முக்திமார்க்கத்திற்குத் தாழ்ப்பாளாகவும், பக்தியைத் தூரத் தள்ளு வதாகவும் இருக்கிறது என்பதை இப்போது நான் தெரிந்து கொண் டேன்'' என்றான். அவனை துர்வாசமுனிவர் நோக்கி, ''பிறப்பு, இறப்பு, நோய், மூப்பு, சோகம் முதலானவற்றிற்கு பீஜமாக இருக் கும் சம்பத்து என்னும் இருளால் மறைக்கப்பட்ட மனிதன் முக்தி மார்க்கத்தைக் காணமாட்டான். சம்பத்தாலும், மதுபானத்தாலும் மத மதத்துக் கர்வம் கொண்டவர்கள் மூடர்களேயாவார்கள். அவர் களை ஞானவான்கள் சூழ்ந்திருக்கமாட்டார்கள். பாவததிற்குகாரண மானவர்களே சூழ்ந்திருப்பார்கள். சம்பத்தால் மதங்கொண்டவன், விஷய சுகத்தில் பரவசமடைந்து, மகா காமியாய், ராஜஸக்குணம் மிகுந்தவனாய் இருப்பானே தவிர சத்துவகுணவழியை அறியமாட் டான். விஷய சுகங்களில் ஆழ்ந்து மூடர்களாக இருப்பவர்கள் ராஜ ஸர்கள் என்றும், தாமஸர்கள் என்றும் இருவகைப்படுவார்கள். சாஸ்திரமறியாதவன், தாமஸ விஷயாந்தகன் என்னும் சாஸ்திரம் அறிந்தவன் ராஜஸ விஷயாந்தகன் என்றும் வழங்கப்படுவார்கள். சாஸ்திரமோ, பிரவிர்த்திபீஜம் நிவர்த்தி பீஜம் என்றும் இருமார்க் கங்களுக்கு வழிகாட்டுகிறது. மதுவிற்காகப் பூக்களில் தேனீக்கள் சஞ்சரிப்பதைப் போல, ஆரம்பத்தில் ஆத்மாக்கள் சுகம் வேண்டும் என்று பிரவிருத்தி மார்க்கத்தில் சுகத்தை நாடிச் சஞ்சரிக்கிறார்கள். சுக பலம் வரும்போதோ மனச்சோர்வு, ஜனனம், மரணம் பிணி, மூப்பு இந்த வகையான தொல்லைகள் விளைகின்றன. அவ்விதம் விளைந்தாலும் ஆன்மாக்கள் கர்ம வினைப்படி நானாவிதமான யோனிகளிற்பிறந்து இன்பமான காரியத்தைச் சாதிப்பதைப் போல் பலவாறாகவும் அலைந்து திரிகிறார்கள். இவர்களில் ஆயிரத்தில் ஒரு வனுக்கோ நூற்றில் ஒருவனுக்கே தான் கடவுள் தன் கருணைகாட்டி அவனை சத்சங்கத்தில் சேர்ப்பித்து பிறகு தத்துவ ஞானம் என்ற படகில் ஏற்றி அவனுக்கு முக்தி வழியைக் காண்பிக்கிறார். அப்போது அவனுடைய ஆத்மா ஸம்சார பந்தம் என்கிற கடலைத்தாண்டிச் செல்வதற்காக தவத்திலும் யோகத்திலும் ஈடுபடுகிறது. அவனே மாபெரும் ஆனந்த சுகமளிக்கும் முக்திமார்க்கத்தை நிர்விக்ஜன மாகப் பார்க்கிறான். தேவேந்திரனே! இந்த உண்மைகளை உன் குருவினிடம் கேட்டதில்லையோ?'' என்று சொல்லிவிட்டுப் போய் விட்டார்.

அதன் பிறகு தேவேந்திரன் நாளடைவில் வைராக்கியம் பெருகியவனாய், ஒருநாள் தன் தேவலோகப் பட்டணமான அமரா வதிக்குச் சென்றான். அங்கு அசுரர்கள் கூட்டம் கூட்டமாக சிறிதும்

பயமில்லாமல் நிறைந்திருப்பதையும், தன் தேவ இனத்தவர் உறவி னர்கள் ஒருவருமே இல்லாதிருப்பதையுங் கண்டான். பிறகு அவன் மந்தாகினிக் கரைக்குச் சென்றுன். அங்கே தருமோத்தமரும், தேவ இனத்தில் சிறந்தவருமான தேவ குரு, கங்கையாற்றின் கரையிலே நின்று சூரியனை கிழக்கு முகமாகப் பார்த்துக்கொண்டு பரமானந்தத்தோடும் பரவசப் புளகாங்கிதத்தோடும் பரப் பிரம்மத் தைத் தியானித்துக் கொண்டிருந்தார். அவர் ஜபம் முடிந்ததும் இந்திரன் அவரை வணங்கி, ஓவென்று அழுது, தனக்கு நேர்ந்த கதியை கூறினுன். குரு பிரகஸ்பதி கோபங் கொண்டு, "தேவேந்திரா! அமரர்களில் உயர்ந்தவனுன நீ ஏன் அழுகிருய்? கால நீதிகளை அறிந்தவன் ஆபத்து உண்டாகும்போது பயப்பட மாட்டான். ஏனென்றுல் சம்பத்தும் விபத்தும் நிலையானவையல்ல. அவை முற்பிறவிகளில் செய்த கர்மவினைகளுக்கு ஏற்றபடி உண்டா கின்றன. வண்டிச் சக்கரம் உருளும்போது அதன் இலைகள் மாறி மாறி எப்படி உருண்டு வருமோ, அதுபோலவே, நன்மை தீமை களும் மாறி மாறி உருண்டுவரும். அதற்காக அழுகை ஏன்? பாரத வருஷத்தில் அனுபவிக்கப்பட்டு வருவதெல்லாம் அவரவரால் செய் யப்பட்ட கர்மவினைத் தொடர்களல்லவா? அது நல்லதாக இருந் தாலும் இல்லாவிட்டாலும் கற்பகோடி காலமானுலும் அனுபவித்தா லொழியத்தீராது! தான் செய்த கர்மவினையை தானே அனுபவித் துத் தீரவேண்டும் என்று, சாமவேத சாகையில் பிருமாவுக்கு பரமாத்மா உபதேசித்திருக்கிருர். கர்மத்தில் மீதமிருந்தாலும் அதற்கு ஏற்றபடி பாரத தேசத்திலாவது வேறு தேசத்திலாவது பிறவி உண்டாகிறது. கர்மத்தாலேயே பிரம சாபமோ ஆசீர் வாதமோ, வாழ்த்தோ, நிந்தனையோ, லக்ஷ்மிவாசமுமோ செல் வமோ தரித்திரமோ எதுவும் விளைகின்றன. கோடிப் பிறவிகளுக்கு முன்பு செய்த பாபமாயினும் அது பிராணிகளை நிழல்போலப் பின் தொடர்கின்றது. அதை அனுபவித்தாலன்றி தீராது. காலபேதத் தாலும் தேச பேதத்தாலும் பாத்திரபேதத்தாலும் கர்மங்களுக்குக் குறைவும் மிகையும் ஏற்படுகின்றன. பொருட்களைத் தானஞ்செய்வ தால் உண்டாகும் புண்ணியம் அந்த நாட்களுக்கு ஏற்ற பயனைக் கொடுக்கும். காலதேச பாத்திரங்கள் சமமானதாக இருந்தால் சமமான பலத்தையும் கால தேசம் பேதமாக இருந்தால் கோடிப் பங்கு அதிகமான பலத்தையும், பாத்திரம் சிறப்பானதாக இருந் தால் நூறு பங்கு அதிக பலனையும் கொடுக்கும். பயிர்களை விளைவிப் பவன் மகிமை, தலத்தில் மகிமை, தீர்த்தத்தின் மகிமை ஆகியவற் றிற்கு தக்கபடி, உலகில் உழவுத் தொழிலில் பயன் கொடுக்கின்றன. சாதாரண நாளில் தானஞ்செய்தால் சாதாரண பலன்தான் கிடைக் கும். அமாவாசையிலும் மாசப் பிறப்பிலும் தானம் செய்தால் நூறு மடங்கு அதிகமான பலனும், சாதுர்மாஸ்ய பௌர்ணமியில் அள வற்ற பலனையும் சந்திர கிரகணத்தில் கோடி மடங்கு அதிகப் பலனையும், சூரிய கிரகணத்தில் அதைவிடப் பத்துப் மடங்கு அதிக

பலனையும் கொடுக்கும். அக்ஷயம் என்ற புண்ணிய காலத்தில் தான தருமம் செய்தால் அக்ஷயமான பலத்தைக் கொடுக்கும். இவ்வாறு நாட்களுக்கு ஏற்றவாறு புண்ணியத்தின் பலன் விளைகிறது. தானம் செய்வது போலவே புண்ணிய ஸ்நானம், ஜபம் முதலான நற்செயல் களாலும் புண்ணியபலன் கிடைக்கிறது. குயவன் தண்டத்தாலும் சக்கரத்தைச் சுழற்றுவதாலும் எப்படி ஒரு பானை செய்கிறனோ, அப்படியே சிருஷ்டி கர்த்தாவான பிருமாவும் கர்ம சூத்திரத்தினால் பலத்தைக் கொடுக்கிறார். யாருடைய கட்டளையால் சகல பிரபஞ்ச மும் சிருஷ்டியாகின்றதோ அந்த சர்வேஸ்வரனை வழிபடுக! அவர் தான் பிருமாவையும் படைத்தவர். எல்லாவற்றையும் அவர் தான் காப்பாற்றியும் அழித்தும் வருகிறார். ஆபத்து வடிவமான சம் சாரத்தில் ஆண்டவனை நினைப்பவன், ஆபத்திலிருந்து நீங்கிச் சம்பத்தை அடைகிறான் என சங்கரர் கூறுகிறார்!'' என்று வாழ்த் தினார்.

## 41 பாற்கடல் பெற்ற அலைமகள்

இந்திரன், குரு பிரகஸ்பதியோ பிருமலோகத்திற்குச் சென்று அங்கு சபையிலுள்ள பிருமாவை வணங்கி நடந்தவற்றைச் சொன் னான். பிருமா இந்திரனை நோக்கி, ''தேவராஜனே! நீ எனது வமிசத்தில் பேரனுக்கு புத்திரனாகவும் பெரும் சாமர்த்தியசாலி யாகவும் பிரகஸ்பதிக்கு மாணவனாகவும் தேவர்களுக்கெல்லாம் அரசனாகவும் இருக்கிறாய். என் பிள்ளையான தக்ஷப்பிரஜா பதியோ உன் தாய்க்கு தகப்பன்! எவனுக்கு மூன்று குலமும் சுத்தமாக இருக்கிறதோ, அவனுக்கும், எவனது தாய் பதிவிர தையோ எவனுடைய தந்தை ஜிதேந்திரியனான சுத்தனோ அவ னுக்கும், எவனுடைய மாதா மகனும் தாயுடன் பிறந்தவனும் பரிசுத்தர்களோ அவனுக்கும் அகந்தை எப்படியிருக்கும்? உலகில் மனிதன் தந்தையின் தோஷத்தாலும் தாயைப் பெற்றவனின் தோஷத்தாலும், குரு தோஷத்தாலும் தோஷ மடைவதுண்டு. சர்வ அந்தராத்மாவான பகவான் எல்லா சரீரங்களிலும் புகுந்திருக்கிறார். அவர் எப்போது மனிதனின் தேகத்தை விட்டு வெளியேறு கின்றாரோ அப்போது மனித தேகம் பிணமாகிவிடுகிறது. மனசுக் கும் இந்திரியங்களுக்கும் தலைவன் பிருமாவான நான் தான்! சங்கரரோ ஆத்மாவின் ஞானரூபர், விஷ்ணு ஜீவகனின் பிராணன். பிரகிருதி தேவி ஜீவகனின் புத்தி. பிரகிருதி தேவியின் கலைகளான சகல சக்திகளோ நித்திரை முதலானவை! தேகத்தில் உள்ளடங்கி யிருக்கும் ஜீவனுக்கு அந்த சக்திமயமான உடல் போகத்தை முன் னிட்டே கொடுக்கப்பட்டுள்ளது. ஆத்மாவுக்கு ஈஸ்வரன் வெளியே

றியதும் அரசன் வெளிப்பட்டதும் மற்றவர்களும் வெளியேறி விடுவதைப் போலப் பிராணன் முதலானவைகளும் வெளியேறி விடுகின்றன. அது போலவே உனக்கு துர்வாசர் கொடுத்த ஈஸ்வரப் பிரசாதமான பாரிஜாதமாலை எப்போது உன்னிடம் இருப்பதற்கில்லாமல் நீங்கிப் போய்விட்டதோ, அப்போதே லக்ஷ்மியும் அவள் சம்பந்தப்பட்ட சகல சம்பத்துக்களும் உன்னைவிட்டு நீங்கிப் போய் விட்டன. நீயும் தெய்வத்தால் வஞ்சிக்கப்பட்டு விட்டாய். தெய்வமோ மிகவும் சக்தியுள்ளது! பாக்கிய குறையினால் மூடகை இருப்பவனை யார் தான் காப்பாற்ற முடியும்?'' என்று பிருமா கூறிவிட்டு தேவேந்திரனைத் தேவர்களோடும் பிரகஸ்பதியோடும் அழைத்துக் கொண்டு, வைகுண்டத்துக்குச் சென்றார் அங்கு லக்ஷ்மிபதியான திருமாலை இந்திரன் வணங்கித் தோத்தரித்துத் தன் குறையைக் கூறினான்.

வாகனம், ஆபரணம்,சோபை, காந்தி,சம்பத்து, முதலானவை இல்லாமல் பயத்தோடுவந்திருக்கும் தேவர்களை மகாவிஷ்ணு ஏறிட்டு நோக்கி, ''தேவர்களே! நீங்கள், அஞ்சவேண்டாம். நான் இருக்கப் பயம் ஏன்? சகல செல்வங்களையும் கொடுக்கிற லக்ஷ்மியை நான் கொடுக்கிறேன். ஆனால் ஒரு வார்த்தை! எண்ணற்ற பிரபஞ்சத்திலுள்ள மக்கள் அனைவரும் என் வசப்பட்டு, என் சுவாதீனர்களாகவேஇருக்கிறார்கள். நானோபக்தர்களுக்கு வசப்பட்டுஅவர்களுக்குச் சுவாதீனமாக இருக்கிறேன். ஆகையால் பக்தர்களுக்குக் கோபம் வரும்படிச் செய்கின்றவர்களின் இல்லங்களில் நான் வாசம் புரிய மாட்டேன்! அது உறுதி! ஆகையால், தேவேந்திரா! சங்கரருக்கு இணையானவரான துர்வாசமுனிவருக்கு நீ கோபத்தை உண்டாக்கியதால் அவர் சாபப்படி சம்பத்ரூபமான லக்ஷ்மியும் உன்னைவிட்டு நீங்கிவிட்டாள். எங்கே சிவார்ச்சனையும் அந்தணோத்தம போஜனமும் இல்லையோ, அங்கே லக்ஷ்மி வாசம் புரிய மாட்டாள். தேவர்களே, எங்கு ஈஸ்வர பக்தர்கள் தூஷிக்கப்படுகிறார்களோ அங்கிருந்து லக்ஷ்மி கோபமாக வெளியேறி வந்துவிடுவாள். மேலும் உபவாசம் இருக்க வேண்டிய விரத தினங்களில் உண்பவன், ஈஸ்வர நாமத்தை விக்ரயம் செய்பவன், தனது கன்னிகையை விற்பனை செய்பவன், விருந்துண்ண வீட்டிற்கு வந்த அதிதியைப் பசியுடன் போகச் செய்பவன், பாவிகள் பிடிக்கப்பட்ட வீட்டில் தங்கியிருப்பவன், சூத்திர சிரார்த்த அன்னத்தைச் சாப்பிடும் பிராமணன், எருதை வாகனமாக வைத்திருப்பவன், கெட்ட மனமுடையவன் மிகக் கொடூரமான உள்ளமும் ஹிம்சிக்கும் செயலும் உடைய கிராதகன், அந்தணர்களை நிந்திப்பவன், பிள்ளையும் கணவனும் இல்லாத மங்கையின் அன்னத்தைச் சாப்பிடுபவன், புல்லை நகத்தினால் கிள்ளுபவன், பூமியை நகத்தால் கீறுகிறவன், சூரியோதயத்தில் ஆகாரம் சாப்பிடும் பிராமணன்' பகலில் தூக்கமும் ஆண் பெண் கலவியும் புரிபவன், ஆசாரத்தைக் கைவிட்டவன், சூத்திரனிடம்



பிரதிக்கிரகம் செய்பவன், தீக்ஷை பெருதவன், ஈரக்காலோடும் இடுப்பில் ஆடையில்லாமலும் படுத்துறங்குபவன் அடிக்கடி வீணாக சிரித்து வீண் வார்த்தை பேசுபவன், தலையில் எண்ணெய் தேய்த்துக் கொண்டு வேறு உறுப்புகளைத் தொடுபவன், தனது உடலிலே வாத்தியமடிப்பவன், விரதம் உபவாசம் இல்லாமல் இருப்பவன், சந்தியா வந்தனமின்றி அசுத்தமாக இருப்பவன், எப்போதும் வெறுத்து தூற்றுபவன் — இத்தகையவர்களின் கிருகங்களிருந்தும் லக்ஷ்மி நீங்கிச்சென்றுவிடுவாள். அவரவரது இடங்களில் அவரவரது இஷ்டதேவதா பூஜை நாம சங்கீர்த்தனை, பக்தி உபசாரனை, போற்றியிசை, சங்கநாதம் தெய்வத்தொண்டு, தியானம், சிவலிங்கார்ச்சனை சிவ நாம சங்கீர்த்தனம், துர்க்காதேவி அர்ச்சனை பிராமண போஜனம் முதலியன நடந்தால் அவ்விடங்களிலெல்லாம் லக்ஷ்மி வாசம் புரிவாள்!'' என்று கூறிவிட்டு மகா லக்ஷ்மியைப் பார்த்து, ''தேவி! ஈஸ்வர அனுக்கிரகத்தால்! பாற்கடலைக் கடையும் போது நீ ஒரு கலையால் அங்கு பிறப்பாயாக!'' என்று கட்டளையிட்டு, பிருமா முதலானவர்களுக்கு விடை கொடுத்தனுப்பினர். தேவர்கள் நெடுங்காலம் கழித்து ஈஸ்வர அனுக்கிரகம்

பெற்றுப் பாற்கடலைக் கடைந்தார்கள். அப்போது, தன்வந்திரி, அமிர்தம், உச்சைஸ்ரவம், ஐராவதம் பலவகை ரத்தினம், சுதர் சனம், லக்ஷ்மி வனமாலை முதலியன அப்பாற்கடலில் தோன்றின. அவற்றை தேவர்கள் அடைந்து மகிழ்ந்தார்கள். லக்ஷ்மியும் இந்திரன் காணும்படி தேவர்களுக்கு காட்சி கொடுத்துச் சம்பத்து உண்டாக்கினாள். நாரதரே! இன்னும் ஏதாவது நீர் கேட்க விரும்பு கிறீரா?''

—இவ்வாறு நாராயணர் கூறினார்.

## 42 மகாலக்ஷ்மி துதி

''(மகே)வேந்திரன் செய்த லக்ஷ்மி பூஜை பற்றிய விதிமுறைகளை யும் தோத்திரத்தையும் சொல்ல வேண்டும்!'' என்று நாரதர் கேட் டார். நாராயணர் கூறலானார்.

''இந்திரன் குளித்துவிட்டு, இரண்டு ஆடைகளை உடுத்தி, பாற் கடலருகே சென்று, பஞ்சாயதன பூஜைசெய்து, கடத்தை, வைத்து அதில் திருமகளான மகா லக்ஷ்மியை ஆவாஹனஞ்செய்து, சந்த னத்தில் தோய்த்த பாரிஜாத மலரை எடுத்துக்கொண்டு, தியானிக் கலானான்.

ஸஹஸ்ரதள பத்மஸ்த கர்ணிகாவா ஸினிம்பராம்
ஸரத்பார்ணவ கோடீந்துப்ர பாமுஷ்டிகராம் பராம்
ஸ்வதேஜஸா ப்ரஜ்வலந்தீம் ஸுகத்ருஸ்யாம் மனோஹராம்
ப்ரதப்த காஞ்சன நிபசோபாம் மூர்த்திமதீம் ஸதீம்
ரத்ன பூஷண பூஷாட்யாம் சோபிதாம் தவாஸஸா
ஈஷத்தாஸ்ய ப்ரஸன்னாஸ்யாம், சஸ்வத்ஸு ஸ்திரயௌவனாம்
ஸர்வஸம்பத் ப்ரதாத் ரீஞ்சமஹா லக்ஷ்மீம் பஜேஸுபாம்.

—என்று பக்தியோடு தியானித்து,ஒவ்வொரு மந்திரத்தினாலும் ஷோடசோபசாரம் செய்தான். உன்னதமான பலவகைப் பொருட் களையும் விலை மிகுந்த ரத்தினத்தையும், ஆசனத்தையும் சமர்ப் பித்து, ''மஹாலக்ஷ்மியே, ஏற்றுக் கொள்வாயாக! தூய திருநீரான இந்த கங்கை நீரை ஏற்பாயாக மலர், சந்தனம், அறுகு முதலிய வற்றோடு கூடிய சங்கு மத்தியிலிருக்கும் அர்க்கிய ஜலத்தையும் ஏற்பாயாக. நல்ல சுகந்த புஷ்பத்தைலத்தையும் நல்ல தேக சௌந் திரியம் தரக்கூடிய .நெல்லிக்கனியையும் ஏற்றுக் கொள்வாயாக! நல்ல பட்டாடைகளையும், பஞ்சாடைகளையும், ரத்தினாபரணங்களை யும், தங்க நகைகளையும், நறுமணமுள்ள சந்தனத்தையும் பெற்றுக்

கொள்வாயாக! வாசனைப் பொருட்கள் கலந்த தூபத்தையும், உலகிற்குக் கண்போல் இருள்களறும் தீபத்தையும் ஏற்பாயாக. பலவித உபகரணங்களோடும் பலவகை ரசத்தோடும் விளங்கும் நைவேத்யத்தை ஏற்றுக்கொள்வாயாக! பிரம வடிவாகவும் பிராண ரக்ஷணகாரணமாகவும் துஷ்டியும் புஷ்டியும் தருவதாகவுமுள்ள அன்னத்தை ஏற்றுக் கொள்வாயாக! சாலியன்ன சம்பந்தமாகவும் நல்ல பக்குவத்தோடு, சர்க்கரை பாலோடும் கலந்துள்ள பரமான் னத்தை ஏற்பாயாக! சர்க்கரை பாலோடும் மனதிற்கு கவர்ச்சியாக வும் ருசியாகவுமுள்ள விஸஸ்வஸ்திகத்தை ஏற்பாயாக! பலவித மான பக்குவ அன்னங்களையும் காமதேனுவின் ஸ்தனத்தில் பெருகியுள்ள மனுஷ்யாமிர்தத்தையும் ஏற்பாயாக. கரும்பிலிருந்து தோன்றி, அக்கினியில் பக்குவப்பட்ட வெல்லத்தை ஏற்பாயாக, யவை, கோதுமை முதலானவற்றின் மாவினுல், நெய், வெல்லம் கலந்து செய்த க்ஷீராமுதத்தை ஏற்றுக் கொள்வாயாக! எனது நிவேதனங்களை ஏற்றுக் கொள். குளிர்ச்சியான காற்றையும், ஒடுக்கமான காலத்தில் சுகத்தையும் கொடுக்கும் விசிறியையும் சாமரத்தையும் ஏற்பாயாக. பச்சைக் கற்பூரம் முதலான பரிமளப் பொருட்கள் கலந்த தாம்பூலத்தை ஏற்றுக் கொள்வாயாக! வாசனை யோடு குளிர்ச்சியாயும், தாகத்தைத் தணிக்கும் சக்தியுள்ள தாயும் சகல பிராணிகளின் வாழ்விற்குக் காரணமாயும் விளங்கும் தீர்த்தத்தை ஏற்றுக் கொள்வாயாக. உடலழகை அதிகரிக்கச் செய்யும் பஞ்சாடைகளையும் பட்டாடைகளையும் ஏற்றுக் கொள் வாயாக! தேகத்துக்கு அலங்காரஞ் செய்யத் தக்க தங்க நகைகளை யும், மணி மாலைகளையும் பெற்றுக் கொள்வாயாக. சுகத்தையும் சர்வ மங்களத்தையும் கொடுக்கும் கந்தத்தைத் தரித்துக் கொள். புண்ணிய தீர்த்தங்களிலிருந்து கொண்டு வரப்பட்ட இந்த ஆச மனீய ஜலத்தை ஏற்றுக் கொள்வாயாக! ரத்தின மாலைகளாலும், ஆடைகளாலும் புஷ்ப பந்தனங்களாலும் அலங்கரிக்கப்பட்ட படுக்கையை ஏற்றுக் கொள்வாயாக. பூமியில் எந்தெந்தப் பொருள் அருமையாகவும் கிடைப்பதற்கு அரிதாகவும் இருக்கின்றனவோ அவற்றையெல்லாம் ஏற்றுக் கொள்வாயாக!'' என்று மூலமந்திரம் சொல்லிக் கொடுத்து, முறைப்படி அந்த மந்திரத்தைப் பத்து லக்ஷம் தடவை ஜபித்தான். அதனுல் தேவேந்திரனுக்கு மந்திர சித்தி கிடைத்தது. பிருமாவினுல் அருளப்பட்டதாகவும் வைதீக சம்பந்த மானதாகவும் மந்திர ராஜமாகவும் பிரபலமாகவும் கற்பக தாரு வாகவும், சுவாஹா என்பதோடு கூடியிருக்கிற இந்த மந்திரத்தால் குபேரன் பரம ஐஸ்வரியம் பெற்றுன். தக்ஷஸாவர்ணி மனுவும் மங்களனும் சப்த தீபங்களுக்குத் தலைமை பூண்டார்கள். பிரிய விரதன், உத்தானபாதன், கேதாரன் முதலானவர்கள் சகல சித்தி பெற்றுர்கள். இந்த மந்திரத்தால் இந்திரனுக்கு விருப்பம் நிறை வேறலாயிற்று. அப்பொழுது, லக்ஷ்மி தேவி சிறந்த விமானத்தில் ஏறி, சப்த த்வீபங்களோடு பூமியையெல்லாம் மறைக்கும் காந்தி

யோடும் எவன் சம்பகப் பூவின் நிறத்தோடும் ரத்தினுபரணங்கள் அணிந்திருக்கும் பிரகாசத்தோடும் மலர்ந்த முகத்தோடும் பக்தருக்கு அருள் புரியும் தன்மையோடும் கோடிச் சந்திரப் பிரகாசத்தோடும் வரம் கொடுக்க வந்தாள். எல்லாவுலகங்களுக்கும் தாயாகவும் சாந்தையாவும் விளங்கும் அந்த லக்ஷ்மி தேவியை இந்திரன் பார்த்து பக்திப் பரவசத்தால் மயிர்க் கூச்செறிய, ஆனந்தக் கண்ணீர் சொரிய, கை கூப்பி, பிரம்மாவிஞல் கூறப்பட்ட உன்னதமான ஸ்தோத்திரத்தைக் கூறித் துதித்தான். அந்தத் தோத்திரம்:

''கமலாவாசினியே நமஸ்காரம்; நாராயண பத்தினியே நமஸ்காரம்; கிருஷ்ணப்ரியையே! மஹா லக்ஷ்மியே நமஸ்காரம். கமல வதனியே, கமலக்கண்ணியே, நமஸ்காரம், பத்மாசனத்தில் வீற்று, பத்மத்தைக் (தாமரையைக்) கையில் ஏந்தி, விஷ்ணு பத்தினியாக விளங்கும் உனக்கு நமஸ்காரம், சர்வசம்பத் ரூபிணியாய், எல்லோராலும் பூஜிக்கத் தக்கவளாய், ஹரி பக்தியையும் மகிழ்ச்சியைக் கொடுப்பவளாய் விளங்கும் உனக்கு நமஸ்காரம். கிருஷ்ணரது மார்பில் வாசம் புரிந்து கிருஷ்ணரைப் பர்த்தாவாகக் கொண்டுள்ள உனக்கு நமஸ்காரம். சந்திரகாந்த சொரூபிணியாகவும் சம்பத்துக்கு அதிஷ்டான தேவதையாகவும் மகா தேவியாகவும், விருத்தி சொரூபியாகவும் விருத்தி கொடுப்பவளாகவும் இருக்கும் உனக்கு நமஸ்காரம்! வைகுண்டத்தில் எந்த லக்ஷ்மி உண்டோ, பாற்கடலில் எந்த லக்ஷ்மியுண்டோ, சுவர்க்கத்தில் எந்த சுவர்க்க லக்ஷ்மி உண்டோ நீயே அந்தந்த லக்ஷ்மி வடிவமாக இருப்பவள். ராஜக் கிரகத்தில் ராஜ லக்ஷ்மியாகவும் கிரகஸ்தரின் கிரகத்தில் கிருக லக்ஷ்மியாகவும் கிருக தேவதையாகவும் சமுத்திரத்திற் காமதேனுவாகவும் யக்ஞத்துக்குப் பத்தினியான தக்ஷிணையாகவும், தேவமாதாவான அதிதியாகவும், தாமரைக் குளத்தில் தாமரை மலராகவும், அவிசு ஹோமத்தில் சுவாஹாகாரமாகவும், கவ்ய ஹோமத்தில் சுவதாவாகவும், விஷ்ணு சொரூபமாகவும், சகலருக்கும் ஆதாரமான பூமி சொரூபமாகவும், நாராயணரை முக்கிய ஸ்தானமாகக் கொண்டவளாகவும் நீயே இருக்கிருய்! கோபம், ஹிம்சை, துன்புறுத்தல் முதலியவற்றை நீக்கியவளாய், வரங்கள் தந்தருள்பவளாய், சரஸ்வதி சொரூபமாய் பரமார்த்தத்தைக் கொடுப்பவளாய், விஷ்ணு பக்தியை ஊட்டுபவளாய் நீயே இருக்கின்றனே! நீ இல்லாவிடில் உலகம் சாம்பலாகிவிடும். அனைவருக்கும் அதி உன்னதமான அன்னையாகவும் பந்துவாகவும் அறம் பொருள் முதலான புருஷார்த்தங்களுக்கு காரணமாயும் நீயே இருக்கின்றனே! தாயானவள், எப்படிக் குழந்தைக்குப் பாலூட்டிக் காப்பாற்றுகின்ருளோ, அது போல நீயே சகலரையும் காப்பாற்றுகிருய். தாயில்லாத குழந்தை தெய்வாதீனமாகப் பிழைக்கிறது. ஆனல் நீ இல்லாவிடில் ஒன்றுமே பிழைக்காது. இது உறுதி! பிரசன்ன

சொரூபியான நீ, எனக்குக் கருணை புரிய வேண்டும். லக்ஷ்மி தேவியே! என் தேவபட்டணம் முதலான ஸ்தானங்களை பகைவர்கள் கைப்பற்றி கொண்டிருக்கிறார்கள். அந்த ஆக்ரமிப்பை நீக்கி எனக்கு மீட்டுத் தர வேண்டும். உன்னை விட்டு விலகியவுடனேயே நான் சர்வ சம்பத்துக்களையும் உறவையும் இழந்து பிச்சைக்காரனாகி விட்டேன் தேவியே! சகல ஞானத்தையும், தர்மத்தையும், சௌபாக்கியத்தையும் எனக்கு நீயே தந்தருள வேண்டும். பிரபாவத்தையும் பிரதாபத்தையும் சர்வாதிகாரத்தையும், போரில் வெற்றியையும் ஐஸ்வரியத்தையும் எனக்குத் தந்தருள வேண்டும்'' என்று இந்திரன் சகல தேவர்களோடும் பக்திப் பரவசக் கண்ணீர் பெருகத் தலை வணங்கித் துதித்தான். மற்ற தேவர்களும் தங்கள் விருப்பங்களைச் சொல்லித் துதித்தனர். லக்ஷ்மி தேவி அவர்களுக்கு வரங்கள் கொடுத்து, தேவேந்திரனிடம் அழகானதொரு மலர் மாலையைக் கொடுத்தருளிவிட்டு மறைந்தாள். தேவர்கள் தம்மிடஞ் சென்றார்கள். இந்தத் தோத்திரத்தை எவன் மூன்று காலமும் படிக்கிறானோ, அவன் சகல அரசர்களுக்கும் தலைவனாய், குபேரனுக்குச் சமமானவனாய் விளங்குவான். இந்தத் தோத்திரத்தை ஐந்து லக்ஷம் தடவை ஜபித்தால் சித்தி கிடைக்கும். அப்படிச் சித்தியான பிறகும், அவன் ஒரு மாதம் இடையறாமல் இந்த தோத்திரத்தை ஜபித்து வருவானேயாகில் பெரும் சுகானுபவங்களோடு உன்னத ஆட்சியாளனாகவும் விளங்குவான்!''

இவ்வாறு நாராயணர் கூறினார்.

## 43 சுவாஹா சக்தி தோன்றிய கதை

நாரதர், நாராயணரை நோக்கி, ''மகாத்மாவே! ஹரிக்குச் சமமானவரே! தவயோகிகள், ஞானிகள், ரிஷிகள், வேத வித்துக்கள், சித்தர்கள், அனைவரிலும் நீரே உன்னத முனிவர்! பெரியவரே! லக்ஷ்மி தேவியின் வரலாற்றை இதுவரை கூறினீர். இனி, யாருமறியா வண்ணம் பாதுகாக்கத் தகுந்ததும் சகல செயல்களுக்கும் பயன்படத்தக்கதும், வேத புராணங்களில் கூறியுள்ளதுமான உபாக்கியானத்தைச் சொல்ல வேண்டுகிறேன்!'' என்றார்.

நாராயணர் கூறலானார்.

அவரை நாராயணர் நோக்கி, ''நாரதரே! புராணங்களில் பல உபாக்கியானங்களைக் கேட்டிருக்கிறேன். அவற்றில் நீர் எதைக் கேட்க விரும்புகிறீர்?'' என்றார். அதற்கு நாரதர், ''ஐயனே! சகல கர்மங்களிலும் செய்யப்படும் ஹவிசு ஹோமங்களில் சுவாஹா

தேவியும், பிறர் ஹோமத்தில் சுவாதா தேவியும் தக்ஷிணு தேவியும் எல்லா இடங்களிலும் போற்றப்பட்டிருக்கிறார்கள். அவர்களின் சரிதத்தையும் ஜன்ம பலத்தையும் முக்கியத்துவத்தையும் கேட்க விரும்புகின்றேன்!'' என்றார். அதற்கு நாராயணர் புன்முறுவலோடு கூறலானார்.

''கேளும் நாரதரே! சிருஷ்டிக்கு ஆரம்பத்தில் சகல தேவர்களும் பிருமாவிடம் சென்று தங்களுக்குரிய உணவைப் பற்றி விண்ணப்பித்தார்கள். உடனே பிருமா, யக்ஞ ரூபியான விஷ்ணுவைத் தியானித்தார். விஷ்ணு ஒரு கலையினால், யக்ஞ ரூபமாக அவதரித்தார். அந்த யக்ஞத்தில் பிராமணர்கள் பலவிதமான அவிசுகளை ஆகாரமாகக் கொடுத்தார்கள். ஆனால் அவற்றை தேவர்கள் அடையவில்லை. அதனால் தேவர்கள் மீண்டும் பிரும லோகம் சென்று முறையிட்டார்கள். அவர் கிருஷ்ண பரமாத்மாவை சரணமடைந்து, கிருஷ்ணரின் ஏவலால் பிரகிருதி தேவியைப் போற்றி துதித்தார். அதன் விளைவாகப் பிரகிருதி தேவி தனது ஒரு கலையினால் சர்வ சக்தி ரூபமாகவும் அதி அழகாகவும் கறுத்த நிறமுடையவளாகவும், புன்னகை முகத்தினளாகவும் சுவாஹா தேவியாகத் தோன்றி பிரமனை நோக்கி, ''என்ன வேண்டும்?'' என்றாள். அதற்கு பிருமா ''தேவியே! அக்னிக்கு எரிக்கும் சக்தி இல்லாததால் நீயே அவனுக்குக் கொளுத்துஞ் சக்தியாக வேண்டும். சுவாஹா என்று உன் நாமத்தை உச்சரித்து, தேவர்களுக்கு அவிசுஹோமம் செய்வார்களாயின் அவ்வவிசுகளை தேவர்கள் அடைந்து, ஆனந்தப்படும்படி அருள் புரிய வேண்டும். அக்கினிக்குச் சம்பத்தாகவும் கிரஹ லக்ஷ்மியாகவும் இருக்கும் உன்னை தேவரும் மனிதரும் வழிப்படுவார்கள்!'' என்றார்.

அதைக் கேட்டதும் சுவாஹா தேவி வருந்தி, ''பிரமனே! நான் கிருஷ்ண மூர்த்தியையே அடைய விரும்புகிறேன். அவரைத் தவிர மற்றவர்களைச் சேர நான் கனவிலும் விரும்ப மாட்டேன். நீயும் ருத்திரரும் ஆதிசேஷனும் யமனும் மற்றுமுள்ள தேவர்களும் செய்து வரும் தொழில்கள் எல்லாம் அந்த கிருஷ்ணரின் தயவினால் அல்லவோ நிகழ்கின்றன? ஆகையால் நானும் அவரையே அடைய வேண்டுமென்று ஆசைப்பட்டு சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்.'' என்று கூறிவிட்டு பத்மநாபனை என் கிருஷ்ண பரமாத்மாவை முன்னிட்டு லக்ஷம் ஆண்டுகள், ஒற்றைக் காலில் நின்று தவஞ் செய்தாள். அதன் விளைவாக கிருஷ்ண மூர்த்தியைத் தரிசித்துக் தாங்கவொண்ணு காம வேகத்தால் மயங்கி மூர்ச்சித்தாள். எல்லா மறிந்தவரான கிருஷ்ணர் அவள் விருப்பத்தை அறிந்து, அவளைத் தன் கையினால் தூக்கி நிறுத்தி, ''நான் வராஹ அவதாரம் எடுக்கும்போது உன் அம்சத்தால் நீ எனக்குப் பத்தினியாவாய்! அப்போது நீ, நக்னிஜிதனுக்குப் புத்திரியாகப் பிறந்து, நாக்னிஜிதி என்ற பெயரடைவாய்! இப்போது நீ அக்கினிக்குத் தகிக்கும் சக்தி

யாக இருந்து, அவனுக்குப் பத்தினியாகவும், மந்திரங்கள் அனைத்திற்கும் அங்கமாகவும் போற்றிப் பூஜிப்பதற்குத் தகுந்தவளாகவும் இருப்பாயாக! உன்னை, அக்கினி மிகவும் பிரியத்தோடு, மதித்துப் பத்தினியாக்கிக் கொண்டு, உனக்குத் திருப்தியுண்டாகும்படி கூடி மகிழ்ந்து ரசிப்பான்!'' என்று கூறி விட்டு மறைந்தார்.

அதன் பிறகு, பிரம்மாவின் கட்டளைப்படி, அக்கினித் தேவன் பயபக்தியோடு சாமவேதத்திலுள்ள தியானத்தினல் ஜகதம்பிகையை தியானித்து தோத்தரித்து, மந்திர பூர்வமாகச் சுவாஹா தேவியை மணம்புரிந்து கொண்டு ஆயிரம் தேவ ஆண்டுகள் அவளோடு கூடி மகிழ்ந்து சுகித்திருந்தான் அதனல் சுவாஹா தேவி கருவுற்று பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்த பிறகு, தக்ஷிணுக்னி, காருஹபத்யம், ஆஹவனீயம் என்னும் மூன்று மக்களைப் பெற்ருன். மகரிஷிகளும், தவமுனிவர்களும் அந்தணர்களும், க்ஷத்திரியர்களும் சுவாஹா என்பதை இறுதியில் கொண்ட மந்திரத்தை உச்சரித்து, அவிர்த்தானஞ் செய்தார்கள். அதனல் தேவர்கள் அவிசை அடைந்தார்கள். சுவாஹா என்பதோடு கூடிய மந்திரத்தை எவன் உச்சரிக்கிருனே, அவனுக்குச் சகல சித்திகளும் உண்டாகும். சுவாஹா என்பது இல்லாத மந்திரமோ வேதமில்லாதபிராமணனைப் போலவும், விஷமில்லாத சர்ப்பத்தைப் போலவும் பதிசேவை இல்லாத பத்தினி போலவும், வித்தையில்லாத மனிதனைப் போலவும், பழக்கிளைகள் இல்லாத வீண் மரத்தைப் போலவும், நிந்திக்கப்படுவதோடு ஹோம பலனும் உண்டாகாது. சாமவேதத்தில் கூறப்பட்டுள்ள சுவாஹாதேவித் தியானமும் துதியும், பூஜாவிதி முறைகளும் பற்றி இனி கூறுகிறேன்.

எந்த யாக ஹோமத்தை ஆரம்பித்தாலும், துவங்கும் சமயத்தில் குடத்தில் சுவாஹாதேவியைப் பூஜித்து யாகம் செய்தால்தான் பலன் உண்டாகும். மந்திரத்துக்கு அங்கமாயும், மந்திர சித்தி சொரூபியாயும், சித்தியாயும், சித்திதையாயும், கர்ம பலத்தைத் தருபவளாயும் அந்த சுவாஹாதேவியைத் தியானித்து, மூலமந்திரத்தினல் பாத்யம் முதலானவற்றைக் கொடுத்துப் பூஜிப்பவன் எல்லா பயன்களையும் அடையப் பெறுவான்—இது உறுதி! சுவாஹா, வன்னிப் பிரியா, வன்னி ஜாயா, சந்தோஷ காரிணி, சக்தி, கிரியா, காலதாத்ரி, பரிபாக கரி, த்ருவா, நராணும்சதாகதி, தாஹிகா, தஹனக்ஷமா, ஸம்ஸார சாரருபா, கோர சம்சார தாரிணீ, தேவ ஜீவனருபா, தேவபோஷண காரிணீ என்கின்ற இந்தப் பதினறு நாமங்களையும் யார் ஒருவன் பயபக்தியோடு சொல்லிப் போற்றுவாஞே, அவன் இம்மையிலும் மறுமையிலும் சகல சித்திகளையும் பெறுவான். அவனுடைய கர்மங்கள் யாவும் அங்கஹீனமடையா. புத்திரன் இல்லாத குறையுடையவள் புத்திரனையும், பத்தினி

இல்லாத குறையுடையவும் தேவரம்பைக்கு நிகரான கட்டழகு மங்கையையும் அடையப் பெறுவான்!''

## 44 சுவதா தேவி

"நாரதரே! இனிமேல் சுவதா உபாக்கியானத்தைச் சொல்கிறேன். கேளும் இது, பிதுர்க்களுக்குத் திருப்தியை உண்டாக்கும் சிரார்த்த காலத்தில் மிகுந்த பலன் தரக் கூடியதாகும். சிருஷ்டிக்கு ஆதியில் பிரமன் நான்கு சரீரமுள்ள பிதுர்க்களையும் மூன்று தேஜோரூபப் பிதுர்க்களையும் சிருஷ்டித்தார், சுக உருவமாகவும் மனோகரராகவும் விளங்கிய அவர்களுக்கு ஆகாரமாகச் சிரார்த்த காலத்தில் செய்யும் தர்ப்பணத்தையும் ஸ்நான கால தர்ப்பணத்தையும் தேவ பூஜையைக் குறித்த சிரார்த்தத்தையும் ஏற்படுத்தினர். முச்சந்தியில் செய்ய வேண்டிய ஆன்னிக அனுஷ்டான கர்மங்களைப் பிராமணன் நாள்தோறும் தவறாமல் செய்ய வேண்டும் என்று வேதத்தில் கூறப்பட்டுள்ளது. ஆகையால் எந்தப் பிராமணன் தினம் சிரார்த்த தர்ப்பணமும் மூன்று சந்தியும் பலியும் வேதமோதும் ஒலியும் இயற்றாமல் இருக்கிறானோ, அவன் விஷமில்லாத பாம்பைப் போல இகழ்ச்சிக்கு உரியவனாவான். தேவி சேவை இல்லாதவனும் இறைவனுக்கு நிவேதிக்காமல் சாப்பிடுபவனும் சாம்பலாகும் மரண காலம்வரை பரிசுத்தி பெற மாட்டான். அவன் ஒரு கர்மத்திற்கும் பயன்படவும் மாட்டான். பிதுர்க்களுக்காகவே சிரார்த்தம் முதலானவற்றை பிருமா ஏற்படுத்தியிருப்பதால், பிராமணர் முதலானோர் அவற்றைச் செய்து வந்தனர். ஆயினும் அவற்றை உண்ணும் சக்தியை பிதுர்க்களால் அடைய முடியவில்லை. அதனால் அவர்கள் பசியால் வாட்டப்பட்டு பிரமனிடம் முறையிட்டனர். பிருமா தம் மானசீகத்தால் ஒரு மனோகர கட்டிளங் கன்னிகையை படைத்தார். அந்த மங்கையின் முகம், நூறு சந்திர காந்தியுடன் திகழ்ந்தது. அவள் உருவமும் யௌவனமும் மனோரம்மியமாக இருந்தன. அவள் வித்தை குணம் முதலானவற்றிலும் சிறந்திருந்தாள். பிருகிருதி தேவியின் அம்சமும் புன்னகையும் தூய்மையும் கற்பும் வரமளிக்கும் சக்தியும் நல்ல நடையும், ரத்தினாபரண அலங்காரமும் சுபகரமும் வெண் செம்பகப் பூவின் நிறமும் கொண்டவளாய் சுவதா என்னும் பெயருடன் விளங்கினாள். அவள் லக்ஷ்மியின் லக்ஷணமுடையவள், நூறு இதழ் தாமரை மலரில் அவளது பாதங்கள் படிந்திருந்தன. தாமரை போன்ற முகமும் விழிகளும் கொண்டு பிரகாசித்தாள். அவ்வாறு பிருமா சிருஷ்டித்த சுவதா தேவியை பிதுர் தேவதைகளுக்குப் பத்தினியாக கொடுத்து, சுவாதாவோடு

கூடிய மந்திரத்தை உச்சரித்து தர்ப்பணம் முதலானவற்றைச் செய்து திருப்தி செய்ய வேண்டும் என்று பிராமணர்களுக்கு அந்தரங்கமாக உபதேசித்தார். பிராமணர்களும் அவ்வாறே முறைப்படிச் செய்து வந்தனர். தேவர்களுக்கு சுவாஹா மந்திரமும் பிதுர்களுக்குச் சுவதா மந்திரமும் உன்னதமானவையாகும். தக்ஷிணை எல்லா கர்மங்களிலும் உன்னதமானது. அது இல்லாத யாகம் வீணாகும். தேவர்கள், பிதுர்க்கள், பிராமணர்கள், மனுக்கள் முதலானவர்களெல்லாம் சுவாத தேவியை பூஜித்துப் போற்றினார்கள். இந்த சுவதாவின் சரிதை அனைவருக்கும் மகிழ்ச்சியை விளைவிக்கும் நாரதரே, இன்னும வேறு எதை நீர் கேட்க விரும்புகிறீர்?'' என்றார் நாராயணர்:

''சுவதா தேவியின் பூஜை முறை விதிகளையும் தியானமும் தோத்திரம் முதலானவற்றையும் கேட்க விரும்புகிறேன்'' என்றார் நாரதர். அதற்கு நாராயணர் கூறலானார்! ''நாரதரே! நீர் கேட்டவை வேதத்தில் கூறப்பட்டுள்ளன. அவை சர்வ மங்களத்தையும் உண்டாக்கும், நீர் எல்லா வேதங்களையும் அறிந்திருப்பவர். அப்படியிருக்க மீண்டும் அதை ஏன் கேட்க விரும்புகிறீர்?'' இருந்தாலும் சொல்கிறேன்; கேளும் சரத்கால கிருஷ்ணபக்ஷ திரயோதசி மக நக்ஷத்திரத்திலும் சிரார்த்த தினத்திலும் சுவதா தேவியைப் பூஜித்து, பிறகு தான் சிரார்த்தத்தை ஆரம்பிக்க வேண்டும். அகந்தையால் இந்த சுவர்தா தேவியைப் பூஜிக்காமல் எவன் சிரார்த்தம் தர்ப்பணம் முதலியவற்றை துவங்குகிறானோ, அவன் அவற்றின் பலன்களை அடைய மாட்டான்: பிரும்மாவின் மனதிற் பிறந்த மானசீகக் கன்னிகையாகவும் எடபோதும் நிலையான நித்திய இளமையுடையவளாகவும் பூஜ்யர்களான பிதுர் தேவதைகளுக்கும் சிரார்த்தங்களுக்கும் பலனளிப்பவளாகவுமுள்ள சுவதா தேவியை நமஸ்கரிக்கிறேன் என்று தியானித்து, மங்களகரமான கலசத்தில் அந்த தேவியை ஆவாகித்து மூல மந்திரத்தால் பாத்ய ஆசமனம் முதலானவற்றைக் கொடுத்து, ''ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் ஸ்வதா தேவ்யை ஸ்வாஹா'' என்று உச்சரித்துப் பூஜை செய்து கும்பிட வேண்டும் என்று வேதத்தில் கூறப்பட்டுள்ளது.

இனி, பிருமாவினால் சொல்லப்பட்டதும் மனிதர்கள் விரும்பும் சகல சுகத்தையும் சித்திக்கச் செய்வதுமான சுவதா தோத்திரத்தை கூறுகிறேன், கேளும் 'ஸ்வதா' என்று உச்சரித்தவுடன், புண்ணிய தீர்த்த ஸ்நான பயனும் சகல பாப நீக்கமும் வாஜபேய பலனும் உண்டாகும். மூன்றுதரம் அதை உச்சரித்தால், சிரார்த்தம், பலி, தர்ப்பணம் ஆசியவற்றின் பலன்கள் ஏற்படும். சிரார்த்த தினத்தில் சுவதா தேவியின் துதியை ஒய்வாகக் கேட்பவன், சிரார்த்தஞ் செய்த பலனைப் பெறுகிறான். அதில் ஐயமில்லை. 'சுவதா' என்று

மூன்று தடவை மூன்று காலங்களிலும் உச்சரிப்பவன், பதிவிரதா தர்மமும் வணக்கமும், மக்கட்பேறும் நற்குணங்களும் வாய்ந்த மனைவியை அடைவான். ஸ்வதா தேவியே! நீ பிதுர்க்களின் பிராண னுக்குச் சமானமாக இருக்கிறாய்! பிராமணர்களுக்கு ஜீவியரூபமாக இருக்கிறாய். சிரார்த்தத்திற்கு அதிஷ்டான தேவதையாகவும் இருக்கிறாய். பலம்தருபவளாகவும் இருக்கிறாய். புண்ணிய ரூபிணியா யும் நித்யையாயும் சத்யரூபிணியாயும், சிருஷ்டி காலத்தில் தோன்றுவளாயும், பிரளயகாலத்தில் மறைகிறவளாயும் நீ விளங்கு கிறாய்! ஓம் ஸ்வஸ்தி நம: ஸ்வாஹா சுவதா தக்ஷிணா என்ற இம் மந்திரங்கள் யாவும் வேதத்தில் கர்மபூர்த்திக்காக பகவானால் நிய மிக்கப்பட்டன. இவ்வாறு தோன்றிய சுவதா தேவியை பிரம தேவன், பிதுர்க்களுக்குப் பத்தினியாக வழங்கிய பின்னர் எல்லோ ரும் தம்மிடம் சேர்ந்தனர். யார் இந்தத் துதியைக் கேட்பார்களோ அவர்கள் சகல தீர்த்த யாத்திரா பலனையும், தன் மனதில் நினைக் கும் விருப்பங்களையும் அடையப் பெறுவார்கள்!''

## 45 தக்ஷிணாதேவி உபாக்கியானம்

...... தேவியின் உபாக்கியானத்தைக் கூறுகிறேன், கேளும். முன்பு ஒரு காலத்தில், கோலோகத்தில் கிருஷ்ணனுக்குப் பிரியமானவளான சுசீலை என்னும் ஒரு கோபிகை இருந்தாள். அவள் ராதைக்கு இணையானவள். அனைவராலும் போற்றிப் பூஜிக்கத் தகுந்தவள். நல்ல கட்டழகி. மனோரம்மியமானவள். இளமையானவள். மான்விழிகளையும் தாமரை மலர்களையும் போன்ற கண்களும், இலேசான புன்சிரிப்பு தவழும் முகமும் பிரகாசமான பற்களும் கோவைப் பழம் போல் சிவந்த உதடுகளும் கொண்டு, மேகலையும் ரத்தினாபரணங்களும் பூண்டு மிகவும் கவர்ச்சிகரமாக இருப்பாள். அன்னம்போல் நடப்பாள். வித்தை, குணம், உருவம், மென்மையான உடல், வெண் சண்பக மேனி முதலானவற்றால் அவள் சிறந்து விளங்குவாள். அவள் காம நூற்கலையில் நிபுணையாயும், இயல்பாகவே அதிக ஆசையுடையவ ளாயும், பிறரது அபிப்பிராயங்களை அறிந்துணரும் புத்தி கூர்மை யுள்ளவளாயும், ரசிகையாயும் ரசிக்கத் தக்கவளாயும் ரசிகராசி களுக்கு ஸ்தானமாயும், ரசிக நாயகியாயும் ரசிக சுகத்தின் நுட்பம் தெரிந்தவளாயும் விளங்கினாள்.

அந்த சுசீலை ஒருநாள் கிருஷ்ணரின் நாயகியான ராதையின் எதிரிலேயே கிருஷ்ணரின் மார்பின் வலது பாகத்தில் ஒட்டிய வண் ணம் வசித்திருந்தாள். அப்போது, கோபிகளில் உன்னதமான

ராதையைப் பார்த்த கிருஷ்ணர் பயந்து தலைகுனிந்து நின்றார். ராதையோ கண்சிவக்க, உதடுகள் துடிதுடிக்க, அவர் அருகே நெருங்கி வந்தாள். அதைப் பார்த்ததும் கிருஷ்ணர் மறைந்து ஓடினார். அவ்வாறு ராதைக்காகப் பயந்தோடும் கிருஷ்ணரைப் பார்த்து, சுசீலை முதலான கோபியர்களெல்லாம் பயந்து நடுங்கினார்கள். சுதாமன் முதலிய மூன்று லக்ஷம் கோபர்களும் லக்ஷம் கோடி கோபிகைகளும், பயந்து கைகூப்பி, ''எங்களை ரக்ஷிப்பாய்!'' என்று தலைவணங்கிச் சரணடைந்தார்கள். ராதா தேவியோ சுசீலையை நோக்கி, ''இனிமேல் நீ இந்தக் கோலோகத்திற்கு வந்தால் பஸ்மமாகக் கடவாய்!'' என்று சபித்தாள். பின்னர், ராதை ஆசையோடு கண்ணனை ராஸக்ரீடைக்கு அழைத்தாள். ஆனால் கிருஷ்ணன் வராததால், ராதை ஆற்றாமையோடு கண நேரத்தை கோடியுகமாக நினைத்துக் குமுறலானாள்.

''என் பிராண நாதரே வாரும். என் உயிருக்கு அதிஷ்டான தேவரே! நீர் இல்லாமல் என் உயிரே போகிறது. பெண்ணின் கர்வமும் சுகமும் புருஷ பாக்கியத்தினால் தான் வளர்ந்து பெருகுகின்றன ஆகையால், பரமாத்மாவே நான் எப்போதும் உம்மையே வணங்குகிறேன். குலமங்கையருக்குக் கணவன் தான், உறவு, தெய்வம், வழி, சம்பதது எல்லாம்! அறத்தையும் இன்பத்தையும் சுகத்தையும் பிரியத்தையும் அரிஷ்ட நீக்கத்தையும் சன்மானத்தையும் மதிப்பையும் பெண்களுக்குக் கொடுப்பவன் கணவன் தான் மனைவிக்குச் சராச்சாரமான தலைவன் பர்த்தா தான்! அவன்தான். உறவினரை வளர்ப்பவன். உறவினரில் கணவனுக்கு ஈடான உறவே கிடையாது. பரிக்கிறபடியால் பர்த்தா என்றும், மனைவிக்கு அதிபதியாகப் பரிபாலிக்கிறதால் பதி என்றும் உடலுக்குத் தலைவனாகையால் சுவாமி என்றும், காமத்தைக் கொடுப்பதால் காந்தன் என்றும், பிரீதியைக் கொடுப்பதால் பிரியன் என்றும் சுகத்தை வளர்ந்தோங்கச் செய்வதால் பந்து என்றும் ஐஸ்வரியத்தைக் கொடுப்பதால் ஈசன் என்றும் பிராணனுக்கு நாயகனாக இருப்பதால் பிராணநாயகன் என்றும், ரதி சுகத்தைக் கொடுப்பதால் ரமணன் என்றும் கணவன் கூறப்படுகிறான். ஆகவே பிராண நாயகனைவிடப் பிரியமான சிறந்த பொருள் வேறு எதுவும் இல்லை! புத்திரன் என்போன், பர்த்தாவின் சுக்கிலத்திலிருந்து பிறப்பதால் சுதனாக விளங்குகிறான் நல்ல குல மங்கையருக்கு நூறு பிள்ளைகள் இருந்தாலும் அவர்களைவிட கணவன் மீதே அவள் பிரியமாக இருப்பாள். நற்குலத்தில் பிறவாத நங்கைக்கு, தன் நாயகனைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் இராது. சகல புண்ணியதீர்த்த ஸ்நானமும் தக்ஷிணையோடு கூடிய சகல யக்ஞமும் பூமியைச் சுற்றும் எல்லா யாத்திரைகளும் பலவகையான புண்ணியச் செயல்களும் குரு சேவை, பிராமண சேவை, தேவசேவை ஆகியவைகளும் கணவனது பாத சேவையில் பதினாறில் ஒரு பங்குக்குக்கூட ஈடாகாது.

குரு, பிராமணோத்தமன், தேவர்கள் முதலானவர்களை விடக் கணவனே சிறந்தவன். ஆடவர்களுக்குக் கல்வி கற்பிக்கும் ஆசான் எப்படிச் சிறந்தவரோ, அதுபோலவே நற்குடிமங்கையருக்கு நாய கனே சிறந்தவன். லக்ஷங்கோடி கோபிகா ஸ்திரீகளுக்கும் லக்ஷம் கோடி கோபர்களுக்கும் கோலோகப் பிரபுக்களுக்கும் பிரும்மாண் டத்திற்கும் என் பர்த்தாவான உமது அருளால், நான் தலைவியாக இருக்கிறேன். பெண் சுபாவமாகையால் நீர் இங்கு இருக்கிறீர் என்பதை அறியாமல் இருக்கிறேன்!'' என்று சொல்லி, கிருஷ்ண ரைப் பக்தியோடு துதி செய்து, ''நாதனே! என் அருமை நாய கனே! எனக்கு உமது தரிசனத்தைக் கொடும். உமது பிரிவினால் நான் வருந்திக் கொண்டிருக்கிறேன்! என்று அழுதாள்.

அவளால் விரட்டப்பட்ட சுசீலை என்கிற தக்ஷிணாதேவி, கோ வுலகத்தை விட்டு, பூவுலகத்திற்கு வந்து, நெடுங்காலம் தவம் புரிந்து, லக்ஷ்மியின் தேகத்தில் உட்புகுந்தாள். அந்தக் காலத்தில் தேவர்கள் ஒரு பெரிய யாகம் செய்து அதன் பயனை அடையாமல் திகைத்தார்கள். அந்த விஷயத்தை அவர்கள் பிரமனிடம் கூறி, அதற்குக் காரணம் என்னவென்று கேட்டனர். அவர், கிருஷ்ண ரைத் தியானித்தார். கிருஷ்ணர், மகாலக்ஷ்மியின் தேகத்தி லிருந்து மானிட லக்ஷ்மியைப் பிரித்து பிரம்மாவுக்குத் தக்ஷிணை யாகக் கொடுத்தார். பிரமன் அந்த தக்ஷிணா தேவியை கர்மப் பூர்த்திக்காக யக்ஞமூர்த்தியிடம் கொடுத்தார். யக்ஞமூர்த்தி அவளது அழகுக் கவர்ச்சி முதலானவற்றைக் கண்டு, அவள் மீது மோகம் கொண்டு மயங்கி மூர்ச்சித்துப் பிறகு அவளையே திருமணஞ் செய்து கொண்டு, மனித சஞ்சாரமற்ற இடத்தில் நூறு ஆண்டுகள் அவளோடு கிரீடித்துக் கொண்டிருந்தார். தக்ஷிணா தேவி பன்னி ரண்டு ஆண்டுகள் கர்ப்பந்தரித்து, சகல கர்மாக்களுக்கும் வலிமை வடிவான பிள்ளையைப் பெற்றாள். அந்தப் பிள்ளையை யக்ஞம் செய் வோருக்கு யக்ஞமூர்த்தி வழங்கினார். அதனால் தேவர்கள் மகிழ்ந் தனர். இந்தச் செய்தியை நான் தருமர் மூலம் அறிந்தேன். கர்மம் செய்யும் கர்த்தா, கர்மத்தைச் செய்து, அதிவிரைவாகத் தக்ஷிணை யைக் கொடுத்தால் அதி விரைவில் பலன் அடைவான் என்று திருமறை கூறுகிறது.

நாரத ரிஷியே! கர்த்தா கர்மா பூர்த்தியாகும் போது அறியாமை யாலோ, கர்மவசத்தாலோ பிராமணர்களுக்குத் தக்ஷிணையைக் கொடுக்காமல் இருந்தால், அந்தக் கர்மம் பலனளிப்பதில்லை. ஒரு முகூர்த்தகாலம் கடந்தால் இரண்டு மடங்கும், ஓர் இரவு கழிந்தால் அதற்கு இரண்டு மடங்கும், ஒரு மாதங்கழிந்தால் ஒரு லக்ஷம் மடங்கும், ஒரு வருஷம் கழிந்தால் மூன்று கோடி மடங்குமாக அந்தக் கர்மப் பலன் நஷ்டமாகும். பிராமண சொத்தை அபகரித் தவன் ஒரு நற்கருமாவுக்கும் அதிகாரமற்றவனாகிப் பிறகு வறுமை

யாளனுகவும் வியாதிக்காரனுகவும் பிறப்பான். அவனுக்குக் கொடிய சாபத்தைக் கொடுத்துவிட்டு, அவனது வீட்டிலிருந்து லக்ஷ்மி நீங்கிவிடுவாள். அவன் வழங்கும் தர்ப்பணம், சிரார்த்தம் முதலியவற்றை பிதுர்க்கள் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். இது போலவே தேவ பூஜைக்கும் அக்னி ஆஹுதிக்கும் தானங்கொடுப்பதற்கும் யாசிப்பதற்கும் அவன் தகுதியற்றவனுவான். தலைவனுக இருந்து தக்ஷிணையைக் கொடாதவனும் யாசித்தும் கொடாதவனும் கட்டுக் கயிறு அறுபட்ட யானையைப் போல, கும்பீபாக நரகத்தில் விழுந்து யமதூதர்களால் வதைக்கப்பட்டு வருந்தி, பிறகு சண்டாளனுகவும் வியாதியஸ்தனுகவும் தரித்திரனுகவும் பிறப்பான். அவன், தனது முன்னேழு பின்னேழு பிதுர்க்களையும் நரகில் தள்ளி விடுவான். நாரதரே! இதுவரை தக்ஷிணையின் சிறப்பைச் சொன்னேன். இனி எதைக் கேட்க விரும்புகிறீர்?'' என்று நாராயணர் கேட்டார். அதற்கு நாரதர், ''தக்ஷிணையில்லாமற்செய்த யாகத்தின் பயன் யாரை அடைகிறது? முன்பு, யக்ஞமூர்த்தியால் செய்யப்பட்ட தக்ஷிணு பூஜா விதி முறை என்ன? அதைச் சொல்ல வேண்டும்!'' என்றுர். அதற்கு நாராயணர் கூறலானுர்.

''நாரதரே! தக்ஷிணையில்லாத கர்மத்திற்குப் பலன் கர்த்தாவுக்கு ஏது? தக்ஷிணையோடு கூடிய கர்மத்துக்கே பயன் உண்டு. தக்ஷிணையில்லாத கர்மம் பலிச்சக்கரவர்த்தியை அடைகிறது. ஏனென்றுல், விஷ்ணு பகவான் வாமனுவதாரம் எடுத்த போது அவர் மகாபலிச் சக்கரவர்த்தியை நோக்கி, ''யார் தக்ஷிணையில்லாமற் செய்கின்றுர்களோ அந்தக் கர்மபலனும், வேதமறியாத பிராமணர்களுக்கு இட்ட போஜனமும் சிரத்தையற்ற தானமும், தருமமும் சூத்திர மங்கையை விவாகஞ்செய்து கொண்ட பிராமணர்களுக்குக் கொடுத்த பூஜைப் பொருள் திரவியம் முதலியவைகளும், நல்லவனல்லாத பிராமணரால் செய்யப்பட்ட யாகயக்ஞமும் சுத்தமற்றவன் செய்கிற பூஜாபலனும் குருபக்தியற்றவனுடைய கர்மபலனும் உன்னை அடையக்கூடும்'' என்று கூறியிருக்கிறுர்.

ி, தக்ஷிணுதேவியை உபாசிக்கும் தியானம், தோத்திரம்; பூஜா விதிகள் முதலியவற்றைக் கண்ணுவசாகையில் கூறியிருக்கும் வகையில் நான் கூறுகின்றேன். கர்மத்தில் சாமர்த்தியமுள்ள அந்தத் தக்ஷிணு தேவியை யக்ஞமூர்த்தியடைந்து, அவளது உருவக்கவர்ச்சியால் மோகங்கொண்டு துதிக்கலானுர்.

## துதி

முன்பு கோலோகத்தில் சிறந்த கோபிகையாகவும், ராதைக்கு ஈடானவளாகவும், தோழியாகவும், கிருஷ்ணனுக்குப் பிரிய நாயகியாகவும், நீ இருந்தாய். கார்த்திகை பௌர்ணமியில் ராதையின் திருவிழாவான ராஸக்கிரீடையில், லக்ஷ்மியினுடைய தக்ஷிண

புஜத்திலிருந்து நீ பிறந்தாய்! அதனால் தக்ஷிணா தேவி என்ற பெயரைப் பெற்றாய். அதற்கு முன்பு சுசீலை என்ற பெயரை யுடையவளாக இருந்தாய். ராதையின் சாபத்தால் கோலோ கத்திலிருந்து தள்ளப்பட்டு என் பாக்கியத்தால் என்னிடம் வந்தாய்! என்மீது தயவு காட்டி என்னையே உனது கணவனாக ஏற்றுக் கொள்வாய்! நற்கருமம் செய்வோருக்கும் கர்மங்களுக்கும் நீயே பலத்தைத் தருபவள். நீ இல்லையெனில் எல்லோருடைய கர்மமும் வீணாகிவிடும் மும்மூர்த்திகள், திக்குப் பாலகர் முதலான சகல தேவர்களும் நீ இல்லாத கர்மத்துக்குப் பயன் கொடுக்கும் சக்தியுடையவராக மாட்டார்கள். பிருமா கர்ம ரூபியாகவும் மஹே ஸ்வரன் பலரூபியாகவும் விஷ்ணு யக்ஞரூபியாகவும் விளங்குகிறார் கள். நீயோ அம்மூர்த்திகளுக்கும் சாரரூபியாக விளங்குகிறாய்! பரப் பிரம்ம சொரூபியாயும் நிர்க்குணமாயும் இருக்கும் பராசக்தியும் கிருஷ்ணரும் உன்னைப் பலனளிக்கவல்ல சக்தியாக உருவாக்கி யிருக்கிறார்கள். அழகான தக்ஷிணா தேவியே நீ எனக்குப் பிறவிகள் தோறும் சக்தியாக இருக்கிறாய்; நான் உன்னோடு சேர்ந்திருந்தால், சகல காரியங்களிலும் ஆற்றலுடையவனாக இருப்பேன்.

இவ்விதமாக யக்ஞமூர்த்தி துதிக்கும் போது தக்ஷிணாதேவி மகிழ்ச்சியோடு அவனை அடைந்தாள். இந்தத் துதியை ஒருவன், ராஜசூய யாகம், வாஜபேயம், கோமேதம், நரமேதம், அஸ்வ மேதம், லாங்கல யாகம், புகழ் விளைவிக்கும் யாகம், திரவியம் சம்பத்து தரும் யாகம். கஜமேதம், லோக யக்ஞம், பூமியைக் கொடுக்கிற யக்ஞம், சொர்ண யக்ஞம், ரத்ன யக்ஞம், தர்ம யக்ஞம், சிவயக்ஞம், ருத்திரயக்ஞம், விஷ்ணுயக்ஞம், இந்திரயக்ஞம், பகை வரை வாட்டும் வருணயக்ஞம், பாபத்தை நீக்கும் யக்ஞம், பரிசுத்த மளிக்கும் யக்ஞம், தர்மயக்ஞம், கர்மயக்ஞம், பத்ரகம் எனப்படும் யோனி யக்ஞம், முதலான யக்ஞங்களை ஆரம்பிக்கும் போது தக்ஷிணாதேவியின் தோத்திரத்தை ஓதுவானாயின் அவனது கர்மம் தடையின்றி நிறைவேறும்.

## பூஜைமுறை

இனி தக்ஷிணா தேவியை வழிபடும் தியானத்தையும் பூஜாவிதி யையும் கூறுகிறேன். "லக்ஷ்மியின் வலது தோளில் லக்ஷ்மியின் கலாரூபமாய்ப் பிறந்தவளாகவும், சகல காரியங்களிலும் சாமர்த்தி யக்காரியாகவும் விஷ்ணு சொரூபிணியாகவும் தூய்மையளிப்பவளா கவும் சுத்த ஸ்வரூபமாகவும் சுசீலை என்ற பெயரையுடையவளா கவும் விளங்கும் தக்ஷிணாதேவியை நமஸ்கரிக்கிறேன்" என்று தியா னித்து, கலசத்தில் மூலமந்திரத்தினால் அத்தேவியை ஆவாஹனம் செய்து, தாமரை மலர்கள் முதலானவற்றைக் கொண்டு, வேதத்தை அனுசரித்து, "ஓம் ஸ்ரீம் க்லீம் ஹ்ரீம் தக்ஷிணாயை ஸ்வாஹா." என்று



ஆடவன் பூஜிக்க வேண்டும். எல்லாக் கர்மங்களிலும் பயனைத் தருபவளாயும், பிரீதியையும் தரவல்லவளாயும் விளங்கும் இந்த தக்ஷிணாதேவியின் சரிதையை எவன் கேட்கிறானோ, அவன் கர்மங்கள் குறைவுடையதாக இருந்தாலும் பூர்ண பலமுள்ளதாய் ஆகி விடும். புத்திரன் இல்லாதவன் நல்ல புத்திரனை அடைவான். மனைவியில்லாதவன், நல்ல உன்னதமான அங்கலக்ஷணமும் வணக்கமும் இணக்கமும் இனிதாகப் பேசும் தன்மையும், பதிவிரதா தர்மமும், சுத்தமும் நற்குடிப்பிறப்பும் வாய்ந்த மங்கையை மனைவியாக அடைவான். கல்வியறிவில்லாதவன் கல்வியறிவையும் தனமில்லாதவன் தனத்தையும் பூமியில்லாதவன் பூமியையும், சந்ததியில்லாதவன் சந்ததியையும் அடையப் பெறுவார்கள். கஷ்ட

மான காலத்திலும் உறவினரை விட்டுப் பிரிந்திருக்குங்காலத்திலும் ஆபத்துக் காலங்களிலும் எவனொருவன் இந்த தக்ஷிணாதேவி உபாக்கியானத்தைக் கேட்பானோ, அவன் அத்தொல்லைகளிலிருந்து விடுபடுவான். இதில் ஐயமில்லை!''

## 46 சஷ்டி தேவி தோற்றமும் பூஜை முறையும்

''மாதவரே! தேவர்கள் தேவிகள் பலரின் உபாக்கியானங்களைக் கேட்டு மகிழ்ந்தேன். இது போலவே, பிரகிருதி தேவியின் கலைகளாகவுள்ள சஷ்டி தேவி, மங்கள சண்டிகை, மனஸாதேவி ஆகியவர்களுடைய உற்பத்தி சரித்திரங்களையும் நான் கேட்க விரும்புகிறேன்!'' என்று நாரதர் கேட்கவே நாராயணர் கூறலானார்.

''சஷ்டி தேவியானவள், பிரகிருதி தேவியின் ஆறுவது அம்சத்தில் பிறந்தவளாகையால் சஷ்டி தேவி என்ற பெயரைப் பெற்றாள். அவள் குழந்தைகளுக்கு அதிஷ்டான தேவதை. பக்தர்களுக்குப் புத்திரப் பேற்றைத் தருபவள் பாலர்களுக்கு நீடித்த ஆயுளைத் தருபவள் எப்போதும் குழந்தைகளின் பக்கத்திலேயே இருந்து காப்பவள். இவள்தான் கந்தபிரானுக்குப் பிராணப் பிரியையாக விளங்கும் தேவசேனை என்பவளாகும். கேட்பவர்களுக்கு மக்கட் பேற்றை தரவல்லவளான அவளது பூஜாவிதியையும் இதிகாசத்தையும் தருமரிடம் நான் கேட்டவாறே சொல்லுகிறேன்.

சுவாயம்புவமனுவின் புத்திரனான பிரியவிரதன், யோகத்தில் மனம் வைத்து திருமணம் செய்து கொள்ளாமல் தவம்புரிந்து வந்தான். அப்போது பிரமதேவரின் யத்தனத்தால் மாலினி என்பவளை பிரியவிரதன் திருமணஞ்செய்து கொண்டு, நீண்ட காலம் புத்திரப் பேறின்றி வருந்தினான் பிறகு காசிபரால் புத்திர காமேஷ்டி யாகஞ்செய்து, அந்த யக்ஞ அவிசை மாலினிக்கு கொடுத்தான். அதை மாலினி அருந்தி அதன் விளைவாகக் கருப்பவதியாகி பன்னிரண்டு தேவ வருஷம் சென்ற பிறகு, பொன் போல் பிரகாசிக்கும் ஒரு பிள்ளையைப் பெற்றாள். ஆனால் அந்தக் குழந்தை கண்திறந்தும் உயிர் இழந்தும் கிடந்தது. அதைப் பார்த்து உறவினர் அனைவரும் அழுதார்கள். அதைப் பெற்ற தாயான மாலினியே மயங்கிச் சுருண்டு மூர்ச்சித்தாள். தந்தை பிரியவிரதன் அந்தக் குழந்தையை சுடுகாட்டிற்கு எடுத்துக் கொண்டு போய், மார்பில் அணைத்துக் கொண்டு ஓவென்று அழுதான் பிறகு

அவன் தன் உயிரைவிட முயன்றான். அவ்வாறு புத்திர சோகத்தால் ஞானயோகத்தையும் மறந்து, பிரியவிரதன் நிற்கும்போது ஆகாயத்தில் விமானம் தோன்றியது. தூய்மையான ஸ்படிகம் போன்ற ரத்தினங்களால் நிருமாணிக்கப்பட்டு தேஜஸ் பிரகாசத்தோடு வெண்பட்டினால் சூழப்பட்டு, பலவகை மலர்களாலும் அலங்கரிக்கப்பட்டு அந்த விமானம் அபூர்வமாக விளங்கியது. அந்த விமானத்தில் ஒரு தேவி இருப்பதையும் பிரியவிரதன் பார்த்தான். அந்தத்தேவி பார்க்குந்தோறும் பிரியம் விளைவிப்பவளாகவும் மனோரம்மியமாகவும் வெள்ளை செண்பக மலர் நிறமுடையவளாகவும் முகத்தில் புன்னகையோடு, பல கோடி ரத்தின நகைகளால் அலங்கரிக்கப்பட்டவளாகவும் கருணை சமுத்திரமாகவும், யோகத்தால் சாதிக்கத் தகுந்தவளாகவும் பக்தர்களுக்கு அருள் புரிவதில் ஆர்வம் மிகுந்தவளாகவும் தோன்றினாள். அவளைப் பார்த்ததும் பிரியவிரதன் பிரியத்தோடு துதித்துக் குழந்தையைக் கீழே வைத்துவிட்டு அந்தத் தேவியை நோக்கி, "நீயார்? யாருடைய பத்தினி? யாருடைய புதல்வி? பெண்களிடையே பெரும் புண்ணியவதியாகவும் போற்றிப் பூஜிப்பதற்கு உரியவளாகவும் விளங்குகிறாயே?" என்று கேட்டான். அதற்கு அந்தத் தேவி அவனை நோக்கி "மன்னனே! நான் முன்பு தேவாசுரப் போராட்டத்தின் போது தேவர்களின் சேனாதிபதியாக இருந்ததால் தேவசேனா என்ற பெயரைப் பெற்றேன். நான் பிருமாவின் மானஸப் புதல்வி! என் பிராண நாயகர் கந்தப் பெருமான். நான் மாத்ருகைகளில் பிரசித்தி பெற்றவள். பிரகிருதியின் சஷ்டாம்சத்தில் நான் பிறந்ததால் சஷ்டிதேவி என்ற பெயரும் எனக்கு உண்டு மக்கட்பேறு இல்லாதவர்களுக்கு பிள்ளைப் பேறும், நாயகி இல்லாதவர்களுக்கு பத்தினியையும், தரித்திரர்களுக்கு செல்வத்தையும் கர்ம கர்த்தாக்களுக்குப் கரும பலன்களையும் வழங்குபவள். சுகம், துக்கம், பயம், துயரம், மகிழ்ச்சி, மங்களம், சம்பத்து, விபத்து, இவையனைத்தும் கர்மத்தாலே விளைகின்றன. வம்சம் க்ஷீணிப்பதும் இறந்தவர் பிழைப்பதும், சிரஞ்சீவியாகவும் குணவானாகவும் அங்கக்குறைந்தவனாகவும், வாழ்க்கைத் துணையற்றவனாகவும் நல்ல உருவம் வாய்ந்தவனாகவும் தர்மவானாகவும் வியாதிக்காரனாகவும் ஆரோக்கியசாலியாகவும் இருப்பது யாவுமே கர்மத்தினாலே தவிர, வேறு எதனாலுமன்று! ஆகையால் கர்மமே உயர்ந்ததென்று சொல்லப்படும்" என்று கூறிவிட்டு மாண்டு கிடந்த குழந்தையைத் தூக்கி விளையாட்டாகவே அதற்கு உயிரூட்டிப் பிழைக்கச் செய்தாள் குழந்தை உயிர்பெற்று சிரித்தது. அதை பிரியவிரதன், பார்ததுக் கொண்டிருக்கும் போதே, சஷ்டிதேவி அக்குழந்தையைத் தூக்கிக் கொண்டு ஆகாயத்தில் போக முயன்றாள். பிரியவிரதன் மீண்டும் புத்திரசோகத்தால் வருந்தினான்: துக்கத்தால் நெஞ்சுலர்ந்த நிலையில் சஷ்டிதேவியைத் துதித்தான். அவனது துதியைக் கேட்டு சஷ்டிதேவி மகிழ்ந்து

வேதத்தில் கூறியிருக்கும் கர்மத்தை அவனுக்கு உபதேசித்தாள். ''அரசனே! நீ சுவாயம்புவ மனுவின் குமாரனுகையால் நீ மூவுலகி லும் புகழ்பெற்றவனாக விளங்குகிறாய். என்னை வழிப்பட்டு என் பூஜையை அனைவரும் செய்யும்படிச்செய்து, நீயும் செய்வாயே யானால், நான் புத்திரனைத் தருகிறேன். இந்தப் பாலகன் நல்ல குணசீலனும், அறிஞனும் பூர்வ ஜன்ம உணர்வை உணர்வு வாய்ந்தவனும் யோகிந்திரனும், நாராயண கலா சொரூபனும், மன்னர்களிலே உயர்ந்தவனும் அவர்களால் வணங்கப்படுவனும் மதம் பிடித்த லக்ஷம் யானைகளின் வலிமையை உடையவனாகவும், செல்வந்தனும், தூய்மையாளனும் தவமுனிவருக்கும் ஞானி யருக்கும் சத்தியை வழங்குவோனும், பண்டிதர்களுக்குப் பிரியனும் பூவுலகில் புகழ் மிக்கவனும், சகல சம்பத்தையும் தருபவனாகவும் சுவ்விரதன் என்ற பெயருடன் வாழ்வான்'' என்று கூறி விட்டு அக்குழந்தையை பிரியவிரதனிடம் கொடுத்தாள். பிரிய விரதனும் அவளைப் பூஜிப்பதாகச் சம்மதித்தான். சஷ்டி தேவி அவனை வாழ்த்திவிட்டு மறைந்தாள். பிரியவிரதன் தன் அமைச்சர் களோடு, அரண்மனையை அடைந்தான். பிறகு அவன் சஷ்டி தேவியை வழிபாடு செய்து பிராமணர்களுக்குத் தானம் வழங்கி, குழந்தை பிறந்த ஆறுவது நாளில் பிரசவ அறையில் சஷ்டிதேவி பூஜையை நடத்தி, இருபத்து ஒன்றும் நாளில் பாலகர்களுக்குச் செய்யவேண்டிய நற்காரியங்களையெல்லாம் செய்து, ஒவ்வொரு சுக்லபக்ஷ சஷ்டியிலும் திருவிழா நடத்தி வந்தான்.

## சஷ்டி பூஜைமுறை

''இனி, கௌதம முனிவரால் தருமருக்கு உபதேசிக்கப் பெற்ற பூஜாவிதியைச் சொல்கிறேன்: கருணைக் கடலாகவும், சந்தானம் நல்குபவளாகவும் புவனத்தாயாகவும், வெண் செம்பகப் பூ மேனி யளாகவும் ரத்தினுபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளாகவும் தூய்மையானவளாகவும் தேவசேனை என்ற பெயரையுடையவளாக வும் விளங்குகிற தேவியை வணங்குகிறேன்!'' என்று தியானித்து கலசத்திலோ அல்லது சுவரில் தீட்டிய சித்திரத்திலோ சஷ்டி தேவியை ஆவாஹனம் செய்து தனது சிரசில் மலரை வைத்து மறுபடியும் மூன்று முறை மந்திரத்தை ஜபம்செய்து, பாத்யம், ஆச னம் அர்க்கியம், கந்த புஷ்பம், தூபம், தீபம், பழம் நைவேத்தி யங்களோடு பூஜிக்கவேண்டும். ஓம் ஹ்ரீம் சஷ்டி தேவ்யை சுவாஹா; என்ற மந்திரத்தைத் தன்னால் இயன்றளவு ஜெபிக்க வேண்டும். பிறகு சாமவேதத்தில் கூறப்பட்ட தோத்திரத்தினால் சஷ்டி தேவியை துதித்து, பக்தியோடு வணங்கவேண்டும். அஷ்டா க்ஷரமந்திரத்தினுல் லக்ஷம் உரு ஜபித்தால் அவ்வாறு ஜபிப்பவன் நல்ல புத்திரனைப் பெற்று மகிழ்வான் என்று பிரம்ம தேவர் கூறி

யிருக்கிறார். புத்திரப் பேற்றையும் அவரவர் விருப்பங்களையும் தரும் தோத்திரம் வேதத்தில் மறைந்துள்ளது. அதைக் கொண்டு பிரியவிரதன் துதித்தான். எவன் இந்தத் துதியை ஓராண்டுக் காலம் கேட்கின்றானோ, அவன் நீண்ட ஆயுளுள்ள புத்திரனை அடைவான். எவன் தேவியைப் பூஜித்து ஒரு வருஷம் இத்துதியைக் கேட்கிறானோ, அவன் மனைவி மலடியாக இருந்தாலும் தாயாவாள். அவ்வாறு பிறக்கும் குழந்தை வீரனாகவும் குண சீலனாகவும் அறிஞனாகவும் தீர்க்காயுள் உள்ளவனாகவும் பிறப்பான். குழந்தைகளுக்கு நோய் பிடித்திருக்கும் போது, தாய் தந்தையர் இத்துதியைக் கேட்டால் ஒரு மாதத்திற்குள் குழந்தையை விட்டு நோய் அகன்றுவிடும்.

## 47 மங்கள சண்டிகா



"பிரும புத்திரரான நாரதரே! இனி வேதப் புகழ் பெற்றதும் அறிஞர்களால் காணப்பட்டதுமான மங்கள சண்டிகையின் உபாக்கியானத்தைச் சொல்கிறேன். அதிகச் சாமர்த்தியமும் அதிக கோபமும் உள்ளவளாகவும் கலியாணக் காரியங்களில் மங்களந்தருபவளாகவும் இருக்கும் தேவிதான் மங்கள சண்டிகை என்று வழங்கப்படுகிறாள். மனு வம்சத்திற்பிறந்த மங்களன் என்பவன் ஏழுத் த்வீபங்களுக்கும் அரசனாக இருந்தான். அவன் இவளைப் பூஜித்து இஷ்டலாபம் பெற்றதால், இவள் மங்கள சண்டிகை என்று வழங்கப் பட்டாள். மூர்த்தி பேதத்தால் துர்க்கா தேவியாகவும் மூலப் பிரகிருதியாகவும் இவள் விளங்குகிறாள். கிருபா சமுத்திரமாகவும்

பெண்களுக்கு இஷ்ட தேவதையாகவும் இந்தத் தேவி திகழ்கிருள். திரிபுர சங்கார காலத்தில், விஷ்ணு முதலான சகல தேவர்களும், திரிபுரங்களிலும் வெற்றியுண்டாவதற்காக, சகல திரவியங்களாலும் பூஜித்து இந்தத் தேவியைப் போற்றினர். அப்போது மங்கள சண்டி, துர்க்கா ஸ்வரூபிணியாய் தோன்றி அமரர்களை நோக்கி, "நீங்கள் பயப்பட வேண்டாம். ருத்திர மூர்த்தியால் திரிபுரவெற்றி யுண்டாகும்" என்று அருள் கூறி மறைந்தாள். திரிபுரத்தை எரித்த பிறகு, தேவர்கள் மங்கள சண்டிகையை அருக்கியாதி களோடும் பரமான்னம்மாம் பண்டம், :தேன், பால், பழங்களோடும் திருப்தி செய்து ஆடல் பாடல் வாத்தியங்களாலும் போற்றிசைப் பாடல்களாலும் தியானங்களாலும் வழிபட்டு பூஜித்து "ஓம் ஹ்ரீம், ஸ்ரீம், க்லீம் ஸர்வ பூஜ்யே தேவி மங்கள சண்டிகே ஹூம் ஹூம் பட் ஸ்வாஹா என்னும் இருபத்தொன்று அக்ஷரங்களாலான மூல மந்திரத்தைக் கொண்டு, பூஜைகளை செய்து முடித்தார்கள். எல்லா விருப்பங்களையும் பூர்த்தி செய்யும் இதைப் பத்துலக்ஷம் தடவை ஜபித்தால் மந்திரம் சித்தியாகும். இனி வேதத்திலுள்ள தியானத் தைக் கேளும். பதினறு வயது நிரம்பியவளாகவும் கோவைப்பழம் போன்ற உதடுகளும் அழகான பற்களும், சரத்காலத் தாமரை போன்ற வதனமும் வெண் செம்பகப்பூப் போன்ற நிறமும், கருநெய்தல் போன்ற விழிகளும், கொண்டு அகில உலகங்களையும் தாங்கி, எல்லோருக்கும் எல்லாச் சம்பத்துகளையும் தருபவளாகவும் விளங்கும் தேவியை நமஸ்கரிக்கிறேன்! என்பதுதான் தியான மாகும் இனி ஸ்தோத்திரத்தைக் கூறுகிறேன்.

## ஸ்தோத்திரம

ரக்ஷ ரக்ஷ ஜகன்மாதா, தேவி மங்கள சண்டிகே!
ஹாரிகே விபதாம், ராசே ஹர்ஷ மங்களகாரிகே!
ஹர்ஷ மங்கள தக்ஷேச, ஹர்ஷ மங்கள தாயிகே!
சுபே மங்கள தக்ஷேச, சுபே மங்கள சண்டிகே!
மங்களே, மங்களார்ஹேச, ஸர்வமங்கள மங்களே!
ஸதாம் மங்களதே தேவி, ஸர்வேஷாம் மங்களாலயே!
பூஜ்யே, மங்களவாரேச, மங்களா பீஷ்டதேவதே!
பூஜ்யே மங்கள பூபஸ்ய மனுவம்ஸஸ்ய ஸ்ந்ததம்!
மங்களாதிஷ்டாத்ரு தேவி மங்களானுஞ்ச மங்களே!
ஸம்சார மங்களாதாரே! மோக்ஷமங்கள தாயினி!
ஸாரேச மங்களா தாரே, பாரேச ஸர்வகர்மணாம்!
பிரதி மங்கள வாரேச, பூஜ்யே மங்க ஸுகப்ரதே!

இவ்வாறு பிரதி செவ்வாய்க்கிழமை தோறும் மங்கள சண்டிகை யைத் தோத்தரித்து ருத்திரமூர்த்தி சகல மங்களத்தையும் பெற்ருர். அவ்வாறே அங்காரகனும் மங்களன் என்ற மன்னனும் மங்கையரும்

மங்களத்தை விரும்பும் ஆடவரும், தேவர், முனிவர், மனுக்கள் மனிதர்கள் முதலிய யாவரும் மங்கள சண்டிகையைப் பூஜைசெய்து அவரவர் விரும்பிய மங்களத்தையடைந்தனர். இந்தத் ஸ்தோத் திரத்தை கேட்பவருங்கூட புத்திர மித்திரர் முதலானவரோடு மங்களமடைவார்.

## மனஸாதேவி

இனி மனஸாதேவியின் உபாக்கியானத்தைச் சொல்கிறேன். காசிப மகரிஷியின் மனத்தகத்தே தோன்றியதாலும், பரமாத்மா வாறு சர்வேஸ்வரனையே மனதால் த்யானிப்பதாலும் இவள் மனஸாதேவி என வழங்கப்படுகிறாள். இவள் சித்த யோகினியாய் மூன்று யுகம் தவஞ்செய்தாள். அப்போது தவத் தலத்தில் கட்டை போல் இருக்கும் அவளைப் பரமாத்மா விஸ்வ பூஜிதா என்றும் கூப்பிட்டு அவளது கோரிக்கை ஈடேற அருள்செய்து, அவளைச் சகலரும் பூஜிக்கச் செய்து தானும் பாராட்டியதால் விஸ்வபூஜிதா, ஜகத் கௌரி என்னும் பெயர்களை பெற்றாள். சிவசிஷ்யையானதால் சைவை என்றும் விஷ்ணுப் பிரியையாகையால் வைஷ்ணவி என் றும், பரீக்ஷித்து மன்னன் நடத்திய யாகத்தில் நாகசர்ப்பங்களைக் காப்பாற்றியதால் நாகேஸ்வரி என்றும் நாகபகினி என்றும் விஷத் தைப் போக்கும் சக்தியையுடையவளாகையால் விஷஹரி என்றும் ஈஸ்வரரிடம் சித்தயோகத்தை யடைந்ததால் சித்த யோகினி என் றும் வழங்கப்படுகிறாள்.

அந்தத் தேவியை, மஹாஞான வடிவினளாகவும் யோகஸ்வரு பிணியாகவும் மிருதசஞ்சீவினியாகவும் மஹாஞானமுடையவளாக வும் அறிஞர் போற்றுகின்றனர். ஆஸ்தீக முனிவருக்கு அன்னை யானதால் ஆஸ்தீகமாதா என்றும், ஜரத்காரு முனிவருக்குப் பிரியையாக இருந்ததால் ஜரத்காருப் பிரியை என்றும் வழங்கப்படு கிறாள். ஜரத்காரு, ஜகத்கௌரி, மனஸா, சித்த யோகினீ, வைஷ் ணவி, நாகபகினீ, சைவீ நாகேஸ்வரீ, ஜரத்காருப்ரியா, ஆஸ்தீக மாதா, விஷஹரி, விஸ்வபூஜிதா என்ற இந்தப் பன்னிரு நாமங்களை யும் பூஜையின் போது எவன் ஒருவன் ஓதுவானோ, அவனுக்கும் அவனது வம்சபரம்பரைக்கும் சர்ப்பங்களால் பயம் இராது. பாம்பு ஏறிய படுக்கையிலும் பாம்பிருக்கும் மனையிலும், யுத்த முனையிலும் உடலில் பாம்பு சுற்றப்பட்ட நிலையிலும் இந்த ஸ்தோத்திரத்தை ஓதி னால் சகல ஆபத்தும் அகன்று போகும் அதில் ஐயமில்லை. எவன் ஒருவன் இதை நாள்தோறும் ஓதுகிறானோ அவனைப் பார்த்தாலே பாம்புகள் யாவும் பயந்தோடிப் போகும். இதை பத்துலக்ஷம் தடவை ஜபித்தால் சித்தியாகும். அவ்விதம் சித்திபெற்றவன் விஷயத்தையும் சாப்பிடும் சக்தியுடையவனாவான். விஷசர்ப்பங் களையே ஆபரணமாக அணிந்து சர்ப்பத்தின்மீது ஏறி நிற்கக்கூடிய

வனாகவும் விளங்குவான். பாம்பின் மீது படுத்து, சித்த புருஷனைப் போலவும் திகழ்வான், கடைசியில் விஷ்ணுவோடு கூடியிருப்பான்!''

## 48 மனஸாதேவியின் கதையும் பூஜையும்

''நாரதரே! சாமவேதத்தில் சொல்லப்பட்டுள்ள மனஸா தேவியின் தியானத்தையும் பூஜா விதியையும் பற்றி இனிக் கூறு கிறேன் கேளும்; வெண் செம்பக மலர்போன்ற வெண்ணிறத் தோடும் பத்திர புஷ்ப அலங்காரங்களோடும், தூய ஆடையோடும் பாம்பு மாலைகளோடும் மகா நினைவோடும் ஞானிகளில் சிறந்தும் சித்தர்களின் அதிஷ்டான தேவதையாகவும் விளங்கும் தேவியை நான் வணங்குகிறேன்'' என்று தியானித்து, மலர்கள், தூபதீபங்கள் முதலியவற்றாலும் வேத முறைப்படியான மூலமந்திரங்களாலும் பூஜை செய்ய வேண்டும்! பக்தர்களுக்கு கோரிக்கைகளை வழங்கும் படியான ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் ஐம் மனஸா தேவ்யை ஸ்வாஹா என்னும் பன்னிரண்டு அக்ஷரங்களோடு அமைந்த இந்த மந்திரம், கற்பகத்தரு போன்று கேட்டதையெல்லாம் சித்திக்கச் செய்ய வல்லது. இதை ஐந்து லக்ஷம் உரு ஜபிப்பவனுக்கு மந்திர சித்தி யுண்டாகும். அததகையனுக்கு விஷங்கூட அமுதம் போலாகி விடும். அவன் தன்வந்திரிக்கு இணையாவான். நீராடி அந்தரங்க மான தூய ஸ்தானத்தில் உட்கார்ந்து மிகச் சிரத்தையோடும் பய பக்தியோடும் மானஸா தெவியைப் பூஜை செய்யும் பக்தன் தன்வந்திரியாய்விடுவான். பஞ்சமியில் இத்தேவியை தியானித்து நமஸ்கரித்து பலி நடத்துபவன் செல்வந்தனாகவும் புத்திரப்பேறும் புகழும் வாய்ந்தவனாகவும் விளங்குவான்.

முன்னொரு சமயம் மனிதர்கள் பாம்புகளைப் பற்றிய அச்சம் மிகுந்தவர்களாய் காசிப மகரிஷியிடம் அடைக்கலம் புகுந்தார்கள். அதனால் காசிபர் பிரமனோடு சேர்ந்து, பல மந்திரங்களை உருவாக் கினார். வேத பீஜங்களுக்குத் தகுந்தாற்போல. பிருமாவின் ஏவற் படி இத் தேவியை மனத்தினால் உருவாக்கியதால் அவள் மானஸா தேவி என்று வழங்கப்பட்டாள். அந்த மானஸா தேவி கைலாயத் திற்குச் சென்று ஆயிரம் திவ்ய ஆண்டுகள் பிறைச்சூடிய சிவபெரு மானை பக்தி சிரத்தையோடு பூஜைசெய்து வழிபட்டு வந்தாள். பக்தர்களின் பக்திக்கு அதிவிரைவில் மகிழ்ந்துவிடக்கூடிய சிவ பெருமான், மானஸாதேவிக்கு மாபெரும் ஞானம்தந்து மிகவும் அன்போடு கற்பித்து அஷ்டாக்ஷரமான லக்ஷ்மிமாயா காம பீஜத் தோடுள்ள கிருஷ்ண மந்திரத்தை உபதேசம் செய்து புரச்சரணை



முறைமையையும்பூஜை முதலியனவற்றையும் சொல்லி புஷ்கர க்ஷேத்திரத்திற்குச் சென்று தவம் புரியும் படி கூறியனுப்பினார். அத்திருத்தலத்தில் மானஸாதேவி மூன்று யுகங்கள் தவஞ்செய்து, கிருஷ்ணரைத் தரிசித்து, அவருடைய கருணையினால் சித்தி யடைந்தாள். மென்மையான உடலோடு இளம் பெண்ணாக விளங்கும் அவளுக்கு கிருபா சமுத்திரமான கிருஷ்ணர் வரங்கள் வழங்கி, அவளை ருத்திரர், காசிபர், முதலியவர்கள் ஆதரிக்கும்படியும் மனுக்கள், மகரிஷிகள், மனிதர்கள் நரகங்கள் முதலானவர்களெல்லாம் வழிபடும்படியும் செய்தார். பிறகு ஜரத்காரு முனிவர், பிரமாவின் கட்டளையால் அவளை மணந்து கொண்டு வாழ்ந்தார். ஒரு சமயம் அவர் நீண்ட காலம் தவம்புரிந்து களைப்புற்று தன் மனைவியான மானஸாதேவியின் தொடையில் தலை வைத்து இறைவனை நினைத்துப் படுத்துறங்கிக் கொண்டிருந்தார்.

அப்பொழுது சூரியன் மறையும் நேரம்நெருங்கியது. பதிவிரதையான மானஸாதேவி சிந்தித்தாள். சாயங்காலச் சந்தியாவந்தனம் செய்யாமல் இருக்கிறவன் பிரம்மஹத்யாதி பாபங்களை அடைகிறான் என்றும் காலை, மாலை சந்தியாவந்தனம் செய்யாமல் இருப்பவன் பிரமஹத்தி முதலான பாபங்களால் அசுத்தவானாகி விடுவான் என்றும் வேதத்தில் கூறப்பட்டுள்ளது. அதனால் நம் கணவர் பாவத்தையடைவாரே!'' என்று நினைத்து தர்ம பயத்தோடு தன் கணவரை எழுப்பினாள். தூக்கமயக்கத்தில் இருந்த ஜரத்காரு முனிவர் எழுந்ததும் கோபங்கொண்டு, ''பெண்ணே! நான் தூங்கும் போது நீ ஏன் என் தூக்கத்தைக் கெடுத்தாய்? எந்தப் பெண் தன் கணவனுக்கு அபசாரம் செய்கிறாளோ அவளால் இயற்றப்படும் அனுஷ்டானம், விரதம், தவம், தானம் அனைத்துமே துர்ப்பயன் தான்! எவள் தன் கணவனை வழிபட்டுப் பதி பூஜைசெய்கிறாளோ அவள் தெய்வ பூஜையே செய்தவளாவாள். பதிவிரதையின் பூஜைக்காகவே பரமாத்மா பதி உருவம் கொண்டிருக்கிறார். சகலவிதமான தானங்களும். யாகங்களும் தீர்த்த ஸ்நானமும் க்ஷேத்திராடனமும், விரதமும், தவமும், பூஜையும் சத்தியமும்

அறமும் அனைத்துமே பதிபூஜைக்குப் பதினாறில் ஒரு பங்கு கூட இணையாகாது. எந்தப் பெண் தன் பர்த்தாவை இடையறாமல் பூஜித்து வருகிறாளோ, அவள் தன் பர்த்தாவோடு பரமபதத்தில் பரமாத்மாவின் திருவடிகளை அடைகிறாள். புருஷனுக்கு எதிரான காரியங்களைச் செய்பவளும், விருப்பமற்ற வார்த்தைகளை தன் மனம் போனபடியெல்லாம் சொல்பவளும் ராட்சஸவர்க்கத்தில் பிறந்த வளுக்குச் சமமேயாவாள். அவள் சந்திர சூரியர் உள்ள காலம் வரையில் கும்பீபாக நரகில் கிடந்து பிறகு மகனும் கணவனும், இல்லாத சண்டாளியாகப் பிறப்பாள்!'' என்று கூறினார். உடனே மனஸாதேவி அச்சம் கொண்டு, ''சுவாமி! உங்களுக்கு சந்தியா வந்தன தர்ம ஹீனமாகிவிடுமே என்ற பயத்தால்தான் உங்கள் தூக்கத்தைக் கலைத்து உங்களை எழுப்பிவிட்டேன். சிருங்காரம், ஆகாரம், நித்திரை இவற்றிற்கு பங்கம் விளைவிப்பவர் சந்திர சூரியர் உள்ள காலவரையில் காலசூத்ர நரகையடைந்து அவதியுறு வாரே!'' என்று கூறிவிட்டுத் தன் கணவரின் காலடியில் விழுந்து பயபக்தியோடு ஓவென அழுதாள்.

ஜரத்காரு முனிவர் அவளைச் சபிக்க முயன்றார். அப்போது சூரியன் சந்தியாதேவியுடன் வந்து அம்முனிவரைச் சந்தித்து, "அந்தணரே! நீர் உம் மனைவியைச் சபிப்பது உசிதமல்ல. அஸ்த மான காலம் வந்துவிட்டதே என்று உணர்ந்து, பயத்தால்தான் அவள் உம்மைத் தூக்கத்திலிருந்து எழுப்பினாள். நீர் வெகுண் டெழுந்து அவளை நிந்தித்தீர்! உடனே அவள் உம்மைச் சரண டைந்து விட்டாள். செந்தண்மை பூண்ட அந்தணர்களின் இதயம் எப்பொழுதும் வெண்ணெயைப் போன்றது. அவர்களுக்கு அரை க்ஷணம்தான் கோபம் இருக்கும். ஆனால், அதற்குள் இந்த உல கமே சாம்பலாகிவிடும். மறுபடியும் உலகத்தைப் படைப்பதற்கு அந்த அந்தணனைவிட ஆற்றலும் தேஜஸும் உள்ளவன் வேறு எவனும் இல்லை. பிராமணர் பிரம்மாவின் அம்சம்! ஆகையால் அவர்கள் பிரம்ம தேஜஸினால் எப்போதும் பிரகாசித்துக் கொண்டு, பரப்பிரம்ம மூர்த்தியையே தியானித்துக் கொண்டிருப்பார்கள்!'' என்றான். அதைக் கேட்டதும் முனிவர் மகிழ்ந்து தம் பிரதிக்ஞை யை நிறைவேற்ற முனைந்து, அழுது கொண்டிருக்கும் மனஸா தேவியைவிட்டு நீங்கித் தமதிடம் சென்றார் மனம் வருந்திய மனஸா தேவி தன் குருவான ஜம்புநாதரையும் இஷ்ட தெய்வங்களான பிரம்ம விஷ்ணுக்களையும், தனக்குப் பிறவியளித்த காசிபரையும் நினைத்தாள். அவர்கள் எல்லோரும் அவள் முன்னால் தோன்றினார் கள். அவர்களை மானஸாதேவி வணங்கித் துயரத்தோடு தனக்கு நேர்ந்ததைக் கூறினாள். அப்போது பிருமா மகா விஷ்ணுவை நோக்கி, ''இவளுடைய கணவன் புத்திர உற்பத்தி செய்யாமல், எப்படி இவளைக் கைவிட்டுப் போகலாம்? ஆகையால் அவர் அற நெறிப்படி புத்திர உற்பத்தி செய்ய வேண்டும். எவன் புத்திரப்

பேறளிக்காமல் துறவு வைராக்கியம் பூண்டு தனது இல்லற தர்மத்தையும் மனைவியையும் விட்டு விடுகிருனே, அவனது புண்ணியமெல்லாம் ஜல்லடையில் விட்ட தண்ணீரைப்போல் வீணுக ஒழுகிப் போய்விடும்!'' என்ருர். அதைக் கேட்டதும் ஜரத்காரு முனிவர், மந்திர பூர்வமாக மானஸதேவியின் நாபியைத் தொட்டு, ''மனஸாதேவியே! இந்தக் கருப்பத்தால் உனக்கு பிள்ளைப்பேறு உண்டாகும் அவ்வாறு உனக்குப் பிறக்கும் புதல்வன் சிறந்த புலனடக்கம் உடையவனுகவும் தர்மசீலனுகவும், அந்தணரில் அதி உத்தமனுகவும், வேதமுணர்ந்தவனுகவும் தேஜஸ் மிக்கவனுகவும் புகழ் வாய்ந்தவனுகவும் தவஞானியாகவும் விளங்குவான். தவயோகிகளுக்கும் ஞானிகளுக்கும் அவன் தலைவனுகவும் ஈஸ்வரபக்தியுடையவனுகவும் குலத்தைக் கடைத்தேற்றுபவனுகவும் திகழ்வான். அவன் பிறந்தவுடனேயே பிதுர்க்கள் மகிழ்ச்சியில் கூத்தாடுவார்கள் எந்தப் பெண் நல்ல ஒழுக்கம் உடையவளோ, அவளே பதிவிரதை. எவள் அன்போடு பிரியமாகப் பேசுகிருளோ, அவள் தான் பிரியை. எவள் பிள்ளை பெற்றவளோ அவள்தான் தர்மிஷ்டை. எவள் குலத்தைச் சிறந்தோங்கச் செய்கிருளோ அவள்தான் குலமங்கை, புத்திரனுக்கு ஈஸ்வர பக்தியைத் தருபவர் பந்துவே தவிர இஷ்டமான சுகத்தை மட்டும் தருபவர் பந்துவல்ல அப்புத்திரனுக்கு தெய்வசம்பந்தமான கவசத்தை கொடுப்பவன் பிதா அப்புத்திரனுக்கு எவள் கர்ப்பவாசத்தை நீக்குகிருளோ, அவள் தான் கர்ப்பத்தைத் தரிப்பவள்; அவனுக்கு தயையின் வடிவமும் அவள் தான் சகோதரியும் அவள் தான்; யமபயத்தைப் போக்குபவளும் அவள் தான்; எவன் பரமாத்மாவின் பக்தியையும், பரமாத்ம மந்திரத்தையும் உபதேசிக்கிருனே, எவன் ஞானத்தை வழங்குகிருனே அவன் தான் அவனுக்கு குரு! பரமாத்மாவை நினைப்பதுதான் ஞானம். எந்த ஈஸ்வரனிடம் பிரபஞ்சம் அனைத்தும் தோற்ற ஒடுக்கம் அடைகின்றனவோ அவனை அறிவதைவிட வேறு என்ன ஞானம் உண்டு? வேதயாகங்கள் அனைத்தும் இறைவன் தொண்டேயாகும்! தத்துவங்களில் சிவ தத்துவம் மிகவும் சாரமானது. இதர தத்துவங்கள் வலிவற்றவை. எவன் ஞானேபதேசம் செய்கிருனே, அவன்தான் ஸ்வாமி. எவன் ஞானமிருந்தும் ஸம்சாரபந்தத்தை விடாமல் இருக்கிருனே அவன் தான்பகைவன். பரம் பொருள் பக்தியோடு கூடிய ஞானத்தை எவன் தன் மாணவனுக்கு உபதேசிக்காமல் இருக்கிருனே, அந்தக் குருவானவன் தன் மாணவனை அழிப்பவனே யாவான். ஏனெனில் அவன் தன் சீடனைச் சம்சார பந்தத்திலிருந்து விடுவிக்காமல் இருக்கிருனல்லவா? பிறவித் துக்கத்திலிருந்தும் மரணவாதனையிலிருந்தும் தன் சீடனை விடுவிக்காதவன் எப்படி குருவாக முடியும்? பரமானந்த உருவாகவும் நிலையான பொருளாகவும் இருக்கும் இறைவனின் இடத்தை எடுத்துக் காட்டாமலிருப்பவன் எப்படி குருவாகவும் பந்துவாகவும் இருக்கமுடியும். ஆகையால் பதிவிரதையே! நிர்க்குணனும் பரப்பிரம்ம சொரூபியாக

வும் உள்ள பரமாத்மாவிடமே நீ அடைக்கலம் புகுவாயாக! அந்த ஈஸ்வர சேவையால், சகல கர்மங்களும் க்ஷீணித்து ஒழிந்துவிடு கின்றன. நான் உன்னை ஒரு காரணத்தால் துறந்துவிட்டேன். நான் துறந்து விட்டேனே என்பதை நீ பொறுத்துக் கொள்வாயாக! நான் புஷ்கர க்ஷேத்திரத்தில் தவஞ்செய்யப் போகிறேன். நீயும் உன் விருப்பப்படி போகலாம். ஆசையில்லாதவர்களின் உள்ள மானது எப்போதும் பரமாத்மாவின் திருவடித் தாமரைகளிலேயே உறைந்திருக்கும்!'' என்று கூறினர்.

அதைக் கேட்டதும் மானஸாதேவி துக்கம் மேலிட்டவளாக தன் கணவனை நோக்கி, ''குருவே; நாயகரே! நான் உமது தூக்கத் திற்கு ஊறுவிளைவித்ததற்காக என்னை விட்டுவிட வேண்டிய தோஷம் எதுவுமில்லை. நான் எப்போது எங்கே உம்மை நினைப் பேனே, அப்போது அங்கே நீங்கள் எனக்குத் தரிசனம்; தரவேண் டும். உறவினரை விட்டுப் பிரிந்திருப்பது பெரும் துக்கம் புத்திரனைப் பிரிந்திருப்பதோ அதைவிடத் துக்கம்! பிராண நாயகனைப் பிரிந்து இருப்பது என்பதோ தான் உயிரையே விட்டு பிரிந்ததற்கு இணை யாகும். தந்தைக்குப் பிள்ளைகள் மீதும் வைஷ்ணவர்களுக்கு விஷ்ணுவின் மீதும், ஒற்றைக் கண்ணனுக்கு இரு கண்ணின் மீதும், தாகமெடுத்தவனுக்குத் தண்ணீர் மீதும், பசித்தவனுக்கு அன்னத்தின் மீதும், காமுகர்களுக்கு கலவியிலும், திருடர்களுக்குப் பிறர் பொருளிலும், குத்ஸித ஸ்திரீகளுக்கு பரபுருஷர்கள் மீதும் படித்தறிந்த பண்டிதர்களுக்கு சாஸ்திரங்களிலும் வணிகர்களுக்கு வாணிபத்தின் மீதும் மனம் ஈடுபட்டிருப்பது போலவே, பதிவிரதை களுக்கு பிராண நாயகனிடமே மனம் பதிந்திருக்கும்!'' என்று சொல்லித் தன் கணவரின பாதத்தில் விழுந்தாள். தயாசமுத்திர மான ஜரத்காரு முனிவர் அவளைத் தூக்கித் தம் மார்போடணைத்து, தம் கண்ணீரில் அவளை மூழ்கச் செய்தார். மனையாளும் தன் மணு ளரின் மார்பைக் கண்ணீரால் நனைத்தாள். இருவரும் பரமசிவனைத் தியானித்து, ஞானத்தால் சோகம் நீத்தார்கள். ஜரத்காரு, தம் பத்னியிடம் விடை பெற்றுக் கொண்டு தவம்புரியச் சென்றார். மனஸாதிதவி மிகவும் பக்தியோடு தன் குருவான பரமேஸ்வரரிடம் சென்றாள். பார்வதி தேவி, அவளைப் பார்த்து, இரக்கங்கொண்டு, சிவமூர்த்தியைக் கொண்டு, அவளுக்கு ஞான உபதேசம் செய் வித்து, மகிழ்ச்சியுடன் வாழச் செய்தாள். மானஸாதேவி சிலநாட் கள். கழிந்த பிறகு ஒரு சுப வேளையில் ஒரு நல்ல ஆண்மகனைப் பெற்றாள். அந்தப் புத்திரன் கர்ப்ப வாசத்திலேயே தாயுடன் ஞானோபதேசத்தைப் பெற்றுணர்ந்தவனுகையால் அவனது ஞான தேஜஸைக்கண்டு, ஞானியரும் யோகியரும் போற்றிப் புகழ்ந்தார் கள். ருத்திரமூர்த்தி அவனுக்கு ஜாதகர்மம் இயற்றுவித்து, வேதங் கள் நான்கையும் கற்பித்தார். அவன் குருபக்தியிலும், காலத்தைக் கடந்தவனே பரம்பொருள் என்ற ஞானத்திலும் சிறந்து விளங்கிய

தால் அவன் ஆஸ்திகன் என்று சிவபெருமானிடம் பெயர் பெற்ருன். பிறகு அவன் ருத்திரரிடமே மந்திர உபதேசம் பெற்று, புஷ்கரத் திற்குச் சென்று மூன்று லக்ஷம் ஆண்டுகள் தவம்புரிந்து, பிறகு ருத்திரமூர்த்தியிடம் திரும்பிவந்து சிலகாலம் வசித்திருந்துவிட்டு அவரிடம் விடைபெற்று தன் மனஸாதேவியுடன் காசிபரிடம் சென்ருன். காசிபர் மிகவும் மகிழ்ந்து அந்தணர்களுக்கு நூறு லக்ஷம் ரத்தினம் தானம் கொடுத்து, போஜனம் செய்வித்தார். ஆஸ்தி கனது தேஜஸை அதிதியும் திதியும் இன்னும் வேறு பெண்களும் கண்டு மகிழ ஆஸ்திகன் அங்கே வாழ்ந்திருந்தான். அப்போது பரீக்ஷித்தின் குமாரனுன ஜனமேஜயன் தன் தந்தை சர்ப்பத்தால் மடிந்ததை நினைத்துக் கோபங்கொண்டு சர்ப்பயாகஞ் செய்யத் துவங்கினுன். அதன் விளைவாக எல்லாப் பாம்புகளும் அந்த யாகத் தீயில் வந்து விழுகிறபோது, பரீக்ஷித்தைக் கொன்ற தக்ஷன் என்ற சர்ப்பராஜன் தேவேந்திரனிடம் சரணடைந்து, அவனது பாதுகாப் பில் இருந்தான். அதையறிந்த பிராமணர்கள் இந்திரனையும் தக்ஷனுடன் சேர்த்து சங்கரிக்க முயன்ருர்கள். இந்திரன் முதலான தேவர்களெல்லாம் பயந்து நடுங்கி மனஸாதேவியிடம் சென்று முறையிட்டார்கள். அவள் தன் புத்திரனுன ஆஸ்திகரைக் காட்டி னுள். உடனே இந்திரன் முதலானவர்கள் ஆஸ்திகரிடம் சென்று, ''எங்களுக்கு உயிர்ப்பிச்சை தரவேண்டும்'' என்று வேண்டினுர்கள் அவர்களது வேண்டுகோளுக்கு ஆஸ்திகர் இரங்கி, சர்ப்ப யாகம் நடக்குமிடத்திற்குச் சென்று. யாகம் புரியும் அந்தணர்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்து அந்த யாகத்தை முடித்து விட்டு யாவருக்கும் தக்ஷிணை கொடுத்து, விடையளித்தார். இந்திரன் முதலியோர் மனஸாதேவியைப் போற்றிப் பூஜித்தார்கள். இனி அந்தப் பூஜா விதிகளைக் கூறுகிறேன்.

## மனஸாதேவி பூஜையின் விதிமுறைகள்

முறைப்படி நீராடி ஸ்நானம் முடித்து இரண்டு ஆடைகள் உடுத்தி அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, ரத்தின சிங்காத னத்தில் மனஸாதேவியை வீற்றிருக்கச் செய்யவேண்டும். பக்தி யோடு கங்கை நீரைக் கலசத்தில் கொண்டுவந்து அபிஷேகம் செய்து, தூய்மையான ஆடையாபரணங்களால் அலங்கரித்து, சந்தனம் பூசி, மலர்கள் தூவி, மாலைகளை அணிவித்து, அர்க்கியம் திருநீர் கொடுத்து, பஞ்சாயதன பூஜைச் செய்து, பிறகு மனஸா தேவியைப் பூஜித்து, ''ஸ்ரீ மனஸா தேவ்யை ஸ்வாஹா:'' என்ற மந்திரத்தால் அர்க்ய பாத்ய ஆசமனதிகளைக் கொடுத்து, ஷோடச உபசாரங்கள் செய்து வாத்தியமுழக்கம் செய்வித்து, மலர்மாரி புஷ்ப பூக்களைச் சொரிந்து புளகாங்கிதத்தோடு வணங்கிப் பின்வரு மாறு போற்றி இசைக்கவேண்டும்.

"பதிவிரதைகளிற் சிறந்த உன்னைத் துதிக்கிறேன். பராத்பரையான உன்னைத் துதிக்கும் வல்லமை எனக்கு இல்லை. வேதத்தில் உன் ஸ்தோத்திர லக்ஷணகுணம் விவரிக்கப்பட்டுள்ளது. பிரகிருதத்தில் அவற்றை எண்ணிச் சொல்ல எனக்குச் சக்தியில்லை. நீயே சுத்த தத்துவ சொரூபிணி கோபத்தையும் ஹிம்சையையும் நீத்திருப்பவள் ஆகையால் ஜரத்காரு முனிவர் உன்னிடம் குறை காணுமல் உன்னை யாசித்தார். நல்லொழுக்கமுடைய நீ எனக்குத் தாயான திதியை போலப் பூஜிக்கப்பட்டாய். தயாரூபியான நீ எனக்குச் சகோதரியாவாய். க்ஷாமரூபமான நீ எனக்குத் தாயுமாவாய்! உன்னுல் எனது புத்திரகளத்திராதிகள் காக்கப்பட்டனர். உன்னை வழிப்பட்டுப் பூஜிக்கிறேன்! சகல உலகங்களுககும் அன்னையான தேவியே! ஆடி மாதத்து சங்கிரமணத்தியோ ஆடி மாதத்து பஞ்சமியிலோ, மாத முடிவிலோ தினந்தோறுமோ உன்னைப் பூஜிப்பவர்களுக்கு புத்திர பௌத்திராதிகளும் பொன் பொருள் முதலான செல்வமும் பெருகும். அவர்கள் புகழோடும் ஞானத்தோடும் குணத்தோடும் சிறந்து விளங்குவார்கள். உன்னை நிந்திப்பவர்களே. பொருளற்றவர்களாயும் எல்லாப் பயங்களும் உடையவர்களாகவும் இருப்பார்கள் வைகுண்டத்தில் லக்ஷ்மி, விஷ்ணுவோடு இருப்பது போல, ஜரத்காரு முனிவரை நீ அனுசரித்திருக்க உன்னை உன் தந்தை படைத்தார். என்னைக்காத்தருள, நீ மனஸாதேவி என்ற பெயருடன் திகழ்கிருய். சக்தியின் அம்சத்தால் நீ மனஸாதேவியாக அரிதாரம் செய்தாய். இப்பொழுது சித்தயோகினியாகத் திகழ்கின்ருய். எதனுல் தேவர்கள் மனே பக்தியோடு உன்னைத் துதிக்கின்றனரோ, அதனுல் உன்னை மனஸா தேவி என்று போற்றுகின்றனர். நீ உண்மையின் வடிவமானவள். எவன், மனத்தால் உன்னைத் தியானிக்கிருனே, அவன் உன்னை அடைவான்" என்று தோத்தரித்து பாலினுல் அபிஷேகம் செய்து இந்திரன் மிகவும் விருப்போடு பூஜித்தான் தேவி, அவனுக்கு அபூர்வமான ஞானத்தை உபதேசித்தாள். இந்தத் துதியுடன் தேவியைப் பூஜிப்பவனுக்கும் படிப்பவனுக்கும் அவனது வம்சத்தினருக்கும் சர்ப்ப பயமில்லை விஷங்கூட அமிர்தம் போலாகிவிடும். இந்தத் துதி சித்தியாக ஐந்து லக்ஷம் தரம் ஜபிக்கவேண்டும்!"

—இவ்வாறு நாராயண முனிவர் கூறினுர்.

## 49 சுரபி

நாரதர், நாராயணரை நோக்கி. "முனிவரில் உயர்ந்தவரே! கோலோகத்திலிருந்து வந்த சுரபி என்ற தேவி யார்? அவளது வரலாறு என்ன?' என்று கேட்டார். பசுக்களுக்கு அதிஷ்டான

மானவளும் பசுக்களை முதலில் பெற்றவளும் முக்கியமானவளும் கோலோகத்தில் படைப்புக்கு முன்பு பிறந்தவளுமான சுரபியின் சரித்திரத்தை நாராயணர் கூறலானார்:

பிருந்தாவனத்தில் ஒருநாள் கிருஷ்ணர் கோபிகா ஸ்திரீகள் சூழ ராதாவுடன் இரகசியமாக விளையாடிக் கொண்டிருந்தார். அப்போது அவர், பால் குடிக்க வேண்டும் என்று விரும்பினார். உடனே அவர் லீலையாக தனககுப் பக்கத்தில் சுரபியை மனோரதம் என்ற பசுங்கன்றோடும் சிறந்த பாலோடும் படைத்துருவாக்கினார். அமுதத்தைவிடச் சுவையாகவும் பிறப்பு இறப்புகளை நீக்குவதுமான சுரபி யெனும் அந்தப் பசுவின் பாலை ஸ்ரீதாமா என்பவள் ஒரு புதிய பாத்திரத்தில் கறந்தாள். அந்தப் பாலை, கோகுல கிருஷ்ணர் அருந்தும் போது பால் பாத்திரம் உடைந்து நூறு யோசனைதூரம் ஒரு குளமாக நிறைந்தது. பூவுலகில் அதை க்ஷீரசரஸ் (பாற்குளம்) என்று கூறுவார்கள். அந்தக்குளம், கோபியருக்கும் ராதைக்கும்கிரீடைக்கு (விளையாட்டுக்கு) உரிய குளமாகி அது ரத்தினங்களால் நிறைவுற்றிருந்தது. காமதேனுவின் ரோமங்களிலிருந்து லக்ஷங்கோடி கோபாலர்களோடு லக்ஷங்கோடி காமதேனுக்கள் பிறந்தன. பிறகு அப்பசுக்கள் சந்ததி பெருகி மிகவும் விருத்தியடைந்தன அதனால், சகல உலகத்தினரும் காமதேனுவைப் பூஜிக்கத் துவங்கினர். அந்தப் பூஜையை மாலை நேரத்தில் தீபத்தோடு செய்யவேண்டும் என்று தருமர் என்னிடம் சொன்னார். இனி அதற்குரிய மூல மந்திரம், தியானம், துதி, பூஜா விதி முதலியவற்றைக் கூறுகிறேன்.

பிரணவத்தை முதலாகவும் நம: என்பதை கடைசியாகவும் சுரப்யை என்னும் அக்ஷரங்கள் ஆறுகொண்ட மந்திரத்தை லக்ஷம் தரம் உரு ஜெபித்தால் சித்தியாகும். இது பக்தர்களுக்குக் கற்பகத்தாரு போன்றது. யஜுர்வேதத்தில் கூறப்பட்டுள்ள தியானமும் பூஜையும், முக்தியையும் பக்தியையும் சகல விருப்பங்களையும் வழங்கவல்லதாகும். "லக்ஷ்மி சொருபமாகவும் ராதையின் சகியாகவும் பசுக்களின் அதிஷ்டான தேவதையாகவும் பசுக்களின் தலைவியாகவும், தாயாகவும், பரிசுத்த ஆகாரம் அருந்துவதாயும், பக்தர்களுக்கு சகல காமத்தை வழங்குவதாயும் பிரபஞ்சங்கள் யாவையும் தூய்மை செய்வதாயுள்ள சுரபி தேவியை நான் நமஸ்கரிக்கிறேன்!" என்று தியானித்து கலசம், அல்லது கம்பத்திற் செய்யப்பட்ட கோசிரசிலோ (பசுவின் தலையிலோ) கண்புலனான கோசிரசிலோ, ஜலம், அக்கினி ஆகியவற்றில் எதிலாவது காமதேனுவை நினைத்து பிராமணன் பூஜிக்க வேண்டும். மறுநாள் முற்பகலில் தீபத்தோடு பூஜிக்க வேண்டும். இவ்வாறு எவன் ஒருவன் செய்கிறானோ அவன் யாவராலும் போற்றிப் பூஜிக்கப்படுவான்.

முன்பு ஒரு காலத்தில் விஷ்ணு மாயையால், காமதேனு பாலையடக்கிக் கொண்டது. அதனால் தேவர்கள் வருத்தமடைந்து, பிரமனைத் துதிக்க, அவருடைய ஆக்ஞையினால் இந்திரன், காம தேனுவைப் பின்வருமாறு தோத்தரித்தான்.

''நமோ தேவ்யை, மஹா தேவ்யை, ஸீரப்யைச நமோ நம:
கவாம் பீஜஸ்வரூபாயை நமஸ்தே ஜகதம்பிகே.
நமோ ராதா ப்ரியாயைச பத்மஸாயை நமோ நம:
நம: கிருஷ்ணப்ரியாயைச கவாம் மாத்ரே நமோ நம:
கல்ப விருக்ஷ ஸ்வரூபாயை, ஸர்வேஷாம் ஸததம்பரே
க்ஷீரதாயை தனதாயை புத்தி தாயை நாமோ நம:
ஸுபாயைச ஸுபத்ராயை கோப்ரதாயை நமோ நம:
யஸோதாயை கீர்த்திதாயை தர்மதாயை நமோ நம:

இவ்வாறு தேவேந்திரன் வழிபாடு செய்தான். அதனால் உலக அன்னையான சுரபி மகிழ்ச்சியடைந்து, தேவர்களுக்கு வரமளித்து, கோலோகம் போய்ச் சேர்ந்தது. தேவர்களும் தம்மிடம் சென்றனர். அப்பொழுது பசுக்கள் பாலை கறக்கத் துவங்கின. அந்தப் பாலி லிருந்து தயிரும் நெய்யும் உண்டாயிற்று. அதைக் கொண்டு உலகினர் யாகங்களைச் செய்யவே, தேவர்கள் மகிழ்ந்தனர். இந்தத் துதியை எவன் படித்தாலும், அவன் கோ சம்பத்துள்ளவனாகவும் செல்வந்தனாகவும் புகழுடையவனாகவும் விளங்குவான். அவன் எல்லாப் புண்ணிய நதிகளிலும் நீராடிய பலனையும் பெறுவான். அவனே யக்ஞத்தில் தீக்ஷை செய்து கொண்டவனுமாவான்! அவன் இம்மையில் இன்பமடைந்து, மறுமையில் பிரம பதத்தையடைவான். அவன் மீண்டும் பிறவாமல் பிரம்ம குமாரனாவான்!

## 50 ராதிகாதேவி துர்க்காதேவி பூஜை முறைகள்

நாரதர், நாராயணரை நோக்கி, ''முனி சிரேஷ்டரே! சம்சார பந்தத்தை நீக்குவதும் வேதங்களில் கூறப்பட்டுள்ளதுமான ராதா, துர்க்கா தேவிகளின் சரிதைகளைக் கூற வேண்டுகிறேன். பராசக்தி களான அவ்விரு தேவியரின் மகிமைகளைக் கேட்டால், யார் உள்ளத்தில்தான் பக்தி ஏற்படாமலிருக்கும்? இந்தப் பிரபஞ்சம் எதன் அம்சமோ, பிரபஞ்சங்கள் யாவும் எவர் ஆக்ஞைக்குக் கட்டுப் பட்டு இயங்குகின்றனவோ, எவர் பக்தியினால் முக்தி சித்திக்குமோ, அதையும் நீங்கள் எனக்குக் கூற வேண்டும்'' என்றார். நாராயணர் கூறத் துவங்கினார்:



நாரத முனிவரே! வேதத்தில் சொல்லப்பட்ட ரகசியத்தை உமக்குச் சொல்கிறேன். அது வெகு ரகசியமாகவும் சாராத்சார மாகவும் பராத்பரமாகவும் இருப்பது! எனவே அதைச் சாதாரண மானவர்களுக்கு சொல்லக் கூடாது. உலகம் உண்டானதிலிருந்தே சம்வித் சொரூபமான மூலப் பிரகிருதி தேவியானவள் பிராணன், புத்தி என்பனவற்றுக்கு அதிஷ்டான தேவியாக விளங்கிக் காப் பாற்றியும் தண்டித்தும் வருகிருள். சராசரமான விராட் புருஷன் முதலான ஜீவன்கள் எல்லாம், அச்சக்திகளுக்கு முற்றிலும் வசப் பட்டே இயங்குகின்றன. அத்தேவிகளின் அருள் வரமின்றி முக்தி நிலை சித்திக்காது ஆகையால் அந்த அருள் வரம் கிடைப்பதற்கு நாள்தோறும் தேவிகளுக்குப் பணியாற்றி வர வேண்டும். அது

மட்டுமல்ல. பராத்பர ரூபமாகவும் முப்பெரும் கடவுளரால் தொழப்பட்டதாகவும் விளங்கும் ராதிகா மந்திரத்தைக் கூறுகிறேன். கேட்டுக் கொள்ளும்.

மந்திரம் ஸ்ரீராதா என்பதாகும். அதைச் சதுர்த்தி அந்தமாகவும், அதன் பிறகு, அக்னி பத்னியின் நாமத்தையும் சேர்த்து அது ஆறு அக்ஷரமாகின்றது. அந்த மகா மந்திரம் அறம் பொருள் இன்பம் வீடு எனும் பேறுகளைக் கொடுக்கக் கூடியது. அது மாயைக்குப் பீஜம். சிந்தித்ததை யெல்லாம் வழங்கும் சிந்தாமணி போன்றது. இந்த மந்திரச் சிறப்பை ஆயிரங்கோடி முகமும் நூறு கோடி நாவுகளும் படைத்தவர்களாலும் முற்றிலும் விவரித்துச் சொல்ல இயலாது. முதலில் கிருஷ்ணர், மூல தேவியிடமிருந்த இந்த மந்திரோபதேசம் பெற்றார். பிறகு கிருஷ்ணர், விஷ்ணுவுக்கும், விஷ்ணு பிருமாவுக்கும், பிருமா விராட்டுக்கும் இம் மந்திரத்தை உபதேசம் செய்தார்கள். அந்த மந்திரத்தை ஜெபித்தே நான் மகரிஷியானேன். பிரம்மா முதலிய சகல தேவர்களும் ராதிகாவைப் பூஜிக்கின்றனர். ராதையின் பூஜையின்றி கிருஷ்ண பூஜை பயன் தராது. ஆகையால் சகல பக்தர்களும் ராதிகையைப் பூஜிக்க வேண்டும். கிருஷ்ணருக்குப் பிராணனாகவும் அவரது ராஸக்ரீடைக்குத் தலைவியாகவும் கிருஷ்ணரையே தன் வசப்படுத்தி வைத்திருப்பவளாகவும் விளங்கும் அந்த ராதையை கிருஷ்ணரும் ஒரு கணமும் நீங்குவதில்லை. ராதனம் என்றால் பேறுகளைச் சித்திக்கச் செய்வது என்று அர்த்தம். பக்தர்களுக்குப் பேறுகளை தரக்கூடியவள் அத்தேவி. அதனால் அவள் ராதா என்று வழங்கப் படுகிறாள். அந்த மந்திரத்திற்கு நான்தான் ரிஷி: சந்தஸ் காயத்ரி: தேவதை — ராதிகா; சக்தி பீஜமும் சக்தி ஸ்வரூபமும் முன்பே சொல்லப்பட்டிருக்கின்றன. மூலமந்திர ஆவர்த்தியினால் அக் கன்னியாசம் செய்து, பிறகு சாம வேதத்தில் உள்ள தியானத்தை முன்பு கூறியது போலச் செய்ய வேண்டும். வெண்சம்பகப் பூ நிறத்தினள், சரத்காலச் சந்திரன் போன்ற முகம் வாய்ந்தவள். அந்தச் சந்திரனைப் போன்ற விழிகள் கொண்டவள். கோடிச் சந்திரர்கள் ஒளி வீசி மிளிர்பவள் கோவைப் பழம் போன்ற அதரங்களும் பெருத்த பிருஷ்டமும் கொண்டவள், ஒட்டியாணத்துடன் கூடிய நிதம்பம் உள்ளவள். குருந்தப் பூ மொட்டுகள் போன்ற பற்களையுடையவள், வன்னிதத்தமான வெண் பட்டை அணிந்தவள். புன்னகை ததும்பும் முகமும் யானையின் மத்தகங்களைப் போன்ற கொங்கைகளும் கொண்டவள். என்றுமே பன்னிரண்டு வயதுள்ள இளமை வாய்ந்தவள். ரத்ன பூஷணங்களால் பூஜிக்கப்பட்டவள் சிருங்கார ரச வடிவமான ரசிகை, பக்தர்களுக்கு அருள் புரிய ஆர்வம் மிக்கவள் மல்லிகை, மாலதி முதலிய மலர் மாலைகளை சூடிய கூந்தலுடையவள் மென்மையான உடல் வாய்ந்தவள். ராஸ மண்டல மத்தியில் வசிப்பவள்,.

வரதாபயங் கொடுப்பவள். சாந்தமானவள். எப்பொழுதுமே நிலையான இளமையுள்ளவள். ரத்தின சிங்காதனத்தில் வீற்றிருப்பவள், கோபியருக்குத் தலைவி, கிருஷ்ணப் பிரியை, வேதத்தில் போற்றியிசைக்கப்பட்டவள். பரமேஸ்வரியின் அம்சம். இவ்வாறு ராதா தேவியை நினைத்து தியானித்து, கலசத்திலோ எட்டு தளயந்திரத்திலோ அந்த ராதிகா தேவியை ஆவாகனம் செய்து, முறைப்படி ஆசமனன் முதலான உபசாரங்களை மூலத்தால் கொடுக்கவேண்டும். பால், நெய், முதலானவற்றால் உண்டான உணவு வகைகளையும் பால் கொடுக்கும் பசுவையும் கொடுக்க வேண்டும். பின்னர், ஸ்நான வேதிகையில் தேவியை வீற்றிருக்கச் செய்து எண்ணெய் முழுக்கு முதலான ஸ்நானங்களை செய்வித்து ஆடை, சந்தனம், துளசி, பாரிஜாதம், தாமரை முதலான பலவித மலர் வகைகளைச் சமர்ப்பித்து, அக்கினி, ஈசானியன், நிருதி, வாயு இவர்கள் மத்தியில் திசைகளைப் பூஜிக்க வேண்டும். பிறகு, பிரதக்ஷிணமாக கிழக்கு முதல் ஈசானம் வரையுள்ள எட்டுத் தளங்களில், மாலாவதி, மாதவி, ரத்னமாலை, சுசீலகை, சகிகலை, பாரிஜாதை, பராவதி, பிரியகாரணி ஆகியவர்களையும் அவர்களுக்கு வெளிப் பக்கத்திலும் புறம்பிலும் பிரமன் முதலிய திக்பாலகரையும் வஜ்ரம் முதலான ஆயுதங்களையும் போற்றிப் பூஜிக்க வேண்டும். ராஜ உபசாரங்கள் செய்து ஆயிரம் நாமங்களால் அர்ச்சனை செய்து, தேவியை மகிழ வைத்து, தேவி மந்திரத்தை ஆயிரம் உரு ஜபிக்க வேண்டும். ராதைக்குப் பிரியமான தேவியை, இவ்வாறு பூஜை செய்பவன். கோலோகத்தில், பரமாத்மாவுக்குச் சமமாக இருந்து சுகப்படுவான். கார்த்திகை மாதத்து பௌர்ணமியில் ராதை பிறந்த விழாவைக் கொண்டாடுபவனுக்கு ராதா தேவி எப்போதும் சாந்நித்யம் (அண்மை) தந்தருள்கிறாள் இங்கே கூறியுள்ள மந்திரங்களின் எண்ணிக்கையின்படி புரச்சரணை செய்ய வேண்டும். ஜபத்தில் பத்தில் ஒரு பாகம் ஹோமமும் எள்ளினால் மூன்று ஹோமமும் செய்ய வேண்டும்.

## ராதிகா தேவி மகிழக்கூடிய தோத்திரம்

*நமஸ்தே பரமேசாதி ராஸ மண்டல வாஸிநி*
*ராஸேஸ்வரி நமஸ்தேயஸ்து கிருஷ்ணப் பிராணாதிகப்ரியே*
*நமஸ் த்ரைலோக்ய ஜநநி ப்ரஸீத கருணார்ணவே*
*பிரஹ்ம விஷ்ண்வாதி பிர்தேவைர் வந்தியமானபதாம் புஜே*
*நம: ஸரஸ்வதி ரூபே நம: ஸாவித்ரி சங்கரீ*
*கங்கா பத்மாவதீ ரூபே ஷஷ்டி மங்கள சண்டிகே*
*நமஸ்தே துளஸி ரூபே, நமோ லஷ்மிஸ்வரூபிணி*

நமோ துர்க்கே பகவதீ நமஸ்தே ஸர்வரூபிணி
மூலப்ரகிருதி ரூபாந்த்வாம் பஜாமः கருணார்ணவாம்
ஸம்ஸார ஸாகராதஸ்மாதுத்தராம தயாம் குரு.

இந்தத் துதியை மூன்று காலத்திலும் கூறி ராதிகாவைத் தியானித்து ஓதுபவனுக்குச் சித்திக்காத பொருள் எதுவுமே இ....... கால முடிவில், அவன் கோலோக ராஜ மண்டலத்திற்குச் சென்று அங்கே சுகிப்பான். இந்த ரகசியத்தை வேறு யாருக்கும் சொல்லக் கூடாது.



காசி அன்னபூரணி



மதுரை மீனாட்சி

நினைத்தவுடனேயே எல்லா ஆபத்துகளையும் அகற்றியோட்டுபவளும், பூவுலகில் அனைவராலும் பூஜிக்கப்பட்டவளும் யாவராலும் உபாசிக்க உகந்தவளும் சிவ சக்தி தன் வடிவமானவளும் அற்புதச் சிறப்புகள் வாய்ந்தவளும் எல்லோருடைய புத்திக்கும் அதிதேவதையும் அந்தர்யாமி சொரூபமாக இருப்பவளும், துக்கம் என்ற தொல்லையைத் துரத்துவதால் துர்க்கை என்று பெயர் பெற்று பிரபலமடைந்தவளும், மூலப் பிரகிருதி உருவமானவளும் மூன்று தொழில்களையும் செய்பவளுமான துர்க்கா தேவியின் சிறப்புகளைக் கூறுகிறேன்.

பிருமா, விஷ்ணு, ருத்திரர்கள் என்போர் ரிஷிகளாகவும், காயத்ரி உஷ்ணிக் அனுஷ்ருபு என்பவை சந்தஸ்ஸுகளாகவும், மகாகாளி, மகாலஷ்மி, சரஸ்வதி என்போர் தேவதைகளாகவும் ரக்த தந்திகா, துர்ஸ்கா, பிராமரி எனப்படும் மூவரும் பீஜங்களாக வும், நந்தா, சாகம்சரி, பீமா எனப்படும் மூவரும் சக்திகளாகவும், அறம் பொருள் இன்பம் வீடு என்பவை விநியோகமாகவும் கூறப்படும். இவற்றை தலை, முகம், இருதயம், ஸ்தனம் இவ்விடங்களில் முறையே நியசிக்கவேண்டும். மூன்று பீஜங்களிலாவது, நான்கு



திருவேற்காடு கருமாரியம்மன்



திருவானைக்காவல் அகிலாண்டேஸ்வரி அம்மன்

பீஜங்களிலாவது, இரண்டு பீஜங்களிலாவது எல்லாப் பீஜங்களிலாவது, சிகை, கண், காது, மூக்கு, முகம், புஜம் என்னும் ஆறு அங்கங்களில் நியாசம் செய்யவேண்டும். "கட்கம், சக்கரம், கதை, பாணம், சாபம், பரிகம், சூலம், பிஜுண்டி, சிரசு சங்கம் என்பனவற்றை ஏந்திக்கொண்டு மகாகாளி வடிவமாகவும் முக்கண்



கன்யாகுமரி அம்மன்



ஸ்ரீ மகா லக்ஷ்மி

யவளாகவும் பலவகை ஆபரண அலங்காரங்கள் புனைந்தவளாகவும் கருநிற மேகக்கூட்டத்தைப் போல் பிரகாசிப்பவளாகவும், பத்து முகம், பத்துக் கால்களுள்ளவளாகவும் மதுகைடப வதத்திற்காக பிரம்மாவினால் தியானிக்கப்பட்டவளாகவும் விளங்கும் தேவியை நான் தியானிக்கிறேன்'' என்று மஹாகாளியை தியானிக்கவேண்டும். ''ஜபமாலை, மழு, கதை, பாணம், வஜ்ரம்,

தாமரை, வில், குண்டிகை, தண்டம், சக்தி, கத்தி, கவசம், மணி, சுராபாத்திரம், சூலம், பாசம், சுதரிசனம் என்பனவற்றை தரித்துக் கொண்டு, சிவந்த காந்தியோடு செந்தாமரை மலரில் வீற்றிருப் பவளும் மாயா சொரூபிணியும் மகிஷாசுரனை நாசஞ் செய்தவளு மான மஹாலக்ஷ்மியைத் தியானிக்கிறேன்!'' என்று மஹாலக்ஷ்மி யைத் தியானிக்கவேண்டும். பிறகு. ''மணி, சூலம், கலப்பை, சங்கு, உலக்கை, சக்கரம், தனுசு, பாணம் என்பனவற்றை கரங் களில் தாங்கிக் கொண்டிருப்பவளும் சும்பாசுரன் முதலியவர்களை ஜயித்த வாணி பீஜஸ்தரூபிணியும், சச்சிதானந்த சொரூபிணியு மான மஹா சரஸ்வதியைத் தியானிக்கிறேன்!'' என்று மஹா சரஸ்வதியையும் தியானிக்க வேண்டும். இனி யந்திரபூஜையைப் பற்றி கூறுகிறேன்.

'மூன்று ஆறு கோணங்களோடும், எட்டு தளபத்மம், இருபத்து நான்கு தள பத்மங்களோடும், பூகிரகத்தோடும் ஒரு யந்திரத்தைச் சிந்தித்துக் கலசத்திலோ பதுமைகளிலோ, பாணலிங்கத்திலோ




பாலை

லிங்கத்திலோ சூரியனிடத்திலோ அநந்நியமாகத் தியானித்து, பிறகு ஜயை முதலான சக்திகளோடு கூடிய பீடபூஜை செய்தல் வேண்டும்.

பிறகு முக்கோணத்தில் பூர்வ கோணத்துள், சரஸ்வதியோடு பிருமாவையும், நைருதி கோணத்தில் திருமகளோடு திருமாலையும் வாயு கோணத்தில் பார்வதியோடு பரமசிவனையும், தேவிக்கு வடக்குப்புறத்தில் சிங்கத்தையும், இடது பாகத்தில் மகிஷனையும், ஷட்கோணத்தில் நந்தை, ஜயை, ரக்ததந்தை, சாகம்பரி, துர்க்கா தேவி, பிராமரிதேவியையும் எட்டு தள பத்மத்தில் பிராம்மி, மஹேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வராஹி, நாரசிம்மி, ஐந்திரி, சாமுண்டா முதலியவர்களையும், இருபத்து நான்குதள பத்மத்தில் முதலில் விஷ்ணுமாயை பிறகு சேதனை, புத்தி, நித்திரை, க்ஷுதை, சாயை, சக்திபரா, திருஷ்ணு, க்ஷாந்தி, ஜாதி, லஜ்ஜை, சாந்தி, சிரத்தை, கீர்த்தி, லக்ஷ்மி, திருதி, விருத்தி, சுருதி, ஸ்மிருதி, தயை, துஷ்டி, புஷ்டி, மாதா, பிராந்தி, ரதி முதலானவர்களையும் பூஷரகோணத்தில் கணபதி, க்ஷேத்ரபாலகர், வைரவர், யோகினிகள் முதலானவர்களையும் யந்திரத்திற்கு வெளியில் இந்திரன் முதலியவர்களையும் வஜ்ராதி ஆயுதங்களையும் பூஜிக்கவேண்டும். பிறகு தேவிக்கு ராஜ உபசாரஞ்செய்ய வேண்டும். பிறகு, வாக்பவம் சம்புவனிதா காமபீஜம் சாமுண்டா என்பனவற்றைச் சதுர்த்தி யந்தமான துர்க்கா நாமத்தோடு சேர்த்து உச்சரிப்பதான நவாவர்ண மந்திரததைப் பொருள் தெரிந்து கொண்டு ஜபித்து, சப்தஸதி தோத்திரத்தை வாசிக்க வேண்டும். மூன்று உலகங்களிலும் இந்தத் துதிக்கு இணையானது வேறில்லை.

இந்த தோத்திரத்தால் தேவி மகிழ்ச்சியுறுவதைப் போல வேறெவற்றிலும் மகிழ்வதில்லை. இவ்விதம் தினந்தோறும் மஹாதேவியைப் போற்றி பூஜை செய்பவர் அறம், பொருள், இன்பம், வீடு முதலான புருஷார்த்தங்களுக்கு வாசஸ்தலமாகி விடுவார். எதனால் சகல காரியங்களும் சித்தி அடையுமோ அந்த துர்க்கா பூஜையைச் சொல்லிவிட்டேன். பிருமா, மகா விஷ்ணு முதலிய தேவர்களும் லக்ஷ்மி முதலான தேவிகளும் ஞானியரும் யோகியரும் ஆசிரமிகளும் சிவையான துர்க்காதேவியைப் போற்றித் தோத்தரிக்கிறார்கள் துர்க்காதேவியின் ஸ்மரணையிருந்தால்தான் பிறவி எடுத்ததின் பயனையடையலாம். பதினன்கு மனுக்களும் தேவர்கள் அனைவரும், தேவியின் திருவடித்தாமரைகளைத் தியானித்துத் தான் தங்கள் தங்கள் பதவிகளையடைந்தனர். அதி ரகஸ்யமான பிரகிருதி தேவியின் பஞ்சகத்துவமும், அவரவர் அம்சமும் சொல்லப்பட்டன. இதைக் கேட்ட மனிதன், அறம், பொருள் முதலான புருஷார்த்தங்களையும், புத்திரப்பேறு இல்லாதவன் புத்திரனையும் படிப்பாளி வித்தைகளையும், இன்னும் எவரெவர் எதையெதை விரும்புகின்றனரோ, அவரவர் அவற்றையும் அடையப் பெறுவார்கள். இதை

நவராத்திரியில் தேவியின் சந்நிதியில் பாராயணம் செய்தால் பரா சக்தி மகிழ்வாள். எவன் ஒவ்வொரு அத்தியாயத்தையும் நாள் தோறும் படிப்பானோ, அவனுக்கு தேவி வசப்பட்டு விடுவாள். தேவிக்குப் பிரியமானவன் அவனைப்போல் வேறு எவனுமில்லை.

இந்த விஷயத்தில் பரீட்சையும் செய்து பார்க்கலாம். ஒரு கன்னிகையின் கையிலோ, அல்லது ஒரு பிள்ளையின் கையிலோ ஒரு மலரைக் கொடுத்துத் தனது கோரிக்கையை நினைத்துக் கொண்டு, புத்தகத்தின் மேல் அந்த மலரை வைக்கச் செய்து தெரிந்துகொள்ளலாம். புத்தகத்தையும் மாயாதேவியையும் பூஜித்து, நன்றாக நீராடி சுத்தமாக விளங்கும் தூய்மையான கன்னிப்பெண் ஒருத்தியைக் கூப்பிட்டுப் பூஜைசெய்து பொன்னாற் செய்த ஈர்க்கை நடுவே நாட்டிப் பரீட்சித்தால் சுபமோ, அசுபமோ எவ்வாறு இருக்குமோ அவ்வாறே நடைபெறும். மத்யமாக வந்தால் மத்திமமாகவே நிகழும்.



# பத்தாவது ஸ்கந்தம்

## சுவாயம்புவ மனுவின் தவம்

நாரத முனிவர் நாராயண மகரிஷியை நோக்கி, ''நாரா யணரே! பூவுலக ஆதார புருஷரே! கிருபா சமுத்திரமே! எல்லாக் காப்புகளுக்கும் காரணமாகவும் எல்லா பாபங்களுக்கும் நிவர்த்தி சாதனமாகவும் விளங்கும் தேவியின் சரிதத்தை உம்மிடமிருந்து கேட்டறிந்து கொண்டேன். சகல மன்வந்தரங்களிலும் தேவி எத்தகைய உருவத்தோடு இருக்கிருள்? எந்தெந்த உருவங்களில் தோன்றுகிருள்? பக்தர்களுக்குப் பிரியையான அந்த தேவியை எந்தெந்த பக்தர்கள் பூஜித்துப் பயன்பெற்றனர்? அந்த தேவியின் சிறப்புக்களையெல்லாம் கூறவேண்டும்!'' என்று கேட்டார்.

நாராயணர் கூறலானார்:

''மாமுனிவரே! பக்தர்களின் பாவத்தைத் துடைப்பவளாகவும் அவர்களுக்குப் பக்தியை மூட்டுபவளாகவும் அவர்களுக்கு வேண்டிய மகா சம்பத்துக்கும் காரணமாகவும் விளங்கும் அந்த தேவியின் சரிதைகளைக் கூறுகிறேன், கேளும்.

ஆதியில் உலகப் படைப்பிற்கு காரணரான பிரம்மதேவர் ஸ்ரீ நாராயணரின் நாபிக்கமலத்திலிருந்து வெளிப்பட்டார். அவருடைய மனத்திலிருந்து சுவாயம்புவ மனுவும், அம்மனுவின் பத்தினியான சதருபையும் தோன்றினார்கள். பிறகு அந்த மனு, மிகவும் தூய்மையான திருப்பாற்கடற்கரைக்குச் சென்று அங்கு தேவியை மண்ணினால் பிரதிஷ்டை செய்து, அன்னபானங்களைப் புறக்கணித்து, மூச்சை அடக்கி, நியமமான விரதங்களால் உடல் இளைக்கக் காமக் குரோதம் முதலானவற்றை ஒடுக்கி பூமியில் ஒரு காலையூன்றி அசைவற்று நின்று தேவியின் திருவடிகளைத் தன் இதயத்தாமரையில் வைத்து, வாக்பவம் என்னும் மந்திரத்தைச் செபித்துக் கொண்டு நூறு வருஷம் மரம்போல நின்று தவஞ்செய்து வந்தார்.

அதனால் தேவி காட்சியளித்து, ''மன்னனே! உனக்கு வேண்டிய வரங்களைக் கேட்பாயாக!'' என்றாள். அதைக்கேட்டு ஆனந்தங்கொண்ட சுவாயம்புவ மனு அத்தேவியை நோக்கி, ''அழகிய விசாலமான கண்களையுடையவளே! அனைவரின் இதயங்களிலும் உறைபவளே! எவராலும் பூஜிக்கத் தக்கவளே! பிரபஞ்சங்களையெல்லாம் தாங்குபவளே! எல்லா மன்வந்தரங்களுக்கும் மங்களமானவளே சித்ரூப சொரூபிணியே! நான் ஜபித்த வாக்பவ மந்திரத்தை யார் ஜபிக்கிறார்களோ, அவர்களது காரியங்கள் விரைவில் சித்தியாகவேண்டும். இந்தச் சம்வாதத்தைப் படிப்போரும் கேட்போரும் புத்தி, முக்திகளை சுலபமாக அடைந்தும், ஆனந்தமூட்டும் இனிய சொல்லும் புத்திரபௌத்திராதி விருத்தியும் ஞான சித்தியும் கர்ம மார்க்க சித்தியும் பூர்வ ஜன்ம ஞானமும் அவர்களுக்கு உண்டாடாகும்படி அருள் செய்யவேண்டும்!'' என்று வேண்டினார்.

## 2 விந்தியமலையும் நாரதர் மூட்டிய கோளும

விஷ்ணுவின் சகோதரியும் சர்வலோக பூஜ்யையுமான தேவி அருள்கூர்ந்து, ''பாருலகை ஆளவல்ல பார்வேந்தனே! உன்னால் வேண்டப்பட்டயாவும் சித்தியாகும்படி நான் அருளினேன். வாக்பவ மந்திரத்தோடு நீ செய்த தவத்தால் மகிழ்ந்தேன். உனக்குப் பகைவர் இல்லாத அரசும் வமிசவிருத்தி செய்யவல்ல புத்திரர்களும் என்னிடம் நிலையான பக்தியும், உன் காலமுடிவில் மீண்டும் பிறவாத நெறியான முக்தி நிலையும் உண்டாகட்டும்!'' என்று கூறி விட்டு, மனுவின் கண்முன்னாலேயே மறைந்து சூரியன் செல்லும் வழியைத் தடுத்து, அகஸ்தியரால் அடக்கப்பட்ட விந்தியமலையை அடைந்தாள்.

—இவ்வாறு நாராயண மகரிஷி கூறியதாக சூத முனிவர் கூறினார்.

ஃ ஃ ஃ ஃ

''சூத முனிவரே! விந்தியமலை என்பது எது? அது ஏன் ஆகாயத்தில் எழும்பி, சூரியன் செல்லும் வழியைத் தடுத்தது? அகம்பாவமுற்ற அந்த மலையை அகஸ்தியர் எவ்வாறு அடக்கினார்? அவையனைத்தையும் எங்களுக்கு விரிவாகச் சொல்லவேண்டும்'' என்று சவுனதி முனிவர்கள் கேட்டார்கள்

சூதமுனிவர் கூறலானார்:

ஃ ஃ ஃ ஃ

“விந்தியபர்வதம் என்பது மலைகளில் மிக உன்னதமானது. பூஜிக்கத் தகுந்த சிறப்பு வாய்ந்தது. அநேகவிதமான மரங்கள் நெருங்கிய காடுகளும் மலர்கள் நெருங்கி மலர்ந்த புதர்களும், நதிகளும் அம்மலையைச் சூழ்ந்திருக்கும். மான், பன்றி, புலி, வேங்கை, குரங்கு, நரி முதலிய விலங்குகள் அங்கு உல்லாசமாக உலாவித் திரியும், கின்னர கிம் புருஷர்களும் தேவ கன்னியர்களும் அங்கு சஞ்சரிப்பார்கள். இத்தகைய சிறப்புடைய அந்த விந்திய மலையை நோக்கி ஒரு சமயம் திரிலோக சஞ்சாரியான நாரதர் ஆவலோடு வந்து கொண்டிருந்தார். அவர் வருவதைப் பார்த்தும் விந்தியமலை, திடுக்கிட்டு எழுந்து, அவரை வரவேற்று அர்க்கிய பாத்ய ஆசமனாதிகளைக் கொடுத்து வணங்கி, ‘‘மகரிஷியே! நீர் என்ன காரணமாக இங்கு வந்தீர்? சூரியனுடைய சஞ்சாரம் எப்படித் தேவர்களுக்கு நன்மையைத் தருவதோ அதுபோலவே உமது சஞ்சாரமும் தேவர்களுக்கு நன்மை பயக்குமல்லவா? அபூர்வமான செய்தி ஏதேனும் இருந்தால் தயவுசெய்து அதைச் சொல்லும்!’ என்று கேட்டது

அதற்கு நாரதர், ‘‘தேவேந்திரனுக்குப் பகைவனாக இருக்கும் விந்தியமே! நான் இப்போது பொன்மலையாகிய மேருபர்வதத்திலிருந்து வருகிறேன். அங்கு, லோக பாலகர்களான இந்திராதியர்கள் வசிக்கும் இல்லங்களை அவரவர் வசிக்கும் உலகங்களைப் போல் அமைத்திருப்பதைக் கண்டேன்!’’ என்று சொல்லிப் பெருமூச்சு விட்டார் அவரை விந்தியமலை நோக்கி ‘‘முனிவரே! நீர் எதற்காக



பெருமூச்சு விடுகிறீர்?'' என்று கேட்டது. அதற்கு அவர், ''விந்தியமே! மேருமலையின் அகம்பாவத்தை என்னவென்று கூறுவேன். இமயமலை, பார்வதிதேவிக்குத் தந்தையானதால், சிவபிரானின் மாமனாராகி, அந்தப் பெருமையாலேயே அனைவராலும் பூஜிக்கத் தக்க பெருமையை அடைந்துவிட்டது. திருக்கைலாயமும் சிவபெருமான் தன்னைவிட்டு நீங்காது வீற்றிருக்கும் பெருமையாலேயே அனைவரும் வணக்கத்தக்கதாகிவிட்டது நிஷதமலை நீலமலை கந்தமாதனம் முதலான பர்வதங்களும் ஒவ்வொரு விசேஷ காரணத்தால் சிறப்படைந்துள்ளன. ஆயிரங் கிரணங்களோடுகூடிய சூரியன், சகல கிரகங்களோடும் விண் மீன்களோடும் நாள் தோறும் தன்னை வலம் வருவதால் மேருமலை மிகவும் இறுமாப்படைந்து தனக்கு ஈடானதும் தன்னைவிட மேம்பட்டதுமான ஒருமலை, உலகிலேயே எதுவுமில்லை என்றும், தானே அனைத்திலும் உயர்ந்த மலை என்றும் இறுமாந்திருப்பதை இன்று நான் கண்டேன். அதனால் தான் நான் பெருமூச்செறிந்தேன். ஆனால் தவஞ்செய்யும் ரிஷியான நான் ஒருவரடைந்துள்ள இறுமாப்பைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய அவசியமுமில்லை! பிறரின் அகம்பாவத்தை இன்னொருவரிடம் சொல்லவேண்டியதுமில்லை. நீயே என்னைப்பார்த்து அபூர்வமான செய்தி ஏதேனும் உண்டா என்று கேட்டதாலேயே ஒன்றுக்குமேல் ஒன்றாகச் சொல்லும்படியாகி விட்டது. இனி நான் என் இருப்பிடம் செல்கிறேன்'' என்று சொல்லிக் கோள் மூட்டிவிட்டுப் பிரமனது உலகிற்கு போய் விட்டார்.

## 3 விந்தியமலை விண்வழியை மறித்த கதை

நாரத முனிவர் சென்ற பிறகு, மேருமலை மிகவும் அகம்பாவத்தோடு இருப்பதைக் கேள்விப்பட்ட விந்தியமலை அதைப்பற்றிச் சிந்தித்தது. ''நான் அந்த மலையைக் கர்வபங்கம் செய்யவில்லையென்றால், எனக்கு என்ன மதிப்பு இருக்கும்? ஆனால் அதன் இறுமாப்பை அடக்கி நான் எப்படி ஜயிப்பது? நான் ஜயிக்கவில்லை என்றால் என் தன்மானம் உள்ளம் எப்படித் தணியும்? என் வலிமையும் ஆண்மையும் என்ன ஆவது?'' என்று யோசித்தது. அதற்கு உடனே ஒருயோசனை தோன்றியது. அதாவது, 'சூரியன், கிரகங்களோடும், நக்ஷத்திரங்களோடுல் நாள் தோறும் தன்னை வலம் வருகிறான் என்ற இந்த ஒன்றினால் அல்லவா அந்த மேருமலை பெரும் இறுமாப்பு கொண்டிருக்கிறது? இன்று என் கைகளால் அந்தச் சூரியன் வருகிற வழியைத் தடுத்துச் சூரியனை நிறுத்திவிட்டால், அதன் பிறகு சூரியன் எப்படி மேருமலையை வலம் வரமுடியும்? அவ்வாறு சூரியன் அதைச் சுற்றிவராவிட்டால், மேருவின் கர்வம் அடங்கிவிடும்! நான் அதை வென்றவனாவேன்!'' என்று எண்ணி

முடிவு செய்தது. விந்தியமலை உடனே, அது தனது உயரமான மலை சிகரங்களால் ஆகாயமளாவிச் சென்று, சூரியன் எப்பொழுது உதயமாகி வரப்போகிறான், எப்பொழுது அவன் வழியைத் தடுத்து நிறுத்தலாம் என்று எண்ணிக்கொண்டு, சூரியன் உதய மாகக்கூடிய கீழ்த்திசையை இரவு முழுதும் நோக்கிக் கொண்டிருந் தது. சூரியனே தினந்தோறும் பிராஹ்ண (முற்பகல்) அபராஹ்ண (பிற்பகல்) மத்யாஹ்ன (நடுப்பகல்) என்ற மூன்று காலங்களையும் உலகினருக்கு காட்டி, அக்காலங்களால் தேவர்களுக்கு அவ்யத்தை யும் பிதுர்க்களுக்குக் கவ்யத்தையும் ஏனைய பூதபலி முதலியவற்றை யும் செய்விப்பவன். உலக ஜீவன்கள் அனைத்தையும் அதனதன் தொழில்களில் ஈடுபட்டு இயங்கச் செய்பவன். தாமரை மலரவும், ஆம்பல் குவியவும் வைப்பவன். அத்தகைய சூரியன் உதித்தான். பிரியமுடியாத பிரிய நாயகன் தன்னை வெகுகாலம் பிரிந்து காதலி வாடும் போது அதனால் விளைந்த விரகதாபத்தைத் தன் தோற்றத் தால் தணிவிக்கும் நாயகனைப் போல சூரியன் தோன்றி கிழக்கு திக்கையும் அக்னி திக்கையும் ஒளியுறச் செய்து, சாந்தப்படுத் தினன். பிறகு அவன் தெற்குத் திசையை நோக்கிச் செல்லும் போது, சூரியனின் ரதத்தில் பூட்டியிருக்கும் குதிரைகள் மேலே விரைந்து செல்வதற்கு வழி புலப்படாமல் மயங்கித் தத்தளித்தன. அதைக்கண்டதும் தேரோட்டியான அருணன் பின்னால் திரும்பி சூரியனை நோக்கி, "அர்க்கமூர்த்தியே! இப்போது நம் எதிரே யுள்ள விந்தியமலை மேரு மலையோடு விரோதம் பூண்டு அந்த மலையை நீங்கள் வலம் வராதபடி தடுப்பதற்காகத் தன் சிகரங்களை மேலே எழுப்பி நாம் போக வேண்டிய பாதை நமக்குத் தெரியாத வாறு நம் வழியைத் தடுக்கிறது!" என்று கூறினான்.

அதைக்கேட்டதும் அருக்கனென சூரியன், "இதென்ன விந்தைச் செயல்! தெய்வச் செயல் இப்படியும் இருக்குமோ? வீரம் மிக்கவன் தீயவழியில் செல்லத் துணிவானாயின், அவன் எந்தச் செயலைத்தான் செய்யத் துணியமாட்டான்? அதுபோலவே இந்த விந்தியமலையும் துணிந்து நம் வழியைத் தடுத்து விட்டதே? அந்தோ! நம் ரதத்தின் குதிரைகள் போவதற்கு வழி தெரியாமல் தவிக்கின்றனவே! நான் ராகுவினால் விழுங்கப்பட்டு ஒளி மழுங்கும் காலத்தில்கூட தடை எதுமில்லாமல் என் வழியே சென்று கொண் டிருந்தேனே! அப்படிப்பட்ட நான் இன்று, இந்த மலை தடுப்பத னால் குவிந்த இருட்டை என் ஒளியினால் நீக்கி குதிரைகளுக்கு செல் லும் வழி காட்டமுடியாமலாகிவிட்டதே! இந்த மலை இப்படியே குறுக்கிட்டு வழிவிடாமல் என்னை தடைசெய்து கொண்டிருந்தால் நான் என்ன செய்யமுடியும்! விதியின் வலிமையே வலிமை!' என்று கூறி மனம்வருந்தினன். 'தேவர்களாவது இதைப் பார்த்து யாரைச் சரணடைய வேண்டுமோ அவரைச் சரணடைந்து வழி தேடவில்லை. இன்னது செய்யலாம் என்று நமக்கும் எதுவும் நிச்சய மாகப்படவில்லையே?" என்று சித்ரகுப்தனுதியரும் காலநிர்ண

யத்தை அறிவிக்கவேண்டிய சூரியனும் கவலைப்பட்டார்கள். தெய்வ நோக்கத்தால் இவ்வாறு சூரியன் தடைப்பட்டு நிற்கும்போது, தேவ பிதுர்க்களுக்குச் செய்வதாகிய சுவாஹா ஆகாரமும் சுவதா ஆகாரமும் நின்றுவிட்டன. அவை நின்றதால், பல ஜீவன்கள் நலி வுற்றன. தென் திசையில் இருள் அடர்ந்ததால் அங்குள்ளவரெல் லாம் கண்ணைத் திறப்பதற்கும் வழியில்லாமல் கண்களை மூடிக் கொண்டார்கள். வடதிசையிலும் கிழக்குத் திக்கிலும் சூரியன் தடைப்பட்டு நிற்பதால் சூரிய ஒளி அதிகரித்து எரியத் துவங்கிய தால் எண்ணற்ற தேவர்கள் எரிந்தொழிந்தார்கள். பலர் வாடிவதங் கினார்கள். பலர் ஓடிப்போய்விட்டார்கள். இந்திரன் முதலிய தேவர்கள் எல்லாம் பயந்து இதற்கு என்ன செய்யலாம் என்று தத்தளித்தார்கள்.

## தேவர்களின் வேண்டுகோள்!

இனி என்ன செய்வோம் என்று கலங்கிய தேவர்களெல்லாம் பிரமதேவனை அழைத்துக் கொண்டு, தேவாதி தேவனும் பிறை சூடிய சிவபெருமானுமான ருத்திர மூர்த்தியிடம் விரைந்து சென்று அவரை வழிபட்டுத் துதிக்கலானார்கள் ''மெய்யன்பர்களுக்கு அஷ்ட மாசித்தி விபூதியை தந்தருள்பவரே! கணநாதரே! பார்வதி தேவி யின் நாயகரே! மஹா மாயா விலாசத்திற்கு ஸ்தானமானவரே! பரமாத்ம வடிவினரே! இடப வாகனரே' சர்வேஸ்வரரே! கைலாச வாஸரே! உமக்கு நமஸ்காரம்.'' என்று பலவாறும் தோத்திரங்கள் கூறி வணங்கினார்கள். அதனால் சிவபெருமான் தேவர்களைப் புன் சிரிப்போடு நோக்கி, ''நீங்கள் செய்த வழிபாட்டில் நான் மகிழ்ந் தேன். உங்கள் உள்ளக் கிடக்கையை நான் நிறைவேற்று கிறேன்! உங்களுக்கு வேண்டியது என்ன?'' என்று கேட்டார். அதற்கு! தேவர்கள், ''சந்திர மௌளியே' துக்கப்படுவோருக்குச் சுகமளிப்பவரே! தெற்கே விந்திய மலையானது மேருவோடு பகைமை கொண்டு, சூரியன் பயணம் செல்லும் வழியைத் தடுப்பதற்காகப் மேலோங்கி வளர்ந்து நின்று, எல்லோருக்கும் துக்கத்தை உண் டாக்கி விட்டது. ஆகையால் அந்த விந்திய மலையை அடக்கி சூரியனுக்கு வழி விடச் செய்ய வேண்டும். சூரியனின் பவனியைத் தடுத்து நிறுத்தி விட்டால் கால நிர்ணயம் எப்படி ஏற்படும்? ஸ்வாஹா, ஸ்வதா என்கின்ற மந்திரங்களால் செய்யப்படும் கிரியை கள் நின்றுபோய்விட்ட பிறகு உலகினருக்கு யார் புகலிடமாவார்? பயமடைந்து வந்திருக்கும் எங்களுக்கும் கவலையை நீக்க வல்லவர் நீரன்றோ? கிரிஜாபதியே! கருணை கூர வேண்டும்'' என்று வேண்டி னார்கள். சிவ மூர்த்தி அவர்களைப் பார்த்துப் புன்னகை செய்து,

''சக்திகளிலே ஒருவராய் கருதப்படுபவரும் உங்களால் பூஜிக்கத் தக்கவருமான திருமாலே அந்த விந்திய மலையின் பெரும்போக்கை அடக்கக் கூடியவர்! ஆகையால் அவர்தான் உங்கள் கவலையை நீக்குவார்!'' என்றார். உடனே பிருமா முதலான தேவர்களெல்லாம் வைகுண்டத்திற்கு விரைந்து சென்றார்கள்.

## மகாவிஷ்ணு தந்தருளிய வரம்

அவர்கள் வைகுண்டத்திற்குச் சென்று விஷ்ணுவைப் பார்த்துப் பக்தியுடன் வாய் குழற, ''ஸ்ரீயப்பதியே! லோக குருவே! கமலாக்ஷரே! அசுர சங்காரரே! மன்மதனைப் படைத்தவரே! கோவிந்தரே! மஹா யக்ஞ சொரூபரே! ஜகத் சிருஷ்டிகாரணரே! மச்சாவதாரரே சத்ய விரதரே! பூதநாயகரே! உமக்கு நமஸ்காரம். அமரர்களுக்கு அமிர்தம் கிடைக்கக் கூர்மாவதாரம் எடுத்தவரே! அசுரர்களை அழிப்பதற்காக வராஹ, நரசிம்ம வாமன அவதாரங்களை எடுத்தவரே! உம்மை விடத் தயையுடையார் யாருளர்?'' என்று பலவாறாகவும் தோததிரஞ் செய்து சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்தார்கள். மகாவிஷ்ணு அவர்கள் முன்னால் தோன்றி, ''தேவர்களே! உங்கள் துதிகளைக் கேட்டு மகிழ்ந்தேன். உங்களுக்கு ஏற்பட்ட துன்பத்தை ஒழித்து விடுகிறேன்! பெறுதற்கரிய வரத்தை என்னிடமிருந்து பெற்றுக் கொள்ளுங்கள். இப்பொழுது நீங்கள், செய்த துதியை என்னிடம் பக்தியுள்ளவர்கள் துதித்தால், அவர்கள் இம்மை மறுமைகளில் அடைவதற்குரிய சுகங்கள் அனைத்தையும் அடைந்து சுகித்து வாழ்வார்கள்!'' என்று அருள் புரிந்தார்.

## 6 அகஸ்தியர் அபயமளித்தல

விஷ்ணுமூர்த்தியின் அருள் பெற்ற தேவர்கள் கலக்க நிலையிலிருந்து மனத் தெளிவு பெற்று மகிழ்ந்து திருமாலை நோக்கி ''தேவ தேவரே! திருமாலே! சூரியனின் சஞ்சார வழியை விந்திய மலை தடுத்து நிற்பதால், காலவோட்டம் ஸ்தம்பித்து உலகில் நடைபெற வேண்டிய கர்மங்கள் யாவும் தடைப்பட்டு நாங்களும் சுகமிழந்து திக்கற்றவர்களாகி விட்டோம். இனி நாங்கள் எங்கே போவோம்?'' என்று முறையிட்டார்கள். அவர்களை மகாவிஷ்ணு நோக்கிப் புன்முறுவலோடு'' தேவர்களே! எந்தத் தேவி சகல பிரபஞ்சங்களையும்

படைத்தாளோ, எவள் ஆதி அநாதியானவளோ, எவள் குல வர்த்தனியோ அந்தப் பராசக்தி தேவியை, மிகவும் பக்தியோடு பூஜித்த பக்தர் ஒருவர் இருக்கிறார். அவர் மகா தேஜஸையுடைய அகஸ்திய முனிவராவார். அவர் இப்போது காசி மா நகர் எனும் புண்ணிய ஸ்தலத்தில் இருக்கிறார். அந்த அகஸ்திய முனிவரே விந்திய மலையின் ஆணவ வலிமையை அடக்கும் ஆற்றல் மிக்கவர். அதனாலே பிராமணரில் உயர்ந்தோரான அவரைக் காண வாரணாசிக்குச் செல்லுங்கள்!'' என்றார். தேவர்கள் மகிழ்ந்து, பக்தியோடும் உற்சாகத்தோடும் காசிமா நகருக்குச் சென்றார்கள். அங்கு மணிகர்ணிகையில் குளித்து, தேவ, பிதுர்க்களுக்குத் தர்ப்பணஞ் செய்தார்கள். பிறகு மரங்கள் அடர்ந்த மாபெரும் காடும், மயில், அன்னம், சக்கிரவாகம் முதலான பறவைகளும், புலி, மான், முள்ளம்பன்றி, வேங்கை முதலான மிருகங்களின் சஞ்சாரமும் சூழ்ந்துள்ள அகஸ்தியரின் மிகப் பெரிய ஆசிரமத்தையடைந்தார்கள். அங்கு பிரம்ம தேஜசினால் ஒளி வீசித் திகழும் அகஸ்திய முனிவரை பிருமனாதித் தேவர்கள் கண்டு, பூமியில் விழுந்து வணங்கி, ''அந்தணரில் உயர்ந்தவரே! பூஜிக்கத் தக்க பெரியோய்! வாதாபியின் பலத்தை நலிவுறச் செய்தவரே! கலசத்திற் பிறந்தவரே! லோப முத்திரையின் கணவரே! மித்ரா வருணனிடம் உற்பத்தியானவரே! சர்வ வித்தைக்கும் இருப்பிடமானவரே! அகஸ்திய மாமுனிவரே! உமக்கு நமஸ்காரம். விந்திய மலையில் விளைந்த விபரீதத் தொல்லையால் நாங்கள் விசனப்பட்டு வந்திருக்கிறோம். விந்திய பருவதத்தால் சூரிய மார்க்கம் தடைப்பட்டு, மூவுலகும் பாதிக்கப்பட்டுள்ளது. உமது தவ வலிமையினால் அந்த மலையின் உத்வேகத்தை அடக்க வேண்டும். உமது மகிமையினால் அந்த மலை அடங்கி விடும் என்பதில் எங்களுக்கு சந்தேகமே இல்லை!'' என்று தாம் வந்த நோக்கத்தை அறிவித்தார்கள்.

அதைக் கேட்டதும் அகஸ்தியர் மகிழ்ந்து, புன்னகையோடு தேவர்களை நோக்கி, ''நீங்கள் உன்னதமான தேவர்கள்! மூவுலகுக்கும் அதிபதிகள்! திக்பாலகர்கள். காப்பதிலும் தண்டிப்பதிலும் சமர்த்தர்கள். எவன் அமராபதி நகருக்குத் தலைவனோ எவனுக்கு வைரப் படை ஆயுதமோ, எவனுடைய வாயிலில் அஷ்டா சித்திகளும் இருக்கின்றனவோ அந்த இந்திரனே உங்களுக்கு ராஜனாக இருக்கிறான். உங்களில் சூரிய தேவனுக்கு இயலாத காரியந்தான் எது? தேவர்களே! பாச தண்டத்தைக் கையில் ஏந்தி நிற்கும் அந்த யமதர்ம ராஜனால்தான் முடியாதது என்ன உண்டு? அவ்யகவ்யங்களை வகுக்கும் அக்கினி தேவரால் தான் முடியாதது என்ன உண்டு? ஆயினும் இந்தக் காரியம் என் சக்தியினால்தான் முடிய வேண்டும் என்றால், அதை அப்படியே முடிக்க நான் சித்தமாக இருக்கிறேன்!'' என்று கூறினார். தேவர்கள் உள்ளம் மகிழ்ந்து அவரவரிடத்திற்கு சென்றார்கள்.

# விந்திய மலை அடங்கிய வரலாறு

அகஸ்தியர் தமது மனைவியான லோப முத்திரையை நோக்கி, "ராஜ குமாரியே! தேவர்கள் என்னிடம் வந்து, சூரியன் செல்லும் வழியை விந்தியமலை தடைப்படுத்தியிருக்கிறதென்றும் அந்தத் தடையானது என்றால் ஒழிய வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டார்கள். அவர்களின் வேண்டுகோள் இந்தக் காசிப் புண்ணியத் தலத்திலே நாம் வாசஞ் செய்ய வேண்டுமென்று கருதிய நம் விருப்பதகிற்கு இடையூறாகி விட்டது என்றே நான் கருதுகிறேன். முக்தி நோக்கமுள்ளவர்களுக்கு அவிமுக்தஸ்தான மாகிய காசி வாசம் கைவிடக் கூடியதல்ல என்றும் அப்படி நீங்கி வசித்தால் அவர்களுக்கு விக்னங்கள் நேருமென்றும் ஆதியில் மெய் ஞானிகள் கூறியுள்ளனர். அது போலவே இப்போது நம் காசி வாசத்திற்கு இடையூறு விட்டது. அன்புள்ள பத்தினியே! இப் போது நாம் என்ன செய்வோம்?" என்று கூறி மனவருத்தப் பட்டார். பிறகு அவர் மணிகர்ணிகையில் குளித்து விட்டு, காசி விஸ்வநாதரைத் தரிசித்து, தண்டபாணியை வழிபட்டு வணங்கி விட்டு கால ராஜனிடம் சென்று, "கால ராஜனே! நீண்ட கைகளை யுடையோனே! காசியில் விருப்பத்தோடு வசிக்கும் என்னை எதற்காக இங்கிருந்து தள்ளி தூரத்திற்குத் துரத்துகிறாய்? நீ காசியில் வாசஞ் செய்வோருக்கு வரும் இடையூறுகளையெல்லாம் நாசஞ் செய்பவன் நீதானே? பக்தர்களுக்கு ஏற்படும் தொல்லைகளைத் துடைத்துக் காக்கும் நீ என்னை இந்தக் காசியிலிருந்து விரட்டி என் மனதை வாட்டுகிறாய்! நான் என்ன பாவம் செய்தேன்? நான் பிறர் மீது கூறப்படும் அவதூறுகளைக் கேட்டதுமில்லையே? கோளும் புறங்கூறலும் பொய்யும் சொன்னதும் இல்லையே? இப்படிப்பட்ட பாபம் எதுவும் புரியாத என்னை, எந்தப் பாபம் புரிந்ததாகக் கருதி இந்தக் காசி க்ஷேத்திரத்திலிருந்து விலக்குகிறாய்?" என்று மனம் நொந்து உருகினார். பிறகு சர்வ விக்னங்களையும் நீக்க வல்லவ ரான ஸ்ரீ காசி விக்னேஸ்வரரை அகஸ்தியர் தரிசித்துப் போற்றி வழிபாடு செய்து விட்டு, காசித் தலத்திலிருந்து புறப்பட்டு பிரிந்து தென் திசை நோக்கிச் சென்றார். காசியை நினைந்து நினைந்து, மனைவியுடன் மனம் வருந்திய வண்ணம் பயணம் சென்றார். தென் திசையை நெருங்கியதும் அங்கு வானமளாவி நிற்கும் விந்திய மலையின் எதிரில் ஒரு கணத்திற் போய் நின்றார்.

அகஸ்தியரைக் கண்டதுமே, விந்தியமலை மமதை அழிந்து, ஆணவம் அடங்கி மெய் நடுங்கிச் சிற்றுருக் கொண்டு, அவரை வணங்கி நின்றது. அதைப் பார்த்த அகஸ்தியர், "குழந்தாய்,

விந்தியா! நான் தென் திசைக்குப் போக விரும்புகிறேன். நீ உயர்ந்திருந்தால் நான் எவ்வாறு உன்னைக் கடந்து வர முடியும்? ஆகவே இப்போது நீ சின்ன உருவம் கொண்டு வழி விட்டு இருப்பது போலவே, நான் திரும்பி வரும்வரை இருக்க வேண்டும்!'' என்று கூறி விட்டு அந்த மலையின் மீது ஏறி, அதைக் கடந்து, சென்று தென் திசையை அடைந்தார் ஸ்ரீசைலத்தைத் தரிசித்து விட்டுப் பொதிய மலைக்குச் சென்று, அந்த மலையிலே வாசம் புரியலானார். முனிவர்களே! விந்திய மலை அடங்கிய கதை இதுதான்! அந்த மலை அகஸ்திய முனிவரால் அடக்கப்பட்ட மகிமை பெற்றதாகையால் அந்தச் சிறப்பு எந்தக் காலத்திலும் விளங்கும் பொருட்டு, தேவியும் அம்மலையில் வாசஞ் செய்து வருகிறாள். எனவே, அவளுக்கு விந்தியாசல வாசினி என்ற ஒரு பெயருமுண்டு.

முனிவர்களே! இந்தச் சரித்தை நான்கு வகைப்பட்ட வர்ணாச்சிரமிகள் கேட்டாலும் படித்தாலும், ஞானம், ஜெயம், செல்வம், தானியம் முதலானவற்றோடு தர்மார்த்த காம மோக்ஷங்கள் என்பனவற்றையும் முறையே அடையப் பெறுவார்கள்.

இனி முன் சொன்ன கதையைத் தொடர்வோம். சுவாயம்புவ மனு மகிழ்ந்து, தேவியைப் பக்தி சிரத்தையோடு வழிபட்டு விட்டு தன் மன்வந்தரத்திற்குட்பட்ட ராஜ்யத்தை ஆளச் சென்றான்.

## 8 மனுக்கள்

சௌனக முனிவர் சூத முனிவரை நோக்கி, ''சூத மகரிஷியே! முதலாவது மனுவாகிய சுவாயம்புவ மனுவைப் பற்றிக் கூறினீர்கள். அது போலவே மற்ற மனுக்களுடைய சரிதங்களையும் கேட்க விரும்புகிறேன்!'' என்றார்.

அவரை சூத முனிவர் நோக்கி ''சௌனகரே! நாரதரும் நாராயண இவ்வாறு முனிவரை கேட்டிருக்கிறார். எனவே அதன் படியே நானும் இவ்வாறு கூறுகிறேன் கேளுங்கள் என்று கூறத் துவங்கினார்.

ஃ ஃ ஃ ஃ

நாராயணரை நாரதர் நோக்கி, மனுக்களுடைய உற்பத்தியைக் கூற வேண்டும் என்று கேட்கவே நாராயணர் கூறினார்:

''நாரத மாமுனிவரே! முதலாவது மனுவாகிய ஸ்வாயம்புவ மனு, தேவியை பூஜித்தால், பகையற்ற அரசையும் தாணெண்ணிய

படியெல்லாம் தர்மங்களையும் விருத்தி செய்து வந்தான். அவனுக்கு பிரியவிரதன், உத்தானபாதன் என்று இரண்டு பிள்ளைகள் பிறந்து புகழ் பெற்றார்கள். அவர்களில் மூத்தவனாகிய பிரிய விரதனுக்குச் சுவாரோசிஷன் என்ற குமாரன் பிறந்து, இரண்டாவது மனுவானான். அவன் காளிந்தி நதிக் கரையில் ஒரு பர்ணசாலை அமைத்து, அதில் தங்கியிருந்து உலர்ந்த சருகுகளையே உண்டு தேவியினது திருவுருவை மண்ணினால் உருவாக்கிப் பிரதிஷ்டை செய்து மிகவும் பக்தியோடு பன்னிரண்டு ஆண்டுகள் வழிபட்டு அரும்பெரும் தவஞ் செய்து வந்தான். அதனால் தேவி மகிழ்ந்து ஆயிரம் சூரியர்கள் உதித்தது போல், அவன் முன்னால் தோன்றிக் காட்சியளித்து அவனைத் தனது திருவிழிகளால் கிருபையோடு நோக்கி, "சுவாரோசிஷனே! உனக்குச் சர்வ மன்வந்தரங்களிலும் ஆதிபத்யத்தை வழங்கினேன். என்று அருளிச்செய்தாள். அதனால் அம்பிகை, ஜகத்தாத்ரி, தாரிணி என்ற பெயர்களைப் பெற்றாள். இவ்விதமாக சுவாரோசிஷன் பகையற்ற இராஜ்யத்தையடைந்த் பிறகு சகல ராஜ்ய தர்மங்களையும் அரசையும் தனது குமாரனிடம் ஒப்படைத்து விட்டு, சுவர்க்கலோகம் சேர்ந்தான். அதன் பின்னர் பிரிய விரதனின் புத்திரனான உத்தமன் மூன்றாவது மனுவானான். அவன் கங்கைக் கரையில் தவமிருந்து, வாக்பவ மந்திரத்தை மானசீகமாக உச்சரித்து, மூன்று ஆண்டுகள் உபவாசம் இருந்தான். அதன் விளைவாக தேவியின் அருளைப் பெற்று பகைவர் பயமற்ற ராஜ்யத்தையும் சந்ததிப் பெருக்கமும் அடைந்து, இறுதியில் ராஜ ரிஷிகள் அடையும் நற்கதியை அடைந்தான். அதன் பிறகு பிரியவிரதனின் மகனாகிய தாமசன் நான்காவது மனுவாகி, நர்மதை நதியின் தெற்குக் கரையில் காமராஜ கூடத்தை உருவேற்றி ஜகத் சொரூபிணியான தேவியை வசந்த காலத்திலும் சரத் காலத்திலும் நவராத்திரி பூஜையினால் வழிபட்டு மகிழ்வித்து, தேவியின் அருளால் பகைவர் தொல்லையற்ற ராஜ்யத்தையடைந்து வலிமை மிக்க வீர தீரர்களான பத்து குமாரர்களைப் பெற்று இறுதியில் தன் மனைவியோடு சுவர்க்கத்தையடைந்தான். அதன் பிறகு அவனது சகோதரனான ரைவதன் ஐந்தாவது மனுவானான். அவன் காளிந்தி நதிக் கரையில் வாக்பலத்தை நல்குவதும் மிக்கீம் சாதனைக்குரியதுமான காமபீஜத்தை ஜெபித்து, அதனால் சகல சித்தியையும் கொடுக்கக் கூடிய வலிமைப் பெற்று தன் அரசை அடைந்து, நெடுங்காலமும் அழியாத சந்ததிப் பெருக்கத்தோடு தர்மத்தை நிலை நாட்டி, பலவித போகங்களையும் அனுபவித்து இறுதியில் சுவர்க்கத்திற்குப் போய்ச் சேர்ந்தான்.

"நாரதரே! உன்னதமான தேவியின் சிறப்புகளை நான் இன்னமும் உமக்குச் சொல்ல விரும்புகிறேன். பூர்வத்தில் அங்க ராஜனின் குமாரன் தேவி உபாசனையால் ராஜ்யமடைந்ததைக் கேளும். அவன் ஆருவது மனுவாகி, புலக முனிவரை வணங்கி, "மாமுனிவரே! சரணடைந்தவரின் பீடையை அகற்றவல்ல தவ ஞானியே! உம்மைச் சரணடைந்தேன். நான் எதைக் கடைப் பிடிப்பதால், பெரும் சம்பத் அடைவேனோ அதை எனக்கு உணர்த்த வேண்டும். அதோடு விசாலமான பூமண்டல ஆதி பத்தியமும், ஒருவராலும் என்னை ஜெயிக்க முடியாத தோள் வலிமையும், அஸ்திர, சஸ்திரப் பிரயோக நிபுணத்துவமும் நீண்ட ஆயுளுடைய சந்ததியும், இகபோக சுகமும் முடிவில் மோக்ஷ சுகமும் எனக்கு எப்படிக் கிடைக்குமோ அந்த உபாயத்தையும் எனக்கு உபதேசித்தருள வேண்டும்!'' என்று வேண்டினான். அதற்கு புலக முனிவர், "அரசனே! நீ தேவியைப் பூஜித்தால், அவள் அருளால் யாவும் உண்டாகும்!'' என்றார்.

"தேவி பூஜை என்பது என்ன? அதைச் செய்வது எப்படி?'' என்று மன்னவன் கேட்டான். அதற்கு முனிவர், "நீ தேவி யினுடைய மந்திரங்களில் உன்னதமான வாக்பவ மந்திரத்தை எப்பொழுதுமே ஜபித்து வா! அது சித்தியையும் புத்தியையும் தர வல்லது. அதை விடச் சிறந்த மந்திரம் இல்லை அந்த மந்திரத் தாலேயே மும்மூர்த்திகளும் முத்தொழில்களைச் செய்யும் வல்ல மையைப் பெற்றனர். ஆகையால் அந்தத் தேவியைப் பூஜித்து, அந்த மந்திரத்தை ஜபித்து, பெரும் செல்வத்தை அடைய முயல்க!'' என்றார்.

முனிவரின் வாழ்த்தைப் பெற்ற அங்கபுத்திரன், விரஜா நதிக் கரைக்குச் சென்று, அங்கு தவம் புரிவதில் ஈடுபட்டு, முதல் ஆண்டில் தளிர்களையும், இரண்டாவது ஆண்டில் வெறும் நீரையும், மூன்றும் ஆண்டு வெறும் காற்றையுமே ஆகாரமாக உண்டு இவ் வாறு பன்னிரண்டு ஆண்டுகள் மாறி மாறி அருந்தி வாக்பவ மந்திரத்தை முக்காலமும் ஜபித்து அருந்தவஞ் செய்து வந்தான். அதன் விளைவாக முதலில் அவன் மனம் சுப மயமாயிற்று அதன் பிறகு சகல தேவ சொரூபிணியாகவும், தேஜோ ரூபிணியாகவும் விளங்கும் தேவி அவன் எதிரே காட்சியளித்து, "அரசனே! உனக் கென்ன விருப்பம் இருக்கிறதோ. அதைக் கேள்!'' என்றாள். அங்கபுத்திரன் ஆனந்தமடைந்து, "சர்வேஸ்வரியே! நீயே சர்வ சராசரங்களிலும் அந்தர்யாமியாக இருப்பதால் என் மனக் கருத்தை

யும் நீ அறிந்திருப்பாய். ஆயினும் சகல தேவர்களாலும் பூஜிக்கப் பட்ட நீ எனது பாக்கிய வசத்தால் எனக்குக் காட்சியளித்து என்ன வேண்டும் என்று கேட்பதால் சொல்கிறேன்! ஆளப்பட்டு வருகிற இந்த இராஜ்யத்தை நான் ஆள வேண்டும்'' என்றுவணங்கினன். அதற்குத் தேவி, ''மெய்யன்பனே! நீ விரும்பியவாறே ஆள்வா யாக உனக்கு, உன்னைவிட எட்டுப் பங்கு வலிமையுள்ள புத்திரர் கள் பிறப்பார்கள். ராஜ்யத்திலும் பகைவரின் பயம்இருக்காது. இறுதியில் நீ மோட்சத்தையும் அடைவாயாக!'' என்று அருள் செய்து மறைந்தாள். நாரதரே! இவ்வாறு தேவியின் அருளால், பலசாலிகளான புத்திரசம்பத்தும் ராஜ்ய சம்பத்தும் பெற்ற ஆருவது மனுவானவன், யாவற்றையும் அனுபவித்து முடிவில் தேவியின் பதத்தை அடைந்தான்!''

## 10 வைவஸ்வத மனுவின் விருப்பம்

''நாரத முனிவரே! இனி, வைவஸ்வதமனு, ஏழாவது மனுவாகும். அவனும் தேவியின் திருவருளால், மன்வந்தர அதி பதியாக வாழ்ந்து, பரமானந்த திருப்தியடைந்தான். அவனைப் போலவே, அவனுக்குப் பிறகு எட்டாவது மனுவாகிய சாவர்ணி மனு என்பவனும் தேவியின் கிருபையால் மாபெரும் பராக்கிரம சாலியாகவும் சகல மன்னராலும் போற்றத் தக்கவனுகவும் திகழ்ந்தான்'' என்றூர் நாராயண மகரி

''நாராயணரே! அந்த வைவஸ்வத மனு, பூர்வ ஜன்மத்திற் செய்த பூஜையின் விசேஷம் எப்படிப்பட்டதென்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்'' என்றூர் நாரதர். அதற்கு நாராயணர் கூறலானுர்

''அந்த மனு பூர்வத்தில் சைத்ர வம்சத்திற் பிறந்த சுரதன் என்ற பெயரையுடைய மன்னன் ஒருவனுல் தோற்கடிக்கப் பட்டான். எனவே, வைவஸ்வதன் யாதொரு துணையும் இன்றி ஒரு குதிரையின் மீது ஏறிக் கொண்டு, மனித சஞ்சாரமற்ற காட்டில் புகுந்து, அங்குமிங்குமாக அலைந்து கொண்டிருந்தான். ஓர் நாள், அந்தக் காட்டில் ஓர் ஆஸ்ரமத்தைக் கண்டு அத னுள்ளே நுழைந்தான். நுழையும்போதே அவனுக்கு ஒருவித மனச்சாந்தி ஏற்பட்டது அந்த ஆஸ்ரமத்தில் தீர்க்க திருஷ்டி என்ற ஒரு முனிவர் தம் சீடர்களுடன் இருப்பதைக் கண்டு, ஆனந்த மடைந்து அவரிடத்தில் வைவஸ்வதன் சரண் புகுந்தான் அவரது சீடர்களில் ஒருவனுனன். ஒரு நாள் அந்த முனிவர் தம் நித்திய பூஜையை முடித்து விட்டுத் தனித்திருக்கும்போது, அரசன்

அவரை வணங்கி, ''முனிவரே! தங்கள் உபதேசத்தால் இந்தப் பிரபஞ்ச சுகம் பொய் என்பதை அறிந்தேன். ஆனாலும் என் அரசைப் பகைவர்கள் கொள்ளையிட்டதை எண்ணி, என் மனம் துயரப்படுகிறது. நான் என்னும் அகந்தை என்னை விட்டுப் போகவில்லை. ராஜ்யத்தை அடைய வேண்டும் என்ற ஆசையும் விடவில்லை. இனி நான் எந்த விதத்தில் சுகமடைவேன்? என் கதி என்ன ஆகும்? நீங்கள்தான் என் கவலையைப் போக்க வேண்டும்.'' என்று வேண்டினான். அதற்கு அம்முனிவர், ''அரசனே! நீ கவலைப்பட வேண்டாம். தேவியினாலேயே சகல கர்மங்களும் கைகூடும். இதில் ஐயமில்லை. அது ஒருபுறம் இருக்கட்டும்! எனக்கு ஒரு வியப்பு தோன்றியது. அதைச் சொல்கிறேன். மஹா மாயா சொரூபிணியான தேவியே எல்லா ஜீவன்களின் மனத்தையும் தனது மாயா வசமாக்கிக் கொண்டு, பிரபஞ்சத்தில் துக்கம் மட்டுமே தோன்றவுஞ் செய்து, அந்தத் துக்கத்திலிருந்தே மோகத்தையும் உண்டாக்குகிறாளே, இதை விடப் பெரிய விந்தையும் உண்டோ? பிரபஞ்சங்கள் அனைத்தையும் அந்த தேவியே பிரம ரூபிணியாகத் இருந்து படைத்தும், விஷ்ணு ரூபிணியாக காத்தும், ருத்திர ரூபிணியாக அழித்தும் வருகின்றாள். மஹா மாயையாக இருந்து அவளே சகல காமங்களையும் வழங்குகிறாள். காலராத்திரியாய் யாவற்றையும் அழிக்கிறாள். லக்ஷ்மி தேவியாகவும் இருக்கிறாள். அவளிடமே பிரபஞ்சங்கள் யாவும் நிலை பெறுகின்றன. முடிவில் அவளிடத்திலேயே யாவும் ஒடுங்கி லயமடைகின்றன. எனவே அந்த தேவியே பராத்பரை. பூமானே! அவளினது திருவருள் யாருக்குக் கிட்டுகிறதோ, அவனே மோகத்தைத் தாண்டுவான், இல்லையெனில் இயலாது!'' என்றார்.

## 11 மஹா காளி தோன்றிய கதை

வைவஸ்வத மனு தீர்க்கதிருஷ்டி மகமுனிவரை நோக்கி, ''மகா ஞானியே! நீங்கள் சொன்ன தேவி யார்? ஆன்மாக்களை மோகத்தில் ஆழ்த்துபவள் யார்? அவள் ஏன் மோகப்படுத்த வேண்டும்? எதற்காகத் தோன்றுகிறாள்? அவளது உருவம் என்ன? அவளது இயல்பு யாது? இவற்றையெல்லாம் நீங்கள் எனக்குக் கருணை கூர்ந்து சொல்ல வேண்டும்'' என்றான்.

அதற்கு அந்த முனிவர் கூறலானார்.

''அரசனே! முன்பு ஒரு யுகத்தின் சங்கார காலத்தில், மகா[illegible], ஆதிசேஷன் மீது, நித்திரா தேவிக்கு வசப்பட்டு யோக[illegible] செய்து கொண்டிருந்தார். அப்பொழுது அவரது காதி

லுள்ள மலத்திலிருந்து கோர ரூபிகளான மதுகைடபர் என்ற அசுரர்கள் இருவர் தோன்றி, பிரமதேவனைக் கொல்வதற்கு எண்ணங்கொண்டு பாய்ந்து சென்றார்கள் அவர்களது வருகையைக் கண்ட பிரமன் பயந்து, திருமாலைத் துணைக்கு அழைத்தார். அசுரர்களைக் கொல்ல வரவேண்டும் என்று வேண்டினார். அப்பொழுதும் நாராயணர் வரவில்லை. நித்திரை வயப்பட்டிருப்பதால் நாராயணர் வரவில்லை என்பதை பிருமா உணர்ந்து நித்திரா தேவியைத் துதிக்கலானார்: "ஜகத்தாதரீ! ஜகன் மாயே மஹா மாயே! சிவே' உன்னுடைய கட்டளைக்கு உட்பட்டே அனைவரும் தத் தமது தொழில்களைச் செய்து வருகின்றனர் காலராத்ரீ! மோஹராத்ரீ! மஹா ராத்ரீ! வியாபினீ! வசகா! மான்யா! மஹநீயா, மாயாமது மதீ! மஹீ, பராபரே! லஜ்ஜா, புஷ்டீ, க்ஷமா! கீர்த்தி! காந்தி! காருண்ய விக்ரஹா! கமநீயா! ஜகத்வந்தியா!" என்று பலவாறாகத் துதித்து, விஷ்ணுவை நித்திரையிலிருந்து எழுப்பச் சொல்லி வேண்டினார்.

அப்போது நித்திரா தேவியானவள் கருணை கொண்டு விஷ்ணுவை விட்டு நீங்கி, மதுகைடப அசுரர்களிடம் சென்று, அவர்களை மோகிக்க வைத்தாள். விஷ்ணு, நித்திரையிலிருந்து எழுந்து, அசுரர்களைப் பார்த்து, அவர்களோடு ஐயாயிரம் ஆண்டுகள் போர் செய்தார் அப்படிச் செய்தும் அவர்கள் மரண மடையாமல் வலிமை மிகுந்து வருவதைக் கண்ட மகாவிஷ்ணு, அவர்களை உபாயத்தால் கொல்லக் கருதினார். எனவே, அவர்களைப் புகழ்ந்து மகிழ்ச்சியூட்டி, தனக்கு ஒரு வரங் கொடுக்க வேண்டும் என்றார். அவரது வஞ்சத்தை உணராத அசுரர்கள் இருவரும் அவ்வாறே அவருக்கு வரம் தருவதாக வாக்களித்தார்கள். அதுதான் தக்க சமயம் என்று கருதிய, விஷ்ணு, "நீங்கள் இருவரும் என்னால் மடிய வேண்டும்" என்று வரம் கேட்டு விட்டார். அதனால் அசுரர்கள் வேறு வழியின்றி "எங்களை நீரற்ற இடத்தில் கொல்லக் கடவாய்!" என்று வரங் கொடுத்தார்கள். பிறகு விஷ்ணு விசுவ ரூபமெடுத்து அவர்களைத் தன் தொடையின் மீது வைத்துக் கொன்றார். அரசனே! தேவியானவள் மதுகைடபரை நாசம் செய்வதற்காக பிருமதேவன் தோத்திரஞ் செய்த அந்தக் காலத்தில் மஹா காளியாகவும் சர்வ யோகேஸ்வரியாயும் தோன்றினள் என்பதைத் தெரிந்துகொள். இனி, மஹாலக்ஷ்மியின் உற்பத்தியைக் கூறுகிறேன்." என்றார்.

---

## 12 அலைமகளும், கலைமகளும

"மகிஷாசுரன் என்ற அசுரன், ஏகாதிபத்திய வெறிகொண்டு தேவலோகம் உட்பட சகல உலகங்களையும் திக்பாலகரையும்



அலைமகள்



கலைமகள்

வென்றடக்கி, ஆட்சி செய்து வரும் காலத்தில், தேவர்கள் பிரும தேவரை அழைத்துக் கொண்டு, சங்கரரும் திருமாலும் இருக்கு மிடத்தைத் தேடிச் சென்று, மகிஷாசுரனுடைய அக்கிரமங்களை எடுத்துச் சொல்லி அவனை ஜெயிக்கும் வழி தெரியவில்லை யென்று வருந்தினார்கள். அதைக் கேட்டதும் மகாவிஷ்ணுவுக்குப் பெரும் கோபம் பொங்கியது. அது போலவே சங்கரருக்கும் சினம்

பெருகியது. பிருமா முதலான தேவர்களுக்கும் அளவு கடந்த கோபம் உண்டாயிற்று. இவ்வாறு, எல்லோரிடமும் தோன்றிய கோப நெருப்பு ஒவ்வோர் ஒளியாய் வெளிப்பட்டது அவ்வொளி களிலே ஆயிரம் சூரியர்களின பிரகாசத்தோடு கூடிய சங்கரனுரின் ஒளியானது ஒரு முகமாயிற்று. யமதர்மராஜனின் ஒளி, கூந்த லாயிற்று. மகாவிஷ்ணுவின் ஒளி கைகளாயின. சந்திரனின் ஒளி ஸ்தனங்களாயின. இந்திரன் ஒளி இடுப்பாயிற்று. வருணன் ஒளி முழங்கால்களாயிற்று. பூமி தேவியின் ஒளி நிதம்பமாயிற்று. பிருமாவின் ஒளி பாதமாயிற்று. கதிரவனின் ஒளி. கால் விரல்க ளாயின வசுக்களின் ஒளி கை விரல்களாயின. குபேரனின் ஒளி மூக்காயிற்று. பிரஜாபதியின் ஒளி பற்களாயின. அக்னியின் ஒளி முக்கண்களாயின. சாத்ரியர்களின் ஒளிஇரண்டு புருவங்களாயின. வாயுவின் ஒளி இரண்டு காதுகளாயின. இவ்வாறு தேவர்களின் தேஜோ ரூபங்களே ஒருருவாகி மகிஷாசுரனை சம்ஹாரம் செய் வதற்காக மஹாதேவி, மஹாலக்ஷ்மி என்னும் திருப்பெயர்களோடு சக்தி தோன்றினள் அவளுக்கு சிவனுர் தம் திரிசூலத்தையும் மகா விஷ்ணு தம் சக்கரத்தையும், வருணன் தன் சங்கையும், அக்கினி தன் சக்தியையும், வாயு வில்லையும் பாணங்களையும், இந்திரன் வஜ்ராயுதத்தையும், ஐராவதம், கண்டாமணி முதலான வற்றையும் யமன் காலகண்டத்தையும், சூரியன் காந்தி மாலையையும் காலன் கடக கவசங்களையும், கடலரசன் ஹாரம், வஸ்திரம் குண்டலம், சூடாமணி, தோள் வளை, சர்ப்பாபரணம், கண்டசரம் நூபுரம் முதலானவற்றையும், விஸ்வகர்மா மோதிரத்தையும் இமாசலன் பலவித ரத்தினங்களையும் சிங்க வாகனத்தையும், குபேரன் சுரா பான பாத்திரத்தையும், ஆதிசேஷன் நாகஹாரத்தையும் கொடுத்து மகிஷாசுரனைக் கொல்ல வேண்டும்'' என்று போற்றி வாழ்த்தி ஞர்கள். தேவி மகிழ்ந்து வீர கர்ஜனை புரிந்து மகிஷாசுரனோடு போராடப் புறப்பட்டுச் சென்றாள். மகிஷாசுரனே சிக்ஷுரன், தூர்தரன், துன்முகன், பாஷ்கலன், தாம்பிரகன், பிடாலன் முத லான தளபதிகள் புடை சூழ, தேவியை எதிர்த்து யுத்தம் புரிந்தான் அவர்களை யெல்லாம் தேவி அழித்தொழித்து, மகிஷாசுரனையும் பாசத்தாற் கட்டி, வாளினுல் அவன் தலையை அறுதது அவனை அழித்தாள். அதைப் பார்த்து தேவர்கள் அனைவரும் ஆனந்தப் பரவசமடைந்து தேவியைப் போற்றித் துதித்தார்கள். இவ்வாறு, மகிஷாசுரனை சங்கரிப்பதற்காக மஹாதேவியே மகாலக்ஷ்மியாகத் தோன்றினுள் என்பதை அறிந்து கொள்.

''புண்ணியசாலியான வேந்தனே! இனி சரஸ்வதி தேவியின் உற்பத்தியைச் சொல்கிறேன். தீயவர்களான சும்பன், நிசும்பன் என்ற அசுரர்கள் இருவரை அழிப்பதற்காக இமய மலையில் தேவர்கள் அனைவரும் ஒன்று கூடி தேவியைத் தியானித்தார்கள் ''பக்தர்களைப் பிடிக்கும் துன்பங்களைத் துடைக்க வல்லவளே!

அசுரர்களை அழிக்கும் உருவமெடுப்பவளே! ஜராமரணவர்ஜிதையே! யாவற்றிலும் உன்னதமானவளே! தேவர்கள் அனைவருக்கும் இறைவியே! பக்திக்கு எளியவளே! மிகவும் வலிமையோடு பராக்கிரமமுடையவளே! மும்மூர்த்திகள் முதலான தேவர்களின் ஸ்வரூபியே! முத்தொழில்களையும் புரிபவளே! தாண்டவத்தில் பிரியம் கொண்டவளே! ஆனந்தம் தருபவளே கருணைக் கடலே! கருணை புரி! சும்ப நிசும்பர் பற்றிய எங்களது பயத்தை நீக்கிக் காத்தருள்!'' என்று துதித்தார்கள். அப்போது தேவியின் கோசத்திலிருந்து கௌசிகை என்னும் தேவியானவள் தோன்றினாள். அவள் தேவர்களை நோக்கி, ''நான் அவ்வசுரர்களை அழித்தொழிக்கிறேன். நீங்கள் அஞ்ச வேண்டாம்!' என்று சொல்லி விட்டு தங்கம் போல் பிரகாசிக்கும் குகையினுள் புகுந்து விட்டாள். சண்டன், முண்டன் என்ற இரு அசுரர்கள் அந்தத் தேவியைப் பார்த்து விட்டு சும்ப நிசும்பர்களிடம் சென்று, ''நாங்கள் ஒரு பெண் ரத்னத்தைப் பார்த்தோம். அவள் உம் கூடலின்பத்திற்கு ஏற்றவள்! அவளைப் போன்றதொரு மங்கை, திரிபுவனங்களிலும் இல்லை'' என்று கூறினர். அதைக் கேட்டு சும்பாசரன் மோகம் கொண்டு சுக்ரீவன் என்பவனைத் தேவியிடம் தூதாக அனுப்பினான் அத்தூதுவன் தேவியிடம் சென்று, சும்பாசுரனின் வீரப் பிரதாபங்கள் பெருமைகள் அனைத்தையும் எடுத்துக் கூறி ''நீ அவனுக்கு மனைவியாகி மகிழ்வாயாக!'' என்றான். அதற்குத் தேவியானவள், ''நீ சொல்வது சரிதான். ஆனால் நான் ஒரு பிரதிக்ஞையுடன் இருப்பவள். அதாவது, எவன் ஒருவன் எனது மதத்தையும் பலத்தையும் வென்றடக்குவானோ, எவன் போர்க்களத்திலே எனக்கு எதிராக நின்று என்னை எதிர்த்துப் போராடி வெல்வானோ, அவனே என்னை மனைவியாக அனுபவிக்க வேண்டும் என்பதுதான் அந்தச் சபதமாகும். இவ்வாறு உங்கள் வேந்தனை என்னோடு வந்து யுத்தம் புரியச் செய்வாயானால், நானும் என் பிரதிக்ஞையை முடித்து விடுவேன்'' என்று பதில் சொல்லியனுப்பினாள் அவன் அப்படியே சும்பாசுரனிடம் சென்று கூறியதும் அவ்வசுரன் மிகவும் வெகுண்டு சீறி தூம்பரன் என்பவனை நோக்கி, ''தூம்பரா! இந்த சுக்ரீவன் குறிப்பிட்ட பெண்ணிடம் சென்று போராடி அவளது கூந்தலைப் பிடித்து இழுத்துக் கொண்டு இங்கே அதிவிரைவில் வந்துசேர்!'' என்று ஏவினான். அதற்கிணங்கி தூம்பரன் அறுபதாயிரம் அசுர சேனைகளோடு சென்று, தேவியை நோக்கி, ''எங்கள் தலைவனை நீ உனது கணவனாக அடைவாயாக! இல்லை. யெனில் உன் கூந்தலைப் பிடித்து, இழுத்துச் செல்வேன்'' என்றான். ''அப்படியே முயன்று பார்'' என்று தேவி புன்னகையுடன் கூறி விட்டு ஒரு ஹுங்கார சப்தமிட்டு அவனைக் கொன்றாள் அவனது சேனைகளையெல்லாம் தேவியின் வாகனமான சிங்கமே கொன்றொழித்தது. இதை அறிந்ததும் சும்பாக்ஷன், தன் துணைவர்களான சண்டன், முண்டன், ரக்தபீஜன் என்னும் அசுரத்தளபதிகளை ஒருவர் பின்

ஒருவராகப் போர் முனைக்கு அனுப்பினன். அவர்களையெல்லாம் தேவி தன் சூலாயுதத்தால் மாய்த்தொழித்தாள். பிறகு சும்ப நிசும்பர்கள் போருக்கு வந்து வெகுகாலம் யுத்தம் புரிந்து இறுதியில் தேவியாலே மாண்டொழிந்தார்கள். அதைக்கண்டு தேவ்வை தேவர்கள் வாழ்த்தினர். வேந்தனே! மஹாதேவி, சும்ப நிசும்பர்களைக் கொல்வதற்காகவே மஹா சரஸ்வதியின் திருவுருவமெடுத்தாள் என்பதை அறிந்துகொள். இதுவரை, மூன்று தேவியரின் உற்பத்தியையும் கூறினேன்.

''மகேஸ்வரியான தேவியே அகிலமனைத்தையும், ஆக்கல், காத்தல், அழித்தல் எனப்படும் முத்தொழிலிடை வசப்படுத்தி, அவரவர் வேண்டும் கோரிக்கைகளைத் தந்தருள்கிறுன் ஜகன் மோகினியான அத்தேவியைச்சரணடை. அவள் உன் நோக்கத்தை நிறைவேற்றுவாள்!'' என்று சொன்னர். வைவஸ்வதமனு அவ்வாறே தேவியை வழிபடச் சென்று மண்ணினுல் தேவியை உருவகப்படுத்தி பக்தியோடு பூஜித்தும் தியானித்தும் வந்தான். பூஜையின் முடிவில், தன் உடலிலிருந்தே இரத்தத்தை எடுத்துப் பலி கொடுத்தான். தேவி மகிழ்ந்து அவனுக்குக் காட்சிகொடுத்து, 'உனக்கு விருப்பமானதைக் கேள்!'' என்ருள். வேந்தன் தன் அறியாமை அகல வேண்டும் என்றும் ஞானம் பெருகவேண்டும் என்றும் பகைவரற்ற ஆட்சி வேண்டும் எனறும் பிரார்த்தித்தான். அதற்குத் தேவி, ''மனுவே! உனக்கு இந்தப் பிறவியில் நீ விரும்பிக்கேட்டதைத் தந்தேன். மறு பிறவியில் சூரியனிடமிருந்து நீ சாவர்ணி மனுவாகவும், அந்த மன்வந்தரத்துக்கு நீயே தலைவனுகவும் இருப்பாய். அப்போது அதிகமான சந்ததியையும் அடைவாய்'' என்று கூறி மறைந்தாள். பிறகு அவனும் மனுவானுன். நீங்கள் கேட்டதற்கிணங்க சாவர்ணிமனுவின் சரிதத்தைச் சொன்னேன். இதைப் படிப்போரும் கேட்போரும் தேவியின் அருளுக்குப் பாத்திரமாவார்கள் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள்.''

## 13 மற்ற மனுக்களும் பிராமரியம்மனின் மகிமையும்

நாராயண மகரிஷி கூறலானுர்:

''நாரதரே! இனி மற்ற மனுக்களின் சரிதைகளையும் கூறுகிறேன் அவைகளைக் கேட்டால் தேவி பக்தி விளையும் வைவஸ்வத மனுவுக்கு கிருஷன், ப்ரஷத்ரன், நாபாகன், விஷ்டன், சரியாதி, திரிசங்கு என்று வலிமையுள்ள ஆறு பிள்ளைகள் இருந்தார்கள்

அவர்கள் திவ்யமான காளிந்தி நதிக்கரைக்கு சென்று ஆகாரம் அருந்தாமல், வெவ்வேறாக மஹீமயீ மூர்த்தமான தேவியை நிலை நிறுத்தி, பலவித உபசாரங்களினால் பூஜை செய்தும், சருகு, நீர், காற்று, புகை, காந்தி முதலியவற்றைமட்டும் கிரமமாக உண்டு தவம் புரிந்து வந்தார்கள். இவ்விருவிதமான சாதனங்களாலும் அருமையான தூய அறிவு பெற்றவர்களாகவும், சகல மோகங்களை யும் துடைப்பவளான தேவியிடம் இடையறா நினைப்புள்ளவர்களாக வும், அந்நினைப்பின் விளைவால், "இவ்வுலகமெல்லாம் பரமாத் மாவே தவிர வேறில்லை! என்ற ஞானத்தெளிவு பெற்றவர்களாகவும் விளங்கினார்கள். இவ்விதமாகப் பன்னிரண்டு ஆண்டுகள் தவம் புரிந்து, "மகேஸ்வரீ! ஈசாணி! ஜயஜயே! கருணாலயே! வாக்பவா ராதனப்ரீயே! வாக்பவப் பிரதிபாதிதே! க்லீங்கார விக்ரஹே! தேவீ! கலீங்கார ப்ரீதிதாயினீ, காமராஜ மனோ மோத தாயினீ, ஸ்வர சந்தோஷினீ! மஹாமாயே! மோதபரே! மகா சாம்ராஜ்ய தாயினீ! விஷ்ணு அர்க்கஹர சக்ராஸ்வரூபே! போகவர்த்தினீ! ஜயஜய!" என்று தியானித்துப் பிரார்த்தித்தார்கள். அப்போது தேவி, அவர்கள் முன்பு காட்சியளித்து மலர்ந்த முகத்தோடு அவர் களை நோக்கி, "ராஜபுத்திரர்களே! நீங்கள் மலமற்ற தூய்மை யான சித்தத்தோடு என்னைத் தியானித்து வழிபட்டுச் செய்த தவத் தால் நான் மகிழ்ந்தேன். உங்களுக்கு வேண்டியவற்றைக் கேளுங்கள்!" என்றாள். அதற்கு அவர்கள், "தேவி! பகைவரின் தொல்லையற்ற ராஜ்யமும் நீண்டகாலம் வாழ்ந்திருக்கக்கூடிய சந்த தியும், இடையே அழிவெய்தாத போகமும் காந்தியும் புகழும் பக்தி யும் எப்போதும் எங்களுக்கு நீங்காமல் இருக்கும்படி வரம் தரவேண் டும்" என்று கேட்டார்கள். தேவியும், "நீங்கள் விரும்பியவாறே, தீர்க்க சந்ததியும் தீர்க்க. சம்பத்தும், தீர்க்கானுபவமும் தீர்க்க லாபமும், தீர்க்க ஐஸ்வரியமும் தேஜஸும் என் அருளால் முறை மையாகப் பெற்று, மன்வந்தரங்களுக்கும் அதிபதிகளாக விளங்கு வீர்களாக" என்று கூறியருளி விட்டு பிராமரியம்மனை உலக நாயகி மறைந்தாள். வரம் பெற்ற அரசகுமாரர்கள் அப்பிறவியில் விசாலமான பூவுலக அதிபதிகளாகவும் பெரும் போகங்களையெல் லாம் அனுபவிக்கும் மகா புருஷர்களாகவும் சந்ததி விருத்தியோடு வாழ்ந்து, மறு பிறவியில் சாவர்ணி என்ற பட்டப் பெயருள்ள மனுக் களானார்கள்.

இனி, அந்த மனுக்கள் வந்த கிரமத்தைக் கூறுகிறேன். தக்ஷ சாவர்ணி என்பவன் ஒன்பதாவது மனுவாகவும், மேரு சாவர்ணி என்பவன் பத்தாவது மனுவாகவும், சூரியர் சாவர்ணி என்பவன் பதினொன்றாவது மனுவாகவும், சந்திர சாவர்ணி என்பவன் பன்னி ரண்டாவது மனுவாகவும், ருத்திர சாவர்ணி என்போன் பதின் மூன்றாவது மனுவாகவும், விஷ்ணு சாவர்ணி என்பவன் பதினான்கா

வது மனுவாகவும் விளங்கினார்கள், இவர்கள் அனைவருமே பிராமரியின் அருள் பெற்ற பராக்கிரம புருஷர்கள்!''

—இவ்வாறு நாராயணர் கூறியதும் நாரதர் அவரை நோக்கி, ''சுவாமி! பிராமரி என்னும் தேவி யார்? அந்தத் தேவி ஏன் தோன்றினாள்? அந்த அம்மன் எப்படியிருப்பாள்? அவளது திவ்ய சரித்திரத்தைச் சொல்ல வேண்டும்'' என்று கேட்கவே மகரிஷி கூறலானார்.

''நாரதரே! ஒரு தாய்க்குத் தன் பிள்ளைகள்மீது ஒரு காரணமும் காரியமும் கருதாது தோன்றும் கழிவிரக்கத்தைப் போலவே, அம்பிகை கருணையினால் கொண்ட பிராமரியின் சரித்திரம் முதலானவற்றை கூறுகிறேன்; கேளும்.

''முன்பொரு சமயம் அருணன் என்ற அசுரகுல மன்னன் மாவலிமையுடையவனாகவும் தேவர்களிடம் வெறுப்புடையவனாகவும் இருந்தான். அவன் தன்னினத்தார் வசிக்கும் பாதாள லோகத்தை விட்டு வெளியேறி. இமயமலையை அடைந்தான். அங்கு கங்கைக்கரையில், அவன் ஒரு பர்ணகசாலையை அமைத்துக் கொண்டு, அதிலிருந்த வண்ணம் காயத்திரியை ஜபித்து தவம் புரியலானான். பதினாயிரம் ஆண்டுகள் ஆகாரமின்றி வெறும் தண்ணீரைமட்டும் அருந்தியும் பத்தாயிரம் ஆண்டுகள் வெறும் காற்றைமட்டும் உட்கொண்டும், பத்தாயிரம் ஆண்டுகள் ஒருவிதப் புசிப்புமின்றியிருந்து அருந் தவம் புரிந்து வந்தான். அத்தகைய தவவலிமையில் அவனது உடலிலிருந்து ஓரக்கினி எழுந்து, எல்லா உலகங்களையும் பஸ்பமாக்கலாயிற்று அதைக் கண்டதும் தேவர்களெல்லாம் இதுவென்ன அதிசயம் என்று பயந்து நடுநடுங்கி, பிரமனைச் சரண் அடைந்து முறையிட்டார்கள். பிரமன், அதைக்கேட்டு காயத்திரி தேவியுடன் அன்னவாகனத்தில் ஏறி, அந்த அசுரனிடம் சென்று பார்த்தார். அவன் உடலில் உயிர்மட்டுமே இருப்பதையும் உடலெங்கும் ஓட்டை ஓட்டையாய் இருப்பதையும் வயிறு வரண்டு காய்ந்திருப்பதையும் கண்கள் தியான நோக்கோடு நிலைத்திருப்பதையும் இரண்டாவது அக்கினியைப் போல அவன் பிரகாசிப்பதையுங்கண்டார். பிறகு அவர் அவ்வசுரனை நோக்கி, ''அருணனே! உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்!'' என்றார். அருணன், கண் திறந்தான். காயத்திரி தேவியோடும் நான்கு வேதங்களோடும் கமண்டலம், ஜபமாலை முதலியவற்றோடும். பிரமசொரூபமாக ஒளிரும் பிரம தேவனைப் பார்த்ததும் அவன் எழுந்து அவரை வணங்கிப் போற்றி, ''சிருஷ்டிகர்த்தாவே! நான் எப்போதுமே மரணமடையாமல் இருக்கவேண்டும். இதுவே என் பிரார்த்தனை!'' என்றான். அதற்கு பிருமா ''அசுரவேந்தனே! நானும் விஷ்ணு முதலான சகல தேவர்களுங்கூட, ஒரு முடிவு என்னும் மரண நியதிக்குட்பட்டவர்களாகவே இருக்கிறோம் என்றால் மற்றவர்

களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? ஆகையால் என்னால் கொடுக்கக்கூடிய வரம் எதுவோ அதைக் கேட்பாயாக நீ புத்தி மான். கோபங்கொள்ளவேண்டாம்!'' என்றார். அதைக் கேட்டதும் அசுரன், ''படைப்புக் கடவுளே! எனக்கு யுத்தத்தாலோ அஸ்திர சஸ்திரம் முதலான ஆயுதங்களாலோ ஆணாலோ, பெண்ணாலோ இரண்டு கால், நான்கு கால்களையுடைய ஜீவன்களாலோ எனக்கு மரணம் உண்டாகாமல் வேறெந்த விதத்திலாவது மரணம் வந்தால் வரட்டும். தற்போது தேவர்களையெல்லாம் வெல்வதற்கு உரிய அளவற்ற வலிமையைக் கொடுப்பீராக'' என்று கேட்டான். பிருமா, ''அப்படியே ஆகட்டும்!'' என்று கூறித் தம்மிடம் சேர்ந்தார். பிறகு அசுரன் மமதை கொண்டு பாதாளத்திலிருந்த அசுரர்கள் அனைவரையும் வெளியே திரட்டி வந்து, அவர்களில் ஒருவனை நோக்கி, 'தேவேந்திரனின் தலைநகரான அமராவதிக்கு நீ சென்று, இந்திரனைப் பார்த்து நான் போர்தொடுக்க விரும்புகிறேன் என்று கூறி யுத்தத்திற்கு அறைகூவல் விடுத்து வா!'' என்று தூதனுப்பினான். அசுர தூதன் இந்திரனிடம் சென்று கூறினான். தேவேந்திரன் அதைக் கேட்டுப் பயந்து, பிரமதேவரிடம் சென்று முறையிட்டான். பிருமதேவர் தேவர்களோடு மகா விஷ்ணு விடம் சென்றார். மகாவிஷ்ணுவோ பிரமனையும் மற்ற தேவர்களை யும் அழைத்துக் கொண்டு சிவபெருமானிடம் சென்று முறையிட் டார். இதற்கிடையில் அருணாசுரனே சுவர்க்கத்துக்குத் தூதனுப் பிய பிறகு சூரியன் யமன், அக்னி முதலானவர்களையெல்லாம் தன் வலிமையால் விரட்டி ஓட்டிவிட்டு தானே அவரவர்களைப் போல உருக் கொண்டு அந்தந்தத் திக்குகளிலிருந்து அகங்காரத்தோடு திரிபுவனங்களையும் ஆண்டு வரலானான். சூரியன் முதலானவர்கள் கைலயங்கிரிக்கு ஓடிச்சென்று, சிவபெருமானிடம் சரண் அடைந்து தங்கள் துன்பங்களைக் கூறினார்கள். அப்போது தேவர்கள் மிகவும் கவலைப்பட்டு, ''அந்தோ! அந்த அசுரன் போரினாலோ அஸ்திர சஸ்திரங்களினாலோ விலங்குகள் முதலியவற்றாலோ மரணமடை யாதபடி பிரம்மாவிடம் ஒரு வரம் பெற்றிருக்கிறானே! இதற்கு நாம் என்ன செய்யமுடியும்?'' என்று கலங்கினார்கள். அப்போது, ''தேவர்களே! நீங்கள் பராசக்தியான தேவியைச் சரணடையுங்கள். அவள் உங்கள் விருப்பத்தை நிறைவேற்றுவாள்! அருணாசுரன் செய்துவரும் காயத்திரி ஜபத்தைச் செய்யாமல் கை விட்டுவிடு வானேயானால் அவன் மரணத்திற்கு ஆளாவான்'' என்று ஒரு வானொலி எழுந்தது அதைக்கேட்டதும் இந்திரன் அந்தக் கணமே தன் குலகுருவான பிரகஸ்பதியை வரவழைத்து, ''குருவே! தேவர் கள் படுகின்ற துயரங்களை நீங்கள் அறிவீர்கள். அதனை ஒழிப்பார் உம்மை அன்றி யாருண்டு? ஆகையால் எங்களை வருத்தும் அந்த அருணாசுரனிடம் நீங்கள் சென்று, வானொலி வாக்குப்படி தேவி காயத்திரியின் ஜபத்தை அவ்வசுரன் செய்யாமலிருப்பதற்கு நீங்கள் என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்யுங்கள். நாங்களும்

தியானயோகத்திலுல் தேவியைத் தியானித்து துதிக்கிறோம். தேவியும் உமக்கு அங்கு உதவிபுரிவாள்!'' என்று சொல்லியனுப்பினன். பிறகு அவன் தேவர்களோடு புறப்பட்டு ஜாம்பூந்தேஸ்வரியை அடைந்து மாயாபீஜ மந்திரத்தை ஜபித்து தேவியை பூஜித்து வந்தான். தேவ குரு பிரகஸ்பதியும் அப்போதே அருணுசுரனிடம் சென்ருர். அவரைக் கண்டதும் அருணுசுரன் ''என்ன தேவ குருவே! நீர் ஏன் இங்கு வந்தீர்கள்? என் பகைவனுன தேவேந்திரனல்லவோ உன்மீது பிரியம் வைத்திருப்பவன்!'' என்ருன். அதற்கு அவர், "அசுரமகிபனே! என்னுல் பூஜிக்கப்பட்ட தேவியை நீயும் தினந்தோறும் பூஜித்துவருவதால், நீயல்லவோ என் மீது பிரியம் வைப்பவன்! அதனுல் தான், நான் உன்னைப் பார்க்க வந்தேன்!'' என்ருர். அந்த ஒரு வார்த்தையாலேயே அருணுசுரன் குதூகலப்பட்டு தான் செய்துவந்த ஜெபச் சிறப்பை யெண்ணி இறுமாப்பு கொண்டான் அந்த அகம்பாவத்தாலும் தேவ மாயையினுலும் பரம மந்திரமான திரிகபாத ஜபத்தைச் செய்ய அவன் மறந்து விட்டான். அதை மறந்தவுடன் அவனது ஜப தேஜஸ் அகன்று போய்விட்டது தேவகுருவும் தான் வந்த வேலை முடிந்தது என்று நினைத்து இந்திரனிடம் திரும்பிச் சென்று அதைச் சொன்னுர். இந்திரன் மகிழ்ந்து மகேஸ்வரியைத் தேவர்களுடன் பூஜித்தான். சில காலம் சென்ற பிறகு, ஜகன்மாதாவும, லோக மங்கை நாயகியும் சகல தேவர்களாலும் போற்றப்படுபவளும் சர்வாத்மிகையும் சர்வ ஜனனியும் சர்வேஸ்வரியும், கோடி சூரியப் பிரகாசினியும், கோடி மன்மத சௌந்தரியவதியும் விநோதமான சந்தனம் பூசியவளும் விசித்திரமான வண்டுகள் மொய்ப்பதைப் போல் அமைந்துள்ள நவமணி மாலைகளை அளித்திருப்பவளும், அது போலவே மலர் மாலைகளைச் சூடியவளுமான தேவி எண்ணில்லாப் பெண் வண்டுகள் 'ஹ்ரீம்' என்கின்ற மனுவைப் பக்கத்திற்குப் பக்கம் கோடிக் கோடி முறைகள் சப்தித்துக் கொண்டு தொடர்ந்து வர சிருங்கார ஆடையணியலங்காரங்களோடு சாந்தையாயும் வரதாபயமுடையவளாயும், கருணுமுதக் கடல் போல் காட்சியளித்தாள். அந்தத் தேவியைச் சகல தேவர்களும் மகிழ்ச்சி பொங்கும் இதயங்களோடு பார்த்துப் பரவசப்பட்டு வணங்கிப் பலவாருகவும் தோத்தரித்தார்கள்.

தேவர்களின் துதியைக் கேட்டதும் ஜகதாம்பிகையான தேவி குயில் போன்ற குரலில், ''தேவர்களே! நீங்கள் வேண்டும் வரங்களைக் கேளுங்கள்!'' என்ருள். தேவர்கள் தங்களுக்கு அருணுசுரனுல் ஏற்பட்டுள்ள துன்பங்களைக் கூறித் தங்களை காத்தருளும்படி வேண்டினுர்கள். பிரமரங்களால் (வண்டுகளால்) சூழப்பட்டிருக்கும் பிராமரியம்பிகை தனது திருக்கரங்களிலிருந்த பிரமரங்களையும் (வண்டுகளையும்) எப்போதும் தன்னைச் சூழ்ந்திருக்கும் பிரமாங்களையும் பலவித வண்டுருவங்கள் எடுக்கச் செய்து, அவற்றை



அருணுசுரன் மீது ஏவி விட்டாள். அவ்வண்டுகள் மூன்றுலகங்களிலும் குருவிக் கூட்டங்களைப் போல்வரிசை வரிசையாகப் புறப்பட்டு வான வெளி முழுவதிலும் அடர்ந்து மறைத்துப் பூமியில் இருளையுண்டாக்கி,எங்கு பார்த்தாலும் பிரமர மயமாய் (வண்டுகள் மயமாய்) காட்சியளித்தன. மக்களெல்லாம் அதைக் கண்டு மலைத்து வியப்புற்ருர்கள். ராட்சஸர்கள் எங்கெங்கு இருக்கிருர்களோ அங்கங்கெல்லாம் வண்டுகள் பறந்து சென்று அவர்களது மார்பைத்துளைத்துமரண மடையச் செய்தன. அம்புகள் மார்பைத் துளைப்பதுபோல வேவண்டுகள் துளைத்ததைப் பார்க்கும் போது அதுபோல போர்க்களத்தில் வீரர்களாலும் செய்ய முடியாதெனத் தோன்றியது. போர்க்களத்தில் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்ளும் உரையாடல் கூட இல்லாமல் ஒரே கணத்தில் ராட்சஸர்கள் அனைவரிடமிருந்தும் மரணவோசை எழுந்தது. இவ்வாறு அருணுசுரன் முதலான அசுரர்களை யெல்லாம் பிரமரங்கள் (வண்டுகள்) அழித்து விட்டு, தேவியிடம் திரும்பி வந்தன. அதைக் கண்ட அமரர்கள் அனைவரும் ஜகன்மாதாவின் அருட் செயலை வியந்தனர். போற்றிப் பூஜித்தனர். வேதங்களால் துதித்தனர். பலவித வாத்தியங்களையும் முழக்கி அரம்பையரின் ஆடல் பாடல்களோடு ஜெய கோஷம் எழுப்பினர்.

இவ்வாறு தேவர்கள் தன்னைக் கொண்டாடுவதைக் கண்டு தேவி மகிழ்ந்து, அவர்களுக்கு வரங்கள் வழங்கி தன் பக்தியையும் தந்தருளி மறைந்தாள். மகரிஷியே' பிராமரியம்மனின் சரிதம் இதுவேயாகும். இதைப் படிப்பவர்களும் கேட்பவர்களும் பயங்களிலிருந்து விடுபட்டு வாழ்வார்கள். அவர்களுக்குச் சகல பாவமும் அகன்று போகும். இந்த ஸ்கந்தத்தில் சகல மனுக்களின் சரித்திரங்களும் கூறப்பட்டன. தேவி மகாத்மியத்தை வாசிப்போரும் கேட்போரும் தேவ சாயுஜ்ய பதத்தை அடையப் பெறுவார்கள்!''

# பதினொன்றாவது ஸ்கந்தம்

## சதாசாரம்

நாரத மகரிஷி நாராயணரை நோக்கி, "பெருந்தவத்தவரே! நீங்கள் சொன்ன தேவியின் சரிதங்கள் யாவுமே விந்தையாக வுள்ளன. நீங்கள் சொன்னதிலிருந்து, தேவர்களின் வேண்டு கோளுக்கிணங்க தேவி அவதாரங்களெடுத்து தீயவர்களான அசுரர் களைக் கொன்றாள் என்றும், அவள் வகிக்கும் எல்லா அதிகாரத் தலைமைகளும் ஜீவன்களிடம் அத்தேவி வைக்கும் முழுமையான கருணை என்றும் தெரிகிறது. நாராயணரே! இனிமேல், அருள் நாயகியான அந்தத் தேவி, எக்காரியத்தினால் மகிழ்ச்சியுற்று அனுக்கிரகஞ் செய்வாள்? தேவிக்கு எப்போதும் பிரியமானது எது? அந்த ஆசாரத்தை நீங்கள் சொல்ல வேண்டும்" என்று கேட்டார். நாராயணர் கூறலானார்:—

'தத்துவ ஞானியான நாரதரே! விதிமுறைப்படியுள்ள சதா சார அனுஷ்டானமே தேவிக்கு எப்போதும் பிரீதியானது! ஆகை யால் அவளருளைப் பெற அதுவே போதுமான சாதனமாகும். எந்த ஆசாரங்களையும் நடத்திக் காட்ட வேண்டியவனாக இருப்பவன் பிராமணனாகையால் அவன் தனக்கு என்று ஏற்படுத்தப்பட்ட கர்ம அனுஷ்டானங்களைக் காலையில் எழுந்தது முதல் செய்ய வேண்டும். அவன் அப்படிச் செய்தால்தான் உதவியாகும். சூரியோதயம் முதல் சூரியாஸ்தமனம் வரை எந்தெந்த கர்மங்கள் அவனுக்கு விதிக்கப்பட்டுள்ளனவோ, அவற்றையே அவன் நியதி யாகச் செய்ய வேண்டும். அதற்கு மாறாக வேறெதனையும் செய்யக் கூடாது. அவனுக்குரிய அக்கர்மங்கள், நித்தியம், நைமித்திகம், நிந்திக்கப்படாத காமியம் என்று சொல்லப்படும். அவற்றைக் கொண்டு பிராமணன் தன் ஆன்ம நலனைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். தாய், தகப்பன், பத்தினி, புத்திரன், புதல்வி முதலான வரெல்லாம் மேற் கூறிய மூன்றுவித கர்மங்கள் செய்வதான ஆத்ம நலனில் சிறிதளவேனும் விருத்தி செய்ய மாட்டார்கள். எனவே

இம்மூன்று விதமான சத்கர்மங்கள்தான் உற்றுதவியாகவும் நாள் தோறும் தொடரும் சஞ்சித வினையைத்தடுப்பதற்குச் சாதனமாகவும் விளங்குகின்றன. இக்கர்மானுஷ்டானங்களை அனுசரிக்காமற்போனால் கடக்கொண்ணாத அஞ்ஞான இருளை ஒருவிதத்தாலும் கடப்பதற்கு இயலாது. ஆசாரம் என்பதும் இது தான். இவைதான் முக்கிய மான தர்மமாகும். அந்தப் பிரதம தர்மமானது சுருதியுக்த தர்மம் என்றும் ஸ்மிருதியுக்த தருமம் என்றும் இரண்டு வகைப் படும். சுருதியினாலும் சுருதி சம்பந்தப்பட்ட ஸ்மிருதியினாலும் கூறப்பட்ட தர்மானுஷ்டானங்கள்தாம் மிகவும் உன்னதமானவை. ஆகையால் அவ்விரண்டையுமே பிராமணன் தனக்குரியனவாகக் கருதி தினந்தோறும் ஆசார தர்மத்தில் ஆர்வம் கொள்ள வேண்டும். ஏனென்றால், ஆசாரமே சகல சுபங்களுக்கும் காரண மானது; அதுவே ஆயுள் விருத்தி தருவது, சந்ததி அபிவிருத்தியை வளர்ப்பது, எந்நாளிலும் குறைவில்லா அன்னமூட்டுவது. பாபத்தை அகலச் செய்வது. இகபர வாழ்வில் பெரும் சுகம் நல்குவது அது அறியாமையால் கவரப்பட்ட ஆன்மாக்களுக்குத் தர்ம ரூபமான ஒரு மாபெரும் விளக்கு போல் வழி காட்டுகிறது. முக்தி மார்க்கம் இதுதான் என்றும் எடுத்து காட்டுகிறது; விசேஷத் தன்மையை விளைவிப்பது. நற்கருமமும், நற்கருமத்தால் ஞானமும் ஏற்படு வதால் ஆசாரமே தலை சிறந்ததாகும். இவ்வாறு மனுவும் கூறி யுள்ளார். யாவற்றுக்கும் ஆதாரமான'ஆசாரம் ஒருவனிடம் இருக் குமேயானால் அவன் எல்லாப் பொருளையும் சுலபமாகப் பெற்று விடலாம். எந்தப் பிராமணன் ஆசாரம் இல்லாமல் இருக்கிறானோ அவன் சூத்திரனைப் போல வெளியில் ஒதுக்கி வைக்கப்பட வேண் டியவனேயாவான். ஏனென்றால் ஆசாரத்தோடு விளங்குவதுதான் பிராமணத்துவம், அதில்லா விட்டால் சூத்திரத்துவம்! ஆகையால் ஜாதி ஒன்றைக் கொண்டே அந்த ஜாதியினனுக்குத் தன்னைச் சம மாகக் கருதக் கூடாது. சூத்திரன் எப்படியோ, அப்படித்தான் ஆசாரமில்லாத பிராமணனுமாவான்! நாரதரே! இப்போது நான் சொல்லி வந்த ஆசாரம் என்பது சாஸ்திர ரீதி (அறநூல்வழி) என்றும் யோகரீதி (உலகியல் வழி) என்னும் இரண்டு வகைப்படும். சாஸ்திர ரீதி தர்மத்தை அறியாதவன், லோக ரீதியான தர்மத்தை அறிந்து, அவ்வழியை அனுசரித்து நடத்தல் வேண்டும். சுகத்தை விரும்புவோன், இவ்விரண்டில் ஒன்றைக் கடைப்பிடிக்க வேண்டும்: உலகியல் ரீதியான தருமங்களாவன:-கிராமதர்மம், ஜாதி தர்மம், தேச தர்மம், குலதர்மம் என்பனவாகும். இவ்வகையான ஆசா ரங்களைக் கைவிட்டு ஆசாரம் கெட்டவனாக இருப்பவன், உலகத் தாரின் நிந்தனைக்கு ஆளாவான்: எப்போதும் துக்கப்படுவான். வியாதியால் பீடிக்கப்படுவான். தர்மத்தைக் கைவிட்டவனிடம் பொருளும் இன்பமும் பொருந்தியிரா! வேதங்களைத் தவிர மற்ற நூல்களில் வரையறுக்கப்பட்டிருப்பவை தர்மமாகவே இருந்தாலும்

.சுகக் கேட்டை விளைவிக்குமென்றால் அதைக் கடைப்பிடிக்கக் கூடாது!'' என்று நாராயணர் கூற

நாரதர் அவரை நோக்கி, ''முனிவரே! தருமங்களைப் ப . பற்பல சாஸ்திரங்களில் பலவிதமாகவும் கூறப்படுவதால் அவற்றில் அனுஷ்டிக்கதக்கவை எவை என்றும், அனுஷ்டிக்கத் தகாதவை எவை என்றும் எப்படித் தீர்மானிப்பது?'' என்று கேட்டார்.

நாராயணர் கூறலானார்: ''நாரத முனிவரே! சுருதி, ஸ்மிருதி ஆகிய இரண்டும் இரண்டு கண்களாகும். புராணமோ இருதயமாகும். இந்த மூன்றிலும் கூறப்பட்டவைகள்தான் தருமங்கள். இந்த மூன்றுக்கும் புறம்பானவை தருமமாகா! மூன்றிலும் ஒன்றுக்கொன்று முரண்பாடு தோன்றுமேயானால் வேதத்தில் சொன்னவற்றையே பிரமாணமாகக் கொள்ள வேண்டும். வேதத்தில் கூறப்பட்டவையும் ஒன்றுக்கு ஒன்று முரண்படுமானால் இரண்டு தர்மத்தையும் கைக்கொள்ள வேண்டும். அவற்றை விடலாகாது. ஸ்மிருதியில் ஒன்றுக்கொன்று முரண்படுமானால், அதை வேறு வேறு விஷயங்கட்கு என்று கருத வேண்டும். புராணங்களில் ஒன்றுக்கொன்று முரண்பாடான தர்மம் இருக்குமானால் அதனைக் கைக்கொள்ளக் கூடாது. எந்தத் தர்மமும் வேதத்திற்கு நேர்மாறாக இல்லாதிருந்தால் அதை ஏற்கலாம். பிரத்யக்ஷமாய் வேதத்திற்கு முரண்பாடு இருப்பின் அதை பிரமாணமாகக் கருதக் கூடாது. எந்த விதத்திலும் வேதம் தர்ம மார்க்கத்தையே எடுத்துக் காட்ட முனைவதால் அதற்கு மாறுபாடற்ற தர்மங்களே பிரமாணமாகும். மற்றவை பிரணமாணமாகா! வேதப் பிரமாணத்தைவிட்டு, மற்றைய பிரமாணத்தைப் பிரமாணமாகக் கருதி அதைக்கடைப்பிடிக்கிறவனை தண்டிக்க யமலோகத்தில் நரக குண்டங்கள் அமைந்துள்ளன. ஆகையால் வேதத்தில் கூறிய தருமங்களையே அனுஷ்டிக்கவே எல்லா விதத்திலும் முயல வேண்டும். அதில் கூறப்படாதனவற்றை ஸ்மிருதியிலிருந்தாலும், புராணத்திலிருந்தாலும் வேறு தந்திரங்களில் இருந்தாலும் வேறு சாஸ்திரங்களில் இருந்தாலும் அதை அனுஷ்டிக்கக் கூடாது! சுருதிக்கு எதிரானவை பிரமாணங்கள் அல்ல. ஒரு சாஸ்திரத்தைப் படித்து அதையே பிரமாணம் என்று நிர்மாணித்து அது ஒன்றையே பிடித்துக் கொண்டு அனுஷ்டிப்பவர்கள் நரகத்தில் தலை கீழாக விழுந்து அதிலேயே அமிழ்ந்து விடுவார்கள். வாமாசாரர்களும் பாசுபதர்களும் லிங்கதாரிகளும் தப்த முத்ராங்கிதர்களும் வைகானசர்களும் இந்த வகையைச் சேர்ந்தவராவார்கள். இவ்வாறு வேத மார்க்கத்திற்கு விரோதமானவர்களெல்லாம் நரகத்தில் போய் விழுவார்கள் ஆகையால் மனிதன் வேத அங்கீகாரமான தருமங்களையே செய்ய வேண்டும் என்று வகுக்கப்பட்டிருக்கிறது. எதை அடிக்கடி

செய்ய வேண்டுமோ எதை ஒருவனுக்குக் கொடுக்க வேண்டுமோ எந்த வாக்கு தருமத்தை கைக்கொள்ள வேண்டுமோ, அவையெல்லாம் முன்பு ஏற்படுத்தப்பட்டனவே தவிர, என்றால் போதிக்கப்பட்டு புதிதாக உதித்தவை அல்ல. அவையெல்லாம் அந தியான வேதத்தால் விதிக்கப்பட்டனவேயாகும்.



பிராணுயாமம்

ஒருவனுக்கு சிறு தீங்குகளோ இடையூறுகளோ மாபெரும் தீங்குகள் நேரிட்டிருந்தாலும் அவன் இரவில் ஒரு ஜாம நேரம் பிரமத் தியானம் செய்ய வேண்டும். அந்தத் தியானத்தை செய்ய வேண்டிய முறை: சத்துவ குணம் வாய்ந்த ஒருவன் தன் தொடைகளின் மீது கால்களை ஊன்றி, மார்பைப் பார்க்கும்படி முகத்தைச் சிறிது உயர்த்திக் கண்களை மூடி, பற்கள் ஒன்றின் மீது மற்றொன்று படாதவாறு இரண்டு கன்னத் தாடைகளிலும் நாக்கு சரியாதபடி மூடிய வாயோடு உடல் அசைவற்று சற்று உயரமான ஆசனத்தில் அமர்ந்து கொண்டு, இரண்டு அல்லது மூன்று பங்கு பிராணுயாமத்தைத் துவங்க வேண்டும். அதற்குப் பிறகு, இதய வாசியாய் இதயத்தில் தீபம் போலப் பிரகாசிக்கும் பகவானைத் தியானித்து அந்தப் பகவானிடத்தில் ஆன்மாவை லயித்திருக்க வைக்க வேண்டும். இதுவே பிரம்மத் தியான முறை.

பிராணுயாமம் என்பது 1. சதுாமம்; 2. விதுாமம்; 3. சகர்பம் 4. அகர்பம்; 5. சலக்ஷ்யம்; 6 அலக்ஷ்யம் என ஆறுவகைப்படும். இந்தப் பிராணுயாமத்திற்கு ஈடான சாதனம் வேறு எதுவுமே கிடையாது. இந்தப் பிராணுயாமம் ரேசக, பூரக, கும்பங்களால் செய்ய வேண்டும். இது மூன்று வர்ண வடிவுடையது. பிராணுயாமம் தன் மயத்தைச் செய்யும் தன்மை வாய்ந்ததாதலால் இதைப் பிரணவம் என்றும் கூறுவர். இடை கலையினுல் (இடது மூச்சினுல்) காற்றை உள்ளிழுத்து உதரத்தில் கும்பித்து, அந்தக் காற்றைப் பதினாறு மாத்திரை அளவுக் காலம் வரை மெதுவாகப் பிங்கலையினுல் (வலது மூச்சினுல்) ரேசித்தலே சதுாமப் பிராணுயாமம் ஆகும். இப்படிப் பிராணுயாமம் செய்த பிறகு பின் வரும் தியானம் செய்ய வேண்டும்.

ஆதாரேலிங்க நாபி பிரகடித ஹ்ருதய தாலுமூலே லலாடே
த்வேபத்ரே ஷோடசாரே, துவிதச தசதளத்வாசர்தே சதுஷ்கே
வாஸாந்தே பாலமத்யே டபகடஸஹிதே கண்டதேஸே ஸ்வராணும்
ஹம் க்ஷம்தத் வார்த்த யுக்தம் ஸகலதளகதம் வர்ணரூபம் நமாமி.

இவ்வாறு தியானித்து, செந்தாமரை மலரில் உறைபவளும், அந்தச் செந்தாமரைத் துகள் போன்ற நிறம் வாய்ந்தவளும் பகவான் நியமித்த சின்னமுடையவளும் தாமரை நூலைப் போன்ற ஆதாரமுள்ளவளும் சூரியன், அக்னி, சந்திரன் முதலியவர் களுக்கு இணையான முகமுடையவளும் ஸ்தனங்களால் ஜொலிப் பவளுமாக தேவியை எவன் ஒருவன் கணநேரம் பாவித்துத் தியானிக்கிருனே அவனே முக்தன், அவன் இருப்பே தேவியின் இருப்பு, அவன் நடையே தேவியின் யாத்திரை அவன் புத்தியே தேவியின் சிந்தனை! அவன் பேச்சே தோத்திரம்! சர்வ ஆத்மகமான தேவியின் தன் வடிவேயாவான். எல்லா தேவர்களின் அர்ச்சனையும் தேவியின் அர்ச்சனையே யாகும். நானே தேவி; தேவியைவிட்டு நான் வேருனவனன்று; நான் தேவி ஸ்வரூபமான பிரமன். நான் துக்கத்திற்கு, உறைகள மல்ல நான் சச்சிதானந்த ரூபனுக இருக்கிறேன்! என்று தன்னைப் பாவித் தல் வேண்டும். முதல் பிரயாணத்தில் பிரகாசிப்பவளாகவும் திரும் பும் மறு பிரயாணத்தில் அமிர்தம் போலிருப்பவளாகவும் பிறகு இரு தயத்தில் சஞ்சாரம் புரிந்து ஆனந்தமயமாகவும் விளங்கும் பெண் வடிவமான சக்தியைச் சரணமடைகிறேன்'' என்று தியானிக்க வேண்டும். அதன் பின்னர் ஈஸ்வர சொரூபமான நிஜகுருவை பிரமந்திரத்தில் தியானித்து முறைப்படி, ஷோடச உபசாரங் களால் பூஜை செய்து ஜிதேந்திரியனுக விளங்கிப் பின்வரும் தோத் திரம் புரியவேண்டும்.

குரு பிரஹ்மோ குரோர்விஷ்ணு குருர்தேவோ மஹேஸ்வர:
குருஸ் ஸாக்ஷாத் பரப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீகுருவே நம:

இதைத் துதித்து விட்டு அதன் பிறகே வெளியே செல்ல வேண்டும்.

## 2 சௌசம் (கழித்தல், பல்சுத்தம், முதலானவற்றிற்கு விதி முறைகள்)

“பிராமணனுனவன் நான்கு வேதங்களையும் நன்ருகக் கற்ற றிந்திருந்தாலும், அவன் ஆசாரக் குறையுடையவனுக இருந்தால் அவனறிந்தவேதங்களும் அவனைத்தூய்மைப்படுத்தாது. மேலும் ஒரு



...ட்டில் தங்கியிருக்கும் பறவை தனக்கு இறக்கை முளைத்தவுடனே பறந்து போய்விடுவதைப் போல் மரண காலத்தில் உடலாகிய கூட்டைவிட்டு ஓடும் போது, அவனிடம் குடியிருந்த வேதங்களும் ஓடிப் போய்விடும். இது நிச்சயம் நாரதரே! இனி அந்த ஆசாரத்தைக் கூறுகிறேன்; கேளும்.

பிராமணனாக இருப்பவன், பிராம்மி முகூர்த்த காலத்தில் எழுந்து, அப்பொழுதிலிருந்து செய்ய வேண்டியனவற்றையெல்லாம் நன்றாகவுணர்ந்து ஒன்றைக் கூட விட்டுவிடாமற் செய்யவேண்டும். அவையாவன: இரவின் பிற்பகுதியின் நான்காவது ஜாமத்தில் எழுந்து வேதாத்யயனம் செய்ய வேண்டும். அதற்குப் பிறகு சிறிது நேரம் தன் இஷ்ட தெய்வத்தைத் தியானிக்க வேண்டும். யோகியானால் முன்பு சொன்னது போலப் பிரம்மத் தியானம் செய்ய வேண்டும். அந்தத் தியானத்தினால் எப்பொழுதும் ஜீவப்பிரம்ம ஐக்கியம் கிட்டும் இந்த ஐக்கிய தியானத்தை தினந்தோறும்செய்து வருபவன் அந்த க்ஷணத்திலேயே ஜீவன் முக்த நிலையை எய்துவான்.

இனி, பிராம்மி என்ற முகூர்த்தகாலம் என்பதாவது:—ஒரு நாளுக்குரிய நாழிகை அறுபதில் ஐம்பத்தாறாவது நாழிகை முதல் அறுபது நாழிகைக்குள் ஐம்பத்தைந்து நாழிகையாகும் என்றால் அது பஞ்ச பஞ்ச உஷத்காலமாகும். ஐம்பத்தியேழு நாழிகையாகும் என்றால் அது அருணோதய காலமாகும். ஐம்பத்தெட்டு நாழிகையாகும் என்றால் அது பிராதக்காலமாகும். அதற்குமேல் சூரியோதய காலமாகும். அந்தக்காலத்தில் வீட்டைவிட்டுப் புறப்பட்டு, நிருதி (தென் மேற்குத்) திசையில் சென்று, ஒருகணை விடு தூரத்திற்கும் அப்பால் சென்று உழுதபூமி, நடைபாதை, சுடுகாடு, மலை, இடிந்த கோயில், பள்ளமுள்ள இடம், ஜலமுள்ள இடம், சூளை போட்ட இடம், புற்றிடம், புல்படர்ந்த இடம், மலவிசர்ஜனம் செய்த இடம், ஏதேனும் ஜந்துக்கள் இருக்குமிடம் முதலான இடங்களை நீக்கி, மற்ற இடங்களில் யாகத்திற்கு உதவாத புற்களையோ அல்லது இலைகளையோ போட்டு, தேவர்களையும் ரிஷிகளையும் பைசாசங்களையும் ராக்ஷசர்களையும் பாம்புகளையும் அப்பாற்செல்க எனப் பிரார்த்

த்துவிட்டு, பிரம்மசாரியானால் பூணூல் முழுவதையும், காதில் சுற்றிக் கொண்டும், கிரகஸ்தனானால் ஓர் சுற்றும் காதில் சுற்றிக் கொண்டு, வானப்பிரஸ்தனானால் முதுகுப்புறம் தொங்க விட்டுக் கொண்டும் துணியால் தலையைச் சுற்றி மூடிக்கொண்டும், மௌனமாய் மூச்சுவிடாமலும் எச்சிலை உமிழாமலும், காற்று, அக்கினி, பிராமணன், சூரியன், நீர், பசுக்கள் முதலானவற்றைப் பாராமலும், பகலில் வடக்கு முகமாகவும் இரவில் தெற்கு முகமாகவும் மலஜலம் கழித்தல் வேண்டும். அதற்குப் பிறகு எழுந்து அதை உலர்ந்த புல், சருகு ஆகியவற்றால் மறைத்து, தண்ணீர் இருக்குமிடத்திற்கு சென்று, பாத்திரத்தில் தண்ணீரை எடுத்து வேறிடம் சென்று, பிராமணர் வெண்மணலையும் மற்ற குலத்தினர் சிவப்பு, மஞ்சள், கறுப்பு மண்ணையும் ஒவ்வொரு தடவையும் நெல்லிக்காயளவு எடுத்து இனக்குறிக்கு இரண்டு முறையும், குதத்துக்கு ஐந்துமுறையும், கைகளுக்குப் பத்துதரமும் இரு கைகளையும் சேர்த்து ஏழு தடவையும் முதலில் இடது காலுக்கு நான்கு தடவையும், பிறகு வலது காலுக்கு நான்கு தடவையும் சுத்தம்செய்ய வேண்டும். இவ்விதம் மண்ணால் சுத்தப்படுத்தும் சுத்தியை இல்லறவாசி இரண்டு மடங்கும், பிரம்மச்சாரி மூன்று மடங்கும் வானப் பிரஸ்தனும் சன்னியாசியும் நான்கு மடங்கும் செய்ய வேண்டும். இது பகற் காலத்தில் செய்யப்பட வேண்டிய விதிமுறையாகும். இரவில் இதிற்பாதி செய்தல்வேண்டும். வியாதியஸ்தர்களும் பதிதர்களும் வழிப் போக்கர்களும் இதிற்பாதி செய்தல்வேண்டும். பெண்களுக்கும் சூத்திரர்களுக்கும் குழந்தைகளுக்கும் பலவீனமானவருக்கும் இவ்வளவு என்று இல்லை; வீச்சம் போகும்வரை சுத்தம் செய்ய வேண்டும். இந்த விதிப்படி எல்லா வருணத்தினரும் சௌசம் செய்து கொள்ளவேண்டும். அதற்குக் குறைந்து ஒருபோதும் செய்து கொள்ளக்கூடாது. எந்தத் தேசத்தில் எந்த நிறமுடைய மண் கிடைக்கிறதோ அதையும் பயன்படுத்தலாம். ஆனால் ஜலத்தினுள் இருக்கிற மண்ணும் கோயிலிடத்து மண்ணும் புற்று மண்ணும் எலியரித்த மண்ணும் குப்பை மண்ணும் சௌசம் செய்த மண்ணும் ஒருவன் செய்து மிகுந்த மண்ணும் பயன்படுத்தலாகாது.. சிறுநீர் கழிப்பதைவிட மலங்கழித்த பிறகு இரண்டு பங்கும் ஆண் பெண் கூடி மகிழ்தலான மைதுனத்திற்குப் பிறகு மூன்று பங்குமண்ணும் உபயோகப்படுத்தவேண்டும் சிறுநீர் கழித்தலுக்கு குறிக்கு ஒரு பங்கு மண்ணும் கைக்கு மூன்று பங்கு மண்ணும் இரண்டு கையும் ஒன்று சேர்த்து இரண்டு பங்கு மண்ணுமாக உபயோகப்படுத்த வேண்டும். இந்த விதி மல சௌசத்துக்குக் கொள்ளவேண்டும் என்று மனு தர்மசாஸ்திரத்தில் விதிக்கப்பட்டுள்ளது.

"நாரதரே! கொப்பூழின் கீழே சுத்தம் செய்ய வேண்டியதற்கு இடது கையும் அதற்கு மேலிடத்தில் செய்யவேண்டியதற்கு வலது கையும் விதித்திருப்பதால், அந்த முறைப்படியே செய்யவேண்டுமே

தவிர மாற்றிச் செய்யலாகாது சுத்தம் செய்வதற்கு கொண்டு போகும் நீர் ஏனத்தை மலம் ஜலம் கழிப்பதற்கு முன்பே கொண்டு போக வேண்டுமே தவிர, கழித்த பிறகு எடுத்துக் கொண்டு போகலாகாது. மலஜலம் கழித்த உடனேயே சுத்தம் செய்து கொள்ளவேண்டும். அறியாமையாலோ அசமந்தத்தாலே சிறிது நேரம் கழித்த பிறகு செய்தல் கூடாது எது எது தவறு என்று கூறினேனோ அவற்றை அலட்சியமாக நினைத்தும் இஷ்டப்படியெல்லாம் சிலர் செய்வார்களேயானால் விதித்திருக்கும் பிராயச்சித்தத்தை அவர்கள் செய்வது அவசியமாகும். அதாவது மூன்றுநாட்கள் வரையில் உணவின்றி வெறும் தண்ணீர் மட்டும் அருந்தி, இரவுபகல் விடாமல் மந்திர ஜபம் செய்து பரிசுத்தம் பெற வேண்டும்.

மலங்கழித்தால் பன்னிரண்டு முறையும், சிறுநீர் கழித்தால் நான்கு முறையும் தண்ணீரால் வாய் கொப்பளிக்க வேண்டும். இதற்குக் குறைந்து செய்தால், அது சுத்தியாகாது. நீர் உமிழும்போது, தலையைக் குனிந்து இடது பக்கமாக .உமிழ்தல் வேண்டும். வாயைச் சுத்தம் செய்துகொண்ட பிறகு ஆசமனம் செய்து பற்களைத் துலக்க வேண்டும்.

பல் துலக்குவதற்கு ஆசாரவிதி: பல் சுத்தத்திற்குரிய காஷ்டத்தை, முள்மரம், பாலுள்ளமரம் முதலியவைகளிலிருந்து எடுத்துக்கொள்ளாமல், கரஞ்சம், அத்தி, மா, கடப்பை, சம்பகம், இலந்தை முதலான மரங்களுக்குச் சென்று, ஆயுள் விருத்தி, பலம், புகழ், தேஜஸ், சந்தான உற்பத்தி, பசு அபிவிருத்தி, செல்வ விருத்தி, பிரமஞானம், புத்தி, ஆகியவற்றைக் கொடுக்கவேண்டும் என்று வனதேவதையை நினைத்து வேண்டிக்கொண்டு, சுண்டு விரல் அளவு பருமனும் பன்னிரண்டு அங்குல நீளமுள்ளதாகவும் எடுத்துக் கொள்ள வேண்டும். இவற்றை அடைய முடியாத நாட்களிலும், அமாவாசை, பிரதமை, சஷ்டி, நவமி, ஏகாதசி முதலிய திதிகளிலும் சங்கிரமண காலங்களிலும் காஷ்டத்தில் பல் சுத்திகரிப்பு செய்யாமல் நன்னீரால் பன்னிரண்டு தரம் வாய் கொப்பளித்தல் வேண்டும். இப்படி விலக்கான நாட்களில் ஒருவன் காஷ்டத்தில் பற்களைத் துலக்குவானாயின், அவன் சூரியனை நிந்தித்தவனாகவும் தன் குலத்தைத் தானே நலிவுறச் செய்தவனாகவும் ஏழு தலைமுறைப் பிதுர்ஹத்தி செய்தவனாகவும் தோஷமடைவான். ஆகையால் விலக்கான நாட்களில் காஷ்டத்துக்கும் பற்களுக்கும் சம்பந்தம் ஏற்படுவதை ஒழித்து, நீரால் கழுவி இரண்டு தடவைகள் உதடுகளைத் துடைத்து, சுட்டு விரல்களையும், பெருவிரல்களையும் சேர்த்து மூக்குத் துவாரங்களையும், பெருவிரல் ஆழிவிரல்களைச் சேர்த்து இரண்டு கண்களையும் இரண்டு காதுகளையும் பின் விரல் பெருவிரல்களைச் சேர்த்து, வயிற்றையும் இதயத்தையும், எல்லா விரல்களையும் சேர்த்து, சிரசையும் தொடவேண்டும்.

''நாரதரே! தந்த சுத்தி (பல் சுத்தம்) செய்யும் பொழுது களாவன: சந்தியா வேளைகள், ஜபகாலங்கள், போஜன வேளை, தேவ பிதுர்க் கருமங்கள் செய்யும் மத்தியகாலங்கள் பெண்ணோடு கூடி மகிழும் வேளைகள், யாகம், தானம், பிரம்மயக்ஞம் முதலான வற்றை செய்யும் காலங்கள் முதலான இந்தக் காலங்களிலும், ஜபம் செய்யும் இடம், குரு சந்நிதானம், முதலான இவ்விடங்களிலும் மல ஜலம் கழிக்கும்போதும் பல் சுத்தம் செய்தலாகாது நின்று கொண்டோ, நடந்து கொண்டோ பல் சுத்தம் செய்யக்கூடாது.

இவ்விதம் கூறிவந்த ஆசாரவிதிகளில் நிச்சயபுத்தியும் சிரத் தையும் உள்ளவன், தேசம், காலம், சக்தி, உடல் நிலைமை ஆகிய வற்றை அனுசரித்து உசிதப்படி செய்யலாம் என்றும், நிச்சயப் புத்தியும் சிரத்தையும் இல்லாதவன் செய்தால் தான்குற்றமே தவிர மற்றவன் செய்தல் குற்றமல்ல.

## 3 ஸ்நானமும் ருத்திராக்ஷமும்

''நாரதரே! முன்பு நான் கூறியவாறு மல ஜலம் கழித்தலும் பல் துலக்கமும் விதிப்படி செய்த பிறகு குளிக்க (ஸ்நானம்)வேண்டும். இதுவும் இன்றியமையாத ஒழுக்கம். இதற்குரிய விதிமுறையைக் கேளும்.

''மனித உடல் மிகவும் அழுக்கு நிறைந்தது. உடலின் ஒன்பது துவாரங்களிலும் ஒன்பது விதமான மலங்கள் இருக்கின்றன. எனவே இந்த மல சுத்திக்காகத்தான் விடியற்காலத்தில் ஸ்நானம் செய்ய வேண்டுமென விதிக்கப்பட்டுள்ளது. அன்றியும் புணரக் கூடாத பெண்ணோடு புணர்ந்த பாபமும் தானம் வாங்குவதால் விளையும் பாவமும் ரகசியமாகச் செய்யும் பாவமும் ஸ்நானம் செய் வதனுல் நீங்கி விடுகிறது. எனவே குளிக்காமல் செய்யும் அன்ருட கர்மங்கள் அனைத்தும் பயனற்றதாகி விடும். ஆகையால் நாள் தோறும் விடியற்காலத்திலேயே ஸ்நானம் செய்யும்படி விதிக்கப் பட்டிருக்கிறது. ஏழு நாட்கள் தர்ப்பையுடன் சந்தியாவந்தனம் முதலானவற்றை முன்னிட்டு காலையில் குளிக்காதவனும் மூன்று நாட்கள் சந்தியாவந்தனம் செய்யாதவனும் பன்னிரண்டு நாட்கள் அக்னி ஹோத்ரம் செய்யாதவனும் சூத்திரத் தன்மையை அடை வான். விடியற்காலக் குளியலை விட்டவனுக்கும் அக்னிஹோத்ர காலத்தைத் தவறியவனுக்கும் காயத்திரியின் ஜப பலன்கள் இம்மை யிலும் மறுமையிலும் உண்டாவதில்லை.

''நாரதரே! பிராமணன் ஸ்நானத்தால் கிடைக்கும் சுத்தியை யும் பலத்தையும் முன்னிட்டு விடியற்காலத்தில், ஆற்றங்கரைக்குச்



சென்று, பிரணவத்துடன் கூடிய காயத்திரியை ஸ்மரித்துச் சிகையை அள்ளி முடித்துக் கொண்டு முதலில் ஆசமனஞ் செய்து (நீரை உட்கொண்டு), இருதயம், தோள், கண்டம் முதலானவற்றைத் தொட்டு பிராணுயாமம் செய்ய வேண்டும்.

''அக்கினி, வருணன், சந்திர சூரியர்கள், தேவர்கள், வாயு முதலியோர் காதுகளில் வசிப்பதால், பதிதனோடு பேசினுலும் பொய் சொன்னுலும் தும்மினுலும் எச்சில் உமிழ்ந்தாலும், வலக் காதைக் கையினுல் தொட்டால் சுத்தமுண்டாகும்.

''தேவரிஷி, பிதுர்க்களை மகிழ்ச்சிப்படுத்துவதான தர்ப்பணங்கள் செய்து நீரிலிருந்து வெளியே வந்து, சுத்தமான ஆடைகளை அணிந்து, விபூதி, ருத்திராக்ஷம் தரிக்க வேண்டும்.

''கர்மயோக சாதகன், ஜபத்துக்கென்று எப்பொழுதும் அவசியமாகக் கொள்ளும் ருத்திராக்ஷதாரணத்தின் விதிமுறையாவது:— கண்டத்தில் முப்பத்திரண்டும், சிரசில் இருபதும் இரு காதுகளில் தனித் தனியே ஆறும், இரண்டு கைகளில் தனித்தனியே பன்னிரண்டும் இரண்டு புஜங்களில் தனித் தனியே பதினுறும், மார்பில் நூற்றியெட்டும் தலையில் ஒன்றுமாக ருத்திராக்ஷம் தரிக்க வேண்டும். இவ்விதம் தரிப்பவன் நீலகண்டனுய்ப் பிரகாசிப்பான். சிகை, காது, கண்டம், கை, வயிறு, பூணூல் முதலிய இடங்களில் தரிக்க வேண்டிய உருத்திராக்ஷ மாலைகளை பொன்னினுலாவது வெள்ளியினுலாவது கட்டி, ஆபரணத்தைப் போலவும் அணிந்து கொள்ளலாம். அவ்விதம் அணியும்போது, பஞ்சாட்சரத்தையாவது பிரணவத்தையாவது உச்சரித்துக் கொண்டு, பக்தி சிரத்தையோடு தரித்துகொள்ள வேண்டும். சிவஞானத்திற்கு ருத்திராஷதாரணம்

கண்கூடான சாதனம் என்று சிகையில் தரிப்பவனே தாரகத்துவ மாகவும், இரு காதுகளில் தரிப்பவனை தேவி தேவனுகவும் யக்ஞோபவீதத்தில் தரிப்பவனை பிரமனுகவும், கைகளில் தரிப்ப வனைத் திக்கு பாலகராகவும் பாவிக்க வேண்டும். இந்த ருத்திராக்ஷ தாரணத்திற்கு பிராமணர் முதலான நான்கு ஜாதியரும் பிரமசாரிய இல்லறவாசி, வானப் பிரஸ்தன், சந்நியாசி எனப்படும் நால்வகை ஆசிரமிகளும் உரியவராவார்கள்.

பிராமணன், மந்திரத்தை உச்சரித்தே ருத்திராக்ஷத்தை அணிய வேண்டும். மற்றவர்களுக்கு அந்த விதியில்லை. காணப் படாததைக் காண்பதாலும் கேட்கப்படாததைக் கேட்பதாலும் முகரப்படாததை முகர்வதாலும் உண்ணப்படாததை உண்பதாலும் சொல்லத் தகாததைச் சொல்வதாலும், செய்யத் தகாததைச் செய்த தாலும் எண்ணக் கூடாததை எண்ணுவதாலும், நடக்கக் கூடாததை நடத்துவதாலும் கொடுக்கக் கூடாததை கொடுப்ப தாலும், உண்டாகும் பாவ பேதங்கள் எல்லாம் ருத்திராட்சம் அணிவதால் தொலைந்து போகும். ருத்திராட்சமணிந்தவன் உண் பானேயாகில் அது ருத்திரரான சிவபெருமான் உண்பதற்குச் சம மாகும். அத்தகையவன் பருகினுலும் வேறு எதை அனுபவித் தாலும் அவை யாவும் ருத்திர மூர்த்தியே அனுபவித்ததாகும். இத் தகைய மேன்மையான ருத்திராட்சத்தை அணிவதற்கு எவன் வெட்கப்படுகிருனே, அவன் கோடி பிறவிகள் வரை சம்சார பந்தத்திற்கு ஆளாக இருப்பானே தவிர மோக்ஷ சாதனத்திற்கு உரியவனுகான். எவன், ருத்திராட்சத்தை அணிந்தவனை ஏளன மாகப் பரிகாசம் செய்கிருனே, அவன் சங்கரம (கலப்பு) ஜாதியில் பிறந்தவனுவான். ருத்திராக்ஷதாரியைக் கண்டதும், ஆடைகளை யாவது தானியத்தையாவது தானம் கொடுப்பவன் சகல பாபங் களிலிருந்தும் நீங்கிப் புண்ணிய சீலன் என்று உலகத்தவரால் நினைக்கப்பட்டு, முடிவில் சிவலோகத்தையடைவான். பிதுர்த்திவ சங்களில் ருத்திராட்சம் அணிந்தவனுக்கு அறுசுவையோடு உண விட்டால் பிதுர்க்கள் மகிழ்வார்கள். ருத்திராட்சத்தை அணிந்த வன் ருத்திரத் தன்மை அடைந்து ருத்திரன் என்றே பெயர் பெறுவான். அத்தகையவனின் பாதங்களைக் கழுவி அந்த நீரைப் புனித தீர்த்தமாகக் கருதி தன் மீது தெளித்துக் கொள்பவன் பாவ நீக்கம் பெற்றுச் சிவலோகம் செல்வான். ருத்திராக்ஷத்தையணிந்து, பிரம்மத்வத்தை அடைந்து பிராமணனுகிருன். ஆகையால் ருத்தி ராக்ஷத்தை எத்தகைய ஆபரணத்துடனும் சேர்த்து அணிந்து கொள்ளலாம். இது சிறப்பாகும். ஆகையால் எந்த ஜாதியானுக இருந்தாலும் அவன் தன் உடலின் எந்த அங்கத்திலாவது மந்திரத் தோடோ, அல்லது மந்திரமில்லாமலோ, பக்தியுடனே, இல்லா மலோ வெட்கப்பட்டோ வெட்கப்படாமலோ அணிபவன் சர்வ பாபங்களிலிருந்து நீங்கியவனுய், சிவ ஞானத்தை அடையப்

பெறுவான். இதை விட இதன் சிறப்பை இன்னும் விவரித்துச் சொல்ல எனக்குச் சக்தியில்லை.

குளிக்கும் முன்பே, காயத்திரி மகா மந்திரத்தைத் தியானிக்க வேண்டும் என்று முன்பு சொன்னேன் அல்லவா? அந்தக் காயத்திரியின் சிறப்பைக் கேளும். தானம் செய்பவனைக் காப்பதால் அதற்கு காயத்திரி என்று பெயர். அது ஓங்கார மந்திரத்துடன் மூன்று வியாகிருதியுடனும் கூடியது. அதை, வேத சம்பன்னனான பிராமணன், வைதீக தர்மத்தில் புத்தி வைத்து, எப்போதும் ஜபிக்க வேண்டும். மற்ற லௌகிக மந்திரங்களால் கூடிய பயனோ மாட்டின் கொம்பில், கடுகு எவ்வளவு காலம் நிற்குமோ, அவ்வளவு அளவு பயனைத்தான் தரும். ஆகையால் லௌகிக மந்திரங்களால் நூறு ஜபம் செய்தாலும், அது பிதுர்க்களைக் கரையேற்றாது.

வைதிக மந்திரம், ஜபத்தோடு கூடியதை சகர்ப்பம் என்றும். தியான மாத்திரமாய் இருப்பதை அகர்ப்பம் என்றும் கூறுவர்.

## ருத்திராக்ஷம் தோன்றிய விதமும் வகைகளும்

நாரதர், நாராயணரை நோக்கி, ''மகாத்மாவே! நீங்கள் ருத்திராக்ஷத்தின் சிறப்பைக் கூறினீர்கள் அல்லவா? அத்தகைய சிறப்பும் மகிமையும் அதற்கு எப்படி வந்தது என்பதையும் கூற வேண்டும்'' என்று கேட்டார். நாராயணர் கூறலானார்:



''நாரத முனிவரே! நீர் கேட்டதைப் போலவே, முன்பொரு சமயம் மஹா ருத்திரரை நோக்கி, ஷண்முகப் பெருமான் கேட்க, அதற்கு அவர் தமது அருமை மகனை கருணையோடு நோக்கி, ''அந்த ருத்திராபுத்திரன் சிறப்பை கூறுகிறேன் கேட்பாய் குமாரா!'' என்று பின்வருமாறு கூற

''மகனே! பூர்வத்தில் திரிபுரர் என்ற அசுரர்கள் எவராலும் வெல்ல முடியாதவராக இருந்தார்கள். அது மட்டுமல்ல; திருமால் பிரமன் முதலிய தேவர்களும் அவர்களால் துன்பப்பட்டார்கள். அதனால் தேவர்களெல்லாம் என்னிடம் வந்து, தங்கள் குறைகளைக் கூறினர். அவற்றைக் கேட்டதும் நான் வேறொரு சிந்தனையும் இல்லாமல் சகல தேவ ஸ்வரூபமாகவும் மனோகரமாகவும் அக்னியைப் போலச் சுடர் விட்டு எரிவதாயும் பயங்கர வடிவமாயும் சர்வ இடையூறுகளையும் அகற்றுவதாயும் அகோரம் என்ற பெயரையுடையதுமான மகாஸ்திரத்தை ஆயிரம் திவ்ய வருஷம் கண் மூடிச் சிந்தித்துப் பிறகு கண் விழித்தேன். அப்பொழுது என் மூன்று கண்களிலிருந்தும் நீர்த் துளி விழுந்தன. அதிலிருந்து மகாருத்திராக்ஷ விருட்சங்கள் தோன்றின. ஷண்முகனே! என் ஆக்ஞையால் அனைவருக்கும் நன்மை ஏற்படுவதற்காக அவ்விருட்சங்களிலிருந்து முப்பத்தெட்டு விதமான ருத்திராக்ஷங்கள் உண்டாயின. அவற்றில் வலக் கண்ணாகிய சூரிய விழியிலிருந்து உதித்தவை கபில நிறத்தோடு பன்னிரண்டு பேதமானவை. இடக் கண்ணாகிய சந்திர விழியிலிருந்து தோன்றியவை வெண்ணிறத்தோடு பதினாறு பேதமானவை. நெற்றிக் கண்ணான அக்கினி விழியிலிருந்து தோன்றியவை, கறுப்பு நிறத்தோடு பத்துப் பேதமானவை. இவற்றில் வெண்ணிறமுள்ளது பிராமண ஜாதியென்றும், செந்நிறமுள்ளது க்ஷத்திரிய ஜாதி என்றும், மிஸ்ர (கலப்பு) நிறமுடையது வைசிய ஜாதி என்றும், கருமை நிறமுடையது சூத்திர ஜாதி என்றும் வழங்கப்படும். இனி, அம்மணிகளுடைய முகங்கள் எத்தனை என்பதையும் அவற்றின் சொரூபங்கள் எத்தனை என்பதையும் அவற்றின் பயன்கள் என்னென்ன என்பதையும் கேட்பாயாக.

''ஒரு முகமுள்ள ருத்திராஷம் சாக்ஷாத் சிவ சொரூபம். இது பிரம்ம ஹத்தியை நீக்கும். இரு முகமுள்ளது தேவி தேவி சொரூபம். அது புத்தி பூர்வம், அபுத்தி பூர்வம் என்ற இரண்டு விதமான பாவங்களை நீக்கும். மூன்று முகமுடையது கண் கூடான அக்னி சொரூபம். அது ஸ்திரீ ஹத்தி. யெனும் (பெண் வதை) பாவத்தை ஒரு கணத்தில் நீக்கி விடும். நான்கு முகமுடையது பிரம்ம சொரூபம். அது நரஹத்தியை (மனித வதை) எனும் பாவத்தை நீக்கி விடும். ஐந்து முகமுள்ளது காலாக்னி ருத்திர சொரூபம், அது உண்ணக் கூடாததை உண்டதாலும் சம்போகம் செய்யக்

கூடாத மங்கையைச் சம்போகம் செய்ததினுலும் உண்டான பாவங்களையும், அவை போன்ற இதர பாவங்களையும் ஒழிக்கும்! ஆறு முகமுடையது சுப்பிரமணிய சொரூபம்; அது பிரம்ம ஹத்தி (பிராமண வதை) முதலான பாபங்களைப் போக்கும். அது வலக் காதில் அணியத் தக்கது. ஏழு முகமுடையது மன்மத சொரூபம்: அது பொன் முதலியவற்றைத் திருடிய பாவத்தைப் போக்கும். எட்டு முகமுடையது விநாயக சொரூபம். அது அன்னக் கூடம், தூலக் கூடம், சுவர்ண கூடம, துஷ்குல ஸ்திரி சம்போகம், குருபத்தினி சம்போகம் முதலிய பாவங்களையும் சகல இடையூறுகளையும் நீக்கி, சகல குணங்களையும் நலன்களையும் வழங்கி முடிவில் பரம பதத்தைக் கொடுக்கும். ஒன்பது முகமுடையது பைரஸ்வரூபம். அது புத்தி முத்திகளையும் எமக்கு இணையான குணத்தையும் கொடுக்க வல்லது. ஆயிரம் புருண ஹத்தியையும் நூறு பிரம்ம ஹத்தியையும் நீக்கி, முடிவில் எம்மை அடையச் செய்யும். இது இடது தோளில் அணியக் கூடியது. பத்து முகமுடையது விஷ்ணு சொரூபம். அது கிரக தோஷங்களையும் பூத, வேதாள, பைசாச, பிரம்ம ராக்ஷச, முதலான பீடைகளையும் சர்ப்ப விஷங்களையும் போக்கக் கூடியது. பதிஞெரு முகமுள்ளது ஏகாதச ருத்திர சொரூபம். அது ஆயிரம் அஸ்வமேத யாகம் நூறு வாது ஜபேயம், கோடி கோதானம் ஆகியவற்றைச் செய்த பயனைத் தரும். இது சிகையில் அணியத் தக்கது. பன்னிரண்டு முகமுடையது துவாதசாதித்த சொரூபம். அது கோமேத, அசுவமேத யாகங்களைச் செய்த பயன்களை நல்கும். கொம்புள்ள மிருகங்களாலும் ஆயுத பாணிகளாலும் புலி முதலிய கொடிய விலங்குகளாலும் உண்டாகும் பயம் நடுக்கம் முதலானவற்றையும் வியாதிகளால் ஏற்படும் துன்பங்களையும் யானை, குதிரை, மான், சர்ப்பம், எலி, நாய், பூனை முதலியவற்றைக் கொன்றதனுலுண்டாகும் பாவங்களையும் நீக்கும். இது காதுகளில் அணிய கூடியது. பதின்மூன்று முகமுடையது ஷண்முகனுக்கு ஈடானது. அது தாய், தந்தை உடன் பிறந்தான் ஆகியவர்களைக் கொன்ற பாவங்களை ஒழிக்கும். சகல இஷ்டங்களையும் சித்தி பெறச் செய்யும். ரசம், ரசாயனம் முதலான போக போக்கியப் பொருள்களையெல்லாம் விரும்பியபடியே கொடுக்கும். இதில் ஐயமில்லை. பதினன்கு முகமுடைய ருத்திராக்ஷம் யாருக்குக் கிடைக்கிறதோ, அதை யார் அணிந்து கொள்கிருஞே, அவன் சிவபெருமானுக்கு இணையானவஞகி தேவர்களாலும் போற்றி வணங்கப்பட்டு மோக்ஷத்தை அடைகிருன். இதன் மகிமை சொல்லில் அடங்காது. ருத்திராக்ஷதாரியே பரதுதியை அடையக் கூடிய பேறு பெற்றவன். ஆகையால் பிராமணன் பக்தியோடு ஒரு ருத்திராக்ஷத்தைச் சிரசில் தரித்துக் கொண்டிருக்க வேண்டும்.




சிரம் முதலிய அங்கங்களில் அணிய வேண்டிய ருத்திராக்ஷ மாலைகளுக்கு உரிய மணிகளின் விதிமுறையாவது—சிரசில் அணியும் ருத்திராக்ஷ மாலைக்கு மணிகள் இருபத்தாறு; மார்பிலணியும் மாலைக்கு மணிகள் ஐம்பது; தோட்களுக்குப் பதினாறு; மணிக்கட்டுகளுக்குப் பன்னிரண்டு; நூற்றியெட்டு, ஐம்பது, இருபத்து ஏழு என்ற எண்ணிக்கையோடு கூடிய ருத்திராக்ஷ மாலைகளைத் தரிக்கப் பெற்றாலும் ஜபிக்கப் பெற்றாலும் அவனுக்கு ஒவ்வொரு கணத்துக்கும் ஒவ்வொரு ' அஸ்வமேத யாக பலன் விளையும் அதோடு இருபத்தோரு குலத்தை உயர்த்தி நிலை பெறச்செய்பவனும் எப்பொழுதும் சிவலோகமே வாழுமிடமாகக் கொண்டு பூஜ்யமாய் வாழும் பெரு வாழ்வும் கிடைக்கும்!''

## ருத்திராட்ச மகிமை

சிவபெருமான் மேலும் தொடர்ந்து கூறியது:-

''சண்முகா! இனி ஜபமாலையின் விதிகளைச் சொல்கிறேன் கேள். ருத்திராட்சத்தின் மேல் பக்கமான முகம் பிரம்மா; கீழ்ப் பக்கமான பின்புறம் விஷ்ணு; நடுக் கண்டமான வட்ட வடிவம் ருத்திரன். இவ்வாறு மும்மூர்த்தி வடிவமாக ருத்திராட்சம் விளங்குவதால் அது போக மோட்சங்களைத் தர வல்லது. இது வெண்மை, செம்மை, கருமை என்ற மூன்று நிறமும் முள்போன்ற உருவமும்

ஐந்து முகமும் கொண்டது. இதை ஜப மாலையாகக் கோர்த்துக் கொள்ளும்போது, முகத்தோடு முகமும், பிருஷ்டத்தோடு பிருஷ்டமுமாகப் பசுவின் வாலைப் போல இருபத்தைந்து மணிகளைக் கயிற்றில் கோர்த்து இணைத்து அதில் மேருவாகக் கோர்க்கும் மணியை, முகம் மேல் நோக்கியிருக்க நாகபாசத்தால் சேர்க்க வேண்டும். ஜப மந்திரம் சித்தியடைவதற்காக அந்த ஜப மாலையைப் பஞ்சகவ்யத்தாலும் சந்தண நீராலும் அபிஷேகம் செய்து பிறகு சிவசக்தி மந்திரங்களால் தொட்டு, அஸ்திர மந்திரத்தோடும் தொட்டு, கவசத்தால் அவகுண்டனஞ் செய்து, மூலத்தால் மந்திரித்து சத்யோ தாதிகளால் தெளித்து, மூலமந்திரத்தை நூற்றெட்டு உரு ஜபம் செய்து, அதைத் தூய்மையான இடத்தில் இருத்தி, அனைத்திற்கும் மூலகாரணரான சிவபெருமானை உமா தேவியோடு பிரதிஷ்டை செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் அது எல்லா இஷ்ட பலன்களையும் தந்தருளும். எந்தத் தெய்வத்திற்கு எந்த மந்திரமோ அந்த மந்திரத்தால் அதைப் பூஜிக்க வேண்டும். ஜப மாலையை சிரசிலோ கழுத்திலோ தரித்துக் கொள்ள வேண்டும். ஜிதேந்திரியனாய் ருத்திராக்ஷ மாலையை அணிந்து கொண்டே ஜபஞ் செய்ய வேண்டும்.

சிரசிலும் கழுத்திலும் மார்பிலும், காதுகளிலும் தோள்களிலும் விதி முறைப்படி ருத்திராக்ஷங்களை வெகு பக்தி சிரத்தையோடு நாள்தோறும் அணிதல் வேண்டும். ஸ்நானம், ஜபம், ஹோமம், வைஸ்வதேவம், சிவார்ச்சனை, பிராயச்சித்தம், சிராத்தம், தீக்ஷை ஆகியவற்றை இயற்றும்போது ருத்திராக்ஷத்தை அணிவது மேன்மையாகும். ஆகையால் வைதீக கர்மங்களைச் செய்யும்போது அறிவின்மையால், ருத்திராக்ஷத்தை அணியாமற் செய்தால், அவன் நரக லோகத்திலேயே போய்ச் சேர்வான்.

"ருத்திராஷத்தை கயிற்றோடு அல்லது தங்கம் மணி முதலானவற்றோடு சேர்த்துக் கோர்த்துக் கொள்வது நன்மை பயக்கும். மற்றவற்றோடு சேர்ப்பது அசுபம். தூய்மையின்றி இதனை அணியக் கூடாது. ருத்திராக்ஷ மரத்தின் காற்றுப்பட்ட தூசியுங்கூட, மீளாத புண்ணிய லோகத்தை அடையப் பெறுகிறது. சண்முகனே! "ருத்திராக்ஷம் தரிப்பவன், பாவஞ் செய்தாலும் அதிலிருந்து நீங்கி விடுவான்." என்று ஜாபாலோப நிஷதம் கூறுகிறது. நான்கு கால் பிராணிகளும் ருத்திராக்ஷத்தை அணிந்தால், அவையும் ருத்திரத் தன்மையை அடைந்து விடுமாயின் மனிதர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? அத்தகைய பெருமை மிகுந்த ருத்திராட்சத்தை சிரத்தையோடு அணியாதவர்களுக்கு உண்மையான வேத சித்தியும் மோக்ஷமும் கிடைப்பதில்லை. மஹேஸ்வரரின் திருவருளால்தான் ருத்திராக்ஷம் அணிய வேண்டும் என்ற ஆவல் ஏற்படுமே தவிரத் தன் சுய அறிவால், எவனுக்கும் அத்தகைய ஆவல் ஏற்படுவதில்லை.

''மகனே! ருத்திராட்சத்தின் சிறப்பையுணர்ந்த மகரிஷிகளும் அவ்வாறுதான் சொல்கிறார்கள். இதனால் உண்டாகும் பயன்கள் மூவுலகிலும் புகழ் பெற்றுள்ளன. கனி போல் உருவம் கொண்டிருக்கும் ருத்திராட்சத்தைக் கண்ணுற் கண்டால் மகா புண்ணியம் உண்டாகும். அதைக் கையால் தொட்டால் அதை விடக் கோடிப் பலனும் உண்டாகும். அதை உடலில் தரித்துக் கொண்டாலோ அதைவிடக் கோடி புண்ணியம் உண்டாகும். அந்த ருத்திராட்சத்தில் தினந்தோறும் ஜபித்து வந்தால் அதைவிட ஆயிரத்து நூறு லக்ஷம் கோடிப் புண்ணிய பலம் உண்டாகும். சிரம், கண்டம், காது, மார்பு, கைகள் ஆகிய அங்கங்களில் ருத்திராக்ஷத்தை அணிந்து கொள்பவன் ருத்திர சொரூபி என்பதிலும் சந்தேகமேயில்லை.

இத்தகைய ருத்திராக்ஷதாரி இந்தப் பூலோகத்தில் எந்தவித பிராணிகளாலும் துன்புறுமல் சம்புவைப் போல் சஞ்சரிப்பான். இதைத் தவிர, சுராசுரர்களால் சிவபெருமான் எவ்விதம் சேவைக்குரியவராக விளங்குகிறாரோ, அவ்வாறே ருத்திராக்ஷதாரியும் எல்லோராலும் வணங்கப்படுவான். அவன் தாழ்ந்த கீழ் மகனாக இருந்தாலும் தன் சாதித தொழிலை விட்டு வேறு சாதித் தொழிலை செய்பவனாக இருந்தாலும், சகல பாவங்களையும் செய்தவனாக இருந்தாலும், ருத்திராக்ஷத்தைத் தரிப்பானேயாகில் அவனுடைய எல்லாப் பாவங்களும் மறைந்தொழிந்துஉயர்ந்த தொழிலைச் செய்யும் உன்னத புருஷனாவான். நாயாயிருப்பினும் அது தன் கழுத்தில் ருத்திராக்ஷத்தை அணியுமேயாகில் அதுவும் முக்தியைப் பெற்றுவிடும் என்று கூறப்பட்டிருக்கும்போது, மனிதனுக்குச் சொல்லவா வேண்டும்? ஒருவன் ஜபத் தியானங்கள் செய்யாமல் ருத்திராக்ஷம் மட்டுமே தரிப்பவனாயிருந்தால், அவன் எல்லாப் பாவங்களிலிருந்தும் நீங்கி உயர்ந்த நற்கதியைப் பெறுவான். ஆகையால் ஒரு ருத்திராக்ஷத்தையாவது சிரத்தை முயற்சியோடு தரித்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு ருத்திராக்ஷம் அணிந்திருப்பவன் இருபத்தோரு தலைமுறைகளைக் கடைத்தேற்றி சிவலோகத்தில் பூஜ்யனாக இருப்பான்!'' என்றார் சிவபெருமான்.''

## 6 மோகாந்தகாரப் பாவியும் முக்தியடைந்த கதை

ர்வேஸ்வரனாகிய சிவபெருமான் மேலும் கூறியது: ''ஆறுமுகனே! குசக்கிரந்தி, புத்திரவரம் என்று சொல்லப்படும் பலவித மணிகளில் ஒன்று கூட ருத்திராக்ஷத்தின் பதினாறில் ஒரு பங்குக்கு ஈடாகாது புருஷர்களில் விஷ்ணுவும், கிரகங்களில் சூரியனும்

நதிகளில் கங்கையும், முனிவர்களில் காசிபரும், தேவிகளில் கௌரியும், தேவர்களில் மகாதேவரும், குதிரைகளில் உச்சைஸ்வர மும் எப்படி மேலானவர்களோ அப்படியே மணிகளில் ருத்திராக்ஷ மணி மேலானது. இதைத் துதிப்பதை விட வேறு துதிகளும் இதை தரிப்பதைவிட வேறு விரதமும், இதைத் தானஞ் செய்வதை விட வேறு மேலான தானமும் எதுவுமில்லை. ஆகையால் சாந்தர்களான சிவ பக்தர்களுக்கு உத்தமமான ருக்ஷதிராக்ஷத்தைத் தானம் கொடுக்க வேண்டும். இந்தத் தான புண்ணிய பலத்தை சொல்லி முடியாது. ருத்திராக்ஷத்தைக் கண்டத்தில் அணிபவனுக்கு அன்னம் கொடுப்பவன், தன் இருபத்தோரு தலைமுறைகளை உய் வித்து இறுதியில் சிவலோகம் சென்று உன்னத நிலையை அடை கிறன். நெற்றியில் விபூதியில்லாதவனும் சரீர அங்கங்களில் ருத்தி ராக்ஷம் அணியாதவனும் வீட்டில் சிவ பூஜை செய்யாதவனும் பிராமணனாயினும் சக்கிலியைவிட கீழ்மகனேயாவான். ருத்தி ராஷம் ஒருவனுடைய சிரசில் அலங்கரிக்குமேயானல் அவன் இறைச்சியைத் தின்றாலும் மதுபானஞ் செய்தாலும். சண்டாள சம்பந்தமடைந்தாலும் அந்தந்தப் பாவங்களிலிருந்து, நீங்கி விடுவான். எல்லா வேதங்களையும் பயின்று எல்லா யாக யக்ஞங் களையும் தவங்களையும் தானங்களையுஞ் செய்தால், என்ன புண் ணிய பலன் கிடைக்குமோ அவ்வளவு புண்ணிய பலம் கிடைக்கும். எல்லா வேதங்களையும் புராணங்களையும் எல்லா வித்தைகளையும் படிப்பதால் விளையக்கூடிய பயனும் கிடைக்கும். தீர்த்த யாத் திரைகள் முதலானவற்றால் விளையும் பயனும் ருத்திராக்ஷம் தரித்த வுடனேயே கிடைத்து விடும். இறக்கும்போது, ருத்திராக்ஷத்தை அணிந்து கொண்டு உயிர் நீத்தவன் சிவத் தன்மையை அடைந்து மீண்டும் பிறவாத நெறியைப் பெற்று விடுகிறன். கண்டத்திலாவது கரத்திலாவது ருத்திராக்ஷத்தை அணிந்து கொண்டு மரணமடை பவன் தன் தலைமுறையை மேன்மையாக்கித்தானும் சிவலோகத்தை யடைகிறன். பிராமணனே, சண்டாளனே குணமுள்ளவனே எவனாக இருந்தாலும் விபூதி, ருத்திராட்சங்களை அணிவானே யாகில் அவன் சிவத் தன்மையை அடைந்து விடுவான்.

ருத்திராக்ஷதாரி வைதிக கர்மத்தைச் சிறிதளவே செய்தாலும், பெரும் பக்தியோடு முற்றுஞ் செய்த புண்ணியமெல்லாம் அவ னுக்குக் கிடைக்கும். பாவங்களை நாள்தோறும் செய்பவனாயும், பக்தியற்றவனாயும் இருப்பவன், தன் கழுத்தில் ருத்திராக்ஷத்தை அணிந்தாலே, சகல பாவங்களிலிருந்தும் விடுபடுகிறன். வித்தை யுள்ளவனே வித்தை இல்லாதவனே எவனாக இருந்தாலும் அவன் ருத்திராக்ஷத்தை அணிந்து கொண்டால், அவன் கேட தேசத்துக் கர்த்தபத்தைப் போல சிவலோகம் சேர்கிறன்!'' என்று சிவ பெருமான் திருவாய் மலர்ந்தருளினர்.

அதைக் கேட்டதும் சண்முகப் பெருமான் வியப்புடன் பரம சிவனாரை நோக்கி, ''பிதாவே! அந்தக் கழுதை எதனால் ருத்தி

ராக்ஷம் அணிந்து சிவலோகம் சேர்ந்தது? அதைக் கூறியருள வேண்டும்' என்று கேட்டார். அதற்கு சிவபெருமான் கூறலானார்.

''குமரா! விந்திய மலைச் சாரலில் கழுதையொன்று திரிந்து கொண்டிருந்தது. அதன் முதுகின் மீது, வியாபாரி ஒருவன் ருத்திராக்ஷ மூட்டையை ஏற்றி, அதை ஓட்டிக் கொண்டு சென்றான். அந்தக் கழுதையினால் அந்த ருத்திராக்ஷ மூட்டையின் பாரத்தைச் சுமக்க முடியாமல், அது வருந்தி அப்படியே தரையில் விழுந்து உயிர் நீத்து விட்டது. அப்போதே அது சிவரூபம் பெற்று, என்னருகே வந்து சேர்ந்தது!'' என்று சிவபெருமான் கூறிவிட்டுத் தொடர்ந்து ருத்திராக்ஷச் சிறப்பைக் கூறத் துவங்கினார்.

''ருத்திராக்ஷத்தை அணியாமல், அதன் மூட்டையை சுமந்ததனாலேயே சிவ சாரூப்யத்தை வழங்கிய அவ்வளவு சிறப்பு வாய்ந்த ருத்திராக்ஷத்தை மனிதன் தரிப்பானாகில் அவன் அணிந்த ருத்திராட்சத்தில் எத்தனை முகம் இருக்கிறதோ, அத்தனை முகத்திற்கு ஒவ்வொரு யுகம் வீதம் சிவலோகத்தில் பூஜிக்கப்படுவான்.

''இது போன்ற அநேகச் சிறப்புகளைக் கூறத் துவங்குவோர், தங்கள் சிஷ்யர்களுக்குத் தான் சொல்ல வேண்டுமே தவிர, சிஷ்யரல்லாதாருக்கும் விபூதி, ருத்திராக்ஷங்களில் பக்தியற்றவருக்கும் விபூதியின் தன்மையை அறிய முடியாத முழு மூடர்களுக்கும் ஒருபோதும் சொல்லலாகாது.

''சண்முகனே! ருத்திராக்ஷம் தரிக்கும் புண்ணியத்திற்கு வேறு எந்தப் புண்ணியமும் ஈடாகாது. ஆகையால் இந்த உண்மையை உணர்ந்த ரிக்ஷிகள் ருத்திராக்ஷம் தரிப்பதையே பெரிய விரதமாக எடுத்துரைப்பார்கள்; எவன் நியமத்துடன் ஆயிரம் ருத்திராக்ஷங்களை அணிகின்றானோ அவன் ருத்திரமூர்த்தி போலாவான். அவனைத் தேவர்கள் எல்லோரும் பூஜிப்பார்கள். ஆயிரம் ருத்திராக்ஷங்கள் கிடைக்கவில்லையெனில் தோள்களில் தனித் தனியே பதினாறும் மணிக்கட்டுகளில் தனித் தனியே பன்னிரண்டும், மார்பில் நூற்றெட்டும் கண்டத்தில் முப்பத்திரண்டும், உச்சியில் ஒன்றுமாக ருத்திராட்சம் அணிபவன் ருத்திர மூர்த்தியைப் போலவே போற்றப்படுவான், முதது, பவளம், ஸ்படிகம், வெள்ளி, வைடூரியம், தங்கம் முதலானவற்றோடு ருத்திராட்சத்தைக் கலந்து அணிபவன் சிவனாகவே பாவிக்கப் படுவான். ருத்திராக்ஷத்தை மட்டும் அணிந்தால், சூரியனைக் கண்ட இருள் போல, பாவங்கள் அவனை விட்டு விலகிப் போய் விடும்.

ருத்திராக்ஷ மாலையைக் கொண்டு ஜபம் செய்யும் மந்திரமோ எண்ணற்ற பயன்களை விளைவிக்கும். ருத்திராக்ஷத்தை சிரசில் அணிந்து நீராடுபவனுக்கு கங்கா ஸ்நான புண்ணிய பலன்



கிடைக்கும். ஒரு முகம், ஐந்து முகம், பதினொரு முகம், பதினான்கு முகம் அமைந்திருக்கும் ருத்திராட்சங்கள் சங்கரஸ்வரூபமென உலகத்தாரால் தியானித்துப் பூஜிக்கப்படுகின்றன வறுமையால் நலிபவன் ருத்திராக்ஷ மணியை பக்தி சிரத்தையோடு அணிவானேயாகில் அவன் உலகையாளும் ராஜபோகம் துய்ப்பான். அதற்குப் புராணத்திலிருந்து ஒரு கதை சொல்

''கோசல தேசத்தில் தரும சீலனும் வேத வேதாந்தங்களைக் கற்றுணர்ந்தவனுமான கிரிநாதன் என்ற ஒரு பிராமணன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு குணநிதி என்ற குமாரன் ஒருவன் இருந்தான் அவன் மன்மதனைப் போல் அழகான உருவமும் இளம் வயதும் கொண்டவன். அவன் யாகஞ் செய்பவனுய் இருந்ததால் தீக்ஷிதன் என்று வழங்கப்பட்டான். அவன் தன் குருவான சுதீஷ்ணன் என்பவருக்கு முக்தாவளி என்ற ஒரு பத்தினி இருந்தாள். அந்தக் குரு பத்தினியை கிரிநாதன் கட்டழகினுலும் இளமை மயக்கினுலும் மமதைச் செருக்காலும் மோக வேட்கை கொள்ள வைத்து சில காலம் அவளுடன் கூடிக் கலந்து இன்பம் அனுபவித்தான். பின்னர், குருவினிடத்திலுள்ள பயத்தினுல் அவருக்கு விஷத்தைக் கொடுத்து அவரைக் கொன்று விட்டுப் பிறகுச் சிறிது கூடப் பயமில்லாமல் குரு பத்தினியான முக்தாவளியோடு கூடிக் குலாவிச் சுகித்து வந்தான். அதை அவனுடைய பெற்ளுேர் அறியலானுர்கள். அதனுல் அவன் மோகாந்தகாரம் அடங்காமல் தன் தாய் தந்தையர் இருவருக்கும் விஷத்தைக் கொடுத்துக் கொலை செய்து விட்டு, தன் கைப் பொருள்கள் அனைத்தையும் அழித்து விட்டுப் பிறகு அந்தணர்களுடைய வீடுகளில் திருட ஆரம்பித்தான். அது மட்டுமல்ல; மதுபானப் பிரியனுகி பெரும் குடிகாரனுமாகி, ஒருவரையும் மதிக்காமல் அலட்சியப்படுத்தி மனம் போலத் திரிந்து கொண்டிருந்தான். அவனது செயலையெல்லாம் கேள்விப்பட்டு ஞானிகள் அருவருப்பு அடைந்து அவனைப் பயமுறுத்தி, அந்த ஊரில் இருக்க விடாமல் துரத்தினுர்கள். அவன் அந்த ஊரை விட்டு விட்டு, தன் மோகத்திற்குரிய குரு பத்தினி முக்தாவளியோடு ஒரு பெருங்காட்டிற்குச்

சென்று, அந்தக் காட்டின் வழியாகச் செல்லும் பிராமணர்களை யெல்லாம் வழி மறித்து அவர்களின் கைப் பொருள்களைக் கொள்ளை யடித்து, சில காலம் வாழ்ந்து வந்தான். அப்போது அநேக யம தூதர்கள் ஒரு புறமும், சிவகணங்கள் ஒருபுறமும் வந்து அவன் உயிரைக் கொண்டு போக முயன்றார்கள். அந்த சமயம் யம தூதர்கள் சிவ தூதர்களை நோக்கி "அந்தப் பாவி கிரிநாதன் என்ன புண்ணியத்தைச் செய்தான் என்று நீங்கள் அவன் உயிரைச் சிவலோகத்திற்குக் கொண்டு போக வந்தீர்கள்?'' என்று கேட்டார்கள் அதற்கு சிவ தூதர்கள் "யமகிங்கரர்களே! அவன் மடிந்து விழுந்த இடத்திற்குப் பத்து முழ தூரத்தில் ஒரு ருத்திராக்ஷ மரம் இருக்கிறதல்லவா? அம்மரத்தின் அருகில் அவன் இறந்து விட்டதால் அவன் எப்படிப் பாவியாவான்? உங்களுக்கு ருத்தி ராக்ஷத்தின் சிறப்புகள் தெரிந்திருக்குமானால் இவன் உயிரை உங்கள் யமலோகததிற்கு எடுத்து கொண்டு போக இங்கு துணிந்து வந்திருப்பீர்களா?'' என்று சொல்லி விட்டு மடிந்துபோன கிரி நாதனுக்குத் திவய ரூபம் கொடுத்து அவனைத் திவ்ய விமானத்தில் ஏற்றிச் சென்று சிவ சந்நிதியில் கொண்டு போய் இறக்கினார்கள். இவ்வாறு பாவத்தை நிவர்த்தி செய்து, பெரும் புண்ணியத்தை வழங்க வல்ல ருத்திராக்ஷத்தின் மகிமையை நாம் உனக்குச் சுருக்க மாகக் கூறினோம்'' என்றார் சிவபெருமான்.

❦ ❦ ❦ ❦

இவ்வாறு நாராயணர் நாரதருக்கு கூறினார்.

## ருத்திராக்ஷ மணிகளின் வடிவ வகைகள்

"நாரதரே! இவ்வாறு சண்முகப் பெருமான் தம் தந்தை சிவபெருமானிடம், ருத்திராக்ஷ மகிமையைக் கேட்டு மிகவும் மகிழ்ந் தார். இனி, ஸதாசார ரீதியாக ருத்திராக்ஷத்தின் இயல்பையும் மந் திரச் சிறப்பையும் சொல்லுகிறேன் கேளும்.

"ருத்திராக்ஷத்தைப் பார்த்தால் லக்ஷம் பங்கும், தொட்டால் கோடிப் பங்கும், அதை அணிந்து கொண்டால் கோடிக் கோடிப் பங்கும், அதை ஜபஞ் செய்தால் நூறு லக்ஷம் கோடி பங்கும், அதை அணிவதோடு ஜபம் செய்தால் ஆயிரம் லக்ஷம் கோடிப் பங்குமாகப் புண்ணியம் கிடைக்கும். ருத்திராக்ஷ மணியைத் தரிப்ப தாலும் பெரும் புண்ணியமுண்டு. நெல்லிக் காய் பிரமாணமுள்ள உருத்திராக்ஷம் உத்தமம் என்றும் இலந்தைக் கனியளவுள்ளது—

மத்திமம் என்றும் கடலை அளவுள்ளது, அதமம் என்றும் கூறப்படுகிறது.

உலகிலுள்ள பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர என்ற நான்கு ஜாதியாரும் தத்தமக்குரிய ருத்திராக்ஷங்களை அறிந்து அணியும் பொருட்டே, அவ்ருத்திராக்ஷங்கள் முறையே வெண்மை, செம்மை, பொன்மை, கருமை என நான்கு நிறம் அமைந்த நான்கு ஜாதிகளாக விளங்குகின்றன. சமமும், திட்பமும் உள்ளதும் முள்ளோடு கூடியதுமான ருத்திராக்ஷ மணிகள் சுப மளிப்பவை. புழுக்கடி பட்டதும் அறுக்கப்பட்டதும் முள்ளில்லாததும் காயத்தோடு கூடியதும் மேற்பரணியில்லாததுமான மணிகள் அணியத் தகுந்தவையல்ல. இயற்கையிலேயே துவார முள்ளவை மேலானவை. மனிதரால் துவாரஞ் செய்யப்பட்டவை மத்திமம். சமமாயும் மேனியாயும் திட்டமாயும் பருமனும் அமைந்த ருத்திராக்ஷமணிகளைப் பட்டு நூலால் கோர்த்து அணிந்து கொள்ள வேண்டும் பக்கமுற்றும் ஒரே பருமனுகவும் மிக அழகாகவும் பொன்னைப்போல மாற்றுடையதுமான ருத்திராக்ஷமணிகள் சிறப்பானவை. அவை சிவபூஜையின் போது, தரிப்பதற்கு உரியன.

ருத்திராக்ஷத்தை அணியும் முறையைக் கூறுகிறேன். சிகையில் ஒன்றும், சிரசில் முப்பத்திரண்டும், கண்டத்தில் முப்பத்தாறும், கண்டத்தினடியில் ஐம்பதும், தோள்களில் தனித்தனியே பதினாறும், மணிக்கட்டுகளில் தனித்தனி பன்னிரண்டும், அரைப் பட்டிகையாக ஐம்பதும், பூணூலாக நூற்றியெட்டும், தரித்துக் கொள்ள வேண்டும். கண்டத்தில் தரிக்கும் மாலையை இரண்டாகவும் மூன்றாகவும் தரித்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு தரித்துக் கொள்வதோடு, குண்டலம், மகுடம், காதணி, முத்தாரம், தோள் வளை, கடகம் முதலான ஆபரணங்களைப் போலவும் செய்து அணியலாம்.

தூங்கும் போதும், ஏதேனும் அருந்தும் போதும், மற்றெந்தத் தொழிலைச் செய்யும் போதும், ருத்திராட்சம் அணியாதிருக்கக் கூடாது. அந்த ருத்திராட்ச மாலையின் அளவாவது:—முப்பது மணிகள், ஐந்நூறுமணிகள், ஆயிரம் மணிகள் இம்மூன்று வகைகளும் முறையே அதமம், மத்திமம், உத்தமம் என்று கருதப்படும்.

சிரசில் ஈசான மந்திரத்தை ஓதியும் காதுகளில் தத்புருஷ மந்திரத்தை ஓதியும், நெற்றி, இதயம் ஆகியவற்றில், அகோர பீஜ மந்திரத்தை ஓதியும், வயிற்றில் வாமதேவ மந்திரத்தை ஓதியும், மற்ற அங்கங்களில், அங்க மந்திரத்தை ஓதியும் ருத்திராக்ஷத்தை அணியவேண்டும். ருத்திராக்ஷத்தை மூலமந்திரத்தோடு கயிற்றில் கோர்க்கவேண்டும். பரத்துவத்தைப் பிரகாசிக்கச் செய்யும் ஏகமுக ருத்திராக்ஷத்தை அணிபவனுக்குப் பரத்துவம் சித்திக்கும். அர்த்தநாரீசமாகிய இரண்டுமுக ருத்திராக்ஷத்தை அணிபவனுக்கு, அந்த

ஈஸ்வரப்ரீதி சித்திக்கும். திரேதாக்னி சொரூபமாகிய மூன்று முக மணியை அணிபவனுக்கு ஸ்திரீஹத்தி, பாவமும் ஒழிந்து அக்னி தேவனின் ஆனந்தம் உண்டாகும். பிரம்ம சொரூபமான நான்கு முக ருத்திராக்ஷ மணியை அணிபவனுக்குச் சம்பத்தும் தேக நலனும் ஞானச் செல்வமும் உடற்தூய்மையும் ஏற்படும். பஞ்சப் பிரம்ம சொரூபமான ஐந்து முக ருத்திராக்ஷம் அணிபவனுக்கு மஹேஸ்வரரின் பிரீதி உண்டாகும். ஆறுமுக சுப்பிரமணியப் பெருமானின் சொரூபமான ஆறுமுக மணியை அணிபவனுக்கு அப்பெருமானின் அருள் கிட்டும். இந்த ஆறுமுக ருத்திராக்ஷத் துக்கு கணேசரையும் இறைவனுகக் கருதுவதுண்டு. ஏழுமுக ருத்திராக்ஷத்தை அணிபவனுக்கு மாபெரும் சம்பத்தும், ஆரோக் கியமும் ஞானமும் புனிதத்தன்மையும் விளைகின்றன. இதற்கு சூரிய ளையும் தெய்வமாகக் கூறுவதுண்டு. அஷ்டவசுக்களைத் தெய்வ மாகக் கொண்ட எட்டுமுகமணியை அணிபவனுக்கு, அஷ்டவசுக் கள் கங்கை ஆகியோரின் பிரியமும் சத்தியத்துவமும் கிடைக்கும்; யமனைத் தெய்வமாகக் கொண்ட ஒன்பது முக ருத்திராக்ஷம் அணிப வனுக்கு யமபயம் ஒழிந்து போகும் பத்து திசை தேவதா உருவ மான பத்துமுக மணியைத் தரிப்பவனுக்கு அந்தத் தேவதையின் பிரியம் கிடைக்கும். ஏகாதச ருத்திர சொரூபமான பதினோரு முக ருத்திராக்ஷத்தை அணிபவனுக்கு எல்லாவித சௌக்கிய சௌபாக் கியங்களும் கிடைக்கும் இதற்கு இந்திரனைத் தெய்வமாகக் கூறுவ துண்டு. விஷ்ணு சொரூபமான பன்னிரு முகமணியை அணிபவ னுக்கு அந்த விஷ்ணுவின் பிரியம் கிடைக்கும் இதைப் பன்னிரு சூரிய வடிவமெனக் கூறுவதும் உண்டு மன்மத சொரூபமான பதின் மூன்று ருத்திராக்ஷத்தை அணிபவனுக்கு, மன்மதனின் பிரியநோக் கும் காம ஆற்றலும் காம நிறைவும் சுகமும் உண்டாகும். ருத்திர மூர்த்தி சொரூபமான பதினான்கு முகமணியைத் அணிபவனுக்கு எத்தகைய பிணியும் அகன்றொழிந்து நல்லதேக நலன் பெருகும். மீன், இறைச்சி, வெங்காயம், பூண்டு, முருங்கை, சிலேஷ்மாதகம், விட்வராகம் ஆகியவற்றை ருத்திராக்ஷமணிபவன் புறக்கணிப்பது அத்தியாவசியமாகும். கிரகணசமயம் விஷு, சங்கிரமண காலம், உத்தராயணம், தக்ஷிணாயனம், அமாவாசை, பௌர்ணமி இவை போன்ற புண்ய தினங்களில் ருத்திராக்ஷம் அணிபவன் எல்லாவிதப் பாபங்களிலிருந்தும் நீங்கப் பெறுகிறான்.''

## 8 பூதசுத்தி முறை

“நாரதரே! பூதசுத்தியின் முறையை விளக்கிச் சொல்கிறேன், கேளும். குண்டலினி என்ற பரதேவதையை மூலாதாரத்திலிருந்து

எழுப்பி, சுழும்நை வழியை அடைந்து, பிரமரந்திரத்தை இணைந் திருக்கும்படி ஸ்மரிக்கவேண்டும். பிறகு ஹம்ச மந்திரத்தினுல் ஜீவனைப் பரப்பிரம்மத்தில் அடைவிக்க வேண்டும். அதன் பிறகு பிரிதிவி மண்டலத்தை பாதம் முதல் முழங்கால்வரை நாற்கோண மாகவும் வஜ்ர வடிவாகவும் லம் என்னும் பீஜம் உள்ளதாகவும், தங்க நிறத்தினதாகவும் கொண்டும் அப்பு மண்டலத்தை முழங்கால் முதல் நாபிவரை அரைச்சந்திரனைப் போன்றதாகவும் கோகநத ரூபமாகவும் வம் என்னும் பீஜமுள்ளதாகவும் வெண்மை நிறத்தின தாகவும் கொண்டும் அக்கினி மண்டலத்தை நாபிமுதல் ஹ்ருதயம் வரையில் முக்கோணமாகவும் ஸ்வஸ்திகத்தோடுள்ளதாகவும் ரம் என்ற பீஜமுள்ளதாகவும் ரக்தநிறத்தினதாகவும் கொண்டும், வாயு மண்டலத்தை இருதயம் முதல் புருவ நடுவு வரை விருத்தமான ஆறு பிந்துக்களின் அடையாளமுள்ளதாகவும் யம் என்னும் பீஜ முள்ளதாகவும் தாம்பர நிறத்தினதாகவும் கொண்டும், ஆகாய மண்டலத்தை புருவமையம் முதல் பிரமரந்திரம் வரை விருத்தமாக வும் நிர்மலமாகவும் மனோகரமாகவும் ஹம் என்னும் பீஜமுள்ளதாக வும் கொண்டு ஸ்மரிக்க வேண்டும். இவ்வண்ணம் ஒவ்வொரு பூதத் தையும் கருதி, தனித்தனியாக நிலத்தை நீரிலும், நீரை அக்னியி லும், அக்னியைக் காற்றிலும் காற்றை ஆகாயத்திலும் ஒடுக்கி, ஆகாயத்தை மாபெரும் அகங்காரத்திலும், அகங்காரத்தை மகத் தத்துவத்திலும் ஒடுக்கி, அதைப் பிரகிருதியிலும், பிரகிருதியை மாயையிலும், மாயையை ஆத்மாவிலும் ஒடுக்கி அனைத்தும் சுத்த ஞான சொரூபம் எனச் சிந்திக்க வேண்டும்.

பிறகு பாவபுருஷனை வயிற்றின் இடதுபக்கத்தில் இருப்பவனாக வும், கரிய நிறத்தினனுகவும், பெருவிரல் அளவினனுகவும் பிரம்ம ஹத்தி ரூபமே அவனது சிரசாகவும், தங்கத்தைத் திருடிய பாவமே அவனது கையாகவும் சுராபான பாவமே அவனது இதயமா கவும் குருபத்னியைக் கூடி இன்பமனுபவித்த பாவமே அவனது இடையாகவும் உபபாதகங்களே அவனது இரண்டு கால்களாகவும் கட்கமிருகத்தின் தோலை அணிந்தவனுகவும் பொல்லாங்குக்காரனு கவும் கீழ் நோக்கிய முகத்தினனுகவும் பார்க்கவே சகிக்கவொண் ணுத தோற்றமுள்ளவனுகவும் பாவித்து, வாயு பீஜத்தை ஸ்மரித்து, வாயுவை (காற்றைப்) பூரித்து, பாபரூபத்தை வறள வைக்கவேண் டும். பிறகு, அதையும் உடலையும் வன்னி பீஜத்தால் எரித்துச் சாம்பலாக்கிக் கும்பகஞ்செய்து வாயுபீஜத்தால் ரேசகம் செய்து அதன் பஸ்மத்தை வெளியிட்டு அமிர்த பீஜத்தால் தோய்த்து, பிரிதிவீ பீஜத்தால் பொன் அண்டம் போலத் திரட்டி, முகுளாகார மாக பாவனைசெய்து, ஆகாய பீஜத்தைக் கொண்டு, முன்பு போலக் கடினமுறச் செய்து, சிரசுமுதல் பாதம்வரையுள்ள அங்கங் களைத் தோற்றுவித்து, அதில் ஐந்து பூதங்களையும் உட்புகச் செய்ய

வேண்டும். பிறகு ஸோஹம் என்கிற மந்திரத்தால் ஆன்மாவை இதயத் தாமரையில் அடைத்து, சிவத்தோடு இணைந்து, சுதாமய மாக விளங்கும் குண்டலினி சக்தியை இதய கமலத்தில் ஸ்தாபிக்க வேண்டும் அந்தச் சக்தி மூலாதாரத்தை அடைந்திருப்பதாகக் கருதவேண்டும். ரத்தப்பெருங்கடலில் ஒரு பெரிய கப்பலைப்போல் பிரகாசிக்கும் ஒரு செந்தாமரை மலரில் அந்தக் குண்டலினி சக்தி பிரகாசிக்கிறாள் என்றும், தாமரை மலரெனத்தகும் கைகளில் சூலம், கரும்பு வில், அங்குசம், பஞ்சபாணம் ஆகியவற்றை அடையாள மாக ஏந்தியிருக்கிறாள் என்றும், சிருக்கையும் கபாலமும் பூண் டிருக்கிறாள் என்றும் மூன்று கண்களோடு பெரிய ஸ்தன கும்பங் களும் கொண்டவள் என்றும் உதய சூரியனைப் போல் பிரகாசிக் கும் நிறத்தினள் என்றும் பாவிதது, 'உன்னதமான பிராண சக்தி எங்களுக்கு நலம்புரியட்டும்!'' என்று தியானித்துச் சர்வாதிகார சித்திக்காக விபூதி அணிய வேண்டும் இனி, சுருதி, ஸ்மிருதி களில் கூறப்பட்டுள்ள விபூதியணியும் விதி முறைகளையும் அதன் பலன்களையும் விளக்கிச் சொல்வேன்!'' என்றார் நாராயணர்.

## 9 சிரோ விரதம் (விபூதி விரதம்)

''நாரதரே! சிரோ விரதம் என்னும் விபூதி விரதத்தை கிரமப்படி அனுஷ்டிக்கும் பிராமணர்களுக்கு அறியாமையை (அஞ் ஞானத்தை) நீக்கக்கூடிய பிரம்மவித்தையை உபதேசிக்க வேண் டும். ஏனென்றால், சிரோ விரதத்திற்கு உட்படாதவர்கள் பிரம்ம வித்தைக்கும் உரியவராகமாட்டார்கள். இதில் அக்கறையற்றவர் கள், சுருதி, ஸ்மிருதி ஆகியவற்றில் கூறியிருக்கும் ஆசாரங்களைக் கடைப் பிடிப்பவர்களாக இருந்தபோதிலும் அவற்றால் அவர்களுக்கு எந்தவிதப் பலனும் இல்லை! சிரோ விரதம் பூர்வீகத்திலிருந்தே முன்னவர்களால் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. பிருமா முதலான தேவர்கள் எல்லாம் இந்தச் சிரோ விரதத்தினாலேயே தெய்வத் தன்மை பெற்று, தேவர்களானார்கள். அவர்கள் தங்களுக்கு அஞ் ஞான சம்பந்தத்தாலும் அசுரர்களின் யுத்தங்களாலும் விளையும் எல்லாவிதமான பாப, தோஷ பிரம்மஹத்தி முதலானவற்றையும் இந்த சிரோ விரதத்தாலேயே அகற்றியொழித்து சுகம் எய்து

இதன் சிறப்பை உணர்ந்த அறிஞர்கள், சிரோ விரதத்தை விதிப்படி அனுஷ்டித்து வருகிறார்கள். இந்த. விபூதி விரதத்தைச் சிரோ விரதமாக அதர்வ வேத சிரசில் கூறப்பட்டுள்ளது. ஆகை யால் விரதங்கள் அனைத்திலும் சிரம் போல் தலைமையான இந்தப்

பஸ்ம (விபூதி) விரதத்தை அனுஷ்டிக்காதவர்கள் வேறு எந்த விரதத்தாலும் புண்ணியம் பெறமுடியாது.

சிரோ விரதம், வேதத்தின் சாகா பேதங்களால் பல விதமான பெயர்களோடு வழங்கப்பட்டு வருகிறது. சார்த்தூலம் என்னும் சாகையில் இது விசேஷமாகக் கூறப்பட்டுள்ளது மகேஸ்வரரிடம் எப்போதும் நீக்கமற விளங்கும் சித்குண சமூகங்களில் ஒவ்வொரு பெயரிட்டு வேதசாகைகள் வழங்கிய போதிலும், அவை யாவுமே அந்த மகேஸ்வரரையே குறிப்பதாகும் அதுபோலவே விபூதி விரதமும் சாகாபேதங்களால் •வெவ்வேறு பெயர்களோடு வழங்கி வந்தாலுங்கூட அவையாவும பஸ்ம விரதமாகிய அந்தச் சிரோ விரதத்தையே குறிப்பதாகும். சிரோவிரதத்தை அனுஷ்டிப்பவன் சகல விரதங்களையும் சகல வித்தைகளையும் கொண்டவனுவான். இந்த விரதம் பாவக்காட்டை எரித்தொழிக்கும் பெருந் தீயாக இருப்பதாலும் வித்தைகளனைத்தையும் அடைவதற்கு ஒரு சரியான சாதனமாக இருப்பதாலும், அதர்வண வேதம் இதை சூக்ஷ்மமாகவும் சூக்ஷ்மார்த்தமாகவும் மிளிரச் செய்திருப்பதாலும் இதை பெரும் விருப்போடு தினசரி அனுஷ்டித்து வருவது மேன்மையாகும்.

இந்தச் சிரோவிரதத்தின் விதி முறை: சுத்தமான விபூதியை அக்னிரிதி என்னும் துவக்கமுள்ள மந்திரங்களை உச்சாடனம் செய்து, எல்லா அங்கங்களிலும் பொருந்தும்படி உடல் முழுவதும் பூசிக்கொள்ள வேண்டும். சந்தியா காலங்களில் இவ்வாறு உடல் முழுதும் பூசிக் கொள்ளுவது சிறப்புடையதாகும். அதுவும் தவிர, ஞானோதயம் பரிபாக நிலையையடைய எவ்வளவு காலமாகுமோ அவ்வளவு காலம் வரை இந்த விபூதி விரதத்தை இடையருமல் கைக் கொண்டு வருதலவசியமாகும். காலவரையறையிட்டு சங்கற்பம் செய்து கொள்ள வேண்டுமானுல் பன்னிரண்டு ஆண்டுகளோ, ஓர் ஆண்டு காலமோ ஆறு மாதமோ, மூன்று மாதமோ •இந்த விரதத்தை அனுஷ்டிப்பதாகச் சங்கற்பம் செய்து கொள்ளலாம்.

இவ்விதமாக ஞானோதயத்தை முன்னிட்டு கால வரையிட்டு சங்கற்பம் செய்து சிரோ விரதம் எனப்படும் இந்த விபூதி ஸ்நானத்தை கிரமப்படி இடையருமல் அனுஷ்டித்து வருகிறவனுக்கு ஒரு குரு ஞானோபதேசம் செய்யாவிட்டால் அந்தக் குருவின் குணமும் வித்தைகளும் க்ஷீணித்து விடும். சம்பத் வடிவினரான மஹேஸ்வரர் கருணையுள்ளவரன்ருே? அது போலவே, பிரம்ம வித்யா குருவும் கருணையுள்ளவராகவே இருக்க வேண்டும். ஏனென்ருல் ஆயிரம் பிறவிகளில் வேதங்களை அனுஷ்டித்து வருபவர்களுக்கே சிரோ விரதத்தில் சிரத்தை ஏற்படுமே தவிர மற்றவர்களுக்கு ஒருபோதும் சிரத்தை ஏற்படாது. பல பிறவிகளில் வேத

கர்மங்களை அனுஷ்டிக்காதவனுக்கு அறியாமை அதிகரித்து அதன் காரணமாக சிரோவிரதத்தில் வெறுப்பு மூளுமே தவிர, சிரத்தை விளையாது. ஆகையால் சிரோவிரதப் பூச்சுடைய வர்களே பிரம்ம ஞான, வித்தையின் உபதேசத்திற்கும் அப்பி யாசத்திற்கும் உரியவராவார்களே தவிர, மற்றவராகமாட்டார்கள். பாசுபத விரதம் அன்போடு அனுஷ்டிக்கும் அந்தணர்களுக்கே பிரம்மோபதேசம் செய்யலாம் என்று வேதத்திலும் கூறப் பட்டுள்ளது. எவன் பசுவோ, அவன் பசுத் தன்மையை இந்த விரதத்திலேயே நிவர்த்தி செய்து கொள்வான் என்றும் அவன் மீண்டும் பசுத் தன்மையை அடையும் பாபிஷ்டனுகமாட்டான் என்றும் வேதாந்தங்களும் கூறுகின்றன.

திரியம்பக மந்திரத்தாலும் தாரகத்தோடு கூடிய சிவ மந்திரத் தாலும் திரிபுண்டர (முக்குறி) தாரணம் நாள்தோறும் செய்ய வேண்டும் என்று ஜாபாலோப நிஷதத்தில் விதிக்கப்பட்டிருக் கிறது. அதனுல் கிரகஸ்தன் (இல்லறவாசி) மூன்ருவர்த்தி ஓங்காரத்தோடும் ஹம்ச மந்திரத்தால் விபூதி பூச வேண்டும். பிக்ஷுகன் திரியம்பக மந்திரத்தாலும் பிரணவத்தாலும் சிவ மந்திரத்தாலும் விபூதி பூசிக் கொள்ள வேண்டும் பிரமசாரியோ மேதாவீ முதலிய மந்திரங்களாலும் நாள்தோறும் திரிபுண்டரந் தரித்துக் கொள்ள வேண்டும். அந்தணன் தன் நெற்றியின் குறுக்கே, கிரமமான விபூதியை நாள்தோறும் திரிபுண்டரமாகப் பூசிக் கொள்ள வேண்டும் ஆதியான பிராமணன், விபூதியை எப்போதும் அணிந்திருத்தல் வேண்டும். திரிபுண்டரம் தரிப்பவர் களே பிராமணர்கள். வேத சித்தமான திரிபுண்டர தானத்தையும் தேவ குண்டனத்தையும் சிவலிங்க பூஜையையும் மோகத்தாலுங் கூட விட்டு விடக் கூடாது. சந்நியாசிகளோ திரியம்பக மந்திரத் தாலும் தாரகத்தோடு கூடிய பஞ்சாக்ஷரத்தாலும் பிரணவத்தாலும், நெற்றி, மார்பு, இரண்டு கைகள் ஆகியவற்றில் திருநீற்றை திரிபுண்டரமாகத் தினந்தோறும் தரிக்க வேண்டும். பிரமசாரி, கௌண பஸ்மத்தை திரியாயுஷ மந்திரத்தையும் மேதாவீ மந்தி ரத்தையும் உச்சரித்து திரிபுண்டரமாகத் தினசரி தரிக்க வேண்டும். சூத்திரன் நாமோந்தமான சிவ மந்திரம் ஒன்றினுலேயே திரி புண்டரமும் பக்தியுடன் தரித்தல் வேண்டும். தருமங்கள் யாவிலும் இதுவே உன்னதம் என்று நாள் தோறும் பக்தியோடு தரிக்க வேண்டும்.

அக்னி ஹோத்ர பஸ்மத்தையோ, விரஜாஹோம பஸ் மத்தையோ ஆர்வத்துடன் எடுத்து, சுத்தமான பாத்திரத்தில் வைத்துக் கொண்டு, கை கால்களைச் சுத்தம் செய்து கொண்டு, சுத்தமான இடத்திலிருந்து, ஆசமனஞ் செய்து, மனதைச் சுவாதீனம் செய்து கொண்டு, பஞ்சப் பிரம்ம மந்திரத்தை உச் சரித்தவாறே கொஞ்சம் கொஞ்சமாகவும் மெதுவாகவும் எடுத்து,

மூன்றுவர்த்தி பிராணாயாமம் செய்து அக்னி ரிதி முதலிய ஏழு மந்திரங்களால் மூன்றுவர்த்தி மந்திரித்து ''ஓமா போஜ்யோதி'' என்ற மந்திரத்தை உச்சரித்துத் தியானித்து அக்னி ரிதி முதலான மந்திரங்களை உச்சரித்து முதலில் வெண்ணிற விபூதியால் உடலெங்கும் பூசிக்கொள்ள வேண்டும். அப்படிப் பூசிக் கொள்கிறவன் பாபமில்லாதவனாகவும் விரக்தனாகவும் வெளிப்படுகிறான். பிறகு ஜகந்நாதனை மகாவிஷ்ணுவைத் தியானித்து விபூதியை நீரோடு கலந்து அக்னி ரிதி முதலான மந்திரங்கள் கூறிக் குழைத்து, சாம்பசிவத்தைத் தியானித்து சிரசின் மீது பூசி அந்தத் தியானத் தியானத்தினாலேயே பிரம சொரூபமான விபூதியினால் நெற்றி, மார்பு, தோள் ஆகியவற்றில் ஆசிரமத்துக்குத் தக்கபடி நடுவிரல், மோதிர விரல், பெரு விரல்களினால் திரிபுண்டரத்தை அனுலோம, விலோமமாக மூன்று காலங்களிலும் பக்தி சிரத்தையோடு தரித்துக் கொள்ளுதல் அவசியமாகும்.

## 10 கௌண பஸ்மம் (விபூதி)

"நாரதரே! வேதியர்களில் உன்னதமான பிரம்ம ரிஷியே! அஞ்ஞானத்தை அகற்றும் ஞான சாதனம் கௌண பஸ்பம் (விபூதி) ஆகும். நித்யாக்னி, விரஜாக்னி ஔபாசனாக்னி, சமிதாக்கினி பசனாக்னி, தாவாக்னி முதலிய பலவகை அக்னிகளில் தோற்றுவிக்கப்படுவதால் அவை பலவிதமான பெயர்களோடு விளங்கும். நித்யாக்னியான அக்னி ஹோத்திரத்தில் உண்டாவதும் விரஜாக்னியில் உண்டானதுமான விபூதியானது, அந்தணர் முதலான மூன்று வர்ணத்தவரும் தரிக்கத் தக்கது. ஔபாசனாக்னியில் உண்டாகும் விபூதி கிருகஸ்தர்களும் (இல்லறவாசிகளும்,) சமிதாக்னியால் உண்டாகும் பஸ்மம் பிரமச்சாரிகளும், வம்ச பரம்பரையாக வேதம் ஓதும் அந்தணரின் இல்லங்களிலுள்ள பசனாக்னி விபூதி நான்கு வர்ணத்தாரும் தரிக்கத் தக்கன. தாவாக்னி என்ற காட்டுத் தீயினால் உண்டாகும் விபூதி மற்ற குலத்தினர் தரிக்கத் தக்கது.

இவற்றில் விரஜாக்னி பஸ்மத்தின் உற்பத்தி விவரமாவது:—

சித்ரா பௌர்ணமிக்கு முன்னால் வரக் கூடிய திரயோதசி திதியில் ஒரு தீக்ஷிதன் தன் இருக்கையிலோ புண்ணியத் தலத்திலோ பூந்தோட்டத்திலோ ஆரண்யத்திலோ இருந்து, தூய நீராடி அன்றாடக் கடன்களை முடித்து விட்டுத் தன் குருவை அடைந்து, அவரை வழிபட்டு வணங்கி அனுமதி பெற்று,



தேவி மானஸபூஜைக்கு
பார்வதி, லக்ஷ்மி,
சரஸ்வதி பாவனை

நித்திய பூஜையைச் சிறப்பாகச் செய்ய வேண்டும். பிறகு, சுக்லாம்பரதம் என்பது முதலானவற்றால் விக்னேசுவரராம் விநாயகரைப் பூஜை செய்துவிட்டு பரிசுத்தமான பூணூலையும் வெண்ணிற மலர் மாலையையும் தரித்துக் கொண்டு, கிழக்கு முகமாகவோ அல்லது வடக்கு முகமாகவாவது தர்ப்பாசனத்தில் அமர்ந்து, தர்ப்பையோடு கையை முஷ்டி பிடித்து, மூன்று முறை பிராணாயாமம் செய்து, மஹேஸ்வரரான சிவபெருமானையும் மஹாசக்தி தேவியையும் தியானிக்க வேண்டும். அவர்களிடம் 'நான் இந்த விரதத்தை உடல் இருக்கும் வரையிலோ பன்னிரண்டு ஆண்டுகளோ, ஆறு ஆண்டுகளோ, மூன்று ஆண்டுகளோ, ஓர் ஆண்டோ, ஆறு மாதமோ பன்னிரண்டு நாட்களோ, ஆறு நாட்களோ மூன்று நாட்களோ அல்லது ஒரு நாளாவது செய்கிறேன்!'' என்று வேண்டுகோள் ரீதியாகச் சங்கற்பம் செய்துகொள்ள வேண்டும். பிறகு, விரஜா ஹோமகரணமாய் அக்னியைக் கொண்டு வந்து, நெய்யாலும் சமித்தாலும் சருகாலும் பல மந்திரத்தால் ஹோமம் செய்ய, தத்துவ சுத்தத்தை மானசீகமாகச் செய்து கொண்டு, ''மந்திரங்கள் அனைத்தும் தன் உடலைத் தூய்மை செய்ய வேண்டும்!'' என்று நினைக்க வேண்டும். அதாவது பிரிதிவி (நிலம்) முதலான ஐம்பெரும் பூதங்களும், சப்தம் முதலான தன்மாத்திரைகளும், வாக்கு முதலான கன்மேந்திரியங்களும் செவி முதலான ஞானேந்திரியங்களும் துவக்கு முதலான சப்த தாதுக்களும் மனம், புத்தி, அகங்காரங்களும், சத்வம் முதலான முக்குணங்களும் மூலப் பிரகிருதியும் புருஷன், ராகம், வித்தை, கலை, நியதி, காலம் மாயை, சுத்த வித்தை, ஈசுவரன், சதாசிவன் முதலிய தத்துவங்களும் என் தேகத்தில் தூய்மையடைய வேண்டும் என்று ஸ்மரித்து, விரஜா மந்திரங்களால் ஹோமம் செய்து சுத்தமாகிவிட வேண்டும். பிறகு பசுவின் சாணமான கோமயத்தைக் கொணர்ந்து பிண்டப்படுத்தி, அதை

மந்திரித்து அக்னியில் வைத்து, அன்றையத் தினத்தில் அவ் வக்னியைக் காத்து விடியற்காலையில் சதுர்த்தசியில் முன்பு சொல்லி யது போல ஸம்ஸ்காரங்கள் இயற்றி அன்றையத் தினம் உண வுண்ணுமல் உபவாசம் இருந்து பொழுதைக் கழிக்க வேண்டும். பூரண நிலா உதிக்கும்போது முன் போல் ஓமம் செய்து, அதன் இறுதியில் சிவாக்னியை உபசங்காரஞ் செய்ய வேண்டும். இந்த விரஜாக்னி பஸ்மமான விபூதியை எடுத்து, ஜடாமகுடமுள்ளவ னுகவோ, தலை முண்டிதனுகவோ சிகையுள்ளவனுகவோ கூச்சமற்ற திகம்பரனுகவோ காஷாயமணிந்தவனுகவோ கிருஷ்ண சர்மதாரி யாகவோ ஒரே ஆடை தரித்தவனுகவோ நார்மடி உடுத்திய வனுகவோ, தண்டபாணியாகவோ, பூணூல் கட்டும் புல் உடையவ னுகவோ இருக்க வேண்டும். பிறகு, அவன் தன் பாதங் களைச் சுத்தம் செய்து கொண்டு, இருமுறை சிரித்து, விரஜாக்னி யினுல் உற்பத்தியான விபூதியை எடுத்து அக்னிரிதி முதலான மந்திரங்களை ஓதியும் அதர்வண மந்திரங்களை ஓதியும் கிரமமாகத் தலை முதல் பாதம்வரையிலுள்ள அங்கங்களைத் துடைத்து அம் மந்திரங்களாலேயே அந்தந்த அங்கங்களைப் ஸ்பரிசத்துப் பிறகு பிரணவத்தாலோ, சிவமந்திரத்தாலோ பூசி திரியாயுஷ மந்திரத் தால் முக்குறி (திரிபுண்டரம்) இட்டு சிவபாவனை பெறுதல் வேண்டும்.

இவ்விதமாக இந்தப் பாசுபத விரதத்தை மூன்று வேளைகளி லும் இயற்ற வேண்டும். இந்த விரதம் புத்தியையும் முக்தியையும் தந்து, பசுத்துவத்தை (மிருகத் தன்மையை) நீக்குமாதலால் அதை நீக்கிக் கொண்டு மகாதேவரும் லிங்கமூர்த்தியுமான சதாசிவப் பெருமானைப் பூஜைசெய்ய வேண்டும். இந்த விபூதிக் குளியல் மிகவும் புண்ணியமயமான சகல செளபாக்கியங்களையும் தந்து ஆயுள் பெருக்கம், பலம், திடம், ஆரோக்கியம் சம்பத் அபிவிருத்தி முதலானவற்றையும் கொடுக்கும். ஆகையால், சகல சம்பத்துக் களும் விருத்தியடையவும், க்ஷேமத்தையும் மங்களத்தையும் முன் னிட்டும் இந்த விபூதியைத் தரித்தல் வேண்டும். இதைத் தரிப் போர் மகாமாரியைப் பற்றி அஞ்சவேண்டியதில்லை. இந்த விபூதி மூன்று வகைப்படும். அவற்றை அடுத்ததாகக் கூறுகிறேன்!''

## 11 மூன்று வகைத் திருநீறும் முக்குறி (திரிபுண்டரம்) தரித்தலும்

''பெருந் தீமைகளை ஒழிக்கக் கூடியதும் பெரும் புகழை ஓங்கச் செய்வதுமான விபூதிகள் (பஸ்மங்கள்) மூன்று வகைப்படும். அவையாவன: (1) சாந்திகம் (2) பெளஷ்டிகம் (3) காமதம்.

சாந்திக பஸ்மம் என்பது பசுவின் குறியிலிருந்தே கோமயத்தைக் கையில் எடுத்து, பிரம்ம மந்திரத்தால் தகிக்கச்செய்து பஸ்மாக்கப்படும் விபூதியாகும். பௌஷ்டிக பஸ்மம் என்பது பசுவின் குறியிலிருந்து தரையில் விழுவதற்கு முன்பே கோமயத்தை பிடித்து ஷடங்க மந்திரத்தால் தகித்துப் பஸ்மமாக்கும் விபூதியாகும். காமத பஸ்மம் என்பது பசுவின் குறியிலிருந்து பூமியில் விழுந்த கோமயத்தைக் கையில் எடுத்துப் பிரசாத மந்திரத்தால் தகிக்க வைத்துப் பஸ்மமாக்கும் விபூதியாகும்.

மூன்றாவதான காமத பஸ்மத்தின் விதிமுறையாவது:—பௌர்ணமி, அமாவாசை, அஷ்டமி முதலிய திதிகளில் விடியற்காலத்திலேயே எழுந்து, பரிசுத்தத்தோடு பசுத்தொழுவத்திற்குச்சென்று பசுக்கூட்டத்தைக் கும்பிட்டு நால்வகைச் சாதியாருக்கும் முறையே உரியனவான வெண்மை, செம்மை, கபிலம், கறுப்பு என்னும் நான்கு நிறமுள்ள பசுக்களின் கோமயங்களைப் பிரசாத மந்திரத்தோடு எடுத்து இருதய மந்திரத்தோடு பிசைந்து உருட்டி சூரிய வெப்பத்தில் உலரச்செய்து மனோரம்மியமும் தூய்மையும் நிறைந்த இடத்தில் உமியோடோ, பதரோடோ பிரசாத மந்திரத்தின் வழியே வைதது, அரணியில் கடைந்த நெருப்பாலோ, மான்யபூமியுள்ள வேதியன் மனையிலுள்ள அக்னியாலோ சிவ பீஜ மந்திரத்தால் தகிக்கச் செய்யவேண்டும். பிறகு அக்னிக்குண்டத்திலிருந்து அந்த பஸ்மத்தை எடுத்து புதிய ஏனத்தில் வைத்து, அதோடு தாழம்பூ, பாடலிபுஷ்பம், வெட்டிவேர், சந்தனம், குங்குமப்பூ பச்சைக்கர்ப்பூரம் முதலியவற்றை சத்தியோஜாத மந்திரத்தோடு சேர்க்க வேண்டும். இந்தப் பஸ்மத்தினால் ஸ்நானம் (விபூதிக் குளியல்) செய்வோர் முன்னதாகத் தண்ணீரில் குளித்துவிடவேண்டும். நீரில் குளிக்க இயலாதவர் பஸ்மஸ்நானம் மட்டுமே செய்யலாம். அதாவது கைகால்களை நீரால் சுத்தப்படுத்திக் கொண்டு, ஈசான மந்திரந்தால் சிரசையும் தற்புருஷ மந்திரத்தால் நெற்றியையும், அகோரத்தால் இதயத்தையும் வாமதேவத்தால் நாபியையும் சத்யோஜாதத்தால் இதர அங்கங்களையும் பஸ்மத்தால் பூசுதல் வேண்டும். உடுத்திருந்த ஆடைகளை அவிழ்த்து விட்டு சுத்தமான புத்தாடைகளை உடுத்திக் கொண்டு கைகால்களை அலம்பிக் கொண்டு, ஆசமனஞ்செய்து, சுட்டு விரல், நடுவிரல், மோதிரவிரல் என்னும் மூன்று விரல்களால் முற்பகலில் நன்னீரோடும் பிற்பகலில் நீர் இல்லாமலும், தலை, நெற்றி, கழுத்து, மார்பு, தோள்கள் முதலானவற்றில் முற்குறி திரிபுண்டரம் இடவேண்டும். ஐந்து விரல்களால் சிரசில் பிரசாத மந்திரத்தோடும், மூன்று விரல்களால் நெற்றியில் சிரோ மந்திரத்தோடும், நடு விரலால் வலதுபுற காதில் சத்யோஜாத மந்திரத்தோடும் இடது புறக்காதில் வாமதேவ மந்திரத்தோடும், கழுத்தில் அகோர மந்திரத்தோடும் மூன்று விரல்களால் இருதயத்தில் இதய மந்திரத்தோடும் இடது கையில் கவச

மந்திரத்தோடு நடு விரலால் நாபியில் ஈசான மந்திரத்தோடும் விபூதியைத் தரிக்க வேண்டும்.

முக்குறியான திரிபுண்டரத்திலுள்ள மூன்று விபூதிக்கீற்றுகளில் கீழ் கீற்று பிருமாவைக் குறிக்கும். நடுக்கீற்று மகா விஷ்ணுவாகும். மேல்கீற்று மஹேஸ்வரராகும். ஒரே விபூதிக் கீற்று சர்வேஸ்வரனே தேவதையாகும். தலை நடுவே பிரமனும் நெற்றியில் சர்வேஸ்வரனும் காதுகளில் அஸ்வினி தேவர்களும் கண்டத்தில் கணேசரும் அதிபதி தேவதைகளாவர். பிராமணரைத் தவிர மற்ற மூவகைச் சாதியாரும் திருநீற்றை நீரில் குழைக்காமல் பூசிக் கொள்ளலாகாது. மற்ற குலத்தினர், மந்திரமில்லாமல் திருநீறு தரிக்க வேண்டும்!''

## 12 திருநீற்றின் பெருமை

"நாரத ரிஷியே! இனி, சகலவிதமான இஷ்ட பலங்களையும் தரக்கூடிய அதிரகசியமான பஸ்மோத்தூளன பலத்தைக் கூறுகிறேன்.

காராம் பசுவின் கோமேயத்தை (சாணத்தை) தரையில் விழும் முன்பே எடுக்க வேண்டும். கீழே விழுந்திருக்குமானால் இளகலாகவோ மிகவும் கட்டியாகவோ துர்நாற்றம் மிகுந்ததாகவோ விழுந்து நேரமானதாகவோ இல்லாத சாணமாகப் பார்த்து அதில் மேற்பகுதியையும் கீழ் பகுதியையும் விலக்கி விட்டு நடுவிலுள்ளதை மட்டும் எடுத்து, உருண்டையாக உருட்டி, சிவாக்னி முதலிய அக்னிகளில் மூலமந்திரத்தோடு வைத்து தகிக்கச் செய்து எடுத்துச் சாம்பலாக்கவேண்டும். பிறகு நல்ல வெண்பட்டினாலோ, பொன் முதலான திட உலோகங்களினாலோ மரத்தினாலோ அமைந்து சுத்தம் செய்யப்பட்டுத் தெளிக்கப்பட்டு சுபமாக விளங்கும் ஓர் ஏனத்தில் மந்திரத்தினால் அபிமந்திரித்து அதில் சாம்பலான விபூதியை வைத்துப் பொன் பொருளைப் போலவே அதைப் பாதுகாத்துக் காப்பாற்ற வேண்டும். எங்கேனும் பயணம் புறப்படும்போது அந்த பஸ்மத்தை (திருநீற்றை) தானாவது, பணியாளனாவது எடுத்துச் செல்லவேண்டும். அதை அதர்மியின் கையில் கொடுப்பதோ அசுத்தமான இடத்தில் வைப்பதோ கீழ்மகன் கைபடச் செய்வதோ, வீசி யெறியவோ, தாண்டவோ கூடாது. அறநூல்கள் கூறும் கிரமப்படி திருநீற்றை எடுத்து மந்திரித்துப் பயன்படுத்தவேண்டும். இத்தகைய பஸ்மவிரதத்தைக் கைக்கொள்பவன் சிவ மேன்மையுறுவான். வேதபூர்வமான கர்மங்களை அனுஷ்டிக்கும் சைவர்கள் சிவ சந்நிதியில் பக்தியோடு பிரார்த்தித்துப் பெற்ற திருநீற்றையும்

தாந்திரிக பூஜகர்களால் தாந்திர பூர்வமாகச் சித்தியான விபூதியை யும் தரிக்க வேண்டுமே தவிர, மற்ற இடங்களில் வழங்கப்படும் பஸ்மத்தை வைதிகர்கள் வாங்கி இட்டுக் கொள்ளக்கூடாது. சாதாரண விபூதியைச் சூத்திரர்களும் காபாலிகர்களும் பாஷாண் டர்களும் மற்ற வேத ஹீனர்களும் பெற்றுக்கொள்ளலாம். திரிபுண் டரத்தை (முக்குறி விபூதிப் பூச்சை) பக்தியோடு தரிக்கவேண்டும். அதைப் புறக்கணிக்கக்கூடாது. வேதத்தில் கூறப்பட்டதைப் புறக் கணிப்பவன் நீசனுவான். பிராமணன் பஸ்மத்தைதிரிபுண்டரமாகத் (முக்குறியாக) தரிக்கும் போதும் குழைத்துப் பூசிக் கொள்ளும் போதும் மந்திரத்தோடே செய்து கொள்ளவேண்டும். இவற்றைப் பக்தியோடு செய்யாதவருக்கு கோடி கோடிப் பிறவிகளிலும் சம்சார விடுதலைகிட்டாது! பந்தத்॰ விருந்து விதிமுறைப்படி திருநீறுதரியாத வர்கள் பன்றிப் பிறவிகளைப்போன்ருரே யாவார். திருநீறு இல்லாத மனித உடல் மயானத்திற்கே ஒப்பாகும். "விபூதியில்லாத நெற் றியைச் சுடு. சிவன் கோயில் இல்லாத கிராமத்தைச் சுடு; சிவார்ச் சனை இல்லாத பிறவியைச் சுடு. சிவ சிந்தையில்லாத வித்தையைச் சுடு" என்று வேதம் முழங்குகிறது. திருநீற்றின் முக்குறியைப்(திரிபுண் டரத்தை) பழிப்பவர்கள் சிவ பெருமானையே பழிப்பவராவார். பக்தி யோடு அதைத் தரிப்பவரோ சிவத்தன்மையை தம்மின் தரிப்பவரா வார். விபூதி இல்லாத அர்ச்சனைத் திரவியங்கள் ஒளியில்லா மலைக் கேச் சமமாகும் வேதத்தில் சொல்லப்பட்ட ஆசாரத்தை யனுஷ் டிக்காவிடில் ஸ்மார்த்த விதிக்கு அனர்த்தம் ஏற்படும். திரிபுண்டரத் தைத் தரியாதவனுல் செய்யப்பட்டன வெல்லாம் செய்யப்படாதன வாகவும் கேட்கப்பட்டனவெல்லாம் கேட்கப்படாதனவாகவும் படிக்கப்பட்டனவெல்லாம் படிக்கப்படாதவனுகவும் வீணுகிவிடும். அதுமட்டுமல்ல. வேதயக்ஞம், யாகம், தவம், விரதம், உபவாசம், முதலியனயாவுமே அவனுக்குப் பயனற்றவையாகி விடும், திருநீற்றைக் கைவிட்டு முக்தியை நாடுகிறவன் விஷம் அருந்து வதால் அமுத நிலையான அமர்த்துவத்தை நாடும் மூட னுக்கே ஒப்பாவான். பிரம்மசிருஷ்டியினுலும் திரிபுண்டரதாரணத் தைக் முக்குறியாகக் காட்டியுள்ளார். அதாவது அவர் மனிதர்களில் நெற்றியைக் குறுக்காயும் ஊர்த்துவமாயும் படைத்திருக்கிருர் அல்லவா? மனிதர்களுக்கு மட்டுமல்லாது எல்லாப் பிராணிகளுக் கும் நெற்றியில் மூன்று கீற்றுகள் காணப்படும். அதைக்கண்டும் மூட மனிதர்கள் திரிபுண்டாதாரணம் செய்வதில்லை. திரியக்புண் டரம் இல்லாமல் பிராமணனுல் எது அனுஷ்டிக்கப்பட்டாலும் அது தியான சாதனமல்ல. மோட்ச சாதனக்கிரியையுமல்ல: தானமு மல்ல. திருநீற்றின் முக்குறி தரியாத பிராமணனும் சிவ பூஜைக்கும் அருகதையற்றவனுகி விடுவான்.

அந்தணன் கிழக்கு முகமாக இருந்து, கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டு பிராணுயாமமும் சங்கற்பமும் செய்த பிறகு

அக்னி ஹோத்ரத்தால் உண்டான திருநீற்றை எடுத்து, ஈசான மந்திரத்தால் தன் சிரசிலும், தற்புருஷ மந்திரத்தால் முகத்திலும், அகோர மந்திரத்தால் மார்பிலும், வாமதேவத்தால் நாபியிலும் சத்யோஜாதத்தால் மாதங்களிலும் தரிக்கவேண்டும். பிறகு பிரணவ மந்திரத்தால் உடலின் எல்லா அங்கங்களிலும் விபூதிப் பூச்சிட வேண்டும். இதை ஆக்நேய ஸ்நானம் என்று பிரும முனிவர்கள் சொல்வார்கள். எல்லா கர்மசித்திகளையும் முன்னிட்டு இதை அறிஞன் செய்து, பிறகு கைகால்களைச் சுத்தம் செய்து, நெற்றி, மார்பு, கண்டம் முதலான பஞ்சப் பிரம மந்திரத்தோடு திருநீற்றின் முக்குறி இடவேண்டும். அந்தணன் ஒருவன் நான்காவது சாதியாரிடமோ அன்னிய சாதியாரிடமோ திருநீறு பெறுதல் கூடாது. விபூதியணியாதவனின் சத்தியமும் சௌசமும், ஜபமும், ஹோமமும் தீர்த்த யாத்திரையும், தேவ பூஜையும் புண்ணிய பலன்களும் வியர்த்தமாகிவிடும். விபூதி ருத்திராக்ஷம் தரிப்பவனே பாவம், வியாதி, வறுமை, களவு, முதலானவை ஒழியப்பெற்று, எந்தப் பரப்பிரம்மத்திடமிருந்து ஜீவன் திரும்புவதில்லையோ அந்தப் பரப்பிரம்மத்திடமே போய் ஒன்றிப்பான். சிரார்த்தக் காலத்திலும் யக்ஞத்திலும் ஜபத்திலும் ஹோமத்திலும் வைபஸ்வ தேவத்திலும் சிவ பூஜைகளிலும் திருநீற்றின் முக்குறி இட்டிருக்கும் மனிதன் தூய்மையானவனும் மரணத்தையும் வெல்கிறான்!'' என்றார்.

## 18 திருநீற்றின் பெருமை

நாரதரே! ஒரு நாளாவது விபூதியை அணிபவனுக்கு கிடைக்கக் கூடிய புண்ணிய பலனைச் சொல்கிறேன். மாபெரும் தீமைகளை ஒருவன் செய்திருந்தாலும் அவை அனைத்தும் அகன்றொழியும். இது முற்றிலும் உண்மை! விபூதியைச் பூச்சாகவும் திரிபுண்டரமாகவும் முக்குறியாகவும் தரித்தால், சந்நியாசிக்கு ஞானமும் வானப்பிரஸ்தாசிரமிக்கு விரக்தியும், கிரகஸ்தாசிரமவாசிக்கு இல்லற தர்ம அபிவிருத்தியும் பிரமச்சாரிக்கு வேதாத்தியயனச் சித்தியும், சூத்திரன் புண்ணியப் பேறும் மற்றையோருக்கு பாவத்திலிருந்து விடுதலையும் கிடைக்கும் என்று வைதீக ஸ்மிருதி கூறுகிறது. சர்வ பிராணிகளையும் காத்தருளுவதற்காகவே விபூதிப் பூச்சும் திரிபுண்டர தாரணமும் வேத யக்ஞங்களில் நியமிக்கப்பட்டுள்ளன. அவை இரண்டும் எல்லா அறப் பேறுகளை முன்னிட்டும் அவசியம். அவை மகேஸ்வர வடிவமான சிவலிங்கார்ச்சனையை முன்னிட்டே என்றும் எல்லோருக்கும் விஞ்ஞானப் பொருளுணர்வு ஏற்படுவதற்கே என்றும் வைதீக ஸ்மிருதி ஆங்காங்கே குறிப்பிடுகிறது. மும்மூர்த்திகளும் இரண்ய கர்ப்பனும் வருணன் போன்ற தேவர்களும், பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி

என்னும் முத்தேவிகளும் மற்ற தேவதைகளும் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள், கந்தர்வர், சித்தர், வித்தியாதரர் முதலானவர்களும் மகரிஷிகளும் பஸ்மோத்தூளனமும் திரிபுண்டரமும் அணிந்திருக்கின்றனர். அவற்றைத் தரிப்போரே உத்தமர்களும் பண்டிதர்களும் அறிஞர்களுமாவார்கள்.

முக்தி என்னும் மங்கையைக் கவர விரும்புகிறவனுக்கு சிவலிங்கம், ருத்திராக்ஷம் பஞ்சாக்ஷரம், விபூதி என்பவைச் சிறந்த வசீகரண மருந்துகளாகும் விபூதியைத் தரித்தவன், எத்தகையவனுயினும் அவன் எந்த இடத்தில் உண்ணுகிருனே அந்த இடத்தில் நந்திக் கொடியுடைய பரமசிவன் தம் உமா தேவியோடு உண்பதற்கு இணையாகும் உடல் முழுதும் விபூதி பூசியவரைப் பின் பற்றி செல்பவன், மிகவும் தீயவனுக இருந்தாலும் அவன் தன் தீவினைகளிலிருந்து விடுபட்டு, மனிதர்களால் போற்றிப் பூஜிக்கப் படுவான். விபூதியணிந்தவனுக்கு ஒருவன் அன்ன தானம் மட்டுமே கொடுத்தாலும் நற்காரியங்கள் அனைத்தையும் செய்த புண்ணியவானுகவே விளங்குவான். ஆசாரசீலனே, ஆசார மற்றவனே, பாக்கியனே, தரித்திரனே எவனுயிருந்தாலும் அவன் விபூதி தரித்திருந்தால் அவனைத் தெய்வ மகனுகப் பாவித்துப் போற்ற வேண்டும். கபட வேடமாகவேனும் ஒருவன் விபூதியை அணிந்தால் அவனுக்குக் கிடைக்கும் நற்கதி நூறு யாகங்கள் இயற்றியவனுக்கும் கிடைக்காது. விளையாட்டாகவோ பயந்தோ ஒருவன் விபூதியணிந்தவனைத் தொட்டாலும் அவனும் போற்றுதலுக்கு உரியவனுவான். சிவ மந்திரத்தை விட உன்னத மந்திரமும், சிவாசாரத்தை விட உயர்ந்த ஆசாரமும், சிவார்ச்சனையின் புண்ணியத்தை விடச் சிறந்த புண்ணியமும் சிவபரத்தை விட மேலான பரமும், விபூதி ஸ்நானத்தை விடச் சிறந்த தீர்த்த ஸ்நானமும், சிவாக்னி வீரியத்தை விடச் சிறந்த வீரியாக்னியும் இல்லை என்பது போலவே விபூதி தாரணத்தை விட வேறு சிறந்த தாரணமும் இல்லை.

ஒருவன் சண்டாளனே அறிவிலியோ அறிஞனே நல்லவனே கெட்டவனே எப்படிப்பட்டவனுக இருந்தாலும் பாவ துக்கங்களனைத்தையும் துடைக்கக் கூடிய விபூதியைத் அவன் தரித்திருப்பானுகில் அவன் வாழும் நாட்டில் சதாசிவ மூர்த்தியே தம் உமையவளோடும் எல்லாப் பூத கணங்களோடும் எல்லாத் தீர்த்தங்களோடும் எப்போதும் பிரசன்னமாகியிருப்பார்.

பஞ்சப் பிரம்ம மந்திரத்தால் தூய்மை பெற்று விளங்கும் விபூதியானது காம தகன மூர்த்தியான பரமேஸ்வரனின் திருமேனியில் பூஜ்யமாக இருப்பதால் அனைவரும் தமது நெற்றியில் திருநீற்றுக்கு உரியதாக்கி எல்லாப் பீடை பாவங்களிலிருந்தும் விடுபட்டு விடுவார்களாக!''

''நாரதரே! விபூதியை உடல் முழுவதும் பூசியவனுக்கு மகிழ்ச்சியோடு செல்வத்தை நல்குபவன் எல்லாப் பாபங்களிலிருந்தும் நீங்கி விடுகிறான். சுருதிகளும் ஸ்மிருதிகளும் புராணங்களும் விபூதி மகிமையை எடுத்துரைக்கின்றன. ஆகையால் பிராமணன் சிவ விபூதியை ஒவ்வொரு நாளும் சந்திகள் மூன்றிலும் திரிபுண்டரமாக அணிவானேயாகில் எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபட்டு சிவலோக வாச பாக்கியம் பெறுகிறான். தவயோகித் தன் தலை முதல் கால்கள் வரை, மூன்று சந்திகளிலும் விபூதியின் ஸ்நானம் செய்வானுனால் விரைவில் யோக சித்தி பெறுகிறான். எல்லாப் புண்ணிய தீர்த்தங்களிலும் நீராடுவதினால் எவ்வளவு புண்ணியம் கிடைக்குமோ, அவ்வளவு புண்ணியமும் விபூதி ஸ்நானம் செய்பவனுக்கு உண்டாகும். அவன் பெருந் தீவினைகள் புரிந்தவனாயினும் கட்டைகளைக் கொளுத்தும் அக்னியைப் போல அத்தீவினையின் பாவங்களை ஒழித்து விடுவான். அவன் தன் குலத்தை உத்தாரணம் செய்தவனுமாகிறான்.

எனவே விபூதி ஸ்நானத்தைவிடத் தூய்மையான வேறு எதுவுமே, இல்லை என்று ஆதியில் கூறிய சிவபெருமான் தானும் விபூதியில் குளித்துள்ளார் 'ஆக்னேயம்' என்னும் அக்கினி சம்பந்தமான விபூதிக் குளியலை முழுச் சிரத்தையோடும் முயற்சியோடும் பின்பற்ற வேண்டும். இது போல விபூதி ஸ்நானம் செய்பவன் மாம்ச மயமான நாற்ற உடலை உடையவனாயினும் சிவ ரூபி ஆகின்றான். இதில் ஐயமில்லை. விபூதியைத் தரித்தவர்களைக் கண்டு மகிழ்ச்சியடைபவர்கள் தேவராலும் முனிவராலும் போற்றப் படுவார்கள். ஒருவன் விபூதி அணிந்து கொண்டு, சாப்பிடக் கூடாததைச் சாப்பிட்டாலும், அவனைத் தோஷமுடையவனாகப் பெரியோர் கருதலாகாது. பிரமச்சாரி, கிரகஸ்தன், வானப் பிரஸ்தன், என்ற இம்மூன்று ஆசிரமிகளும் முதலில் நீரில் குளித்து, அதன் பின்னர் விபூதி ஸ்நானம் செய்தால், அவர்கள் சகல பாபங்களிலிருந்தும் நீங்கி நற்கதி பெறுகிறார்கள். சந்நியாசிகளுக்கு ஆக்னேய பஸ்ம ஸ்நானம் விசேஷமானது. தண்ணீரில் குளிப்பதை பிரகிருதி என்றும் பந்தம் என்றும் சொல்வார்கள். பிரகிருதியான பந்தத்தை அறுப்பதற்கே இந்த விபூதி ஸ்நானம் விதிக்கப்பட்டுள்ளது. முன்பொரு சமயம் ரக்ஷைக்கும் மங்களகரத்துக்கும் தூய்மைக்கும் என்ன பொருள் உண்டு என்று தேவர்கள் யோசித்துப் பார்த்து விட்டு அதற்கு விபூதிதான் சிறந்த பொருள் என்று கண்டறிந்து தேவிக்குப் பிரியம் உண்டாகும்

வண்ணம் அதை உவந்தளித்தார்கள். ஆக்னேய ஸ்நானம் என்னும் சிர ஸ்நானம் செய்பவன் பிறவிக்குக் காரணமான பாசத் தளைகளிலிருந்து விடுபட்டு, சிவலோகத்தில் பூஜ்யனாக வசிப்பான். இந்த ஸ்நானத்தால் ஜ்வரம், பிரம்மராக்ஷசு, பைசாசம் பூத சேஷ்டைகள், குஷ்டம், குன்மம், பகந்தரம் முதலான அறுபத்து நான்கு வித வாத ரோகங்களும், சிலேஷ்ம வியாதிகளும் புலி முதலான மிருகங்களைப் பற்றிய பயமும், திருட்டுப் பயம் முதலானவை யும் அகன்றொழிந்து விடும். விபூதியைச் சுத்தமான குளிர்ந்த நீரில் குழைத்து, திரிபுண்டரமாகத் தரிப்பவன் பரப்பிரம்ம சொரூபமாகி விடுகிறான். விபூதியை விதிப்படி நெற்றியில் அணிந்தால் அது நெற்றியில் எழுதியிருக்கும் யமதர்மனின் எழுத்தையும் அழித்து விடும். அதில் ஐயமில்லை. இது போலவே கண்டத்தில் விபூதியை தரிப்பதால் கண்டத்தின் பாபமும், கைகளில் தரிப்பதால் கை களின் பாபமும் மார்பில் தரித்தால் மனசால் செய்த பாபமும், நாபியில் தரித்தால் இனக் குறியினால் செய்த பாபமும், பிருஷ்ட பாகத்தில் தரிப்பதால், அந்தப் பிருஷ்டத்தின் பாபமும், பக்கங் களில் தரிப்பதால் பரஸ்திரீகளைக் கட்டியணைத்துக் கூடி மகிழ்ந்தது முதலான பாவங்களும் தொலைந்து போகும். எனவே எல்லா இடங்களிலும் மூன்று குறியுள்ள திருநீறு அணிதல் வேண்டும். ஏனெனில் பிரம்மா, விஷ்ணு, பரமேஸ்வரரான மும்மூர்த்திகளையும் மூவுலகங்களையும் மூன்று அக்னிகளையும் முக்குணங்களையும் விபூதியின் முக்குறி குறிப்பிடுவதாகும். விபூதி நிஷ்டா சம்பந்த முள்ளவனின் தோஷங்கள் பஸ்மம் என்ற அக்னி சம்பந்தத் தாலேயே எரிந்தொழிந்து விடுகின்றன. விபூதி ஸ்நானத்தினால் சுத்தாத்மாவான புருஷன், ஆன்ம ஞானியாகக் கருதப்படுகிறான். பூதம், பிரேதம், பிசாசம் முதலானவையும் கிரகங்களும் பொறுக்கவொண்ணாத நோய்களும் பஸ்ம நிஷ்டனின் முன்னிலையில் விலகி மறைந்து விடுகின்றன. எல்லா அவயங்களிலும் விபூதி பூசி, முக்குறியாகவும் இட்டுப் பஸ்மத்தில் படுத்துக் கொண்டிருப் பவன், பஸ்ம நிஷ்டன் என்று போற்றப்படுகிறான். பாசித்தலினா லேயே (ஒளிர்வதாலேயே) பசிதம் என்றும், குற்றங்களை விழுங்கி யொழிப்பதால் பஸ்மம் என்றும் ஐஸ்வரியத்தை ஏற்படுத்துவதால் பூதி என்றும் ரக்ஷிப்பதால் ரக்ஷை என்றும் வழங்கப்படுகின்றது. திரிபுண்டரதாரணத்தை (முக்குறி தரித்திருப்பதைப்) பார்த்து பூத, பிரேதப் பிசாசுகள் யாவும் சிவபெருமானை நினைத்தவுட னேயே பாவங்கள் ஒழிந்து விடுவதைப் போலவே பயந்து நடுங்கி ஓடி யொழிந்து விடுகின்றன. பஸ்ம ஸ்நானம் செய்கின்றவன் செய்யத் தகாதன ஆயிரஞ் செய்தவனாயினும், அவற்றின் பாபங்களை வனத்தைக் கொளுத்தும் அக்னியைப் போல விபூதியே எரித்துச் சாம்பலாக்கி விடுகிறது. பாவங்கள் பல செய்த பிராமணன் தன் மரண காலத்தில் பஸ்ம (விபூதி) ஸ்நானம் செய்தால் அப் பாபங்களிலிருந்து விரைவில் விடுதலைப் பெற்று விடுகிறான். ஆயுள்,

சம்பத்து, மோக்ஷம் ஆகியவற்றை விரும்பும் பிராமணன் தினந் தோறும் திருநீறு அணிந்து வரவேண்டும். சௌசம் முதலிய கர்மங் களைச் செய்த பிறகு தூய நன்னீரில் குளித்துப் பாதம் முதல் சிரசு வரை விபூதியைப் பூசிக்கொள்ள வேண்டும். இத்தகைய பஸ்ம ஸ்நானம் உள்ளேயும் வெளியேயுமுள்ள மலங்களையெல்லாம் கழுவி யழித்து விடும். தண்ணீர் ஸ்நானம் உடம்பின் வெளி அழுக்கை மட்டுமே போக்கும். ஆகையால், தண்ணீரில் ஸ்நானம் செய்யா விடினும் பஸ்ம ஸ்நானத்தில் விருப்பங் கொண்டு எப்பொழுதும் அதைக் கைக்கொள்ள வேண்டும் நாரத முனிவரே! ஆக்னேய ஸ்நானம் என்று சுருதியில் கூறப்படும் பஸ்ம ஸ்நானம் இல்லாமல் செய்யப்படுபவை யாவும் செய்யப்படாதவையே ஆகும். வேதங்கள் போற்றும் பெருமையுடைய விபூதியைத் தரிக்காமல், வைதிக கர் மங்கள் எதையும் செய்யும் வைதிகன், அந்தத் தர்மத்தின் பதினறில் ஒரு பங்கில் பாதிப் பலனைக் கூட அடைவதில்லை. தூய்மையான பொருள்கள் எல்லாவற்றையும் விடத் தூய்மையானது விபூதியே என்றும் அந்தப் பஸ்ம ஸ்நானத்தைக் கிரமப்படி செய்பவன் எல்லா வைதிக கர்மங்களும் செய்வதற்கு உரியவன் என்றும் வேதம் வழி காட்டுகிறது. அறியாமையால் பஸ்ம ஸ்நானத்தைச் செய்யாமல் கை விடுபவன் மகா நீசன் என்றும் கொடியவன் என்றும் கூறப் படுவான். பஸ்ம ஸ்நானத்தைச் செய்பவன் ஏராளமான புண்ணிய நதி ஸ்நானம் செய்த பலனை விட அதிகப் பயனைப் பெறுகின்றான். பஸ்ம ஸ்நானம் சிரௌத கர்மம் என்றும் கருதப்படுவதால் முச்சந்தி களிலும் அக்கறையோடு செய்ய வேண்டும். கிரமப்படி சௌசம் முதலியவற்றைச் செய்தாலும் பஸ்ம ஸ்நானம் செய்யாதவன் தூய்மையடையான். அவன் எக்கர்மாவும் செய்ய அதிகாரியுமல்ல அபான வாயுவை (மலக் காற்றை) விட்டாலும், கொட்டாவி விட்டாலும், கக்கினாலும், தும்மினாலும் மல ஜலம் கழித்தாலும் விபூதியணிய வேண்டும். இதுவரை சொல்லப்பட்டவை யெல்லாம் பஸ்ம ஸ்நான மகிமையில் ஒரு சிறிதேயாம். இனி பஸ்ம ஸ்நானத்தினால் விளையக் கூடிய பலன்களைக் கூறுகிறேன்!'' என்றார் நாராயணர்.

## 15 நரகம் புண்ணிய தீர்த்தமான கதையும் ஊர்த்துவ புண்டரம் தரிக்கும முறைகளும்

''நாரதரே, கேளும்! அந்தணர்கள்தாம் அக்னிரிதியாதி மந்திரங்களால் பஸ்மத்தை, நெற்றி முதலிய அங்கங்களில் அணிய

வேண்டும். பிராமணன், க்ஷத்திரியன், வைசியன் ஆகிய மூவரில் இருபிறவியாளனே (துவிஜனே) திரிபுண்டரத்தைச் சிரத்தையோடு தரிக்கவேண்டும். உபநயன கர்மம் செய்யப் பெற்றவனே (துவிஜன்) இருபிறவியாளன் ஆகையால் வேதம் கூறிய, திரிபுண்டத்தைத் துவிஜர்கள் தரிப்பது அவயம். விபூதியை அணியாமல் வேத கர்மங்கள் செய்யப்பட்டாலும் அவை யெல்லாம் பலன் தரா. விபூதியணியாமல் செய்யும் காயத்திரி மந்திர ஜபமும் வியர்த்தமாகிவிடும். ஆகைய ரல் திருநீறு பூசியே காயத் ஜபம் செய்ய வேண்டும். பிராமண்யத்தில் காயத்திரி மந்திரம் மூலகாரணமாகக் கருதப்படுகிறது. அந்த மந்திரமோ விபூதி தாரணமில்லாமல் உபதேசிக்கப்படுவதில்லே. எவ்வளவு காலம் நெற்றியில் திருநீறு அணியவில்லேயோ அத்தனேக் காலம்வரை காயத்திரி மந்திரத்தை ஜெபிக்க இயலாது. நெற்றியில் திருநீறு இல்லேயென்ருல், அது பிராமண்யம் இல்லாமையைக் குறிக்கும்! நாரதரே! இதுவரை நான் சொன்னவை யாவுமே பிரமாணத்தோடு சொல்லப்பட்டனவேயாகும். எவன் நெற்றியில் மந்திரபூர்வமான திருநீறு ஒளி வீசுகின்றதோ, அவனே பிராமணன்! அவனே ஞானபண்டிதன். இது சத்தியம் என்று வேதத்திலேயே கூறப்பட்டுள்ளது. இரத்தினத்தைக் கண்டவுடன் எப்படி இயற்கையாகவே பிரியம் மூளுகிறதோ அது போலவே, திருநீறைக் காணும் போதும் பிரியம் ஏற்படுமானுல் அவன் தான் பிராமணன். அப்படி அந்தப் பிராமணனுக்கு விபூதியிடம் பிரியம் ஏற்படாவிட்டால் அவனது பிறவியே சண்டாளப் பிறவிக்குச் சமமாகும். திருநீறு பூசாமல் கனிகள் முதலியவற்றைக் கூடச் சாப்பிடக் கூடாது. மீறிச் சாப்பிடுவோர் கோரமான நரக வேதனேகளே அடைவார்கள் விபூதி அணியாமல் பொன்னேத் திராசிலிட்டு தானம் செய்யும் துலாபார தானம் செய்தாலும் அது பலன் தராது என்பதுமட்டுமல்ல. அப்படிச் செய்பவன் கடையனுமாவான். உபவீதமான (பூணூலான) யக்ஞசூத்திரமில்லாமல் பிராமணன் நித்திய கர்மாவைச் செய்யக் கூடாது என்பது போலவே திருநீறு அணியாமல் சந்தியாவந்தனம் செய்யக்கூடாது. சந்தியாவந்தனஞ் செய்யும்போது தோளிலிருக்கும் பூணூல் ஒருவேளே விலகிவிடுமானுல், அது குற்றமாகும் என்று கருதி அந்தக் குற்றத்தைத் தவிர்ப்பதற்காக அந்தப் பூணூலுக்கு பதிலாக ஆடை முதலியவற்றைப் பூணூலேப்போல் அணிந்து கொண்டு காயத்திரி முதலான ஜபங்களேயும் உபவாசம் முதலானவற்றையும் செய்ய வேண்டும் என்றும் அது விதிக்கப்பட்டுள்ளது. ஆனுல் அதுபோல, திருநீறுக்குப் பதிலாக வேறு அடையாளங்களே அணிந்து நித்திய கர்மங்களேச் செய்யலாம் என்று விதிக்கப்படவில்லே. திருநீறு அணியாமல் சந்தியாவந்தனம் செய்கிறவன் தோஷியாவான். அன்னிய இனத்தான் வேதங்களேக் கேட்டால் தோஷியாவது போலவே பிராமணனும் திருநீறு அணியாமற் சந்தியாவந்தனம் செய்தால் தோஷத்தையடைவான்.

எனவே, வேதத் தொடர்புடைய வைதிகர்கள் சிரௌத பஸ்மத்தை மிகவும் சிரத்தையோடு அடைய வேண்டும். அத்தகைய திருநீறு கிடைக்காவிட்டால் ஸ்மார்த்த பஸ்மத்தையாவது அதுவும் கிடைக்காவிட்டால் லௌகீக பஸ்மத்தையாவது தேடியடைய வேண்டும். எவ்வகையாயினும் திருநீறு என்பது தூய்மையுடையதே! ஆகையால் எந்தக் காலத்தில் எதத்தகைய பஸ்மம் (விபூதி) கிடைக்கிறதோ, அதை அந்தணர்கள் அணிந்து கொண்டே சந்தியாவந்தனம் செய்ய வேண்டும். எந்த வகை விபூதியணிந்தவனுயினும் அந்தப் பஸ்ம நிஷ்டனிடம் பாபங்கள் சற்றேனும் நெருங்கா. ஆகையால், திருநீறு அணிவதை அந்தணர்கள் அவசியமான நியமமாகக் கொள்ள வேண்டும். விபூதி முக்குறியிடும் முறையாவது வலது கை நடு மூன்று விரல்களினுல் ஆறங்குல நீளத்திற்குக் குறையாமல், இருவிழிகளின் கடைசிவரையில் நெற்றியில் அனுலோமமாக ஒருமுறை திரிபுண்டரம் தரித்தாலும் அவன் ருத்திரனுக்கே இணையாவான், அம்மூன்று விரல்களில் அநாமிகை (மோதிரவிரல்) என்பது அகாரம் மத்திமை (நடுவிரல்) என்பது உகாரம், தர்ஜனி(சுட்டுவிரல்) என்பது மகாரம் எனவும் அவை முக்குண சொரூபம் எனவும் கூறப்படும். இந்தத் திரிபுண்டரதாரணச் சிறப்பைப் பற்றி புராதானமான இதிகாசம் ஒன்று உண்டு. அதைக் கூறுகிறேன்.

துர்வாச முனிவர் ஒரு சமயம், "பஸ்மத்திரிபுண்டர ருத்ராக்ஷ தாரி சிவசங்கர சர்வாத்மன் ஸ்ரீமாத ஜகதம்பிகே!" என்னும் நாமங்களை மூன்று முறை உச்சரித்த வண்ணம் பிதுர்லோகத்திற்குச் சென்று கொண்டிருந்தார் அப்போது, பிதுர்தேவர்கள் எல்லோரும் அவரை வரவேற்று, பாத்ய, ஆசமன, அர்க்கியங் கொடுத்து, ஆசனத்தில் அமர்த்தி அளவளாவினர். அந்தச் சமயத்தில் கும்பீபாகம் முதலிய நரகங்களில் அவஸ்தைப்படும் மாபெரும் பாபிகளின் மகாக்கோரமான கூக்குரல் துர்வாச மகரிஷியின் காதில் விழுந்தது. அக்கூக்குரல்கள், "ஆ! ஐயோ! நாங்கள் அடிக்கப்படுகிறோமே! .ஐயோ, கொல்லப்படுகிறோமே! நெருப்பால் கொளுத்துகிறார்களே! அறுக்கிறார்களே! ஐயோ எங்களை இரண்டாகப் பிளக்கிறார்களே!" என்று அலறிப் புலம்பும் பேரொலிகள் கேட்டன, அப்பாவிகளின் அழுகை ஒலங்களைக்கேட்ட துர்வாசர், துக்கத்துடன் பிதுர்நாதரைப் பார்த்து, "இது யாருடைய கூக்குரல்?" என்று கேட்டார். அதற்கு அவர், "தவ ஞானியே! அங்கு யமபுரியான நரகலோகம் இருக்கிறது. அதில் பாவிகள் தீவினைகளின் பாவங்களையெல்லாம் அனுபவிக்கச் செய்வதற்காக யமதர்மராஜன் தன்னைப்போன்ற பயங்கரமான தோற்றமுள்ள தூதர்கள் பலரோடு வசித்துக் கொண்டிருக்கிறான். அங்கு யமதூதர்கள் பாபிகளைச் சூழ்ந்து கொண்டு அப்பாவிகள் பாவவேதனைகளை அனுபவிக்கச் செய்வதற்காக எண்பத்தாறு நரகங்கள் அமைந்திருக்கின்றன. அவற்றில் கும்பீபாகம் என்ற நரகம் மிகவும் கொடியது. அதுவே பிரத

மானதுங்கூட. அந்த நரகத்தில் அவதிப்படும் பாபிகளின் வேதனை களையெல்லாம் நூறு வருஷமானாலும் விளக்கிச் சொல்லிவிட முடியாது. சிவத்துரோகிகளும், தேவி, விஷ்ணு, வேதம், சூரியன், விநாயகர், அந்தணோத்தமர், தாய், தந்தை, குரு, தமையன் புராணம், ஸ்மிருதி முதலானவற்றை வெறுத்து நிந்திப்பவர்களும், மோகவெறியில் மனம் போனபடியெல்லாம் திரிபவர்களும் கொடுமையாளர்கள் முதலானவரெல்லாம் வீழ்ந்து கிடக்கும் பயங்கர நரகம் தான் அந்த கும்பீபாகம்! நீங்கள் இப்போது கேட்ட அதிபயங்கரமான கூக்குரல்கள் அப்பாபிகளின் அலறல்களேயாகும். இத்தகைய கோர சப்தத்தைக் காதால் கேட்போருக்கும் வைராக்கியம் ஏற்பட்டுவிடும்.!' என்றார். அதைக் கேட்டதும் துர்வாச முனிவர் அந்த நரகத்தைப் பார்க்கவேண்டும் என்று விரும்பி எழுந்திருந்து சென்று, கும்பீபாக நரகத்துக்கருகே நெருங்கி, அதை ஒருகணம் குனிந்து பார்த்தார். மக ரிஷியான அவர் பார்த்தவுடனேயே அந்த நரகத்தில் வீழ்ந்து கிடந்த எல்லாப் பாபிகளுக்கும் சுவர்க்கத்தைவிட அதிக சுகானந்தம் கிடைத்தது. அதனால் அவர்கள் சிரித்தனர் ஆடினர், பாடினர், கூத்தாடினர். முரசம் முதலான, இசைக்கருவிகளையெல்லாம் முழக்கி இன்ப ஆரவாரம் செய்தனர். வசந்த கால மலர்க்கொடிகளின் இனிய நறுமணத்தென்றல் அங்கு புதிதாக வீசியது. கும்பீபாகத்தைக் குனிந்து, பார்த்த துர்வாசமா முனிவர், அவர்களை வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தார். அவருடன் வந்த யமதூதர்கள் பயமும் வியப்பும் கொண்டு, யமதர்மராஜனிடம் விரைந்து சென்று, "காலதேவரே! இங்கு ஒரு பேரதிசயம் நிகழ்கிறது. கும்பீபாக நரகில் விழுந்துகிடக்கும் பாவிகளுக்கு சுவர்க்கத்தையும்விடச் சிறந்த சுகம் உண்டாகிவிட்டது. இதன் காரணம் அறியாமல் திகைத்துக் குழம்பி நாங்கள் உம்மிடம் விரைந்தோடி வந்தோம்" என்று கூறினார்கள். அதைக் கேட்டதும் யமனும் பெரும் வியப்பெய்தி உடனே, மதமதாவென்ற தன், எருமைக் கிடாவின் மீது ஏறி யமர்ந்து, கும்பீபாகத்தருகே விரைந்து வந்து, அங்கு நிகழ்பவைகளைக் கண்டு, அந்த அதிசயத்தின் காரணம் புரியாமல் திகைத்தான். அந்தப் பேரதிசயத்தை இந்திரன் முதலான தேவர்களும் தெரிந்து கொள்ளவேண்டும் என்று யம தர்மராஜன் நினைத்துத் தன் தூதர்களை தேவலோகத்திற்கு அனுப்பினான். தூதர்களிடமிருந்து, அதிசயத்தைக் கேள்விப்பட்ட அமரேந்திரனும் பிருமா முதலான தேவர்களும் திக்பாலர்களும் கும்பீபாக நரகத்தின் பக்கம் விரைந்து வந்து அதைச் சூழ்ந்து கொண்டு அங்கு நிகழ்பவைகளைக் கண்டார்கள். சொர்க்கலோக வாசிகளைவிடச் சுகமனுபவிக்கும் நரக வாசிகளைக்கண்டு திகைத்தார்கள். பயமும் ஆச்சரியமும் மேலிட, "இதென்ன விந்தை! பாபவேதனைகளை அனுபவிப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட இந்த நரக குண்டத்தில் சுகமுண்டாகுமானால் இனி யார்தான் பாபஞ் செய்வதற்குப் பயப்படுவார்கள்? தேவலோக வாசிகளுக்கு

சுகமென்றும், நரக வாசிகளாகிய பாபிகளுக்கு துக்கம் என்றும் சர்வேஸ்வரராலே ஏற்படுத்தப்பட்டவிதி எப்படி மறைந்து இதுபோல் விசித்திரமாக மாறியது? அவரது சங்கற்பம் எப்படி மாறியது? இது விந்தையே!'' என்று பல தடவைகள் சொல்லிச் சொல்லி வியந்து நின்றார்கள். அப்போது மகாவிஷ்ணு எல்லாத் தேவர்களை யும் அழைத்துக்கொண்டு விரைந்து கைலாயம் சென்றார். அங்கு பிறை சூடிய சிவபெருமான் கோடி மன்மதப் பிரகாசத்தோடும் பார்வதி தேவியோடும் நித்திய இளமையோடும் மனோகரமான அங்க அவயங்களோடும் பூதகணங்களால் சூழப்பட்டும் உமாவைப் புகழ்ந்து கொண்டிருந்தார். அவரை விஷ்ணு முதலான தேவர்க ளெல்லாம் வேதங்களால் போற்றிப் புகழ்ந்து வணங்கி விட்டு கும்பீபாக நரகத்தில் கண்ட அதிசயத்தைக் கூறி, ''நாதரே! நாங்கள் அனைவரும் அந்த அதிசயத்தின் காரணத்தை அறியமுடி யாமையால் தங்களிடம் விரைந்து வந்திருக்கிறோம் மஹேஸ்வரரே! நீங்கள் எல்லாம் அறிந்த சர்வக்ஞர்! எனவே அதன் காரணத்தைக் கூறியருள வேண்டும்!'' என்று வேண்டினார்கள். வெண்ணீறு அணிந்த சிவபெருமான், அவற்றைக் கேட்டதும் முகம் மலர்ந்து, ''தேவர்களே. நீங்கள் கண்ட பேரதிசயத்திற்குக் காரணம் விபூதி யின் சிறப்பேயாகும். திருநீற்றினால் எத்தகைய அதிசயம்தான் தோன்றாது? சைவ முனிவரான துர்வாச முனிவர், கும்பீபாக நரகத்தினருகே சென்று, அதைக் குனிந்து பார்த்தார் அல்லவா? அப்போது அவர் நெற்றியில் அணிந்திருந்த விபூதியின் வாசனை காற்றினால் அந்த நரகத்தினுள் போய் தோய்ந்தது. அதன் புண் ணிய விசேஷத்தால் ஏற்பட்ட அதிசயமே நீங்கள் கண்ட அதிசய மாகும். இனிமேல், அந்தக் கும்பீபாக நரகம் பிதுர்லோகத்தில் இருப்பவருக்குப் புண்ணிய தீர்த்தமாகப்போகிறது. அதில் அவர் கள் நீராடிச் சுகம் பெறுவர். இனிமேல் அந்தத் தீர்த்தம் பிதுர்த் தீர்த்தம் என்று சிறந்து விளங்கும் அது, மூவுலகிலும் உள்ள புண் ணிய தீர்த்தங்களையும்விட உயர்வடையப் போகிறது. அங்கு எனது உருவமான சிவலிங்கத்தையும் தேவியையும் ஸ்தாபித்து, பிதுர்லோக வாசிகள் பூஜை செய்வார்கள். அங்கு நடக்கும் தேவி பூஜையானது மூவுலகத்தாராலும் போற்றி நிகழ்த்தப்படும். இவ் வளவும் விபூதியின் சிறப்பு, திருநீற்றின் பெருமையே தான்!'' என்று மேகத்வனிபோல் இனிமையாகக்கூறினார். அதைக் கேட்டுக் கொண்டு தேவர்கள் அவரை, வணங்கி விடைபெற்றுச் சென்றனர். கும்பீபாகத்தருகே வந்து, யமதருமனிடம் சிவபெருமானின் வாசகங் களை எடுத்துரைத்தார்கள். அதைக்கேட்ட அனைவரும் திருநீறைப் புகழ்ந்தனர். பிதுர்க்களும் நமக்குப் புண்ணிய தீர்த்தம் கிடைத் ததே என்று மகிழ்ந்தனர். சிவலிங்கத்தையும் தேவியின் விக்ரகத் தையும் அங்கே ஸ்தாபித்து தேவர், முதலான அனைவரும் பூஜித் தனர். அந்தக் கும்பீபாக நரகத்தில் முன்பு வீழ்ந்து கிடந்த பாபி கள் அனைவரும் புதிய புண்ணியத் தீர்த்தத்தில் மூழ்கி எழுந்து,



விமானம் ஏறிக் கைலாயத்தை அடைந்தார்கள். அவர்கள் பத்திரகணங்கள் என்ற பெயரைப் பெற்றனர். கும்பீபாக நரகம் தீர்த்தகுண்டம் ஆகியதால், அந்த நரக குண்டத்தை, வெகு தூரத்தில் நிர்மாணஞ் செய்து, அங்கு விபூதி தரித்த சைவர்கள் செல்லக்கூடாது என்று தடை விதித்தனர். நாரதரே! நான் சொன்ன இந்தப் பஸ்மத்தின் பெருமையை விடச் சிறப்புடையது வேறு எதுவுமில்லை.

நாரதரே! இனி அதிகாரிகளின் பேதத்தைக் கொண்டு, வைஷ்ணவ ஆகமப்படி, ஊர்த்துவ புண்டரவிதியையும் பிரமாணத்தையும் வர்ணம், மந்திரம், தேவதை, பயன்கள் முதலானவற்றையும் கூறுகின்றேன், கேளும். நாமம் இடுவதான ஊர்த்துவபுண்டரத்திற்குத் தேவையான மண்ணை, மலைச்சிகரத்திலிருந்தும், நதிக்கரையிலிருந்தும், சிவத் தலங்களிலிருந்தும், கடற்கரையிலிருந்தும், துளசியின் வேரிலிருந்தும், புற்றிலிருந்தும் எடுக்கவேண்டும். வேறு எந்த இடத்திலிருந்தும் மண் எடுக்கலாகாது கறுப்பு மண் சாந்தியையும், சிவப்பு மண வசீகரத்தையும் பொன்னிற மண் சம்பத்தையும், வெள்ளை மண் தருமத்தையும் தரவல்லன பெருவிரல் புஷ்டியையும், நடுவிரல் ஆயுளையும் ஆழிவிரல் அன்னத்தையும் சுட்டுவிரல் முக்தியையும் கொடுப்பதால், அந்தந்த விரல்களால் இடவேண்டுமே தவிர, விரல் நகத்தினால் அதைத் தொடவும்கூடாது. இந்த ஊர்த்துவ புண்டரத்தைத் தீபத்தைப்போலவோ மூங்கில் இலையைப் போலவோ தாமரை மொட்டைப் போலவோ, அல்லது மச்சம் (மீன்) கூர்மம் (ஆமை) சங்கு போலவோ தரிக்கலாம். அதைத் தரிக்கும் அளவுகளாவன: பத்தங்குலம் இடுவது மேன்மை. ஒன்பதங்குலமோ, எட்டு, ஏழு, ஆறு அங்குலமாகவோ இடுவது மத்திமம். நான்கு, மூன்று, இரண்டு அங்குலமாக இடுதல் அதமம்.

நெற்றியில் கேசவனையும், வயிற்றில் நாராயணரையும் மார்பில் மாதவனையும், மார்புக் குழியில் கோவிந்தனையும், வலப்பக்க வயிற்றில் மகா விஷ்ணுவையும் இடப்பக்க வயிற்றில் வாமனரையும், வலது புஜத்தில் மதுசூதனரையும, இடது புறத்தில் ஸ்ரீதரனையும், வலது காதின்கீழ் திரிவிக்கிரமனையும், இடது காதின்கீழ் ஹ்ரீஷீகேசனையும், பிருஷ்டத்தில் பத்மநாபனையும், பின்புறக் கழுத்தில் தாமோதரனையும் ஆகப் பன்னிரண்டு இடங்களில் பன்னிரண்டு நாமங்களையும் உச்சரித்து ஊர்த்துவபுண்டரம் இட்டுப் பிறகு, தலையில் வாசுதேவனை நினைத்து இட வேண்டும்.

பூஜை வேளைகளிலும் ஹோமகாலத்திலும் விடியற்காலத்திலும் நிதானமாய் முன்னே சொன்ன நாமங்களை உச்சரித்து ஊர்த்துவ புண்டரந் தரிக்க வேண்டும் அசுத்தனோ கெட்ட நடத்தையுள்ளவனோ, பாபம் புரிபவனோ எவனாயிருந்தாலும் சிரசில் ஊர்த்துவ புண்டரம் தரிப்பவன் தூய்மையாளனாவான். அத்தகையவன் தோல் தைப்பவனாயினும் அவன் எங்கே இருந்தாலும் தேவ விமானத்தில் சென்று விஷ்ணு லோகத்தையடைந்து, ஆங்கிருப்பவரால் மதிக்கப்படுவான். ஏகாந்திகளான மகான்களும் தங்கள் நெற்றியின் மத்தியில், விசாலமான விஷ்ணு பாதம் போன்ற புண்டரங்களைத் தரிக்கின்றனர். சிலர் அதைத் தீபத்தைப் போலவும். வேறு சிலர் தாமரை இதழைப் போலவும், சிலர் மூங்கில் இலையைப் போலவும் தரிக்கின்றனர். சாதாரண வைணவர்களில் சிலர் சந்தோடும் சிலர் சந்து இல்லாமலும் இட்டுக் கொள்கிறார்கள். ஏகாங்கிகளாகவும் பரமேகாந்திகளாகவும் விளங்கும் வைஷ்ணவர்களுக்கே, சந்தில்லாமல் இடுவதில் தோஷம் மிகவும் உண்டு. சௌந்தரியமான ஊர்த்துவபுண்டரத்தை மத்தியில் (சந்து) இடம் இருக்கும்படி கேசவாதி நாமங்களை ஸ்மரித்து இட்டுக் கொள்பவன் நாராயணருக்கேகோயில் கட்டியவனுக்கு சமமாவான். புண்டரத்தின் நடுவில் மகா விஷ்ணு மகா லக்ஷ்மியோடு எழுந்தருளியிருப்பார். ஊர்த்துவ புண்டரத்தை மத்தியில் இடாமல் வைக்கும் அதமப் பிராமணன், லக்ஷ்மியையும் விஷ்ணுவையுமே விலக்கியவனுக்கு ஒப்பாகி, இருபத்தோரு நரகத்தையும் அடைவான். கோணல் இல்லாமல் பக்கங்கள் ஒழுங்காக அமையும்படியும் நடுவில் விசாலமாயும், தாமரை, மச்சம் தீபம் முதலானவற்றைப் போலவும் ஊர்த்துவபுண்டரம் தரிக்கவேண்டும். புண்டரம் தரிக்காமல், வைஷ்ணவப் பிராமணன் செய்யும் கிரியைகள் எதுவுமே வியர்த்தந்தான்!

ஊர்த்துவப்புண்டரம் இடும் போது திரிசூலம், வர்த்துலம், சதுரஸ்ரம், அர்த்த சந்திரம், லிங்கம் முதலிய குறிகளாக வேத நிஷ்டர்கள் ·இடக்கூடாது. பிறப்பால் ஜாதியை அடைந்தவன், வேதவழியை அனுசரித்து, பிரமையினாலுங்கூட நெற்றியில் வேறு புண்டரத்தைத் தரிக்ககூடாது. புகழுக்கும் பிரகாசத்திற்கும் விஷ்ணு ஆகமாதிகளில் வேறு புண்டரங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன

என்றாலும், வைதீக அனுஷ்டானியானவன் சுருதிக்கு முரணான பஸ்ம திரிபுண்டரத்தை இடலாகாது. நெற்றியில் பஸ்மத்தை முக்குறியாக இட வேண்டுமேயன்றி, பிரமையினால் வேறு புண்டரத்தை வைதிகன் இடுவானாகில், அவன் நரகத்தையடைவான். வேத நெறியை அனுசரிப்பவன் திருமால் போன்ற விக்கிரக உருவங்களான குறிகளைத் தரிக்கக்கூடாது. சிரௌத தர்ம நிஷ்டர்களுக்கு சிரௌத தர்மத்தில் விதித்துள்ள குறிகளைத் தரிக்கலாம். எந்தத் தேவதை வேதப்புகழ் பெற்றுள்ளதோ, அந்தத் தேவதையின் குறியே வைதிகமுறையாகும். சுருதிப் பிரதிபாதகமில்லாத தேவதையின் குறிகள் வேத சம்பந்தமில்லாத அவைதிகக் குறிகள் எனப் படும். வேதத்தில் சொல்லப்பட்ட மகாவிஷ்ணுவுக்கும் மகாதேவருக்கும் சிரௌதக் குறிகளேயாகும்

சிரௌதக் குறி என்பது திரிபுண்டர (விபூதியின் முக்குறிப் பூச்சே ஆகும். சிரௌதமில்லாத குறி ஊர்த்துவபுண்டரம் முதலியவைகளாகும். திரியக் திரிபுண்டரமல்ல. வேதவழியை அனுசரிப்பவர்கள். வேதமுறைப்படியே நெற்றியில் திரியக் திரிபுண்டரமே தரிக்க வேண்டியது!''

## 13 சந்தியோபாசனம்

## (சந்தியாவந்தனம் செய்யும் முறைகள்)

''நாரதரே! இதுவரை, பஸ்மதாரணச் சிறப்புகளைக் கூறினேன். இனிமேல், சந்தியோபாசனத்தைப் பற்றிக் கூறுகிறேன் கேளும்:

''சந்திகள் மூவகையாகும். அவை முறையே பிராதஸ் (விடியற்கால) ஸந்தி; மத்தியான ஸந்தி; சாயங்கால ஸந்தி என்பனவாகும் பிராதஸ் (விடியற்கால) சந்தியை சூரிய உதயத்திற்கு முன் நட்சத்திரம் தெரியும் சமயத்தில் செய்வது உத்தமம் என்றும், நட்சத்திரம் தோன்றாத சமயம் செய்வது மத்திமம் என்றும்; சூரியன் தோன்றும் சமயத்தில் செய்வது அதமம் என்றும் கூறப்படுகின்றன. மத்தியான சந்தியை சூரியன் வானத்தின் நடுவில் இருக்கும்போது செய்வது உத்தமம் என்றும், சாயம் சந்தியை சூரியன் தென்படும் சமயத்திலேயே செய்வது உத்தமம் என்றும், சூரியன் அஸ்தமிக்கும் போது செய்வது மத்திமம் என்றும் நட்சத்திரங்கள் தோன்றத் துவங்கும் போது செய்வது அதமம் என்றும் கூறப்படுகின்றன. பிராமணன் விருஷம் என்றால், சந்திகள் அதன் வேர்கள் என்றும், வேதங்கள் அதன் கிளைகள் என்றும் அவ்வேதங்கள் கூறும் கர்ம தர்மங்கள்

அம்மரத்தின் இலைகள் என்றும் சொல்லப்பட்டிருப்பதால் பிராமணன் விருக்ஷ விருத்தியை விரும்பினால் அதன் வேர்களான சந்தியாவந் தனங்களைச் சிரத்தையோடு காப்பாற்ற வேண்டும். வேர்கள் அறு படுமானால் விருக்ஷமும் இலைகளும் இருக்காது. சந்தியாவந்தனத்தை அறியாத பிராமணனும் அதை அனுஷ்டிக்காத பிராமணனும் உண்மையான பிராமணரல்ல; அவர்கள் சூத்திரர்களேயாவார்கள். அவர்கள் மறுபிறவியில் நாயாய்ப் பிறப்பார்கள். ஆகையால் பிராமணர்கள் சந்தியோபாசனம் செய்வது அத்தியாவசியமாகும். அவ்விதம் செய்யாத அந்தணர்கள் எந்தக் கர்மத்திற்கும் உரிய வராகமாட்டார்கள். உதயத்திலும் அஸ்தமனத்திலும் மூன்று நாழி கைக்கும் முன்பாக சந்தியாவந்தனஞ் செய்யவேண்டும். அந்தக் காலத்துக்கு மேற்பட்டுச் சந்தியாவந்தனம் செய்ய நேரிட்டால் அதற்கு பிராயச்சித்தமும் உண்டு. அதாவது அர்க்யம் நான்கு ஆவர்த்தியும், தேவி மந்திரம் நூற்றெட்டு ஆவர்த்தியும செய்தல் வேண்டும. எந்த வேளைக்கு எந்தக் கர்மமோ, அந்தக் கர்மத்தை அந்த வேளைக்குரிய சந்தியாதேவியை உபாசித்துச் செய்ய வேண்டும்.

வீட்டிலேயே சந்தியாவந்தனங்களைச்செய்தால் அது சாதாரண மாகும்; பசுத்தொழுவத்தில் செய்தால் அது மத்திமம்; ஆற்றங் கரையில் செய்தால் உத்தமம்; தேவியின் ஆலயத்தில் செய்தால் மிக மிக உத்தமம். சந்தியாவந்தனங்களால் உபாசிக்கப்பட வேண் டியவன் தேவியாக இருப்பதால், மூன்று சந்தியையும் தேவியின் ஆலயத்தில் செய்தால் அதனால் ஏராளமான பலன் கிடைக்கும். அந்தணர்களுக்கு மேலான தெய்வம் தேவியைவிட வேறு எதுவு மில்லை. 'விஷ்ணுரூபத்தை உபாசிப்பதும் சிவரூபத்தை உபாசிப் பதும் நிரந்தரமல்ல' மகாதேவியான காயத்திரியை உபாசிப்பது தான் நிலையானது! என்று வேதமும் எடுத்துரைக்கிறது. ஆகை யால், காயத்திரி தேவியை அருச்சிப்பதே சகல வேதசாரமாகும். அனைவருக்கும் உபாசனமூர்த்தி வேதமாகவும் ஆதி சக்தியுமாகவும் காயத்திரி தேவியாகவே இருப்பதால்! எல்லோரும் சாக்தர்களே தவிர, எவரும் சைவர்களோ வைஷ்ணவர்களோ அல்ல!

அந்தணரனைவரும் ஆசமனமும் பிராணாயாமமுஞ் செய்து, 'கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், ஸ்ரீதரன், ஹ்ருஷிகேசன், பத்மநாபன், தாமோதரன், சங்கர்ஷணன், வாசுதேவன், பிரத் யும்னன், அநிருத்தன், புருஷோத்தமன், அதோஷஜன், நரசிம்மன், அச்சுதன், ஜனார்த்தனன், உபேந்திரன், ஹரிகிருஷ்ணன்' என் னும் இருபத்து நான்கு நாமங்களையும் ஓங்கார பூர்வமாகவும் ஸ்வாஹந்தமாயும் உச்சரித்து, ஜலத்தையள்ளி உட்கொண்டு நமோ என்பதை இறுதியாகக் கொண்டு தொடவேண்டும். பிறகு, அந் நாமங்களில் கேசவாதி மூன்று மந்திரங்களால் ஆசமனஞ் செய்து.



பிராணாயாமம்

அதன் பின்னுள்ள இரண்டு மந்திரங்களால் முகத்தைச் சுத்தம் செய்து, அதன் பின்னுள்ள இரண்டு மந்திரங்களால் மார்ஜனமும், அதன் பின்னுள்ள ஒவ்வொரு மந்திரத்தால் கை, சிரசு, பாதம் ஆகியவற்றில் நீர் தெளித்து, இவ்விதம் பன்னிரண்டும் போக, அதன் பின்னுள்ள சங்கர்ஷணாதி பன்னிரண்டு நாமங்களால் பன்னிரண்டு இடங்களைத் தொட வேண்டும்.

ஆசமனம் செய்யும்போது இடது கையால் ஜலத்தைத் தொட்டுக் கொண்டே வலது கையிலுள்ள சுண்டு விரலையும் பெருவிரலையும், நீக்கி, அந்தக் கையைப் பசுவின் காதுபோல வைத்து அதில் உளுந்தளவு ஜலத்தைக்கொண்டு ஆசமனம்செய்ய வேண்டும். ஆசமன தீர்த்தம் ஓர் உளுந்தின் அளவுக்குக் குறைவாகவும் அதிகமாகவும உட்கொண்டால் அது சுராபானம் செய்வதுபோலாகும். இவ்விதம் கிரமப்படி ஆசமனம் செய்த பிறகு, பிராணாயாமம் செய்யவேண்டும். பிராணாயாமம் செய்யும் முறையாவது: மூக்கின் தக்ஷிண நாடியைக் கட்டை விரலாலும் உத்தர(வட) நாடியைச் சிறு விரல் மோதிர விரல்களாலும் பிடித்துக் கொண்டு, நடுவிரல் சுட்டு விரல்களை விட்டுப் பிரணவத்தை ஸ்மரித்து, நான்கு பாதத்தோடும் கூடிய காயத்திரியைச் சிரோமந்திரத்துடன் உச்சரித்து, தக்ஷிண நாடியால் வாயுவை ரேசித்து, வாம (இடது) நாடியால் உதரத்தில் பூரித்து, கும்பகத்தால் (மூச்சைக் கட்டுதலால்) தாரணம் செய்ய. வேண்டும்.

இவ்விதம் ரேசக, பூரக, கும்பகங்களைச் செய்வதைத்தான் சகல சாஸ்திரங்களும் மகரிஷிகளும் யோகிகளும் பிராணாயாமம் என்று கூறுகின்றனர். ரேசகம் என்பது வாயுவை வெளியில் விடுவதாகும். பூரகம் என்பது சுத்த வாயுவை பூரிப்பதாகும். கும்பகம் என்பது வாயுவை விடுவதும் பூரிப்பதுமில்லாமல் சமமாக நிறுத்துவதாகும். பூரகஞ் செய்யும்போது நாபியின் (கொப்பூழின்) மத்தியில் கருங்குவளை இதழ் போன்ற கரிய நிறமும் நான்கு கைகளுமுள்ள விஷ்ணு மூர்த்தியைத் தியானிக்க வேண்டும். கும்பகஞ் செய்யும் போது தாமரை ஆசனத்தில் வீற்றிருக்கும் சிருஷ்டிகர்த்தாவான நான்கு முகப் பிருமாவை இருதயத் தாமரையில் வைத்து தியானிக்க



ஆசமனம்

வேண்டும். ரேசகஞ் செய்யும் போது சுத்த ஸ்படிகம் போல்பிர காசிப்பவரும் நிர்மலரும், பாபநா சரும் மஹேஸ்வரருமான சங்க ரரை நெற்றியில் தியானிக்க வேண்டும். அந்தத் தியானத் தால், பூரகத்திற்கு விஷ்ணுபதத் தையும், கும்பகத்திற்குப் பிரம்ம பதத்தையும் ரேசகத்திற்கு பரம் பொருளான சிவசாயுஜ்யத்தை யும் அடையலாம். முன்பு விஷ்ணுவின் நாமங்களால் சொல்லிய ஆசமனுதிகள் புரா விதித்துள்ளனவாகும்.

சகல பாவங்களையும் நீக்கக்கூடிய சிரௌதாசமனத் தை விளக்கி கூறுகிறேன். முதலாவதாகப் பிரணவமந்தி ரத்தை உச்சரித்து, காயத்திரியின் பாதம் ஒவ்வொன்றுக்கு வியா கிருதியுடன் உச்சரித்தால் அது சிரௌதரசமனமாகும். வியாகிருதி யின் பொருட்டுக் காயத்திரியை சிரசோடு கூடியதாகவும் ஒவ் வொன்றும் பிரணவத்தோடு கூடியதாகவும் மும்முறை உச்சரித்து, ஐந்து விரல்களினுல் மூக்குநுனியை பிரணவத்தால் அழுத்திஞல் அது பிராணுயாமமாகும். இந்தப் பிராணுயாமம், கிரகஸ்தாசிர மிகளுக்கும் வானப்பிரஸ்தர்களுக்கும் பாவமனைத்தையும் நீக்கவல்ல முத்திரை எனவும் சிறுவிரல் மோதிரவிரல், பெருவிரல்களால் பிடிப் பது யதிகளுக்கும் பிரமச்சாரிகளுக்கும் பாபத்தை நாசம் செய்யும் முத்திரை என்றும் கூறப்பட்டிருக்கிறது.

• ஆபோஹிஷ்டா என்னும் மூன்று மந்திரங்களை உச்சரித்து, தர்ப்பையோடு கூடிய ஜலத்தால், அம்மூன்று மந்திரங்களின் இறுதி யிலோ, அல்லது அந்தந்த மந்திரத்தின் இறுதியிலோ நிதான மனத்துடன் தன்னைப் புரோக்ஷணம்(நீர்தெளித்தல்) செய்துகொள்ள வேண்டும். ஒன்பது பிரணவத்தோடு கூடிய ஆபோஹிஷ்டை மந்திரங்களால் புரோக்ஷணஞ் செய்தால் (நீர் தெளித்தால்) ஒரு வருஷம் செய்த பாபங்கள் ஒழியும். பிறகு ஆசமனஞ்செய்து, சூரிய மந்திரத்தால் ஓர் ஆசமனமும் செய்யவேண்டும். அதனுல் அந்தக் கரணத்தையொட்டிய பாபங்கள் அகன்றொழியும். பிரணவ சம்பந்த மான வியாகிருதிகளுடன் கூடிய காயத்திரியினுலும் பிரணவ சகித மான ஆபோஹிஷ்டை என்ற சூக்தத்தாலும் மார்ஜனம் (சுத்தி கரிப்பு) செய்யவேண்டும். கோகர்ணுகாரமான வலது கையில் ஜலத்தை எடுத்து, மூக்குவரையிலும் தூக்கி இடது குக்ஷியில்



உபஸ்தானம்

பாபத்தை நினைத்து, புருஷன் கிருஷ்ணவர்ணன்' என்று உச்சரித்து த்ருபதயருக்கையும் உச்சரித்து, இடது மூக்கின் வழியாக மூச்சுவழியே அந்தப் பாபம் கை ஜலத்தில் வந்ததாகப் பாவித்துக் கண்களால் அதைப்பாராமல், இடது பக்கத்திலிருக்கும் கல்லின் மீது விட்டுத் தன் தேகம் பாபம் இல்லாதது என்று பாவித்துக் கொள்ள வேண்டும். பிறகு எழுந்து, இருகால்களையும் சமமாகச் சேர்த்து வைத்துக் கொண்டு, சுட்டுவிரலில் பெருவிரல் சேராதபடி விலக்கி, சூரியனைப் பார்த்து, காயத்திரி மந்திரத்தால் அபிமந்திரித்த ஜலத்தை அஞ்சலியாக எடுத்து, விடியற்கால சந்தியாவந்தனத்திலும் சாயங்கால சந்தியவந்தனத்திலும் மூன்று தரமும் மத்யான்னத்தில் ஒருமுறையும் அர்க்கியம் விட்டு, சூரிய மந்திரம் சொல்லிய வண்ணம் பிரதக்ஷிணம் செய்யவேண்டும். அர்க்கிய ஜலத்தை விடியற்கால ஸந்தியில் சற்று வளைந்தும், மத்தியான்னச் சந்தியில் தண்டம்போல் நிமிர்ந்து நின்றும், மாலைச் சந்தியில் ஆசனத்திலிருந்தும் அர்க்கிய ஜலத்தைவிடவேண்டும். இந்த அர்க்கிய ஜலத்தை எடுத்து, எதற்காக விடப்படுகிறது என்ற உட்பொருளையும் விளக்கிக் கூறுகிறேன், கேளும்.

''மாவீரர்களும் மகாப் பயங்கரர்களாயும் நன்றியற்றவர்களுமான முப்பது கோடி மந்தேஹா என்னும் அரக்கர்கள் சூரியனை விழுங்கிவிட ஆசைப்படுகிறார்கள். அவர்களின் ஆசையை அழிப்பதற்குததான் தேவர்களும் முனிவர்களும் சந்தியை உபாசித்து உதகாஞ்சலியான அர்க்கிய ஜலத்தை விடுகின்றனர். அர்க்கிய ஜலத்தை விட்டதுமே அந்த ஜலம் வஜ்ர உருவெடுத்து, அவ்வரக்கர்களை எரித்துவிடுகிறது. இதுதான் அதற்குக் காரணம். ஆகையால் பிராமணர்கள் நாள்தோறும் சந்தியாவந்தனம் செய்கிறார்கள். அது மாபெரும் புண்ணியத்தைத் தரும்.

'இனி விதிமுறைப்படிச் செய்கின்ற அர்க்யத்துக்கு அங்கபூதமான மந்திரமாவது: ''நான் சூர்யஜோதி ரூபமாகிவிட்டேன். இவ்வாறு ஜோதிரூபமான நான் சுக்ல ஜோதி ரூபமாயுள்ள ஜல

சொரூபியாகிவிட்டேன். பிரம்ம வடிவமான காயத்ரியே! வரந்தரு பவனே! நீ ஜப அனுஷ்டான சித்திக்காக எனது இருதயத்தில் பிரவேசிக்க வேண்டும்!'' இந்த மந்திரத்தை மிகவும் சிரத்தையுடன் உச்சரித்தவுடனேயே சந்தியாபலம் உண்டாகிவிடும். பிறகு சுத்தமான இடத்தில் ஆசனமிட்டு அதில் அமர்ந்து, வேதமாதாவான காயத்திரி தேவியை நினைத்து காயத்திரி ஜபம் செய்ய வேண்டும். அந்த ஆசனத்திலேயே பிராணுயாமத்திற்குப் பிறகு விடியற்காலச் சந்தியில் முனிவர்களால் வகுக்கப்பட்ட கேசரி முத்திரையைச் செய்யவேண்டும். அந்த முத்திரையாவது: மனமும் நாக்கும் வானத்தில் சஞ்சரிக்கும் காற்றும், கண் புருவத்துக்குள் பிரவேசித்திருப்பதாய் பாவித்தலாகும் இந்த முத்திரைக்கு ஈடான முத்திரையும் சித்தாசனத்துக்கு ஈடான வாயுவும் இல்லை. மணியோசையைப் போலப் பிரணவமந்திரத்தை உச்சரிப்பதால், அதிச்சிரத்தையோடு வாயுவை வென்று, ஸ்திரமான ஆசனத்தில் நிலையாக நின்று யான், எனது என்ற சிந்தனையற்றவனுய் ஒருமித்திருக்கவேண்டும், இனி சித்தாசனத்தின் இலக்கணத்தைக் கூறுகிறேன், கேளும்

யோனி ஸ்தானத்தைக் கால் விரலின் மூலம் அடையச்செய்து, ஆண் இனக்குறியைப் பாதத்தால் மறைத்து, மற்றொருகாலை இருதயத்தை அடையச்செய்து, ஒரே மனதினனுக இருந்து, உடலைச் சமமாக இருக்கச் செய்து தூண் போலிருந்து இந்திரியங்களை அடக்கிய நிலையில், அசைவற்ற விழிகளால் புருவ நடுவைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். இவ்வாறு இருப்பதே, 'சித்தாசனம்' என்று வழங்கப்படுகிறது. இது யோகிகளுக்குச் சுககரமானது

''நாசரஹிதையும் பிரம்மத்தோடு சேர்ந்தவளும், வேதமாதாவும் வரமளிப்பவளும் காயத்திரி சொரூபிணியுமான தேவியே! என்னிடம் நீ வந்து ஸ்தோத்திரரூபமான என் தவத்தை ஏற்றுக்கொள்வாயாக மத்தியான்னத்தில் செய்யப்பட்ட ;பாவம், அந்த மத்தியான்னப் பொழுதிலேயும், இரவில் செய்யப்பட்ட பாவம் அந்த இராப் பொழுதிலேயும் விடுபட வேண்டும்! சர்வாபரண பூஷிதையாயும், சந்தியாவித்திலா சொரூபிணியாயும், சரஸ்வதி சொரூபிணியாயும் சர்வ தேவி சொரூபிணியாயும் விளங்கும் மஹாதேவியே, உனக்கு நமஸ்காரம்'' என்றும் ''ஓஜோஸீத்'' முதலான மந்திரங்களினுல் காயத்திரி தேவியை ஆவாஹனஞ் செய்து கொள்ளவேண்டும். ''தேவியே! நான் உன்னை முன்னிட்டும் செய்யும் அனுஷ்டானங்கள் யாவும் சம்பூரணமாக முடிய வேண்டும்!'' என்று பிரார்த்திக்க வேண்டும். பிறகு, பிரம்மா, விஸ்வாமித்திரர், வசிஷ்டர் ஆகியவர்களால் உண்டான காயத்திரி சாப :விமோசனம் அவ்வவர் நாமங்களை நினைப்பதால் சித்திக்கும்.



நியாசம்

இதயக் கமலத்தின் நடுவில் புருஷப் பிரமாணராகவும் சத்யாத்மகமான ஸ்வரூபராகவும் பரமாத்ம சொரூபராகவும் சித்ரூபராகவும் விளங்கும் மூர்த்தியைத் தினசரி தியானித்தல் வேண்டும்.

— , சந்தியாவந்தனத்தின் நியாசாதிகளைச் சொல்கிறேன், கேளும். பிரணவ பூர்வமாகவும் நமோந்தமாகவும் உள்ள மந்திரங்களை உச்சரித்து, அந்தந்த இடங்களில் நியாசஞ் செய்ய வேண்டும். அதாவது பூ: என்பதால்பாதங்களையும், புவ: என்பதால் முழங்கால்களையும், ஸுவ: என்பதால் இடுப்பையும், மஹ: என்பதால் நாபியையும், ஜந: என்பதால் இருதயத்தையும், தப: என்பதால் கழுத்தையும், ஸத்யம் என்பதால் நெற்றியையும் நியசிக்கத் (தொட) வேண்டும். பிறகு தத்ஸவிது என்பதால் பெரு விரல்களையும் வரேண்யம் என்பதால் சுட்டுவிரல்களையும், பர்கோ தேவஸ்ய என்பதால் நடு விரல்களையும், தீமஹி என்பதால் மோதிர விரல்களையும் தியோயோந: என்பதால் சிறுவிரல்களையும், ப்ரசோதயாத் என்பதால் கரதலகர பிருஷ்டங்களையும் நியசிக்க வேண்டும். அதன் பிறகு பிரமஸ்வரூபமான தத்ஸவிது என்பதால் இதயத்தையும், விஷ்ணு ஸ்வரூபமான வரேண்யம் என்பதால் சிரசையும், ருத்திர வடிவான பர்கோதேவஸ்ய என்பதால் சிகையையும், சக்தி சொரூபமான தீமஹி என்பதால் கவசங்களையும், காலாத்ம சொரூபமான தியோயோந: என்பதனுல் கண்களையும் நியசிக்கவேண்டும்: ப்ரசோதயாத் சர்வாத்ம ஸ்வரூபே அஸ்திராய என்பனவற்றால் கையைத் தட்டிப் பிரணவ பூர்வமான பூ: புவ: ஸுவ: என்ற மந்திரங்களால் திக்பந்தனமும் செய்யவேண்டும்.

இனி, பாபத்தைத் துடைக்கும் அக்ஷர நியாசத்தை விளக்குகிறேன். தத் என்பதால் கால் பெருவிரல்களிலும் ஸ என்பதால் குல்பங்களிலும், வி என்பதால் கணைக்கால்களிலும், து என்பதால் ஜானுக்களிலும், வ என்பதால் தொடைகளிலும் ரே என்பதால் குத (மலவாய்) ஸ்தானத்திலும், ணி என்பதால் லிங்கத்திலும், ய என்பதால் இடுப்பிலும், ப என்பதால் நாபியிலும், ர்கோ என்பதால்


தியானம்

இருதயத்திலும், தே என்பதால் மார்பகங்களிலும், வ என்பதால் ஹ்ருதியிலும் ஸ்ய என்பதால் கண்டத்திலும், தீ என்பதால் முகத்திலும் ம என்பதால் நாக்கிலும் ஹி என்பதால் மூக்கு நுனியிலும், தி என்பதால் கண் மண்டலத்திலும், யோ என்பதால் நெற்றியிலும் நः என்பதால் கிழக்கு முகத்திலும், ப்ர என்பதால் தெற்கு முகத்திலும் சோ என்பதால் மேற்கு முகத்திலும், த என்பதால் வடக்குமுகத்திலும், யா என்பதால் தலையிலும் த் என்பதால் எங்கும் வியாபகமாகவும் நியசிக்க வேண்டும். இந்த நியாசத்தை ஜபத்தில் சிலர் விரும்புவதில்லை.

இவ்வாறு நியாசம் செய்த பிறகு மஹா :தேவியும் ஜகன்மாதாவும் மகேஸ்வர ஸ்வரூபிணியுமான காயத்திரி தேவியை செம்பருத்தி மலர் போன்ற காந்தியையுடையவள் எனவும், கௌரி எனவும், செந்தாமரையைப் பீடமாகவுடையவள் எனவும், சிவந்த சந்தனமும் சிவந்த மாலையும் அணிந்தவள் எனவும் நான்கு முகம் நான்கு கை, எட்டுக் கண்களும் வாய்ந்தவள் எனவும் சிருக், ஸ்ருவம், ஜபமாலை, குண்டிகைகளைத் தரித்திருப்பவள் எனவும் ரிக்வேதத்தை அத்யயனம் செய்பவள் எனவும் அன்ன வாகனத்தில் ஏறியமர்ந்தவள் எனவும் ஆகவநீயம் என்னும் அக்கினியில் நடுவே உறைபவள் எனவும், பிரம்ம சொரூபிணி எனவும் நான்கு பாதங்களும் எட்டு வயிறுகளும் ஏழு தலைகளும் கொண்டவள் எனவும் மகேஸ்வர ஸ்வரூபிணி எனவும் அக்னி முகத்தினன் எனவும் ருத்ர வடிவமான சிகையையும், விஷ்ணு வடிவமான சித்தமும் பிரும்ம வடிவமான கவசமும் கொண்டவள் எனவும், சாங்கியாயனம் என்னும் கோத்திரமுடையவள் எனவும், சூரியமண்டலத்தில் இருப்பவள் எனவும் பாவித்துத் தியானிக்க வேண்டும்.

அதன் பின்னர் சம்முகம், சம்புடம், விததம், விஸ்த்ருதம், இருமுகம், மும்முகம், சதுர்முகம், பஞ்சமுகம், ஷண்முகம், அதோமுகம், வியாபகாஞ்சலி, சகடம், யமபாசம், கிரிதிதம், சமமுகோன்முகம், பிரலம்பம், முஷ்டிகம், மச்சம், கூர்மம், வராகம், சிம்மகிராந்தம், மகாக்ராந்தம், முத்க்ரம், பல்லவம் எனப்படும் இருபத்து நான்கு முத்திரைகளைத் தேவிக்குக் காண்பித்து திரியம்பகரிக் என்னும் மகாபுண்ணியமயமான நூறு அக்ஷரத்தோடும் கூடிய காயத்திரி

மந்திரத்தை ஒரு முறை ஜபிக்க வேண்டும். ஓங்கார பூர்வகமாகவும் பூ: புவ: ஸுவ: என்கிற பதத்தோடு விளங்கும். காயத்திரியை யும், ஜாதவேதஸம் என்னும் ரிக்கையும் உச்சரிக்க வேண்டும். இவ் வாறு தினந்தோறும் ஜபம் செய்யும் பிராமணன் சந்தியாவந்தன பயனை முற்றிலும் அடைந்து, நன்மையடைவான்!'' என்றார் நாராயணர்.

## 17 காயத்ரி ஜபம முதலியன

நாராயணர் மேலும் தொடர்ந்து கூறலானார்: ''நாரதரே காயத்திரி மந்திரத்தின் பாதங்களைத் தனித்தனியாக ஜபிக்கவேண் டும். அதனால் பிரம்மஹத்தி தோஷங்கூடக் கழிந்துவிடும். பாதங் களைக் கூட்டி ஜபித்தால் அதுவே பிரம்மஹத்தி தோஷத்தை மூட்டு வதோடு, நூறு கற்பகோடி காலம் தலைகீழாக இருக்கச் செய்து விடும். ஆறு பிரணவத்தால் சம்புடமாகவுள்ள காயத்திரி மந்திரம் மூன்று விதமாகும் புராணங்களும் இதிகாசங்களும் தர்ம சாஸ்திரங் களும், காயத்திரியைப் பஞ்சப் பிரணவ யுக்தமாய் ஜபிக்கவேண் டும் என கூறுகின்றன. ஜபத்தின் எண்ணிக்கையில் எட்டாவது பாகத்தில் காயத்திரியின் நான்காவது பாகத்தைக் கூட்டி, பிராம ணோத்தமன் ஜபிப்பானாகில் சாயுஜ்ய பதவியையும் அடைவான். அப்படி ஜபிக்கவில்லையெனில் ஒரு பயனுமில்லை. ஆறு பிரணவத் தோடுகூடிய காயத்திரி. தவயோகிகளுக்கு ஏற்படுத்தப்பட்டுள்ளது. பிரமசாரியும் இல்லறவாசியும் மோக்ஷத்தை விரும்புவனும் துரீய பாதோ காயத்திரியா: பரோ ரஜஸே ஸாவதோம், தியானமஸ்ய பிரவஷ்யாமி ஜபஸாங்க பலப்பிரதம் என்று துரீயபதத்தையும் சேர்த்து ஜபம் செய்யவேண்டும். ஜபத்தின் பயனை முழுமையாகத் தரும்படியான தியானத்தைத் தினந்தோறும் செய்வது அவசிய மாகும்.

அதன் விளக்கம்:—மலர்ந்த தாமரையின் வடிவாகவும், சந்திர சூரிய அக்னி சொரூபமாகவும், பிரணவ சொரூபமாகவும் நினை விற்கு எட்டாததாகவும் விளங்கும் தேவதா பீடத்தை பிராமணோத் தமன் ஒருவன் தன் இருதயத்தில் கற்பனையாகப் பாவித்துக் கொண்டு, ''அசைவற்றதாகவும் பரம நுட்பவடிவமாகவும் தேஜோரூபமாகவும் விளங்கும் ஆகாசசாரமான சத்சிதானந்த ரூபம் எனக்கு மகிழ்ச்சியை உண்டாக்கட்டும்!'' என்று தியானித்து, திரிசூல முத்திரை, யோனி முத்திரை தேனுமுத்திரை, அக்ஷமாலா முத்திரை, லிங்கமுத்திரை, கமலமுத்திரை எனப்படும் ஏழு முத்திரைகளைக் காண்பித்து, சச்சிதானந்த சொரூபிணியான காயத்



காயத்ரி ஜபம்

திரியைப் பக்தி சிரத்தையோடு கும்பிட்டு, பூஜை இயற்றி "(லம்) பிருதிவியாத்மநே கந்தம் சமர்ப் பயாமி நமோநம: (ஹம், ஆகா சாத்மநே புஷ்பம் சமர்ப்பயாமி நமோநம: (யம்) வாயு வாத்மநே தூபம் சமர்ப்பயாமி நமோநம: (ரம்) வன்னியாத்மநே தீபம் சமர்ப் பயாமி நமோநம: (வம்) அமிர்தாத் மநே நைவேந்தியம் சமர்ப்பயாமி நமோநம:" என்று கைப் பெரு விரல் முதல் சிறுவிரல் வரை நிய சிக்கும் பஞ்ச உபசாரமும், (யம், ரம், லம், வம், ஹம்) என்று செய் யும் புஷ்பாஞ்சலியுமான முத்திரை களைக் காண்பித்து, அதன் பிறகு தலையும் கழுத்தும், அசையாமலும் பற்கள் மறைவாகவும் இருக்கும்படி யும் செய்து, காயத்திரி தேவியை மனத்தில் உருவகப்படுத்திக் கொண்டு, காயத்திரி மந்திரத்தை நூற்றியெட்டு உருவாகவோ, இருபத்தெட்டு உருவாகவோ, பத்து உருவாகவோ ஜபிக்கவேண்டும். இதற்கு குறைவாக நீரின் நடுவில் கூட, ஜபிக்கக்கூடாது. ஜபத்தின் முடிவில் சுரபி, ஞானம், சூர்ப்பம், கூர்மம், யோனி, பங்கஜம், லிங்கம், நிர்வாணகம் என்னும் எட்டு முத்திரைகளையும் காண்பித்து, "காசிபருக்குப் பிரியமான சொற் களையுடையவளே! நான் செய்த துதிகளில் எழுத்து, சொல், ஒலி, முதலானவற்றில் குற்றங்கள் குறைகள் இருந்தால் அவற்றை நீயே முற்றிலும் மன்னித்தருள வேண்டும்!" என்று பிரார்த்தனை செய்து, "தேவீம் உத்தமே" என்னும் மந்திரத்தைக்கூறி, விஸர்ஜனம் (வெளிவிடுதல்) செய்து, காயத்திரி சந்தஸ், விஸ்வாமித்திர ரிஷி, ஸவிதா தேவதா என்பவைகளைச் சொல்லி, விநியோகமுஞ் செய்ய வேண்டும், காயத்திரி முதலான தர்ப்பணங்களைச் செய்யத்துவங்கி, "பூ: ருக்வேத புருஷம் தர்ப்பயாமி, புவ: யஜுர்வேத புருஷம் தர்ப்பயாமி, ஸுவ: ஸாமவேத புருஷம் தர்ப்பயாமி, மஹ: அதர் வண புருஷம் தர்ப்பயாமி; ஜந: இதிகாச புராண புருஷம் தர்ப் பயாமி, தப: சர்வாகம புருஷம் தர்ப்பயாமி, சத்யம்: சத்தியலோக புருஷம் தர்ப்பயாமி, ஓம்பூ: பூலோக புருஷம் தர்ப்பயாமி, புவ: புவர்லோக புருஷம் தர்ப்பயாமி, ஸுவ: ஸுவர்லோக புருஷம் தர்ப் பயாமி, ஓம்பூ: ஏகபதாம் நாம காயத்திரீம் தர்ப்பயாமி, புவ: தவிப தாம் காயத்திரீம் தர்ப்பயாமி ஸுவ: திரிபாதம் காயத்திரீம் தர்ப் பயாமி, ஓம்பூ: புவ: ஸுவ: சதுஷ்பதாங் காயத்திரீம் தர்ப்பயாமி:

உஷஸீம் தர்ப்பயாமி, காயத்திரீம் தர்ப்பயாமி, ஸாவித்திரீம் தர்ப்பயாமி, ஸரஸ்வதீம் தர்ப்பயாமி, வேதமாதரம் தர்ப்பயாமி, பிருதிவீம் தர்ப்பயாமி, அஜாம் தர்ப்பயாமி, கௌசிகீம் தர்ப்பயாமி, சாங்கிருதம் தர்ப்பயாமி, சார்வஜிதீம் தர்ப்பயாமி காயத்திரீம் தர்ப்பயாமி'' என்று தர்ப்பணம் செய்து, தர்ப்பணத்தின் முடிவில் சாந்தியை முன்னிட்டு, ஜாதவேத 'மந்திரம், மானஸ்தோக மந்திரம், திரியம்பக மந்திரம், தச்சம்யோருதி மந்திரம் முதலானவற்றை ஜபம் செய்து, அதோதேவா என்னும் மந்திரங்களால் எல்லா அங்கங்களையும் தொட்டு, ஸ்யோநா என்னும் பிரித்வீ மந்திரத்தால் பூமியையும், கோத்ரபிரபாவங்களையும் உச்சரித்து கும்பிடவேண்டும். இந்தச் சந்தியாவந்தனத்தை, விடியற்காலத்தில் செய்யவேண்டுமென்பது விதிமுறையாகும்.

அந்தச் சந்தியாவந்தனத்திற்குப் பிறகு, அக்னிஹோத்ரஞ்செய்து, "பஞ்சாயதன பூஜாஞ்ச தத: சூர்யாத் ஸமாஹித: சிவாம் சிவம் கணபதிம், சூர்யம், விஷ்ணும், ததார்ச்சயேத், பௌருஷேணது சூக்தேன வ்யாஹ்ருத்யாவா ஸமாஹித: மூலமந்திரேணவாருர்யாத்தீஸ்சதே இதி மந்த்ரித:'' என்று பராசக்தியை மத்தியிலும், ஈசானத்தில் (வடகீழில்) விஷ்ணுவையும் அக்கினி திக்கில் ஈஸ்வரரையும், நைருதி திக்கில் விநாயகரையும் வாயு திக்கில் சூரியனையும் அமைத்து புருஷசூதே மந்திரத்திலோ அல்லது வ்யாகிருதி மந்திரத்திலோ மூல மந்திரத்திலோ தேவி ஸூக்தத்திலோ ஷோடசோபசார பூஜையைச் செய்யவேண்டும். இவ்விதம் தேவியைப் பூஜித்த பிறகு, இதர தேவர்களையும் பூஜிக்க வேண்டும். தேவி பூஜையைவிட புண்ணியம் தரும் பூஜை வேறு எதுவும் இல்லை. எனவே சந்திகள் தோறும் சந்தியோபாசனையும் பூஜையும் செய்யவேண்டும் என்று வேதத்தில் கூறப்பட்டுள்ளது. அக்ஷதையினால் (மங்கல அரிசியால்) விஷ்ணுவையும் துளசியினால் விநாயகரையும் அறுகால் துர்க்கையையும் தாழம்பூவினால் ஈஸ்வரரையும் அர்ச்சிக்ககூடாது. மல்லிகை; ஜாதி, குடமல்லிகை, பலா, கல்யாண முருக்கு, மகிழம், குறுக்கத்தி, லோத்ரம், கரவீரம், சிம்சுடா பலாசம் அறுகம்புல், அபராஜிதம், பந்தூகம், அகஸ்திய புஷ்பம், மதந்தம், சிந்துவாரம், பில்வதனம் குசமஞ்சரி மாதவீ அர்க்க புஷ்பம், மந்தாரை, தாழைமலர், கர்ணிகாரம், கதம்பகுசுமம், புந்நாகம், சம்பகம், முதலான தேவிக்குப் பிரியமான மலர்களினால் அர்ச்சனைசெய்து, தூபதீபம் காட்டி நைவேத்தியம்செய்து, மூலமந்திரத்தை ஜபம் செய்து, வேதாப்பியாசம் செய்யவேண்டும். பின்னர், தினத்தின் மூன்றுவது பகுதியில் நியமத்தோடுப் பூஜையைச்செய்து, அதை சம்பூரணமாக்க வேண்டும்!'' என்றார் நாராயணர்.

நாராயணரை நாரதமுனிவர் நோக்கி, "மகாத்மாவே! மனிதர்கள் எந்தத் தேவியை நாடிக் கிருத கிருத்யர்களாகிறார்களோ அந்த மகாதேவியின் பூஜைச் சிறப்புகளைக் கேட்கவேண்டும் என்பது என் ஆவல்!" என்று சொல்ல நாராயணர் கூறலானார்.

"நாரத முனிவரே! ஆபத்துகள் அனைத்தையும் அகற்றிப் புத்தியையும் முக்தியையும் கொடுக்கும் தேவி பூஜைமுறைகளை நீர் விரும்பியவாறே கூறுகிறேன்.

"முதலில் ஆசமனஞ் செய்து, மௌனம் பூண்டு, சங்கற்பம், பூதசுத்தி, மாத்ருகா நியாசம், ஷடங்கநியாசம் முதலானவற்றைச் செய்துவிட்டு பிறகு சங்க ஸ்தாபனமும் சாதாரண அர்க்கியமும் செய்து, அந்த அர்க்கியத்தைக் கொண்டு அஸ்திர மந்திரத்தால், பூஜைப் பொருள்களைப் புரோக்ஷித்து (நீர் தெளித்து) குருவிடம் அனுமதி பெற்று, பீட பூஜை அமைத்து, தேவியைத் தியானிக்க வேண்டும். அதன் பிறகு ஆசனாதி உபசாரங்களோடும் பக்தி விருப்போடும் பஞ்சாமிர்தத்தையும் ரச வர்க்கங்களையும், கரும்பு ரசமுடைய நூறு கலசங்களையும், மாம்பழ ரசம் முதலியவற்றையும் வேத பாராயணத்தோடு அபிஷேகம் செய்யவேண்டும் கரும்புச் சாற்று அபிஷேகத்தினால் மறு பிறப்பு என்ற பந்தம் ஏற்படாது. மாம்பழ ரசத்தினால் ஜகதம்பிகைக்கும் சரஸ்வதி, தேவி, லக்ஷ்மி தேவிக்கும் அபிஷேகம் செய்பவன் நித்தியத்துவம் அடைவான். திராக்ஷ ரசத்தினால் மகேஸ்வரியை அபிஷேகம் செய்தால் அந்த ரசத்தின் அணுக்கள் எவ்வளவோ, அவ்வளவு காலம் தேவியின் உலகத்தில் தன் குடும்பத்தோடு வாழ்வான். கற்பூரம், அகில், குங்குமப்பூ, கஸ்தூரி முதலானவற்றோடு சந்தனத்தைத் தேவிக்கு அபிஷேகம் செய்தால், நூறு பிறவிகளில் செய்த பாவங்கள் யாவும் சாம்பலாகிவிடும். பாற்குடங்களினால் பால் அபிஷேகம் செய்தால் கற்பகாலத்திற்கு, பாற்கடலில் வசிப்பான். தயிர், தேன், நெய், சர்க்கரை ஆகியவற்றால் தேவிக்கு அபிஷேகம் செய்தால் அந்தந்த கடல்களை ஆளும் செல்வாக்கு உண்டாகும். அவற்றை ஆயிரம் கலசங்களாகப் பக்தியார்வத்தோடு அபிஷேகம் செய்தால், இம்மை, மறுமைகளில் சுகத்தை அனுபவிப்பான் இவ்வாறு அபிஷேகம் செய்யும்போது வேதபாராயணம் செய்யவேண்டும். இரண்டுபட்டு ஆடைகளைச் சமர்ப்பிப்பவன், வாயுலோகத்தில் வசிப்பான். ரத்தினாபரணங்களைச் சமர்ப்பிப்பவன் குபேரனாவான். தேவியின் திருமேனியில் காஷ்மீரச்சந்தனத்தையும், நெற்றியில் கஸ்தூரி திலகத்தையும், பாதத்தில் சீமந்த சிந்தூரத்தையும்

சமர்ப்பிப்பவன், தேவர்களுக்கெல்லாம் தலைமைபூண்டு தேவேந்திரனுக்குச் சமமாய் அவனது அரியணையில் அமர்வான்.

தேவியின் பூஜைக்குரிய பலவிதமான மலர்களையும் தனக்குக் கிடைத்தவரையில் சொரிந்து பூஜிப்பவன் கைலாய வாசம்புரிவான். மூன்று தளங்களோடு அமைந்த வில்வதளத்தை, செஞ்சந்தனத்தில் தோய்த்து நமோநமோ என்று மாயாபீஜ மந்திரத்தை, நான்காவது வேற்றுமையோடு உச்சரித்து மிகவும் பக்தி சிரத்தையோடு தேவியின் திருவடித் தாமரைகளில் சமர்ப்பிப்பவன் மனுவாவான். வில்வ இலைகளால் தேவியை மிகவும், ஆர்வத்தோடு பூஜைசெய்பவன் இம்மையிலும் மறுமையிலும் துக்கப்படமாட்டான். ஜகன் மாதாவிற்கு, தூய்மையான வில்வம் கோடி சமர்ப்பிப்பவன் பிரம்மாண்டத்துக்கு அதிபதி போலாவான். புதுக் குருக்கத்தி மலர்களை அஷ்ட கந்தத்தில் தோய்த்து, கோடிக்கணக்கில் அர்ச்சிப்பவன் பிரம. லயமடைகிறான். ஜாதிமல்லிகையால் அஷ்டகந்தம் கலந்து கோடிக்கணக்கில் அர்ச்சித்துப் பூஜிப்பவன் நான்முகனாவான். இதுபோலப் பத்துக்கோடி சமர்ப்பிப்பவன். மிகவும் அரிதான விஷ்ணுத்துவத்தையடைவான். மகா விஷ்ணுவும் முன்பு இவ்வாறு அர்ச்சித்து விஷ்ணுத்வம் பெற்றவரேயாவர்.

இவ்வாறு நூறுகோடி அர்ச்சிப்பவன் ஸூத்ராத்மத்வத் நிலை எய்துகிறான். ஜபாகுசுமம், பந்தூகம், மாகனம் முதலான மலர்களால் அர்ச்சுவித்தாலும் மேற்கூறிய புண்ணிய பலன்கள் சித்திக்கும் அந்தந்தப் பருவகாலங்களில் உற்பத்தியாகும் மலர்களால், தேவியை நியமமாய் ஆண்டுதோறும் ஸ்ஹஸ்ர நாமங்களால் பக்தியோடு அர்ச்சித்துப் பூஜிப்பவன் மகாபாதக உபபாதகங்களிலிருந்து நீக்கம் பெற்று, உடல் முடிவில், தேவியின் திருவடித் தாமரைகளைச் சார்ந்து தேவதைகளோடு வாசம்புரிகிறான். இதில் ஐயம் இல்லை. காரகில், கற்பூரம், சந்தனம். சில்ஹம், நெய், குங்கிலியம் முதலானவற்றைக் கலந்து தேவிக்கு ஒருவன் தூபங்கொடுத்தால் அவனுக்கு தேவி திருக்காட்சியளித்து, மூவுலக ஆட்சியையும், தந்தருள்வாள். கற்பூரங்கலந்த தீபம் நூறோ ஆயிரமோ காட்டித் தேவி பூஜை செய்பவன் எப்போதும் சூரியலோகத்தில் வாசம் புரிவான். இதில் சந்தேகப்பட்டு விசாரிக்கத் தேவையில்லை.

"லேஹ்ய சோஷ்யம் முதலானவற்றை ஆறுசுவைகளோடு தேவியின் முன்னால் மலைபோல் நிவேதனம்செய்து மேன்மையும் மென்மையும் சுவையுமுள்ள பல்வகை கனிகளையும் தங்கப் பாத்திரத்தில் வைத்து, நாள் தோறும் நிவேதனம் செய்து தேவி பூஜை செய்தால் மஹாதேவி மிகவும் திருப்தியடைவாள் அனைத்துமே அந்தத் தேவி மயமாக இருப்பதால் மூன்று உலகமும் திருப்தியடையும். கற்பூரங்கலந்து குளிர்ச்சியாகவும் மேன்மையாகவும் சுபகரமாகவும் விளங்கும் கங்கை நீரைக் கலசத்தில் வைத்து தேவி

யின் தாகசாந்திக்காக நிவேதனம் செய்து, கற்பூரம், ஏலம், லவங்கம், முதலானவற்ருேடு முக வாசனையை ஏற்படுத்தும் தாம் பூலத்தைத் தேவிக்கு சமர்ப்பித்தால் அவள் திருப்தியடைந்து அருள் புரிவாள். பிறகு, மிருதங்கம், வீணை, முரசு, டக்கா, துந்துபி, மோக மூட்டும் ககனம் முதலான பல வாத்திய முழக்கங்களும் வேத பாராயணம், புராணம், தோத்திரம் முதலானவற்ருேடு குடை சாமரம் முதலான ராஜ உபசாரங்களும் நாள் தோறும் நடத்தி பல வகையான பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்யவேண்டும். ஸ்மரித்தவுடன் தேவி பிரசன்னமாவாள்! தாய்க்குப் பிள்ளைகளிடம் இயற்கையாகவே அன்பு இருப்பது போலவே லோக அன்னையான தேவிக்கும் தம் பக்தர்களிடம் இயல்பாகவே கருணை உண்டு! இதற்கு பக்திபூர்வமான ஒரு புராணக் கதையைக் கூறுகிறேன் கேளும்!

பொதிய மலையின் ஒரு புறத்தில் சக்கிரவாகப் பட்சி ஒன்று இருந்தது. அது ஒரு சமயம், பறந்து கொண்டே பலவிதமான நாடுகளையும் சுற்றிக்கொண்டு வந்து, அதனது பூர்வ புண்ணிய வசத்தால் முக்தித்தலமான காசி க்ஷேத்திரத்தை அடைந்து அங்கு ஜகன்மாதாவான அன்னதிரணியின் ஸ்தானத்தில் தங்கியது. அதன் பிறகு அந்த இடத்தை விட்டு நீங்காத அந்த சக்கிரவாகப் பறவை, நாள் தோறும் தேவியைச்சுற்றி பிரதக்ஷிணமாகப் பறந்து கொண்டேயிருந்தது. அதன் காலமுடிவில் அது சுவர்க்கத்தை யடைந்து, அங்கு தேவவடிவோடு இரண்டு கற்பகாலங்கள்வரை பலவிதமான போகங்களை அனுபவித்து, உன்னதமான ஒரு நல்ல க்ஷத்திரிய குலத்தில், பூர்வஞானததுடன் பிறந்தது. அவ்வாறு பிறந்ததும் பிரகதரதன் என்று பெயரும் புகழும் பெற்று, சத்திய சீலனுகவும் ஜிதேந்திரியனுகவும் முக்காலமும் அறிந்தவனுகவும் அஷ்டாங்க யோகத்தில் ஆர்வம் மிகுந்தவனுகவும் விளங்கிவந்தான் இந்த உலகில் அவன் பூர்வ ஜன்மவுணர்ச்சியுள்ளவனுக இருக் கிருன் என்பதைக் கேள்வியுற்ற பல முனிவர்கள் அவனைக் காணச் சென்றனர். அரசன் பிரகத்ரதன் அவர்களை வரவேற்று நன்கு உபசரித்தான் அப்போது அம்முனிவர்கள் அவனை நோக்கி, வேந்தே! உமக்குப் பூர்வ ஜன்மவுணர்ச்சியும் திரிகால ஞான மும் உமக்கு எந்தப் புண்ணியவசத்தால் கிடைத்தது?'' என்று கேட்டார்கள். அதற்கு அவன், ''நான் முற்பிறவியில், இழிந்த உட லுள்ள ஒரு சக்கிரவாகப் பறவையாக இருந்தேன். புண்ணியவசத் தால் ஞானமில்லாமலேயே, காசித்தலத்தில் அன்னபூரணியைப் பிரதக்ஷிணஞ்செய்து வந்தேன். அதனுல் சுவர்க்கத்தை அடைந்து, அங்கு பற்பல போகங்களையும் இரண்டு கற்பகாலங்கள்வரை அனுபவித்தேன். பிறகு, இந்தப் பூவுலகிற்குவந்து இந்த மனித உடலைப் பெற்று, திரிகால ஞானம் உள்ளவனுக இருக்கிறேன். ஜகதம்பிகையின், பாத ஸ்மரணையின் பலத்தை யாரறிவர்? இதை

நினைத்தாலே எனக்கு பக்திப் பரவசத்தில் ஆனந்தக் கண்ணீர் பொழிகின்றது. சிவ உபாசனையும் விஷ்ணுவுபாசனையும் நித்திய மானதல்ல. சக்தி உபாசனையே நித்தியமானது என்று வேதங் களில் சொல்லப்பட்டுள்ளது பராசக்தியின் திருவடிகளே நிரந்தர மாகச் சேவிக்கத் தக்கவை!'' என்று கூறினேன். அதைக் கேட்ட தும் முனிவர்கள் மலர்ந்த மனத்தோடு திரும்பிச் சென்றார்கள். தேவி பூஜையின் பலனை யாரால் தான் அளவிட்டுச் சொல்லமுடியும்? யாரால் தான் கேட்கமுடியும்? ஆனால் யாருக்கு ஜன்ம சாபல்ய முண்டோ அவர்களுக்குத் தான் தேவியிடத்தில் சிரத்தையுண்டா குமே தவிர, மற்றவர்களுக்குத் தேவியிடத்தில் சிரத்தையுண்டாவ தில்லை!'' என்றார் நாராயணர்.

## 19 மாத்யாந்நிக சந்தியாவிதிகள்

''நாரதரே! இனி, அனுஷ்டானத்தினால் அதிக நற்பலன் கொடுப்பதும் சுபகரமானதுமான மாத்யாந்நிக சந்தியாவிதியை விளக்கிச் சொல்கிறேன்; கேளும்.

''யௌவன சொரூபிணியும் வெண்ணிறத்தினளும், மூன்று கண்கள் உள்ளவளும் வரமளிப்பவளும், வரதம், அக்ஷமாலை, திரிசூலம், அபயம் ஆகியவற்றோடு கூடிய திருக்கரங்களையுடைய வளும் எருது வாகனத்தில் வீற்றிருப்பவளும், யஜுர்வேத சொரூபி யும், ருத்திர சொரூபிணியும், தமோகுணத்தினளும், புவர்லோக வாசினியும், சூரிய சொரூபிணியும், சூரிய மார்க்கத்தில் சஞ்சரிப்ப வளும்'' மாயாரூபிணியும், ஆதிதேவியுமான; சாவித்திரி தேவியை நமஸ்கரிக்கிறேன்! என்று தியானஞ் செய்யவேண்டும். பிறகு அர்க்கியப் பிரதானம், புஷ்பம் அல்லது வில்வ சகிதமாக மேல் நோக்கி சூரியனுக்கு எதிரில் விட்டு, விடியற்கால சந்தியாவந்தனத் தில் சொன்னதுபோல உபசம்ஸ்காரம் செய்யவேண்டும்

மத்தியான்ன சந்தியின்போது சாவித்திரியைச் சிலர் நாடுகிறார் கள். சம்பிரதாய விரோதமான இது காரியக்கேடு விளைவிக்கும். அதற்குரிய காரணத்தைச் சொல்கிறேன் கேளும்: சூரியனைச் சந்தி யாகாலங்களில், மந்தேஹாரு என்னும் அரக்கர் கூட்டம் விழுங்க விரும்புகிறார்கள் என்று சுருதியில் காரணம் கூறப்பட்டுள்ளது. ஆகையால் சந்திய காலங்களில் பிரணவத்தோடு கூடிய காயத்திரி மந்திரத்தினால் ஜலத்தை அபிமந்திரித்து அர்க்கியம் (மந்திர நீரை) விடுகிறார்கள். அவ்வாறு செய்யாத பிராமணன் சுருதியின் கருத் தைக் கொன்றவனாவான். ஆகர்ஷண மந்திரத்தால் புஷ்பத்தோடு, பில்வம், அறுகு முதலியவற்றோடோ சூக்தரோக்தமாய் அர்க்கியத்




அர்க்ய பிரதானம்

தைத் சிரத்தையோடு விடுகிறவனே சந்தியாவந்தன பலத்தைப் பரிபூரணமாகப் பெறுவான். இனிமேல், மாத்யாந்நிக தர்ப்பணத்தைப்புற்றிக் கூறுகின்றேன் கேளும்.

புவ: புந: புருஷம்—யஜுர் வேதம் — மண்டலம்— இரண்ய கர்ப்பம் — அந்தராத்மானம் — சாவித்ரீம்— தேவமாதரம்—சாங்கிருதிம்—சந்தியாம் — யுவதீம்— ருத்ராணீம் — நீம் ருஜாம்—ஸர்வார்த்தாறும்—சித்திகரீம் -ஸர்வ மந்திரார்த்த ஸித்திதாம் — பூ: புவ: ஸ்வ: புருஷம்'' என்பன வற்ருேடு தர்ப்பயாமி நமோ நம: என்பதை முடிவில் சேர்த்து தர்ப்பணம் செய்ய வேண்டும்.

அதற்குப் பிறகு உதுத்தியம் என்னும் சூக்தத்தாலும் சித்ரம் தேவனும் என்னும் சூக்தத்தாலும், சூரிய உபஸ்தானம் செய்து, மந்திரசாதனத்தை விரும்பி ஜபம் செய்யவேண்டும். அந்த ஜப முறையாவது—விடியற்காலத்தில் கையைநிமிர்த்தியும், மத்தியானத்தில் இருதயத்தின் மீது கையை பொருத்தியும் சாயங்காலச் சந்தியின் போது கையைக் கவிழ்த்தும், பெரு விரலால் மோதிரவிரலின் நடுரேகையிலிருந்து, சிறுவிரல் கிரமமாக சுட்டுவிரலின் அடிவரையிலுள்ள ரேகைகளைத் தொட்டுத் தொட்டு எண்ணி எண்ணி ஜபிக்க வேண்டும். இவ்விதம் கையினுல் தொட்டுச் செய்வதைக் கரமாலை என்பார்கள்.

பசு, மாதா, பிதா, சிசு என்பவர்களைக் கொன்ற பாவமும், குரு பத்தினியைக் கூடிக்கலந்த பாவமும், பிராமணரின் பூமியைத் திருடிய பாவமும், பிராமணன் மதுபானம் அருந்தும் பாவமும், மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரணங்களால் மூன்று பிறவிகளில் செய்த பாவமும் காயத்திரி மந்திரத்தை ஆயிரம் உரு ஜபித்தால் மறைந்தொழிந்துவிடும்.

காயத்திரி ஜபத்தை ஒருமுறை ஜபித்தால், நான்கு வேதங்களை ஓதிய பயனும், காயத்திரியின் பொருளைப் புரிந்துகொண்டு ஒரு

முறை ஜபித்தால் நான்கு வேதங்களின் பொருளைத் தெரிந்து, அத்தியயனம் செய்த பயனும் கிடைக்கும். இதன் மகிமையை அறியாது ஜபம் செய்தால் அது ஒரு பயனையும் தராது. வீணாகும். இதுவரை மாத்யாந்நிக சந்தியா விதியைப் பற்றிக் கூறினேன். இனி பிரம்ம யக்ஞவிதியைக் கூறுகிறேன்'' என்றார் நாராயணர்.

## 20 பிரம்ம யக்ஞமும் சாயங்காலச் சந்தியாவந்தனமும்

"நாரத முனிவரே! பிராமணன் மூன்று தடவைகள் ஆசமனம் (நீர் உட்கொள்ளல்) செய்து, உதட்டை, இரண்டு தடவை துடைத்து, ஒரு தடவை முகத்தைத் தடவி, ஜலத்தைக் கையில் எடுத்து, இரண்டு கைகளிலும் பாதங்களிலும் தெளித்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகு தன் சிரசு, கண், மூக்கு, காது, இதயம், முடி முதலான இடங்களைத் தொட்டு, வலது கையில் இரண்டு தர்ப்பையையும் இடது கையில் மூன்று தர்ப்பையையும் வைத்துக்கொள்வதோடு பூணூலிலும் சிகையிலும் ஆசனத்திலும் இரண்டு பாதங்களிலும் தர்ப்பைகளை வைத்து தேச, காலங்களைச் சொல்லி, சகல பாவ விமோசனத்தை முன்னிட்டு, "ஸூக்த ரோக்ததேவதா பிரீத்யர்த்தம் பிரம்ம யக்ஞம் செய்கிறேன்!'' என்று சங்கற்பித்துக் கொள்ள வேண்டும். பிறகு ஆரம்பத்தில் காயத்திரி மந்திரத்தை மூன்று தடவை ஜபம செய்து, "அக்நிமீளே, யதங்கேதி, அக்னிர்வை, மஹாவிரதம், ஏதத்பந்தா, விதாமகவத், இஷேத்வோர்ஜே, ஆக்ன ஆயாஹி சந்நோ தேவீ'' என்பது முதலான வேத மந்திரங்களையும் சம்ஹிதா மந்திரங்களையும் விரத மந்திரங்களையும் சாந்திரம் முதலான ஐந்து வருஷங்களைக் குறிக்கும் ஜோதிட சம்பந்தமான, 'மயரஸதஜப கௌர்க்மர' என்னும் அக்ஷரங்களோடு துவங்கும் ஜோதிடச் சூத்திரங்களையும் 'அதாதோ தர்மஜிஜ், ஞாஸா அதாதோ பிரஹ்மஜிஜ்ஞாஸா, தச்சம்யோரிதி பிரஹ்மணே நம:' என்பது முதலான வேதாந்த சூத்திரங்களையும் உச்சரிக்க வேண்டும். பிரஜாபதி பிரஹ்மாவேதா: தேவா: ரிஷய: ஸர்வாணி சந்தாம்ஸி ஓங்கார: வஷட்கார: வியாஹ்ருதய: ஸாவிததிரி காயத்திரியக்ஞா: த்யாவா பிருதிவீ அந்தரிக்ஷம் அஹோராத்ரம் ஸாங்கிய சித்தா: சமுத்திரங்கள், நதிகள், மலைகள், க்ஷேத்திரங்கள், ஔஷதிகள், ஆரண்யங்கள், கந்தர்வர்கள், அப்சரஸ்கள், சர்ப்பங்கள், பறவைகள், பசுக்கள், சாத்தியர், பிராமணர், யக்ஷர், ராக்ஷசர், பூதங்கள் என்பவற்றின் நாமங்களையும் கூறி, தேவதர்ப்பணஞ் செய்ய வேண்டும். பிறகு பூணூலை



ஜபம்

மாலையாகத் தரித்துக் கொண்டு, "பீதர்ச்சி: மத்தியமா: கிருத்ஸமத: விச்வாமித்ர: வாம தேவ: அத்ரி: பரத்வாஜ: வசிஷ்ட: ப்ரகாத: பாவமாந்ய: க்ஷுத்ர ஸூக்தா: மஹாஸூக்த: ஸநக: ஸநந்தன: ஸநாதன: சனத்குமார: கபில: சூரிநாம: ஓஹலி: பஞ்ச சீரிஷ:" என்பாரின் பெயர்களையும் கூறி, ரிஷிதர்ப்பணஞ் செய்யவேண்டும். பிறகு பூணூலை இடது பக்கத்தில் மாற்றித் தரித்துக் கொண்டு, 'சுமத்து, ஜைமினி வைசம்பாயந: பைல: ஸூத்திர யுக் பாஷ்ய: பாரத: மஹா பாரத: தர்மாசாரி:' என்பாரும் திருப்தி யடையத் தர்ப்பணம் செய்யவேண்டும். பிறகு "ஜானந்தி பாஹவி: கார்க்க: கௌதம: சாகல: பாப்ரவ்ய: மாண்டவ்ய: மாண்டூக: கார்க்க· சக்நவி: வடபா: ப்ராதிதேயி: சுலபா: மைதரேயீ: கஹோால: கௌஷிதக: மஹா கௌஷ்தக. எனபார்களுக்கும் மறுபடி 'பாரத்வாஜா: பைங்கிய: மஹாபயிங்க: சுயஜ்ஞு: சாங்கியாயன: மைதரேய: மஹைத்ரேய: பாஷ்கல: சாகல: சுஜாதவக்த்ர: ஔதவாஹி: ஸௌஜாமி: சௌநக: ஆச்வலாயந: எனபார்களின் பெயர்களையுங் கூறி, ஆசார்ய தர்ப்பணஞ்செய்யவேண்டும். அதன் பிறகு ஏகே சாஸ்மத் குலே ஜாதா: அபுத்ரா கோத்ரிணோ மிருதா: தேகிருஹ்ணந்து மயாதத்தம் வஸ்திர நிஷ்பீடனோதகம். (என குலத்தில் தோன்றி யவர்களின் கோத்திரத்தில் வந்தவர்கள், புத்திரஹீனர்களாக மாண்டவர்கள், நான் வஸ்திரத்தைப் பிழிந்து கொடுக்கும் நீரைக் கிரகித்து, திருப்தியடையுங்கள்!)" என்று யாவருக்கும் திருப்தி யுண்டாகும்படித் தர்ப்பணஞ்செய்து பிரதக்ஷிண நமஸ்காரம் செய்ய வேண்டும்,

இவ்விதம் செய்வதைத்தான் பிரம்ம யக்ஞ விதி என்பார்கள். உத்தமமான இந்த விதிப்படிச் செய்யும் சாதகன் எல்லா வேத, வேதாந்த அப்பியாசத்தாலும் அடையும் பலன்கள் அனைத்தையும் ஒருங்கே பெறுவான். அதன் பிறகு தினசரி வைஸ்வதேவம், நித்ய சிராத்தம், அதிதி பூஜை, ஆகியவற்றை செய்வித்து நாளின் ஐந்தாவது முகூர்த்த வேளையில் பசுவுக்கு இரையும் பிராமணர்களுடன் போஜனமும் செய்துவிட்டு, ஆருவது ஏழாவது முகூர்த்த வேளைகளில் புராணம் முதலானவற்றைக் கேட்டு எட்டாவது முகூர்த்த வேளையில் சாயங்கால சந்தியாவந்தனத்திற்காக, வெளியே போக வேண்டும். நாரதரே! எந்த அனுஷ்டானத்தால் மஹா மாயா சொரூபிணி காட்சியளிப்பாளோ, அந்த சாயங்காலச் சந்தியைச் சொல்கிறேன்; கேளும்.



சங்கல்பம்

யோக சாதனை புரிய விரும்பு பவன் சாயங்காலத்தில் நிலையான மன ஒருமிப்போடு, ஆசமனம் பிராணுயாமம் என்பனவற்றை செய்து, பத்மாசனமாக அசை வற்று அமர்ந்திருந்து சுருதி, ஸ்மிருதி சம்பந்தமான கர்மத் துவக்கத்தில் பிராணவாயுவைக் கர்ப்பத்தில் பூரகஞ்செய்து தியா னித்து, மந்திரத்தை உச்சரித்து பூரக, கும்பக, ரேசகங்களால் ஸலக்ஷணத்தோடு தேவியைத் தியானிப்பதான பூத சுத்திசெய்ய வேண்டும். அதைச் செய்யா மல் தியானித்தலாகாது. பிறகு சரஸ்வதி தேவியை நினைத்து விருத்த ரூபிணியாகவும், கரிய நிறத்தினளாகவும் கரிய ஆடை உடுத்தியவளாகவும் சங்குச் சக்கரம், கதை, பத்மம் ஆகியவற் றை ஏந்திய திருக்கரங்கள் கொண்டவளாகவும், கருடவாகனத் தில் அமர்ந்திருப்பவளாகவும், நவரத்ன அணிகளால் அலங்கரிக்கப் பட்டவளாகவும்—மணி மேகலையும்,உன்னத மகுடமும் பூண்டவளா கவும், நக்ஷத்திரமாக கோவைபோல் முத்துமாலை அணிந்தவளா கவும், தாடைகளில் ஒளி வீசும்படி காதுகளில் தோடுகளையணிந்த வளாகவும், பீதாம்பர தாரிணியாகவும். சச்சிதானந்த ரூபிணியாக வும், சாமவேதத்தோடு சம்பந்தப்பட்டவளாயும், சத்திய மார்க்கத் தினளாகவும், சுவர்க்க வாசினியாகவும் சூரிய மார்க்க சஞ்சாரினி யாகவும் விளங்குகிற தேவியே! நான் உனனை ஆவாஹனம் செய் கின்றேன். நீ சூரிய மண்டலத்திலிருந்து வருக'' என்று தியா னித்து, சாயஞ்சந்தியைச் செய்ய சங்கல்பம் செய்து கொள்ள வேண்டும்.

சாதகன் பரிசுத்தமான மனதோடு ஆபோஹிஷ்டா என்னும் மந்திரத்தினுல் புரோக்ஷணமும் (நீர் தெளித்தலும்) அக்னிஸ்ச என்ற மந்திரத்தால் ஆசமனமுஞ் (நீர் உட்கொள்ளலும்)செய்து இர ண்டு பாதங்களைச்சேர்த்து வைத்துக்கொண்டு, அஞ்சலியாகத் தண் ணீரைக் கரத்தில் ஏந்தி, சூரிய மண்டலத்தில் வசிக்கும் தேவதை யைத் தியானித்து, காயத்திரியையும் உச்சரித்து, சூரியப் பிரீதி யாக, அர்க்கியத்தை (மந்திர நீரை) ஜலக்கரையில் விடவேண்டும். எவனுவது அறிவிலி தண்ணீரிலேயே அர்க்கியத்தை விடுவானுயின் ஸ்மிருதி மந்திரங்களைப் புறக்கணித்தவனுகவும் பிராயச்சித்தம்


ப்ரோக்ஷணம்

செய்ய வேண்டியவனாகவும் ஆகி விடுவான் சூரிய வுபஸ்தானத்தை முன்னிட்டு, அஸாவாதித்யஎன்றமந்திரத்தை உச்சரித்துப், பிரதக்ஷிணஞ்(வலம் சுற்றல்) செய்யவேண்டும் பிறகுகிருஷ்ணஜினம் (மான்தோல்)முதலியஆசனங்களில் வீற்றிருந்து தேவீத்தியான பூர்வமான காயத்திரி ஜபத்தை ஆயிரமாகவோ ஐந்நூறுகவோ செய்ய வேண்டும். விடியற்காலத்தில் உபஸ்தானம் முதலானவை எப்படிச் செய்யப் பட்டனவோ அது போலவே சாயங்காலத்திலும் செய்ய வேண்டும்.

சாயங்கால சந்தியில் செய்யப்படும் தர்ப்பணுதிகளாவன: வசிஷ்டர், ரேவாத்திரர், சரஸ்வதி, விஷ்ணு வடிவமுள்ள தேவதைகள் சந்தஸ் ஸ்வ: சாமவேதம் மண்டலம் இரண்ய கர்ப்பன் பரமாத்மா கலைமகள் காயத்திரி ஸங்கிருதி, சந்தியை, விருந்தை, வைஷ்ணவி உஷஸி, நிம்ருஜீ, சர்வ சித்திகாரிணி, சர்வ மந்திராதிபதி பூ: புவ: ஸ்வ: ஸ்வஸ்சபூருஷம் சர்வ மந்திராதிபதிகை என்பவர்களுக்குத் தர்ப்பணம் செய்வது சுருதி யுக்தமாகும். பாபத்தை அகற்றியொழிப்பதும், சகல துக்கங்கள் வியாதிகளை நீக்குவதும், மோக்ஷத்திற்கு முக்கியமானதும் சதாசாரப்பிரதானமாகவும் உள்ளதுமான சாயங்கால சந்தியாகும். இந்த சந்தியை அனுஷ்டிப்பதினுல் தேவி அருள் கூர்ந்து பக்தர்கள் வேண்டுவதையெல்லாம் சித்தி பெறச் செய்கிருள்!''

---

## 21 காயத்திரி புரச்சரணை

"நாரதரே! பாவத்தை ஒழித்துப் புண்ணியத்தை விளைவித்து இஷ்ட சித்திகளையெல்லாம் தரக்கூடிய காயத்திரி புரச்சரணத்தைப் பற்றிச் சொல்கிறேன்; கேளும்.

மலைச் சிகரத்திலோ, நதிக்கரையிலோ, வில்வமூலத்திலோ, தீர்த்துறையிலோ, பசுத் தொழுவத்திலோ, தேவாலயத்திலோ, அரசமரத்தடியிலோ, நந்தவனத்திலோ, துளசி வனத்திலோ,



புண்ணிய தலத்திலோ குரு சந்நிதியிலோ அல்லது எந்தவிடத்தில் சித்தம் லயப்படும் என்று தோன்றுகிறதோ, அந்தவிடத்திலோ, புரச்சரணை செய்தால், மந்திர சித்தியுண்டாகும்.

எந்த மந்திரோபதேசம் பெற்ருனே, அந்த மந்திர சித்தியை முன்னிட்டு புரச்சரணை செய்யவேண்டும். வியாகிருதி பூர்வமாக காயத்திரி மந்திரத்தை பதினுயிரம் உரு ஜபிக்க வேண்டும் காயத்திரி மந்திரம் இல்லாமல் நாரசிம்மம், சௌரம் வராஹம் முதலிய மந்திரங்களை ஜபித்தால், அவை பயனளிக்கா! ஏனெனில், வேத மாதாவாகவும் ஆதி சக்தியாகவும் விளங்கும் காயத்திரியைப் பிராமணர்கள் அனைவரும் உபாசனை செய்வதால் அவர்கள் சாக்தர்களே தவிர, சைவர்களோ வைஷ்ணவர்களோ அல்ல. மந்திர சோதனைக்கு முன் ஆத்ம தத்துவச் சோதனைசெய்து பிறகு தந்திர சோதனையைச் செய்து, அதன் பிறகு புரச்சரணையைச் செய்ய வேண்டும். ஆன்ம தத்துவச் சோதனைக்கு மூன்று லக்ஷம் அல்லது ஒரு லக்ஷம் உரு ஜெபிக்கவேண்டும் என்று சுருதியில் கூறப்பட்டுள்ளது. ஆன்ம சுத்திச் செய்துகொள்ளாமல் ஜபஹோமாதிகளைச் செய்தால், அவை பயன் தரா. தேகத்தைத் தவத்தால் உயர்த்திய பிதுர்க்களுக்கும் தேவர்களுக்கும் தருப்பிக்க வேண்டும். தவத்தினுல் பிரமத்தையடைவதுமின்றிச் சுவர்க்கத்தையும் அடையலாம். வீர க்ஷத்திரியன் தோள் வலிமையாலும் வைசியனும் சூத்திரனும் பண வலிமையாலும் தங்களுக்கு ஏற்படும் ஆபத்துகளிலிருந்து விடுபடுகிருர்கள். பிராமணனே ஜப ஹோமாதிகளாலேயே ஆபத்துகளிலிருந்து விடுபடுகிருன். ஆகவே, பிராமணன் ஜப ஹோமங்களை அவசியம் சிரத்தையோடு செய்ய வேண்டும். கிருச்சிரம், சாந்திராயணம் முதலிய விரதங்களில் விதிப்படி தேகத்தை வாட்டுதலே பிராமணனின் தவமாகும். சுத்தமான பிட்சா அன்னத்தை நான்கு பிரிவுகளாகப் பிரித்து, முதற் பாகத்தைப் பிரமனியருக்கும் இரண்டாவது பாகத்தைப் பசுவுக்கும் மூன்ருவதை அதிதிகளுக்கும் தந்து நான்காவதைத் தானும் தன் மனையாளுமாகச் சாப்பிட வேண்டும். இனி ஆசிரமங்களுக்கேற்றபடி போஜன விதிகளும் உண்டு. அவையாவன: கிரகஸ்தாசிரமி (இல்லறவாசி) எட்டுக் கவளமும், வானப்பிரஸ்தாசிரமி நான்கு கவளமும், பிரமச்சாரி திருப்தியடையும் வரையிலும் உட்கொள்ள

வேண்டும். கவளம் என்றால் கோழி முட்டை அளவாகும். உண வருந்தும் முன்னால் கோமேய ஜலத்தினால், ஒன்பது தடவையோ ஆறு அல்லது மூன்று தடவைகளோ சாவித்திரி ருக்கையும் அது சம்பந்தப்பட்ட மந்திரங்களையும் உச்சரித்து, கிரமப்படி இடை யறாமல் கையால் தெளிக்க வேண்டும்.

திருடன், சோரன், சண்டாளன், க்ஷத்திரியன், வைசியன் ஆகியோரிடமிருந்து பிராமணன் அன்னம் பெறுவானாயின் அவன் அதமன் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. சூத்திரரது அன்னத் தாலும், சூத்திர உறவாலும், சூத்திரனோடு சமமான ஆசனத்தில் இருப்பதனாலும், அந்தணர்கள், சூரிய சந்திரர் உள்ள வரை, கொடும் நரக வேதனைகளை அனுபவிப்பார்கள். சந்தசுகளோடு கூடிய காயத்திரியில் எவ்வளவு எழுத்துக்கள் உள்ளனவோ, ஒவ் வொன்றுக்கும் ஒவ்வொரு லக்ஷஞ் செய்ய வேண்டும் என்பது விஸ்வாமித்ர மகரிஷியின் கருத்தாகும். புரச்சரணை செய்யாத மந்திரமானது உயிரற்ற உடல் போல் சகல கர்மங்களிலும் பயனற்ற தாகி விடும். ஆனி, ஆடி, புரட்டாசி, தை மாதங்களும், மல மாதங்களும், செவ்வாய், சனி, வியதிபாதம், வைத்ரு யோகங்களும், சதுர்த்தி, சஷ்டி, அஷ்டமி, நவமி, திரயோதசி, அமாவாசை திதிகளும் சாயங்காலம் ராத்திரிக் காலங்களும், பரணி, கிருத்திகை, திருவாதிரை, ஆயில்யம், கேட்டை, அனுஷம், சிராவணம் ஜன்ம நக்ஷத்திரம் ஆகிய நக்ஷத்திரங்களும் மேஷம், கடகம், துலாம், மகரம், கும்பம் முதலிய லக்னங் களும் புரச்சரணை செய்வதற்குரிய காலங்கள் அல்ல. சந்திர பலம், நட்சத்திர பலம், சுக்லபக்ஷம் கூடியிருக்கும் காலத்தில் புரச் சரணை செய்தால் மந்திர சித்தி கிட்டும். புரச்சரணை செய்வதற்கு முன்னால் ஸ்வஸ்தி வாசனை பூர்வமாக, நாந்தி சிரார்த்தம் செய்து, பிராம்மணர்களுக்கு அன்ன, வஸ்திர தானங்கள் செய்து, அவர் களிடம் அனுமதி பெற்றுச் சிவபெருமானுக்கு எதிர் முகமாகவும் பிராமண முகமாகவும் இருந்து ஜபம் செய்ய வேண்டும். காசி, கேதாரம், மகாகாளம், நாசிக், திரியம்பகம் என்னும் பஞ்சமகா புண்ணியத் தலங்கள் பூவுலகில் தீபம் போலப் பிரகாசிக்கின்றன. அத்திருத் தலங்களில் கூர்மாசனத்தில் இருந்து ஜபம் செய்ய வேண்டும். துவக்க தினத்தில் எத்தனை எண்ணிக்கை ஜெபிக்கப் படுகிறதோ, அதே அளவில் ஜெபிக்கவேண்டும். அந்த அளவிற்குக் கூடுதலாகவோ, குறைவாகவோ ஜபிக்கக் கூடாது. நாள்தோறும், விடியற்காலம் துவங்கி மத்தியான காலம் வரை எண்ணிக்கையள வோடு மனஅசைவற்று ஒருமிக்க தூய்மையோடும் தியானத்தோடும், மந்திரப் பொருள் பற்றிய சிந்தனையோடும் விதிமுறைப்படி ஜெபிக்க வேண்டும். நெய், பால், எள், இலைகள், மலர்கள், தானி யங்கள், இனிய பொருள்கள் முதலானவற்றால் மந்திர சித்தியை முன்னிட்டு ஜப எண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்கு ஓமம் செய்ய

வேண்டும். தர்மார்த்த காம மோட்சம் எனப்படும் அறம், பொருள், இன்பம், வீடு, என்னும் நான்கினையும் நல்கும் காயத்ரி தேவி, நித்திய நைமித்திக காமியங்களினால் வழிபடத் தக்கவளாவாள். இவ்வுலகிலும் மேலுலகிலும் காயத்திரிக்கு ஈடான மந்திரம் வேறு எதுவுமில்லை. நடுப் பகலில் அதிகமாக உணவுண்ணாமல் மூன்று சந்தியா காலங்களிலும் சுத்தமாக நீராடித் தேவார்ச்சனை செய்து, ஜலத்தில் நின்று, மனத்தை மந்திரத்தில் ஒருமிக்க நிறுத்தி, ஜபத்திலேயே அறிவை நிலைக்கச் செய்து, மூன்று லக்ஷம் உரு ஜபிக்க வேண்டும். மனதை சுயேச்சையாக வேறு நினைவுகளில் விட்டுக் கொண்டே ஜபம் செய்பவனுக்கு ஜப பலச் சித்தி கிட்டாது. எதுவரையில் தன் காரியம் சித்திபெற வில்லையோ அதுவரை ஜபம் செய்துவர வேண்டும்.

இனி சாதாரண காமிய கர்மத்துக்கு உரிய விதியைக் கூறு கிறேன். சூரியன் உதயமாகும்போது, குளித்து விட்டு, தினம் ஆயிரம் காயத்திரி ஜபம் செய்ய வேண்டும். ஒரு வருஷமோ ஆறு மாதமோ, மூன்று மாதமோ அவ்வாறு ஜபம் செய்து வந்தால், அதற்குள்ளாகவே, ஆயுள், ஐஸ்வரியம், ஆரோக் கியம், செல்வம் எல்லாம் கிடைக்கும். தாமரை மலரை, நெய்யில் தோய்த்து ஹோமம் செய்தால் மோக்ஷ சித்தி கிடைக்கும். மந்திர சித்தி இல்லாமல் ஜபம், ஹோமம் செய்வது வீணாம். பால், தயிர், இவற்றால் இருபத்தைந்து லக்ஷம் ஓமம் செய்தால் திவ்ய தேகத் தோடு முக்தியடையலாம். இது மாமுனிவர் திருவாக்கு. அஷ் டாங்க யோக சித்தியும் இதனாலேயே விளையும். குருபக்தியோடும் நியதியான உணவோடும் மந்திர ஜப ஹோமங்களைச் செய்கிற வனுக்கு சகல சித்திகளும் கிடைக்கும். ஒரு நாள் பஞ்ச கவ்ய உணவும், ஒரு நாள் காற்றுணவும், ஒரு நாள் பிராமண அன்ன போஜனமும் கொள்பவன் காயத்திரி மந்திர ஜப பலனை அடையப் பெறலாம். கங்கையின் நடுவே நின்று, கங்கை நீரை உட் கொண்டு நூறு காயத்திரி ஜபம் செய்பவன் சகல பாவங்களிலிருந்து விடுபட்டு, சாந்திராயண விரதங்களை அனுஷ்டித்த பலனைப் பெறுவான். க்ஷத்திரிய மன்னனும் பிராமணனும், தன் வீட்டி லிருந்தே இந்தத் தவத்தைச் செய்யலாம். பிரமசாரி, கிரகஸ்தன், வானப் பிரஸ்தன், ஆகியவர்கள் அவரவருக்குரிய விதிக் கிரமப் படிச் செய்தால் பயனுண்டாகும். மோக்ஷத்தை விரும்புபவன் வேத விதிப்படியோ, ஸ்மார்த்த விதிப்படியோ அக்னி கார்யாதி ஆசாரங்களைச் செய்ய வேண்டும். பிரம்மச்சாரி இந்த விரதத்தை மேற்கொண்டால் பழங்கள், கிழங்குகள், ஜலம், எட்டுக் கவளம் சுத்தமான பிக்ஷான்னம் இவற்றில் ஏதாவது ஒன்றைப் புசித்துத் தொடங்க வேண்டும். இவ்விதம் செய்தால் மந்திர சித்தி கிட்டும். பரம தரித்திரனும், 'வறுமையிலிருந்து விடுபடுவான். இதைக் கேட்பவர் மகத்தான சித்தி பெறுவார்'' என்றார் நாராயணர்.

# வைஸ்வ தேவம், பிராணுக்கினி ஹோத்ரம் முதலியன செய்யும் முறைகள்

"நாரதரே! காயத்திரி புரச்சரண விதியை நான் சொன்ன போது பிரம்ம வைஸ்வதேவத்தின் விதி முறைகளும் என் ஞாபகத்திற்கு வந்தன. ஆகையால் அதைப் பற்றியும் சொல்கிறேன். தேவயக்ஞம், பிரம்ம யக்ஞம், பூத யக்ஞம், பிதுர் யக்ஞம் மானுஷ யக்ஞம் என யக்ஞங்கள் ஐந்து வகை யுண்டு. அவை, கிரகஸ்தனுல் செய்யப்படும்(விறகு எரித்தல், மிளகாய் அரைத்தல், மெழுகுதல் முதலான) ஐவகைப் பாவங்களை அகற்றுவதற்காக அமைக்கப்பட்டவை. வைஸ்வ தேவத்தை குண்டத்திலோ, தண்டிலத்திலோ தான் செய்ய வேண்டும். அதை அடுப்பிலும் இரும்புப் பாத்திரத்திலும் வெற்றுத் தரையிலும் விறட்டியிலும் செய்யலாகாது. தேவர்கள் அக்னி முகமாயிருப்பதால் வைஸ்வ தேவாக்னியை கையினுலோ முறத்தினுலோ மான் தோலாலோ விசிறி எரிய வைக்கக் கூடாது. முறத்தால் வீசினுல் தன நாசமும், ஆடையினுல் வீசினுல் வியாதியும், கையினுல் வீசினுல் சாவும் நேரிடும். ஆகையால் முகத்தினுல் ஊதியே வீசி எரியச் செய்தால்தான் கர்மம் நிறைவேறும். தயிர், நெய், கிழங்கு, காய், பழம் தண்ணீர் முதலானவற்றுலும் அவை இல்லாதபோது விறகு, கிழங்கு, புல், முதலியவற்றைக் கொண்டும் ஹோமஞ் செய்யலாம். மேற்கூறியவைகளை நெய்யினுல் தெளித்தே செய்ய வேண்டும், ஓம திரவியங்கள், காரம், புளிப்பு, தைலம், ஆகிய கலப்பில்லாது இருக்க வேண்டும். சுத்தம் செய்வதற்கு நெய் கிடைக்காவிட்டால், பாலாலோ, தயிராலோ, அவையும் கிடைக்காதபோது நன்னீரிலோ செய்யலாம். காய்ந்து பழசானவற்ருல் செய்தால் குட்ட வியாதியும் எச்சத்தைக் கொண்டு செய்தால் பகைவருக்கு ஆட்படுவதும் காரத்தால் செய்தால் வறுமையும் உப்பினுற் செய்தால் வீழ்ச்சியும் விளைந்து விடும். அக்னியின் வடக்குப் பக்கத்தில் ஒளிரும் நெருப்புத் தணலில் ஓமம்செய்ய வேண்டும் சுள்ளி (விறகு எரித்தல்) பேஷணி (மிளகாய் அரைத்தல்) உபஸ்காரம் (மெழுகுதல்), கண்டனி,) காய் கறியறுத்தல்)உதகும்பம் (நீரெடுத்தல்)என்ற ஐவகைப் பாவங்களைப் போக்குவதான இந்த வைஸ்வ தேவத்தைச் செய்யாது, உணவருந்தும், அறிவிலியான அந்தணன் மரண தேவனின் கால பாசத்தால் கட்டப்பட்டு நரகில் தலை கீழாக விழுந்து கிடப்பான்' கீரை வகை, காய் வகை, கிழங்கு வகை, கனி வகை முதலான இவற்றில் எதை ஆசாரமாகக் கருதுகிறுனே, அதையே ஓமம் செய்ய வேண்டும். வைஸ்வதேவம் செய்வதற்கும் முன்னுல் யாராவது சந்நியாசி

பிட்சை கேட்டு வர நேர்ந்தால் யக்ஞத்திற்குரிய பாகத்தை எடுத்து வேருக வைத்து விட்டுப் பிக்ஷையிட வேண்டும். இந்த யக்ஞத்தால் உண்டாகும் குற்றத்தை, பிக்ஷுவுக்குப் பிக்ஷை யிட்டும் நிவர்த்தித்துக் கொள்ளலாம். ஆனுல் பிக்ஷை கொடாத தால் உண்டாகும் தோஷத்தை வைஸ்வ தேவத்தால் நீக்கிவிட முடியாது. சமைத்த அன்னத்திற்கு சந்நியாசிகளும் பிரம்மசாரி களும் உரியவர்கள். ஆகையால் அவர்களுக்கு அன்னமிடாமல் சாப்பிடுகிறவன் சாந்திராயண விரதம் அனுஷ்டிக்க வேண்டும்.

ஒரு கிரகஸ்தன் இல்லத்தில் விருந்துண்ண வந்த அதிதி வயிறு நிரம்பாமல் அதிருப்தியோடு செல்வானுகில் அப்போதே அவன் தன் பாவத்தை கிரகஸ்தனுக்குக் கொடுத்து விட்டு கிரகஸ்தனின் புண்ணியத்தை எடுத்துச் செல்பவனுவான். வைஸ்வதேவத்திற்குப் பிறகு பசுவுக்குத் தீனி வைக்க வேண்டும். அப்போது, "கோமா தாவே! விஷ்ணுவின் அம்சத்தினளே! எப்போதும் விஷ்ணுவின் பதத்தில் இருப்பவளே! பால் கறக்கும் வரை நீ என் இல்லத்தின் தாழ்வாரத்தில் வந்திருக்க வேண்டும்!" என்று வேண்டிக் கொண்டு 'கோப்யோ நம' என்று நமஸ்கரிக்க வேண்டும். அதனுல் பசு ரூபமான காமதேனு திருப்தியுறும்.

"மாதா, பிதா, குரு, சகோதரன், மைந்தன், அடிமை, அடுத்தவன், தனக்குப் பழக்கமற்ற புதியவன், அதிதி போஜன சமயம் வருபவன், அக்னி, இவர்கள் போஷிக்கப்பட வேண்டிய வர்கள். இவற்றையுணர்ந்து இல்லறவாசி இவ்விதம் செய்தால் இம்மையிலும் மறுமையிலும் சுகங்களை அனுபவிப்பான். வறுமையில் வாடும் பிராமணன் ஐந்து யக்ஞத்தைச் செய்தால் செல்வந்தனுகி சோம யாகம் செய்த புண்ணிய பலனைப் பெறுவான்.

இனிப் பிறப்பு, இறப்பு, நரை திரை முதலானவற்றை அகற்றக் கூடிய பிராணுக்கினி ஹோமத்தைப் பற்றிச் சொல்கிறேன்.

இதன் விதியை அறிந்து கடைப்பிடிக்கிறவன் மூன்று கடன் களிலிருந்தும் எல்லா பாவங்களிலிருந்தும் நீக்கம் பெறுவான். அவனது இருபத்தொரு தலைமுறைகளில் வீழ்ந்து கிடக்கும் பாவி களும் கடைத்தேறுவார்கள்.

அதைச் செய்யும் முறை: இதயத்தைக் கீழ் அரணியாகவும், மனத்தைக் கடைகிற மத்தாகவும், பிராண வாயுவைக் கயிருகவும் கண்களை அத்வரியெனும் அதிபதியாகவும் கொண்டு அக்கினியை உண்டாக்கி, சுட்டு விரல், நடுவிரல் மோதிர விரல்களோடு பெரு விரலையும் சேர்த்து அபான ஆகுதியையும், சுண்டு விரல், மோதிர விரல்களோடுச் சேர்த்து வியான ஆகுதியையும், சுண்டு விரல் சுட்டு விரல்களோடு பெரு விரலைச் சேர்த்து உதானுகுதியையும், எல்லா விரல்களையும் சேர்த்து சமானுகுதியையும் செய்து தனித்

தனியாக அன்னத்தை எடுத்துக் கொடுக்க வேண்டும். இவ்வாறு ஆகுதியைக் கொடுக்கும்போது முதலில் பிரணவத்தையும் முடிவில் ஸ்வாஹா என்பதையும் சேர்த்து உச்சரிக்க வேண்டும்.

முகத்தில் ஆகவனீயத்தையும், இதயத்தில் காருகபத்தியத்தையும் நாபியில் தக்ஷிணாக்கினியையும், நாபிக்கு அடியில் சப்யன் அவபீத்ய: என்பனவற்றையும் பாவனை செய்து, வாக்கை ஹோமஞ் செய்பவனாகவும் (ஹோதவாகவும் .பிராணனை மந்திரம்) உச்சரிப்பவனாகவும் (உத்காதாவாகவும்), கண்களை, அதிபதியாகவும் அத்வயுவாகவும் மனத்தை பிரம்மாவாகவும் அகங்காரத்தைப் பசுவாகவும் பிரணவத்தை ஆசனமாகவும், புத்தியைப் பத்தினியாகவும் கிரகஸ்தனை யாக கர்த்தாவாகவும் மார்பை வேதிகையாகவும், ரோமங்களைத் தர்ப்பைகளாகவும் கைகளை ஸ்ருஸ்ருவங்களாகவும் மனத்தைப் பிரும்மாவாகவும் (சாட்சியாகவும்), அகங்காரத்தை யாக பசுவாகவும் கொண்டு, தியானிக்க வேண்டும்.

பிரணவ மந்திரத்திற்கு சொர்ண வர்ணமான ஜாடராக்கினியை ரிஷியாகவும், சூரியனைத் தேவதையாகவும், காயத்திரியைச் சந்தஸாகவும் பாவித்து, பிராணாயஸ்வாஹா: என்று ஆகுதி வழங்கி, ஆதித்ய தேவாய நம: என்று உச்சரித்து, அபானாகுதி மந்திரத்திற்குப் பசுவின் பாலைப் போன்ற வெண்ணிறமான சிரதாக்னியை ரிஷியாகவும், சந்திரனைத் தேவதையாகவும், உஷ்ணிக்கைச் சந்தஸாகவும் பாவித்து அபானாயஸ்வாஹா: என்று ஆகுதி கொடுத்து, ஸோமாய நம: என்று உச்சரித்து, வியானாகுதி மந்திரத்திற்கு தாமரை நிறமுள்ள அக்னியை ரிஷியாகவும், அக்னி தேவனை தேவதையாகவும் அனுஷ்டைச் சந்தஸாகவும் பாவித்து, வியானாயஸ்வாஹா என்று ஆகுதி ·வழங்கி, வியானாயநம: என்று உச்சரித்து, உதானாகுதி மந்திரத்திற்கு தம்பலப் பூச்சியின் நிறமுள்ள அக்னியை ரிஷியாகவும், வாயு தேவனைத் தேவதையாகவும் ப்ருஹதியை சந்தஸாகவும் பாவித்து உதானாயஸ்வாஹா என்று உச்சரித்து, சமானாகுதி மந்திரத்திற்கு மின்னல் நிறமுள்ள அக்னியை ரிஷியாகவும், மேகத்தை தேவதையாகவும் பங்கியை சந்தஸாகவும் பாவித்து, சமானாயஸ்வாஹா என்று ஆகுதி வழங்கி, சமானவாயவே நம: என்று உச்சரித்தும், பஞ்சாகுதிகளை செய்து, ஆறுவது ஆகுதியாக வைஸ்வாநரன் என்னும் மகாக்னியை ரிஷியாகவும் காயத்திரியைச் சந்தஸாகவும் தன் ஆன்மாவையே தேவதையாகவும் பாவித்து, பரமாத்மநே ஸ்வாஹா என்று ஆகுதி கொடுத்து பரமாத்மநே நம: என்று உச்சரித்து பிராணாக்னி ஹோமம் செய்ய வேண்டும்.

"இவற்றையெல்லாம் உணர்ந்து செய்பவன். பிரம்ம சொரூபத்தைப் பெறுவான். இப்போது சொல்லியவை சுருக்கமேயாகும்" என்றார் நாராயணர்.

"நாரதரே! பிராமணோத்தமன் அமிர்தாபிதானம் என்னும் வாக்கியத்தை உச்சரித்து உண்கலத்தில் மிஞ்சிய அன்னத்தை

"ஏகே சாஸ்மத் குலே ஜாதா தாஸதாஸ் யோந்த காம்ஷிண:
தேஸர்வே திருப்தி மாயாந்து மயாதத்தே நபூதலே.

என் குலத்திலுள்ள அடிமைப் பெண்கள், அடிமையாட்கள் நான் கொடுக்கும் இந்த எஞ்சிய அன்னத்தால் திருப்தியடைக!" என்று கூறி, பூமியில் வைக்க வேண்டும். இவ்வாறே ஆபோஜன நீர் மிச்சத்தை விடும்போது 'ரௌரவே அபுண்ய நிலயே, பத்மார்புத நிவாஸினும் ஆர்த்தினம் உதகம் தத்தம் அக்ஷய்யம் உபதிஷ்டது (என்னால் கொடுக்கப்படும் இந்த மீதி நீரால் ரௌரவம் முதலான புண்ணியமற்ற இடங்களில் இருப்பவரும் திருப்தியடைந்து, யாதொரு குறைவும் இன்றி இருக்க வேண்டும்!)" என்று கூறி மிச்ச நீரை விடவேண்டும். போஜனம் செய்த பிறகு, கையில் அணிந்திருக்கும் பவித்திரத்தைப் போஜன பாத்திரத்துக்குச் செய்யும் பரிசேஷணமான மண்டலத்தில் முடியவிழ்த்துப் போட வேண்டும். அதற்கு மாறாக உண்கலத்தில் போடுபவன் பங்கி தோஷம் அடைவான். போஜனத்தின் முடிவில், ஆபோஜனம் கொண்ட பிறகு, உண் கலத்தைத் தொடக் கூடாது. ஒரு வேளைத் தொட நேர்ந்தாலும் அல்லது நாய்கள், சூத்திரர்கள் தீண்டினாலும் அன்றிரவு ஆகாரமில்லாமல் உபவாசமிருந்து மறுநாள் ஸ்நானாதி கர்மங்களை முடித்துக் கொண்டு, பஞ்சகவ்யத்தையுட் கொண்டு சுத்தி பெற வேண்டும்.

முன்சொன்ன, பிராணாகுதி ஒன்றை அனுஷ்டித்தால் அது கோடிப் பயனைத் தரும். பஞ்சப் பிராணாகுதி செய்பவன், ஐந்து கோடி யாக பலனை அடைவதோடு எண்ணற்ற பயன்களையும் அடைவான். பிராணாக்னி ஹோம விதியை அறிந்தவனுக்கு அன்ன மிடுபவனும் அதை ஏற்பவனும் சுவர்க்க பலமும் இஷ்ட சித்திகளும் பெறுவார்கள். பவித்திரம் அணிந்த கையோடு அன்னம் புசிப்பவன் ஒவ்வொரு கவளத்திற்கும் ஒவ்வொரு பஞ்சகவ்யம் கொண்ட பயனைப் பெறுகிறான்.

புரசரணை செய்பவன், மூன்று கால ஸ்நானம், பூஜை, ஜபம், தர்ப்பணம், ஹோமம், பிராமண பூஜை, பூமியில் சயனம் ஆகியவற்றைச் செய்து தரும சிந்தனையுடன் சாந்தமாகவும் நல்ல வார்த்தைகள் பேசி, இளகிய மனத்தினனாகவும் இந்திரியங்களை

ஒடுக்கியவனுகவும் இருக்க வேண்டும். பிற பெண்கள், சூத்திரன், பதிதன், தீக்ஷைக் குறையுடைபவன், குலதர்மம் கெட்டவன், நாஸ்திகன், அயோக்கியன், அசுத்தன், தேவப் பிராமண நிந்தகன், ஆசாரியரையும் குருவையும் பழித்து தூற்றுபவன், மாதா பிதாக்களை தூற்றுபவன் சண்டாளன் முதலானவர்களிடம் அவன் பேச்சு வார்த்தைகள் வைத்துக் கொள்ளக் கூடாது. குறை வாயும், இதமாயும் பிரீதியானதுமான ஆகாரத்தைப் புசிக்க வேண்டும். ஜப, ஹோம அர்ச்சனுதி காலங்களில் வணக்கத்திற்கு உரியவர்களை நமஸ்கரிக்க வேண்டும். மைதுன (ஆண் பெண் கலவி) விஷயமான மோக வார்த்தைகளைப் பேசக் கூடாது. இத் தகைய பேச்சுக்களைப் பேசுவோரோடு மனதால் கூடச் சேரக் கூடாது. அதுவே பிரம்மசரியம். இது அரசனுக்கும் கிரஹஸ் தனுக்கும் கூட விதி முறையாகும்.

இவர்கள் ஓம முன்னிலையில் கரம் பற்றிய தர்ம பத்தினியின் ருது காலத்தை யறிந்து, சிரத்தையோடு கூடிக் கலக்கும் சம் போகம் செய்ய வேண்டும். அப்படிச் செய்வது மந்திர புரஸ்சரணை நியமமாகிய பிரம்மசரிய விதிக்கு முரணன்று. ஏனென்றால், முக்கடன்களை இயற்றுமலும் புத்திரனை உற்பத்தி செய்யாமலும் யாகஞ் செய்யாமலும் மோட்சத்தை அடைய விரும்புவோன், நரகத்தையே அடைவான். அவன் பிறவி ஆட்டின் கழுத்தில் தொங்கும் அசைதாடி எதற்கும் பயன் படாது இருப்பது போலவே பயனற்றதாகி விடும். பிரமச்சரியத்தால், ரிஷி கடனையும், எள்ளைக் கொண்டு செய்யும் தர்ப்பணத்தால் பிதுர்க் கடனையும் யக்ஞத்தால் தேவ கடனையும் தீர்த்துக் கொள்வது மிக அவசிய மாகும். ஏனெனில் மனிதப் பிறவியினர் அனைவரும் அம் மூவருக்கும் கடன் பட்டவர்கள்.

"பால், காய், கனி, அவிசு, பிக்ஷான்னம், இவைகளில் ஏதாவது ஒன்றை உணவு உட்கொள்ள வேண்டும். சாந்திராயண விரதமும் அனுஷ்டிக்க வேண்டும். அதிக உப்பு, காரம், புளிப்பு, உண்ணத் தகுதியற்ற வெங்காயம் முதலியவற்றையும் தாம்பூலம், இரண்டு கால ஆகாரம் மதமதப்பு, வேத சாஸ்திரங்களுக்கு மாறு பாடாக நடத்தல், முதலானவற்றையும் விலக்கிவிட வேண்டும். சூதாடுதல், பெண்களோடு உரையாடல் தூங்குதல், வாதம் செய்தல் முதலானவற்றில் காலத்தை வீணுக்காமல் தேவதா பூஜை துதி தோத்திர வழிபாடுகளும் ஆகம சாஸ்திர விசாரணை யிலுமே காலத்தைப் பயனுள்ளதாகக் கழிக்க வேண்டும்.

1 மூன்று வேளைகள் குளித்தல், 2 பிரமசரிய விரதம், 3 மௌனம், 4 பூநித்திரை; 5 சூத்ர கர்மத் தொடர்பின்மை 6 நித்திய பூஜை 7 நைமித்திக பூஜை, 8 நித்திய தானம், 9 ஆனந்த ஸ்துதி, 10 கீர்த்தனம், 11 குரு, தேவதா பக்தி

12 ஜபம் என்னும் பன்னிரண்டையும் நாள்தோறும் செய்யும் பிராமணனுக்கு காரியங்கள் சித்தி பெறும். நாள்தோறும் சூரியனுக்கு எதிரே, ஜபமும், தெய்வப் பிரதிமைக்கு முன்னுலோ அக்கினியின் முன்னுலோ பூஜையும் செய்ய வேண்டும். ஸ்நானம், பூஜை, ஜபம், தியானம், ஹோமம், தர்ப்பனம் ஆகியவற்றை எதையும், விரும்பாத தூய மனதோடு செய்து தேவதையிடம் நிஷ்காமமாக அர்ப்பணிக்க வேண்டும். இதுவே புரஸ்சரணையாகும்· இவற்ருல், சித்திகள் கைகூடும்.

அக்கர்மங்களுக்குரிய விவரங்களைக் கூறுகிறேன். கர்ம சித்திக்கு புரஸ்சரணேயே காரணமாக இருப்பதால் அதைத் தொடங்கும்போது பிராஜாபத்திய கிருச்சரம் அனுஷ்டித்து, க்ஷவரம், ஸ்நானம் முதலான அன்ருடக் கர்மானுஷ்டானங்களை யெல்லாம் முடித்து, இரவிலும் பகலிலும் மௌனமும் சத்ய விரதமும் கடைப்பிடித்து பவித்திரங்களான வியாகிருதிகளையும் சாவித்திரியையும் பிரணவத்தோடு ஜபம் செய்து பிறகு சுத்தமும் பாவனமுமான ஆபோஹிஷ்டாதி சூக்தங்களையும் மங்களகரமான பாவமான்ய சூக்தங்களையும் கர்மத்திற்கு முன்னுலும் பின்னுலும் உச்சரிக்க வேண்டும். ஜபம் ஆயிரம் உருவோ அல்லது நூருே அல்லது பத்தோ உருச் செய்ய வேண்டும். ஓங்கார பூர்வமாக வியாகிருதிகளையும் சாவித்திரியையும் ஜபிக்க வேண்டும் சந்தஸ் இவ்வாறு தர்ப்பணம் செய்வதோடு, ஆசிரியர், முனிவர், சந்தஸ் தேவதைகளுக்கும் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

பிராஜாபத்தியம், சாந்தபனம், பராகம், சாந்திராயணம்› கிருச்ரங்கள் என்பன ஐம்பெரும் தீவினைகளையும் தப்த கிருச்சரம் எல்லா தீவினைகளையும் நொடியில் நீக்கி விடும்

பிரஜாபத்தியம்: மூன்று நாட்கள் பகலிலும், மூன்று நாட்கள் இரவிலும் மூன்று நாட்கள் யாராவது கொடுப்பதையும் சாப்பிட்டும் மூன்று நாட்கள் சாப்பிடாமலும் உண்ணு விரதம் அனுஷ்டிப்பதாகும்.

சாந்தபனம்: ஒரு நாள் பஞ்ச கவ்யத்தை அருந்தி ஒரு நாள் உபவாசமாய் இருப்பதாகும்.

மகாசாந்தபனம்: மூன்று நாட்கள் ஒவ்வொரு கவளம் அன்னம் மட்டும் உண்டு. மூன்று நாட்கள் உபவாசம் இருப்பதான அதி திருச்சரத்தைப் போல் மூன்று தடவைகள் அனுஷ்டிப்பதாகும்.

பராகம்: பன்னிரண்டு நாட்கள் உபவாசம் இருப்பதாகும். இது சகல பாபங்களையும் நீக்கி விடும்.

தப்தகிருச்ரம்: நீர், பால், நெய், வாயு, இவற்றை மும்மூன்று நாட்கள் சூடாகப் புசித்தலாகும்.

சாந்திராயணம்: சுக்கிலபக்ஷப் பிரதமை முதல் ஒவ்வொரு கவளமாக அதிகப்படுத்திப் புசித்தும், கிருஷ்ணபக்ஷத்தில் ஒவ்வொரு கவளமாகக் குறைத்து புசித்தும், அமாவாசையில் உபவாசமாக இருத்தல்.

சிசு சாந்திராயணம்: மூன்று சந்திகளிலும் நீராடிக் காலையில் நான்கு கவளமும் மாலையில் நான்கு கவளமும் ஏழு தினங்களுக்குப் புசித்தலாகும்.

யதி சாந்திராயணம்: மத்தியான்னத்தில் எட்டுக் கவளம் ஏழு நாட்களுக்குப் புசித்தலாகும்.

இதை ருத்திரர்களும் ஆதித்யர்களும் வசுக்களும் அனுஷ்டித்து அவரவருக்குரிய பதவிகளையடைந்தனர். இந்த விரதத்தை ஏழு நாட்கள் விதிப்படிச் செய்தால் தோல், ரத்தம், மாம்சம், நரம்பு, மேதை, மச்சை, வபை என்பன பரிசுத்தமடையும். புரஸ்சரணை செய்பவன் சுத்தமாகவும், சத்தியசீலனாகவும் ஜிதேந்திரியனாகவும் விளங்கி, இக்கிருச்சிரங்களில் ஒன்றை யனுஷ்டித்தால், இஷ்டசித்திக்களை அடையலாம். அதில் ஐயமில்லை. ஒவ்வொரு விரதத்துக்கும் மத்தியான போஜனமாவது இரவுப் போஜனமாவது மும்மூன்று நாட்கள் செய்யவேண்டும்.

அன்னியருக்குக் கற்பிக்கக்கூடாததும் அதிரகசியமாகவும் சர்வபாவ நாசகரமாகவும், எல்லாப் பயன்களையும் தருவதாகவும், வேதசாரமாகவும் விளங்கும் தேக சோதன திரவ்யகமான, புரஸ்சரணை முறைகளைக் கூறினேன்!

## 24 சாந்திகள், நோய் நீக்க ஓமங்கள், ஜபங்கள் முதலியன

நாரத முனிவர் நாராயணனை நோக்கி, "மகாத்மாவே! இனிமேல் சாந்தியாதி கிருத்தியங்களைக் கூறியருள் செய்யவேண்டும்" என்றார். நாராயணர் கூறலானார்.

"துஷ்டர்களுக்கும் தூஷிப்பவர்களுக்கும் சொல்லக்கூடாத அதி ரகசியமான சாந்திகளைப் பற்றிக் கூறுகிறேன். பூத, பைசாச பயங்களுக்கும் தீவினைகளுக்கும், வன்னி சமித்தினால் ஹோமஞ் செய்தால் அவை நீங்கிவிடும். பாலுள்ள மரங்களின் ஈர சமித்துக்களால் ஹோமஞ் செய்தாலும் சூரிய சஞ்சாரத் திக்குகளைச்சொல்லி நீரில் தர்ப்பணம் செய்தாலும், முழங்கால் அளவு நீரில் நின்று

கொண்டு ஜபம் செய்தாலும் பூதரோகங்கள் நீங்கிவிடும் கழுத்தளவு நீரிலிருந்து ஜபித்தால், பிராண சம்பந்தமான பாபம் நீங்கிவிடும். பொன், வெள்ளி, தாமிரம், பாலுள்ள மரம், முதலானவற்றினுல் செய்த பாத்திரங்களிலோ மண்பாத்திரங்களிலோ பஞ்சகவ்யம் சேர்த்து, அதற்குரிய மந்திரங்களையும், சொல்லி ஜபம் செய்து இடது கையில் பிடித்துக் கொண்டு, பிரகாசமான தீயில், பாலுள்ள மரங் களின் சமித்துக்களைப் பஞ்சகவ்யத்தில் தோய்த்து ஆயிரம் ஆகுதி செய்து, தர்ப்பையினுல் அத்தப் பஞ்சகவ்யத்தைத் தொட்டுப் பூதம் முதலானவை பிடித்திருக்கும் நபர்கள் மீதோ, வீடுகள் போன்ற இடங்களிலோ மந்திரங்களைச் சொல்லித் தெளித்தால், அவை நிவாரணமாகும். பிறகு, தேவியைத் தியானித்துப் பலி முதலி யவற்றைக் கொடுக்கவேண்டும். இந்தப் பலியானுல் வீடு, கிராமம் பட்டணம், தலைநகரம் என்பன தோஷம் அடைந்திருந்தாலும் அந்தத் தோஷம், நீங்கிவிடும்.

பொன், வெள்ளி, தாமிரம் மண் முதலானவற்ருல் உண்டான கும்பங்களை நூலினுல் சுற்றி, நான்கு திசைகளிலிருந்து கொண்டு வந்த நீரினுல் பூஜிக்கச்செய்யவேண்டும். பிறகு மணலில் மண்டலஞ்



ஸ்ரீ சக்கரம்

செய்து, தானியங்களைப் பரப்பி, அப்பரப்பின்மீது கும்பத்தை வைக்கவேண்டும். ஏலம், சந்தனம், கர்ப்பூரம், ஜாதிமலர், பாதிரி, மல்லிகை, வில்வ இலை ஆகியவற்றை அதில் சேர்த்து, பாலுள்ள மரங்களின் தளிர்களை அதன் முகப்பில் வைத்து, தருப்பைகள் இட வேண்டும். பிறகு ஆசாரமுள்ள மூன்று பிராமணர்களைக்கொண்டு, ஆயிரம் உருக்கள், பூஜா பூர்வமாக ஜபித்து வைத்து, அந்தத் தீர்த் தத்தால் பூதம் முதலானவை பிடித்திடும் மனிதனுக்கு அபிஷேகம் செய்தால் அவன், அவற்றிலிருந்து விடுபட்டு நலம் பெறுவான். மிருத்யுரோகங்களும் நிவாரணமாகும், இதை வேந்தன் செய்தால் தீர்க்காயுளைப் பெறுவான். ஜபஞ்செய்த மூன்று பிராமணர்களுக் கும் திருப்தியாக இயன்றவரை கொடுத்து மரியாதை செய்ய வேண்டும்.

குடூசி என்ற சமித்தைப் பாலில் தோய்த்து, மிருத்யுஞ்சய மந்திரத்தால் ஹோமம் செய்தால், எல்லா நோய்களும் ஒழிந்து போகும். மாந்தளிரைப் பாலில் தோய்த்து ஓமித்தால் ஜ்வரமும், மாந்தளிர் அல்லது சோமலதை என்ற கொடியைக் கணுக்கள் தோறும் ஒடித்து பாலில் தோய்த்து, சூரிய மந்திரத்தைச் ;சொல்லி ஓமம் செய்தால் காச நோயும் தேன், நெய் தோய்த்து ஓமம் செய் தால் வெண்குஷ்டமும் நீங்கும். சூரியனுக்குப் பாயசமோ அவிசோ நிவேதனமாக வைத்து ஓமம் செய்து எஞ்சியதை சாப்பிட்டால் ராஜக்ஷயமும், சங்க விருக்ஷ மலரைக் கொண்டு ஓமம் செய்தால் குஷ்டமும், நாயுருவி அரிசியைக் கொண்டு ஓமம் செய்தால் அபஸ்மார நோயும், பாலுள்ள மர சமித்துக்களால் ஓமம் செய் தால் மயக்கமும், அத்தி சமித் தால் ஓமம் செய்தால் மேக நோயும் நீங்கும் தேன் கருப்பஞ் சாறுகளைக்கொண்டு ஓமம் செய் தால் பிரமேக நோயும், மதுரத் த்தாலும் கபிலைப் பசுவின் நெய்யாலும் ஓமத்தால் அம்மை நோயும், அத்தி, ஆல், அரசு என்பனவற்றால் ஓமம் செய் தால் பசு, யானை, குதிரை என் பனவற்றின் நோய்களும், அகன்று போய்விடும்.



ஸர்வ ரோகஹர சக்கரம்

வீட்டிலே தேன் கூடு அல் லது புற்று உண்டாகுமேயா னால் வன்னி சமித்து, நெய், அன்னம் முதலானவற்றைக் கொண்டு ஓமம் செய்தால்




ஸர்வ சம்க்ஷோபண சக்கரம்

அந்தத் தோஷம் நீங்கும். ஏழு தினங்கள் சீந்தல் கொடியைக் கொண்டு ஓமம் செய்தால் இடி, பூகம்பம் முதலானவற்ருல் உண்டாகும் பயங்கள் நீங்கிவிடும். தலை நகரம் முதலானவையும் நலம் பெறும். காற்று, அக்னி, பகைவர் இவற்ருல் மூளும் பயங்களை நீக்குவதற்கு மண் கட்டிகளை நூறுஉரு ஜபித்து நான்கு திக்குகளிலும் இறைத்தால் அவை நீங்கிவிடும். நன்னீரை மந்திரித்து அருந்தினுலும் விபூதியை மந்திரித்துத் தலையிலும் அணிந்தாலும், பூதம் முதலான ரோகங்களும் சகலவிதமான நோய்களும் நிவாரணமாகி தீர்க்காயுள் கிடைக்கும்.

புஷ்ப ஹோமங்களைப் பிராமணர் முன்னிலையில் செய்து அவர்களைத் தன்ருல் இயன்றளவு திருப்திப்படுத்திஞல் சம்பத்து அடையலாம். நெற்பொறியைத் தேன், நெய், கருப்பஞ்சாறு இவற்ருேடு சேர்த்து ஓமம் செய்தால் மாப்பிள்ளை விரும்பிய கன்னிகையும்

பொன்னும், அன்னத்தால ஓமம

நதிரால் ஓமம் செய்தால் அதிக தானியமும்' கரீஷப் பொடிகளால் ஓமம் செய்தால் பசுக்களும் பெறலாம். சூரியனுக்கு அன்னம், பாயசம் முதலானவற்றை நிவேதனம் செய்து ஓமம் செய்தால் எச்சத்தை புஷ்பவதியான பெண், நான்காவது நாளன்று ஸ்நானம் செய்த பிறகு, சாப்பிட்டால் அந்தப் பெண் நன் மகனைப் பெறுவாள்.

குருத்துள்ளதும் உலராததுமான சமித்துக்களை அல்லது, குருத்தும் பாலும் உள்ள மர சமித்துகளைத்தேன், நெய், கருப்பஞ்சாறுகளோடாவது அல்லது பொன்ருற் செய்த மலர் அரும்புகளைக் கொண்டோ ஓமம் செய்தால் ஆயுள், விருத்தி உண்டாகும், நெற்கதிரிஞல் நூறு ஓமங்கள் செய்தால் ஆயுள் விருத்தியும் பொன் முதலியவையும் விருத்தியடையும் தேன், பால் நெய் என்பனவற்றிலாவது கல்லால மரத்தின் சமித்து, பால், நெய், தேன் இவற்ருலாவது ஏழு தினங்கள் நூறு ஓமம் செய்தால்,




ஸர்வஸித்திப்ரத சக்கரம்




த்ரைலோக்ய மோஹன சக்கரம்

அகாரண மரணங்கள் ஏற்படா பாலையே உணவாகக்கொண்டு' மிருத்யுஞ்ஜய மந்திரத் திறைல் ஏழு தினங்கள் ஜபஞ்செய்தால் மரண பயமும், உணவில்லாமல் உபவாசமும், மௌன விரத மும் அனுஷ்டித்து மூன்று நாட் கள் ஜபித்தால் யம பயமும் நீங் கும். நீரில் மூழ்கி, நீரிலே நின்று ஜபம் செய்தால் அந்தக்கணமே மரண பயத்திலிருந்து நீக்கம் பெறுகிறான். வில்வ மரத்தின் அடியில் ஒரு மாதம் ஜபித்தால் ராஜ்ய சம்பத்தையும் வில்வத் தளிர், வேர், பழம் இவற்றோடு ஹோமஞ் செய்தால் ராஜ்யத் தையும் நூறு தாமரைகளால் ஒரு மாதம் ஜபித்தால் அரசாட்சியையும், யாவகு என்ற தானியத் தைக் கதிரோடு ஓமம் செய்தால் கிராம ஆட்சியையும், அரசமர சமித்துக்களால் ஓமம் செய்தால் போரில் வெற்றியடைந்து, அரச பதரியையும் எருக்கு சமித்துக்களால் ஓமித்தால் அகில செல்வாக் கையும் 'அடையலாம். வஞ்சியின் இலை புஷ்பங்களைப் பாலிலும் பாயசத்திலும், தோய்த்து ஏழு தினங்கள்வரை நூறு ஹோமஞ் செய்தாலும், கொப்பழம் வரை நீரில் நின்று ஏழு நாட்கள் ஜபம் செய்தாலும் புஷ்டியடையலாம். நீரில் பஸ்மத்தை நூறு செய்தால், பெருமழை நிதானப்ப டும் முருங்கை மரச் சமித்திறைல் ஓமம் செய்தால். பிரம்ம தேஜ சும், முருக்க மர மலரிறைல் ஓமம் செய்தால் சகல இஷ்டசித்தி களும், பாலால் ஓமம் செய்தால் ஞான விருத்தியும், நெய்யால் ஓமம் செய்தால் அறிவுச் சிறப் பும் கிடைக்கும். நீரை அபிமந் திரித்து அருந்திறைல் பிரமஞான மும் மலர்களால் ஓமித்தால் ஆடை முதலானவைகளும் கிடைக்கும். உப்பைத் தேனில் கலந்து ஓமம் செய்தால் இஷ்ட சித்திகள் தாறுகவே வந்தடை யும். வில்வ மலர்களைத் தேனில்




ஸர்வாசாபரிபூரக சக்கரம்

தோய்த்து ஓமம் செய்தால் விரும்பியதை உடனே அடையலாம்.

நீரில் நின்று, கையால் நீரை எடுத்து ஸ்நானம் செய்தால் மேலான புத்தி தீக்ஷண்யம், ஆயுள் விருத்தி, கவலையின்மை முதலானவற்றை அடையலாம் இத்தகைய ஸ்நானத்தை மற்றொருவருக்காக ஒருவன் செய்தாலும் மற்றொருவரோடு அவனுச் பயன் பெறலாம்.

தூய்மையான இடத்தில் ஒரு மாதம், நாளொன்றுக்கு ஆயிரம் உரு ஜபித்தால் ஆயுள் விருத்தியும் இரண்டு மாதம் ஜபித்தால் ஆயுளோடு ஆரோக்கியமும், மூன்று மாதம் ஜபித்தால் அவற்றோடு சம்பத்தும், நான்கு மாதஞ் செபித்தால் அம்மூன்றோடு பிள்ளைகள் மனைவி புகழ் முதலியவைகளும், ஐந்து மாதம் ஜெபித்தால், மகன், மனைவி, ஆயுள், ஆரோக்கியம், சம்பத்து வித்தை முதலியவைகளும் சித்திக்கும் ஜபங்களின் மாதக் கணக்கு அதிகரிக்க அதிகரிக்கும் சம்பத்துக்களும் அதிகரிக்கின்றன.



ஸர்வ ஸௌபாக்ய தாயக சக்கரம்

கைகளை உயர்த்தி, ஒரே பாதத்தில் நின்று, நிஷ்காம்யமாக ஒரு மாதம் முந்நூறு உருக்கள் நாள்தோறும் ஜபித்தால் இஷ்டசித்தி உண்டாகும். ஆயிரத்து நூற்றெட்டு உரு ஜபித்தால் எல்லாம் கிட்டும். அசைவற்ற மன ஒருமிப்போடு ஜபம் செய்தால் ஒரு மாதத்தில் மோக்ஷ பிராப்தி உண்டாகும். மூன்று லக்ஷம் ஜபித்தால் யாவுமே சித்தியாகிவிடும்.

ஒருமாதம் ஜலத்தில் மூழ்கி, நூறு உரு ஜபம் செய்தால் விரும்பிய மனோரதங்களும், மூன்று லக்ஷம் உரு ஜபித்தால் எல்லாமும் வந்தடைகின்றன. நீரில் ஒற்றைகாலில் நின்று கொண்டு கையை மேலே உயர்த்தி, நிராசையோடும்:உப்பில்லாத இராப் போஜனம் உண்டும் ஒரு வருஷம் ஜெபித்தால் ரிஷியா

வான். இரண்டு ஆண்டுகள் ஜபித்தால் வித்தையும், மூன்று ஆண்டுகள் ஜெபித்தால் மூன்றுகால உணர்வும் நான்கு ஆண்டுகள் ஜபித்தால் மகாதேவப் பிரத்யக்ஷமும், ஐந்து ஆண்டுகள் ஜபித்தால் அணிமா முதலான அஷ்டமா சித்தி களும், ஆறு ஆண்டுகள் ஜெபித்தால் விரும்பிய உருவமெல் லாம் எடுக்கும் வல்லமையும், ஏழு ஆண்டுகள் ஜபித்தால் தேவவடிவ மும் ஒன்பது ஆண்டுகள் ஜபித்தால் மனுதவமும், பத்து ஆண்டுகள் ஜபித்தால் இந்திரத்துவமும், பதினொரு ஆண்டுகள் ஜபித்தால்பிரஜா பதித்வமும், பன்னிரண்டு ஆண்டுகள் ஜபித்தால் பிரமத்வமும் சித் திக்கும். இத்தகைய தவங்கள் செய்து எல்லாவற்றையுமே அடைய லாம். சில ரிஷிகள், கனிகளையும், சிலர் கிழங்குகளையும், சிலர் சரு களையும், சிலர்பாலையும், சிலர் நெய்யையும் சிலர் சோமபானத்தையும் சிலர் பிக்ஷான்னத்தையும் அவிசையுமே புசித்து யாவற்றையும் அடைகின்றனர்.

பொன்திருட்டு, சுராபானம், குருபத்தினி சம்போகம் முதலான பாவங்கள் ஒவ்வொன்றுக்கும் தினசரி மூவாயிரம் உருவீதம் ஒரு மாதம் ஜபித்தால் அப்பாவங்கள் ஒழிந்துபோகும். இவ்வாறு காட்டில் ஒரு குடிசையிலிருந்து ஒரு மாதம் ஜபம் செய்தால் பிரம்ம ஹத்தி தோஷத்திலிருந்து நிவர்த்தியடையலாம். பன்னிரண்டு நாட்கள் நீரில் மூழ்கி, நாள்தோறும் ஆயிரம் உரு ஜபித்தால் எல்லாப் பாவங்களும் கழிந்து போய்விடும். ஒருவன் மௌனத் தோடும் நியமத்தோடும் ஒரு மாதம் பிராணாயாமத்தோடு, மூவா யிரம் உருக்கள் ஜபித்தால் மாபெரும் தீவினைகளெல்லாம் நீங்கி விடும். ஆயிரம் பிராணாயாமத்தால் பிரம்மஹத்தி தோஷம் அகலும் ஆறு முறை ரேசக பூரகங்களை அப்யசித்தால் அது ஒரு பிராணா யாமம். அது எல்லா பாவத்தையும் நீக்கும். ஆயிரம் முறை, ஒரு மாதத்திற்குள் அப்பியாசம் செய்தால், ராஜஹத்தி தோஷம் நீங்கும். தனித் தனியாகப் பதினாயிரம் உரு காயத்திரி ஜபத்தைச் செய்தால் கூடக் கூடாத பெண்களைக் கூடி மகிழ்ந்த பாபமும் களவு, கொலை, உண்ணத் தகாததை உண்ணல் முதலான பாவங்களும்நீங்கிவிடும். பிராணாயாமங்கள் நூறு செய்தால் எல்லா பாவமும் கழிந்துபோய் விடும். ஒரு மாதம் ஆரண்யத்தில் உபவாசம் இருந்து ஆயிரம் பிராணாயாமமும் மூவாயிரம் காயத்திரி ஜபமும் செய்தால் சகல பாவமும் நீங்கும். இருபத்து நான்காயிரம் பிராணாயாமம் செய்தால் கிருச்சரம் என்றும், அறுபத்து நான்காயிரம் பிராணாயாமம் சாந்திராயணத்திற்கு சமமாகும் என்றும் சொல்லப்பட்டிருககிறது. உதயாதி சந்திகளில் நூறு பிராணாயாமமும், நூறு காயத்திரி ஜபமும் செய்தால் எல்லாப் பாவங்களும் நீங்கும். இப்போது கூறி யவை யாவுமே சாந்தி கர்மசுத்தி என்று சொல்லப்படும்.

இது ரகசியத்திலும் அதி ரகசியமாகையால் இதைப் பாது காத்து வரவேண்டும். ஆசாரக்கிரமத்தை விதிப்படி அனுஷ்டித்

தால் துர்க்காதேவி மகிழ்ச்சியடைந்து அருள்புரிவாள். நித்ய, நைமித்திக காம்ய கர்மங்களை விதிப்படி அனுஷ்டித்து வந்தால், புத்தி முத்திப் பயன்கள் சித்திக்கும் ஆசாரம் தான் முதல் தருமம்; என்றும் அதற்குத் தலைவி சர்வேஸ்வரியான தேவி என்றும் சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டுள்ளது. இந்தச் சதா சாரத்திற்கு நிறையப் பலன் இருக்கிறது. ஆசாரமுடையவன் எப்போதும் பரிசுத்தமாயும் சுக வாசியாகவும் விளங்குவான். அவனே மிகவும் தன்யன். இது உண்மை! தேவியின் அருளை விளைவிக்கும் சதா சாரக் கிரமத்தை கேட்பவன் கூட இம்மையிலும் மறுமையிலும் மாபெரும் சம்பத்தையும் சுகத்தையும் அடைவான். இதுவரை சதாசாரத்தைப் பற்றிக் கூறினேன்!'' என்று நாராயணர் கூறினர்.



# பன்னிரண்டாவது ஸ்கந்தம்

*கம்பாதீர சராணும் கருணுகோரகித திருஷ்டி பாதாநாம்!*
*கேல்வநம் மநோமே கேஷாம் சித்பவது சித்விலாஸா நாம்!!*

## காயத்ரீ ஜபம்

நாராயணரைப் பார்த்து நாரதர், "தவ தேவரே! நீங்கள் கூறிய சதாசார விதிகளைக் கேட்டேன். சகல பாவங்களையும் நீக்கக் கூடிய மாபெரும் தேவியின் கதை யமுதம் தங்கள் வதன கமலத்திலிருந்து பெருகி வருவதையும் பார்த்தேன்! சாந்திராயணம் முதலிய விரதங்களைச் செய்வதற்கு அரிது என்றாலும் சிரத்தையோடு சிரமப்பட்டால் அவற்றையெல்லாம் செய்வது அவசியம் என்பதையும் உணர்கிறேன். ஆகையால், ஜீவர்களுக்கு திவ்ய சாதனங்களால் சாதிக்கக் கூடியதும், தேவியின் அருளையடையச் செய்வதும், நல்ல அனுஷ்டானத்தால் சித்திப்பதுமான கர்மா எதுவோ, அதனை அருள் கூர்ந்து சொல்ல வேண்டும். சாதாசார விதி முறையில் காயத்திரி ஜபத்திற்கு எந்த விதிக்கிரமம் வகுக்கப்பட்டிருக்கிறது? அவ்விதிகளில் முக்கியமானது எது? அதிக புண்ணியத்தைத் தரவல்லது எது? தத்துவ சங்கையாகச் சொல்லப்பட்ட காயத்திரியின் வர்ணங்கள் எவை? இவற்றையும் இவற்றிற்கு உரிய மகரிஷிகள் சந்தஸ்கள், தேவதைகள் ஆகியவற்றையும் எனக்குச் சொல்ல வேண்டும். இவற்றைக் கேட்க நான் மிகவும் ஆசைப்படுகிறேன்!" என்றார்.

நாராயணர் அவற்றைக் கூறலானார்:

"நாரதரே! பிராமணன், இதர அனுஷ்டானங்களைச் செய்தாலும் செய்யாமற் போனாலும் காயத்திரியை மட்டும் விடாமல் செய்வானாயின் கிருத கிருத்யன் ஆவான். சந்தியா வந்தன வேளைகளில் அர்க்கியம் கொடுத்து, காயத்திரியை மூவாயிரம் முறை ஜபிப்பவன் தேவர்களாலும் போற்றிப் பூஜிக்கப்படுவான்.

நியாசங்களைச் செய்தாலும் செய்யா விட்டாலும் காயத்திரியை மட்டுமாவது நிச்சயம் ஜபிக்க வேண்டும். காயத்திரி ஜபத்தைக் கொண்டு, சச்சிதானந்த ஸ்வரூபிணியான தேவியைத் தியானித்து, பயன் கருதாது செய்தால் அந்தக் காயத்திரியின் ஓர் அக்ஷர சித்திக்கே, மும்மூர்த்திகளுக்கும் சோம, சூரிய, அக்னிகளுக்கும் சமானமாகி விடுவான். இனி காயத்திரி வர்ணத்திற்குரிய ரிஷி, சந்தஸ், தேவதை ஆகியவற்றை, முறைப்படிச் சொல்கிறேன் கேளும்:

ரிஷிகள்: 1 வாமதேவர், 2 அத்திரி, 3 வசிஷ்டர், 4 சுக்ரர், 5 கண்வர், 6 பராசரர்; 7 விஸ்வாமித்திரர், 8 கபிலர், 9 சௌநகர், 10 யாக்ஞவல்கியர் 11 பரத்துவாஜர், 12 ஜமதக்னி 13 கௌதமர், 14 முத்கலர், 15 வேத வியாசர், 16 லோமசர் 17 அகஸ்தியர், 18 கௌசிகர் 19 வத்ஸர் 20 புலஸ்தியர் 21 மாண்டுகர், 22 துர்வாசர், 23 நாரதர், 24 கஸ்யபர். இவ்விருபத்து நால்வரும் காயத்திரி வர்ணங்களுக்குரிய ரிஷிகளாகும்

சந்தஸுகள்:— காயத்திரி, உஷ்ணிக், அனுஷ்டுப் ப்ருஹதி, பங்தி, திருஷ்டுப், ஜகதீ, அதிஜகதீ, சக்வரீ, அதிசக்வரீ, திருதி, அதிதிருதி, விராட் பிரஸ்தார பங்க்தீ, கிருதி, பிரகிருதி, ஆகிருதி, விக்ரிதி, சங்கிருதி, அக்ஷர பங்க்தி பூ: புவ: ஸ்வ: ஜோதிஷ்—இந்த இருபத்து நான்கும் சந்தஸுகளாகும்

தேவதைகள்:— ஆக்னேயம், பிரஜாபத்யம், சௌம்யம், ஈஸானம், சாவித்திரம், ஆதித்யம்,பார்ஹஸ்பத்யம்,மைத்ராவர்ணம், பகதெய்வதம், ஆர்யமிமஸ்வரம், கணேசம், துவாஷ்ட்ரம், பௌஷ்ணம், ஐந்திராக்னம், வாயவ்யம், வாமதேவ்யம், மைத்ராவருணி, வைஸ்வதேவம், மாத்ருகம், வைஷ்ணவம், வத தெய்வஸும், ருத்ர தெய்வதம், கௌபேரம், ஆஸ்வினம், என்னும் இருபத்து நான்கு தேவதைகளாகும். இவற்றைக் கேட்டவுடன், நியமமாகக் காயத்திரியை ஜபஞ் செய்த பலன் கிடைக்கும்.

## 2 காயத்திரிக்குரிய சக்திகள், வர்ணங்கள், தத்துவங்கள் முத்திரைகள்

“நாரத முனிவரே! மாபெரும் தீவினைகளையும் தீர்க்கக் கூடிய இருபத்து நான்கு வர்ணங்களுக்குரிய சக்திகள், நிறங்கள், தத்துவங்கள், முத்திரைகள் முதலானவைகளை முறையாகச் சொல்கிறேன். கேளும்:

## சக்திகள்

வாம தேவி பிரியை ஸத்யா, விஸ்வா, பத்ரவிலாசினி, பிர பாவதி, ஜயா, சாந்தா, காந்தா, துர்க்கா, சரஸ்வதி, வித்ருமா, விசாலேசா, வியாபினி, விமலா தமோப ஹாரிணி, சூக்ஷ்மா, விஸ்வயோநீ, ஜயாவசா, பத்மாலயா, பராசோபா, பத்ரா, திரிபதா—இவை சக்திகளாகும்

## நிறங்கள்

சம்பகம், காசாம் பூ, பவளம், பளிங்கு, தாமரை, இளஞ் சூரியன், சங்கு, குருக்கத்தி, சந்திரன், இளந்தாமரையிலை, பத்ம ராகம், இந்திரநீலம், முத்து, குங்குமம், மை, ரக்தம், வைடூரியம், தேன், மஞ்சள், குருக்கத்திப்பால், சூரிய காந்தி, கிளியின் வால், சதபத்ரம், தாழை மல்லிகை, அலரி என்பன வற்றின் நிறங்களே, அதன் நிறங்களாகும்.

## தத்துவங்கள்

பிரிதிவி அப்பு, தேயு, வாயு, ஆகாசம் எனப்படும் ஐந்து பூதங்கள், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனப்படும் பஞ்ச தன்மாத்திரைகள், கை, கால், வாய், மலவாய், கருவாய் எனப் படும் பஞ்சகன்மேந்திரியங்கள், மூக்கு முதலான பஞ்ச ஞானேந் திரியங்கள், பிராணன், அபானன், வியானன், சமானன் எனப் படும் நான்கு வாயுக்கள் ஆக இந்த இருபத்து நான்கும் தத்துவங் களாகும்.

## முத்திரைகள்

ஸுமுகம்; சம்புடம், விததம், விஸ்ரிதம், த்விமுகம், திரிமுகம், சதுர் முகம், பஞ்ச முகம், ஷண்முகம், அதோ முகம், வியாபகாஞ் சலி, சகடம், யமபாசம், கிரதிதம், சமு கோன்முகம், விலம்பம், முஷ்டி, மச்சம், கூர்மம், வராஹம், சிம்மாக்கிராந்தம், மகா கிராந்தம், முத்கரம்' பல்லவம், திரிசூலம், ஆகிய இந்த இரு பத்து நான்கும் தனி முத்திரைகள் எனப்படும். யோனி, சுரபி; அக்ஷமாலை, லிங்கம், பத்மம், மஹா முத்திரை எனப்படும் ஆறும் நன்நான்ருக்கு ஒவ்வொரு மஹா முத்திரை எனவுஞ் சொல்லப்படும்

நாரதர் நாராயணரை நோக்கி, ''தவத் தேவரே! அறுபத்து நான்கு கலைகளிலும் ஆற்றல் மிக்கவரே! தவ யோகிகளில் உயர்ந்தவரே! எனக்குச் சில சந்தேகங்கள் உண்டு. அவற்றை என்னவென்று தாங்கள் கேட்டு விளக்கியருள வேண்டும். எந்தப் புண்ணிய கர்மத்தால் ;பாபத்திலிருந்து நீங்கி பிரம்ம சொரூபமடைவேனோ என் சரீரம் தேவதா ரூபமாகவும் மந்திர ரூபமாகவும் விளங்குமோ அந்தக் கர்மாவைப் பற்றிச் சொல்லுங்கள். அதற்குரிய விதி பூர்வமான நியாசம், ரிஷி, சந்தஸ், தேவதை, தியான விதிகள் முதலானவற்றையும் தங்களிடமிருந்து கேட்க விரும்புகிறேன்'' என்றார்.

அதற்கு நாராயணர் கூறலானார்:

''கேளும் நாரதரே! மிகவும் பரம ரகசியமான காயத்திரி கவசம் என ஒன்று உண்டு. அதை ஒருவன் மனப்பாடம் செய்தாலும் மனத்தால் சிந்தித்தாலும், எல்லாப் பாவங்களிலிருந்தும் நீக்கம் பெற்று, சகல இஷ்ட சித்திகளும் பெற்று, தேவீ சொரூபமாகிறான். காயத்திரி கவசத்திற்கு, பிரம்ம, விஷ்ணு, மஹேஸ்வர் எனும் மும்மூர்த்திகளுமே ரிஷிகள், ருக், யஜுர், சாமங், அதர்வம் எனப்படும் நான்கு வேதங்களே சந்தஸுகள். பிரம சொரூபமே தேவதை. பரமகலா காயத்திரி பீஜம், பர்சகன் சக்தி. தீய: கீலகம், மோக்ஷார்த்தமே விநியோஜனம். இந்த நியாசங்களைச் செய்த பிறகு. நான்கு வர்ணங்கள் இதயத்திற்கும், மூன்று வர்ணங்கள் சிரசிற்கும் நான்கு வர்ணங்கள் சிகைக்கும், மூன்று வர்ணங்கள் கவச மந்திரமாகத் தோள்களுக்கும், நான்கு வர்ணங்கள் விழிகளுக்கும் நான்கு வர்ணங்கள் அஸ்திர மந்திரமாகத் திக்பந்தனத்திற்குமாகக் கொண்டு நியாசம் செய்ய வேண்டும். இனி விரும்பியதையெல்லாம் வழங்கும் தியானத்தைச் சொல்கிறேன். முத்து, பவளம், பொன், நீலம், வெண்மை எனும் நிறங்களுடன் கூடிய முகத்தினளாகவும் முக்கண்ணுடையவளாகவும் சந்திரனோடு கூடிய ரத்ன மகுடம் தரித்தவளாகவும், தத்வார்த்தங்கள் நிறைந்த வர்ண சொரூபிணியாகவும்; வரதம்; அபயம்; பாசம்; அங்குசம்; வெண்ணிறக கபாலம்; சங்கு; சக்கரம் இரண்டு தாமரைகள் ஆகியவற்றைத் திருக் கரங்களில் தாங்கியவளாகவும் விளங்கும் காயத்திரி தேவியைப் பூஜிக்கிறேன் எனத் தியானிக்க வேண்டும்.

அஸ்த்யேகம் பரமம் குஹ்யம், காயத்ரீ கவசந்ததா
படநாத் தாரணா மர்த்ய: ஸர்வபாபை: ப்ரமுச்யதே!!
ஸர்வாந் காமா நவாப் நோதி, தேவி ரூபஸ்ச ஜாயதே!
காயத்ரீ கவசஸ் யாஸ்ய பிரம்ம விஷ்ணு மஹேஸ்வரா:!!

ரிஷயோ ருக்யஜுஸ் ஸாமா' தர்வச் சந்தாம்ஸி நாரத!
பிரஹ்மரூபா தேவதோக்தா காயத்ரீ பரமா கலா!!
தத்பீஜ பர்க யித்யேஷா சக்திருக்தா மநீஷிபி:!
கீலகம் சதிய: ப்ரோக்தம் மோக்ஷார்த்தே விநியோஜனம்!!

சதுர்பிர் ஹ்ருதயம் ப்ரோக்தம் த்ரிபிர் வர்ணைஸ் ஸிரஸ்ம்ருதம்!
சதுர்ப் பிஸ்யாச் சிகாபஸ்சாத் த்ரிபிஸ்து கவசம் ஸ்மிருதம்!
சதுர்பிர் நேத்ர முத்திஷ்டம் சதுர்ப் பிஸ்யாத் ததஸ்ரகம்!
அதத்யானம் பிரவக்ஷ்யாமி ஸாதகா பீஷ்ட தாயகம்!!

முக்தா, வித்ரும ஹேமநீல தவளச்சாயை முகைஸ்திரீக்ஷணை:
யுக்தாமிந்து நிபத்த ரதன முகுடாம் தத்வார்த்த வர்ணாத்மிகாம்
காயத்ரீம் வரதா பயாங்குஷ கசாம் ஸுப்ரங்கபாலங்குணம்!
சங்கம், சக்ரமதார விந்த யுகளம் ஹஸ்தைர் வஹந்தீம் பஜே!!

## கவசம்

காயத்ரீ பூர்வத: பாது ஸாவித்ரீ பாது தக்ஷிணே!
ப்ரஹ்ம சந்தியாதுமே பஸ்சா துத்தராயாம் ஸரஸ்வதீ!!
பார்வதீ மேதீசம் ரக்ஷத் பாவகீ ஜலஸாயிநீ!
யாது தாநீ திசம்ரக்ஷேத் யாதுதாந பயங்கரீ!!

பாவமா நீ திசம்ரக்ஷேத் பவமான விலாஸிநீ'
திசரௌத் ரீஞ்சமேபாது ருத்ராணீ ருத்ர ரூபிணீ!!
ஊர்த்வம் பிரஹ்மாணி மேரக்ஷே ததஸ்தாத் வைஷ்ணவீ ததா!
ஏவந்தசதி சோரக்ஷேத் சர்வாங்கம் புவனேஸ்வரீ!!

தத்பதம் பாதுமே பாதௌ ஜங்கமே ஸவிது: பதம்!
வரேண்யம் கடிதேசேது நாபிம் பர்கஸ் ததைவச!!
தேவஸ்ய மேதத் திருதயம் தீமஹீதிச கல்லயோ:!
திய: பதஞ்சமே நேத்ரே ய: பதம் மே லலாடகம்!!

ந: பாதுமேபதம் மூர்த்நீ சிகாயாம்மே ப்ரசோதயாத்!
தத்பதம் பாது மூர்த்தா நம் ஸகார: பாது பாலகம்!!
சக்ஷுஷீது விகாரார்ணஸ் துகாரஸ்து கபோலயோ:!
நாஸாபுடம் வகாரார்ணோ ரேகாரஸ்து முகேததா!!

ணிகாரஊர்த்வ மோஷ்டந்து யகாரஸ் த்வதரோஷ்டகம்!
ஆஸ்யாத்யே பகாரார்ணோர் கோகாரஸ் சுபகேததா!!

*தேகார: கண்டதேசேது வகார ஸ்கந்தேசகம்!*
*ஸ்யகாரோ தக்ஷிணம் ஹஸ்தம் தீகாரோ வாமஹஸ்தகம்!!*

*மகாரோ ஹ்ருதயம் ரக்ஷேத் திகார உதரேததா!*
*திகாரோ நாபிதேசேது யோகாரஸ்து கடிந்ததா!!*
*குஹ்யம் ரக்ஷது யோகார ஊருத் வய்ந: பதாக்ஷரம்!*
*ப்ரகாரோ ஜாநு நீரக்ஷேச் சோகாரோ ஜங்கதே சகம்!!*

*தகாரம் குல்பதே சேது யகார: பதயுக்மகம்!*
*தகார வ்யஞ் ஜனஞ்சைவ ஸர்வாங்கேமே ஸதாஅவது!!*
*இதந்து கவசந்திவ்யம் பாதாசத விநாச நம்!*
*சதுஷஷ்டி கலா வித்யா தாயகம் மோக்ஷ காரகம்!!*

*முச்யதே ஸரவ பாபேப்ய: பரம்ப்ரஹ்மாதி கச்சதி!!*
*படநாச் சிரவணுத்வாபி கோஸஹஸ்ர பலம் லபேத்!!*

மேற்கூறிய சுலோகத்தின் பொருள்:—

காயத்திரி கிழக்குத் திக்கில் பாதுகாக்க, சாவித்திரி தென் திசையில் பாதுகாக்க, பிரும்ம சக்தி மேற்கில் பாதுகாக்க, ஸரஸ்வதி வடக்கில் பாதுகாக்க, மேதசம்ரக்ஷணியாகவும், பாவ சங்காரியாகவும் ஜலசாயினியாகவும் விளங்கும் பார்வதி அக்னி திக்கில் பாதுகாக்க, அரக்கரைப் பயமுறுத்தும் பயங்கரியான யாதுதானி நைருதி திக்கில் காக்க: பவமான விலாசினி வாயு திக்கில் சம்ரட்சிக்க, ருத்ராணியான ருத்திர ரூபிணீ ஈசான திக்கில் காக்க, பிரம்மாணி எனது ஊர்த்துவ பாதத்தை (தூக்கிய திருவடியை) சம்ரட்சிக்க; வைஷ்ணவி அதோ பாகத்தைப் பாது காக்க, இவ்விதம் இச்சக்திகள் பத்துத் திக்குகளிலும் ரட்சிக்க; புவனேஸ்வரி சர்வாங்கத்தையும் ரட்சிக்க; தத்பதம் எனது பாதங்களைப் பாதுகாக்க, சவிதுப்பதம் கணுக் கால்களைப் பாது காக்க, வரேண்யம் (சிரேஷ்டம்) இடையை ரட்சிக்க, பர்கம் நாபியை ரட்சிக்க, தேவஸ்யம் இருதயத்தைப் பாதுகாக்க; தீமஹி முகவாயைப் பாதுகாக்க, தியப்பதம் கண்களை காக்க, ய: பதம் நெற்றியை பாதுகாக்க நப்பதம் சிரசைக் காக்க, ப்ரசோதயாத் சிகையைப் பாதுகாக்க, தத்பதம் சிரசைக் காக்க, ஸகாரம் பால கத்தைப் பாதுகாக்க, வி என்னும் அக்ஷரம் விழிகளைக் காக்க, துகாரம் கன்னங்களைப் பாதுகாக்க. வ காரம் மூக்கைப் பாது காக்க, ரேகாரம் முகத்தைப் பாதுகாக்க, ணிகாரம் மேலுதட்டைப் பாதுகாக்க, யகாரம் கீழுதட்டைப் பாதுகாக்க, பகாரம் வாயின் நடுவைக் பாதுகாக்க. தேகாரம் கழுத்தைப் பாதுகாக்க, வ காரம் தோள்களைப் பாதுகாக்க, ஸ்ய காரம் வலது கையைப் பாதுகாக்க, தீகாரம் இடக் கையைப் பாதுகாக்க, ம காரம் இருதயத்தை ரட்சிக்க, ஹீகாரம் உதரத்தை (வயிற்றை) ரட்சிக்க, திகாரம் கொப்பூழைப் பாதுகாக்க, யோகாரம் 'இடுப்பை ரட்சிக்க,

நః பதாக்ஷரம் தொடைகளைப் பாதுகாக்க, ப்ரகாரம் முழங்கால்களை ரட்சிக்க, சோகாரம் கணுக்கால்களைப் பாதுகாக்க, த காரம் புறங்கால்களைப் பாதுகாக்க, யகாரம் இரு பாதங்களையும் ரட்சிக்க, தகாரம் சகல அங்கங்களையும் பாதுகாக்க.

இந்த மேன்மையான கவசம் நூறு விதமான துன்பங்களை விநாசம் செய்வதாகவும் அறுபத்து நான்கு கலை ஞானங்களைக் கொடுக்கும் தாயகமாகவும், மோக்ஷகரமாகவும் இருக்கிறது. இதைப் படித்தாலும் கேட்டாலும் சகல பாபங்களும் ஒழிந்து ஆயிரம் பசுக்களைத் தானம் செய்த பலனையும், சகல பிரம்ம வடிவையும் அடைவார்கள்!''

## காயத்ரீ இருதய விளக்கம்

நாரத முனிவர் நாராயணரை நோக்கி, ''பரமாத்மாவே! தவத் தேவரே! காயத்திரி கவசத்தை தங்களிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொண்டேன். ஜபித்தாலும் நினைவில் வைத்தாலும் எல்லாவிதப் புண்ணியங்களையும் கொடுக்கக் கூடிய காயத்திரி ஹ்ருதயத்தையும் தங்களிடமிருந்து கேட்க விரும்புகிறேன்.'' என்றார்.

நாராயணர் கூறலானார்:

''நாரதரே! அதி ரகசியமான தேவி ஹ்ருதயத்தைப் பற்றி அதர்வண வேதத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதை நீர் விரும்பியவண்ணம் இப்போது கூறுகிறேன். வேதங்களுக்குத் தாயாகவும் விராட் ரூபிணியாகவும் மகா தேவியாகவும் விளங்கும் காயத்திரியைத் தியானம் செய்து, அந்தத் தேவியின் அங்கங்களிற் சொல்லப்படும் தேவதைகளைத் தியானம் செய்யவேண்டும். அதன் முறையாவது:— அதைச் சாதிக்க விரும்புபவன், பிண்ட பிரம்மாண்டங்கள் அனைத்தும் அந்தத் தேவியிடம் அடங்கி ஐக்கியமுற்றிருப்பதால் தனது உடலையே தேவியின் மெய்யுருவமாக நினைத்து தியானம் செய்ய வேண்டும். தன்னைத் தேவியுருவாக எண்ணுதவன் தேவியின் தியானத்துக்கு உகந்தவனல்ல என்று வேத ஞானிகள் சொல்கின்றனர். எனவே, ஒருவன் தனது தேகத்தை தேவி சொரூபமாக நினைத்து அத்தேகத்தில் பின்வரும் தேவதைகளைப் பேதமின்றி பாவித்துத் தியானிக்க வேண்டும்.

# தியானம்

இந்தக் காயத்ரீ ஹ்ருதயத்திற்கு நாராயணனே நானே ரிஷி; காயத்ரியே சந்தஸ், பரமேஸ்வரியே தேவதை. மனித நடமாட்டமில்லாத ஓர் இடத்தில் ஆசனத்தில் உட்கார்ந்து மன ஒருமிப்போடு அங்கன்னியாஸமாகத் தியானிக்க வேண்டும். அதற்குப் பிறகு அர்த்தந்நியாசம் செய்ய வேண்டும். அதைச் செய்யும் முறையாவது: சிரசில் சுவர்க்க தேவதை; பல் வரிசையில் அஸ்வினி தேவதைகள்; உதட்டில் உபய சந்தி; முகத்தில் அக்னி; நாக்கில் சரஸ்வதி; கழுத்தில் பிரகஸ்பதி; மார்பில் அஷ்டவசுக்கள்; தோளில் சப்த மருத்துக்கள்; இருதயத்தில் மேகம்; வயிற்றில் ஆகாயம்; உந்தியில் அந்தரிக்ஷம்; இடுப்பில் இந்திரனக்கினி; பிருஷ்டங்களில் விஞ்ஞான தனம்; பிரஜாபதி; தொடைகளில் கைலாயம் இமயம்; முழங்கால்களில் விஸ்வே தேவர்கள், கணுக்கால்களில் கௌசிகர், ஆண் இனக் குறியில் அயனம், பாதங்களில் பிரிதிவி; விரல்களில் வன தேவதைகள்; ரோமங்களில் ரிஷிகள்; நகங்களில் முகூர்த்தங்கள், அஸ்தியில் கிரகங்கள், ரத்த இறைச்சிகளில் ருதுக்களும் சம்வத்சரங்களும், கண நேரங்களும், இரவு பகலும், சந்திர சூரியர்களும்—இவ்வாறு இருப்பதாகப் பாவித்து அர்த்த நியாசம் செய்ய வேண்டும்: ''மனோகரமாயும் திவ்யமாயும், உன்னதமாயும் ஆயிரம் கண்களையுடையவளாயும் விளங்கும் காயத்ரீ தேவியைச் சரணாகதி அடைகிறேன்!'' என்று கூறி ஓம் தத்ஸவிது என்னும் மந்திரங்களைச் சொல்லித் தியானம் செய்ய வேண்டும்

இந்த முறைப்படி காயத்திரி ஹ்ருதயத்தை காலைப் பொழுதில் தியானம் செய்பவன் முன் இரவில் செய்த பாவத்திலிருந்து நீங்குகிறான். மாலையில் தியானிப்பவன் முன் பகலில் செய்த பாவத்திலிருந்து நீங்குகிறான். இவ்விரண்டு நேரங்களிலும் தியானிப்பவனே பாபமற்ற புண்ணியனாகவே ஆகிவிடுகிறான். இதுவுந் தவிர, அவன் சகல தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்த புண்ணிய பலன்களையும் அடைகிறான். சகல தேவதைகளாலும் அறியப்படுகிறான். பிரமசரிய நிலையிலிருந்து தவறிய பாவமும் நீங்கும். பதினாயிரம் காயத்திரியை ஜபித்த பயனும், ஆயிரம் யாகஞ் செய்த பயனும் அவனுக்குண்டாகும். இதை எட்டுப் பிராமணர்கள் கேட்டுணரும்படி உபதேசித்தால் சித்தி பெறலாம். எனவே பிராமணன் விடியற் காலத்தில் பரிசுத்தமாக இருந்து, இந்த காயத்திரி இருதயத்தை தியானித்தால் எல்லாவிதப் பாபங்களிலிருந்தும் நீங்கி பிரம்ம லோகத்திலும் போற்றப்படுகிறான்!'' என்றார் நாராயணர்.

## காயத்திரி துதி

நாரதர், நாராயணரை நோக்கி, "பக்தர்களுக்கு அருள் செய்பவரே! எல்லாம் அறிந்தவரே! பாபத்தை நீக்கும் காயத்திரி ஹிருதயத்தை எனக்குச் சொன்னீர்கள்; இனிமேல் காயத்திரீ ஸ்தோத்திரத்தையும் எனக்குச் சொல்ல வேண்டும்." என்றார்.

நாராயணர் கூறலானார்:

"அந்த தோத்திரமாவது: ஆதி சக்தி; ஜகன்மாதா; பக்தர்களுக்கு அருள் பாவிப்பவளே! எங்கும் நிறைந்தவளே! அந்தமில்லாதவளே! திரிசந்திரூபிணியான காயத்ரீயே, உனக்கு நமஸ்காரம். காயத்திரீ, நீயே சந்தி, நீயே காயத்திரி; நீயே சாவித்திரி; நீதான் சரஸ்வதி; நீதான் பிராம்ஹி, நீதான் வைஷ்ணவி, நீதான் ரௌத்திரி; நீதான் ரக்தை; நீதான் ஸ்வேதா, நீதான் கறுப்பு. பகவதியே! நீதான் விடியற்காலத்தில் பாலை வடிவினளாகவும், நடுப் பகலில் இளமை வடிவமாகவும் மாலை நேரத்தில் முதுமை வடிவமாகவும் விளங்குகிறாய் என்று ரிஷிகள் எப்போதும் நினைக்கிறார்கள். அன்ன வாகனமுடையவளாகவும் கருட வாகனியாகவும் ரிஷப வாகினியாகவும் பூவுலகில் ரிக் வேதத்தைத் தியானிப்பவளாயும், விளங்குகிறாய். தவ ஞானிகள் எந்தத் தேவியைத தரிசிக்கிறார்களோ, அந்த ரிக்ஷத்தில் யஜுர் வேதத்தைப் படிப்பவளாக எந்த தேவி திகழ்கிறாளோ அவள் பூமியில் நடமாடுகிறாள்! நீயே ருத்திர லோகத்தையடைந்திருக்கிறாய். விஷ்ணு லோகத்தில் வசிப்பவளும் பிரும லோகத்தில் வசிப்பவளும் நீயே! சப்த ரிஷிகளுக்கும் பிரியத்தை விளைவிக்கிறாய்! மாயா சொரூபிணியாக விளங்குகிறாய். வரங்கள் பலவற்றைத் தருகிறாய்! எல்லோருக்குமே இன்பத்தை வழங்குபவளாக இருக்கின்றாய். பார்வதி, பரமேஸ்வரர்களின் கரங்களிலிருந்தூறிய வியர்வையிலிருந்தும் கண்களின் நீரிலிருந்தும் தோன்றியவள் நீ! அனைவருக்கும் ஆனந்த ரூபிணி நீயே. பத்து துர்க்கா ரூபமாகவும் விளங்குகிறாய்! உத்தமி நீ! குருத்துவமுடையவளாகவும், வராஹ சொரூபிணியாகவும் சப்த வராஹியாகவும், நீல கங்கையாகவும் சக்தியாகவும், சர்வபோக மோக்ஷங்களைத் தந்தருள்பவளாகவும், மத்ய லோகத்தில் பாகீரதியாகவும், பாதாள லோகத்தில் போகவதியாகவும், திரிலோக வாஹினியாகவும் தேவி ஸ்தானத்திரய நிவாசினியாகவும், நீயே பூதலோகத்தில் யாவற்றையுமே தாங்குபவளாகவும்; சோகதாரிணியாகவும், புவர் லோகத்தில் வாயு சக்தியாகவும், சுவர்லோகத்தில் தேஜஸின் நிதியாகவும் மகாலோகத்தில் மஹா சித்தியாகவும் ஜனர்லோ

கத்தில் ஜனனியாகவும், தவ உலகில் தபஸ்வினியாயும் சத்திய லோகத்தில் சத்ய வாக்காகவும், விஷ்ணு லோகத்தில் கமலவாச லக்ஷ்மியாகவும் பிரம்ம லோகத்தில் காயத்திரியாகவும், ருத்திர லோகத்தில் பரமசிவனது அர்த்தாசனவாசினியான கௌரி யாகவும், எனக்கும் மகத்துக்கும் பிரகிருதியாகவும் பராபரையாக வும் இச்சா சக்தியாகவும் (விழைவாற்றலாகவும்), கிரியா சக்தியா கவும் (செயலாற்றலாகவும்) ஞான சக்தியாகவும் (அறிவாற்றலாக வும்)நீயே இருக்கிறாய். கங்கை, யமுனை, வியாசை, சரஸ்வதி, சரயு, தேவிகா, சிந்து, நர்மதா, ஐராவதி கோதாவரி, சதத்ரு, காவேரி, தேவலோககா, கௌசிகி, சந்திர பாகை, விதஸ்தை சரஸ்வதி, கண்டகீ, தாபநீ, தோயா வேத்ரவதி என்னும் புண்ணிய தீர்த்த வடிவனவளாகவும், உடலிலுள்ள இடகலை (இடது மூச்சு), பிங்கலை (வலது மூச்சு); ஸுஷும்னை (நடுமூச்சு) காந்தாரி (இடக் கண் நாடி) அஸ்திஜிக்வை, (வலது செவி நாடி) பூஷை (வலக் கண் நாடி) அலம்பூஷை (இடச் செவி நாடி) குஹூஹூ (மலவாய் நாடி), சங்கினி (கருவாய் நாடி), பிராண வாஹினி என்றெல்லாம் கூறப் படும் நாடிகளாகவும் நீயே இருக்கிறாய்! இருதயத் தாமரையில் பிராண சக்தியாகவும், கண்டத்தில் ஸ்வப்ன நாயகியாகவும், நாக்கில் ஸதாதாரையாகவும், பிந்து ஸ்தானத்தில் பிந்து மாலினி யாகவும், மூலத்தில் குண்டலினி சக்தியாகவும், ரோம மூலத்தில் வியாபினியாகவும் சிகை நடுவே மனோன்மணியாகவும் விளங்கு கிறாய். இவ்வாறெல்லாம் கூறப்பட்டுள்ளது. இன்னும் இதனை விரி வாகக் கூறுவதால் யாது பயன்? மூன்று உலகிலும் உள்ளவை யாவுமே நீயேதான். மஹாதேவி! மஹேஸ்வரி சந்தி சொரூபிணி! உன்னை நமஸ்கரிக்கிறேன்!'' என்று ஒருவன் தோத்திரம் செய்து வணங்கி சந்தியா காலங்களில் பக்தி சிரத்தையோடு இதை பாரா யணஞ் செய்தால் அவனது மாபெரும் பாவங்களெல்லாம் தொலை யும்; புண்ணியம் துலங்கும். மாபெரும் சித்தியை வழங்கும், பிள்ளை யில்லாதவனுக்குப் புத்திரனையும், செல்வமில்லாதவனுக்குப் பொன் பொருளையும், எல்லாப் புண்ணிய தீர்த்தங்களில் நீராடிய பயனையும் வழங்கும். தவம், யாகம், யக்ஞம் முதலானவற்றின் பலன்களையும் இஷ்ட சித்திகளையும் இம்மையில் போகங்களையும் முடிவில் முக்தி நிலையையும் கொடுக்கும். இந்தத் துதியை எந்தெந்த ஸ்நான காலங்களில் படித்து எந்த ஜலத்தில் நீராடினாலும், சந்தியா காலத்தில் ஸ்நானம்செய்த பலனை அடையப் பெறுவான். நாரதரே! இது அமிர்த வாக்காகும். இது உண்மை; உண்மை!'' என்றார் நாராயணர்.

நாரதர், நாராயணரை நோக்கி, "தவத் தேவரே! ஸ்ருதி' ஸ்மிருதி, புராணங்களின் இரகசியங்களை நீங்கள் கூறக் கேட்டேன். இனி வித்தை வெள்ளத்தால் பாவங்கள் ஒழிவதும் பிரம்ம விஞ் ஞானம் உண்டாவதும் இகபரப் பயன்களுண்டாவதும்; அந்தணர் களுக்கு நற்கதியுண்டாவதும், மரண பயம் ஒழிவதும், மோட்சம் தருவதும் எதுவோ, அதை ஆதி முதல் குறைவின்றிச் சொல்ல வேண்டும்!" என்று வேண்டினார்.

நாராயணர் கூறலானார்:

"நாரதரே! நீர் நல்ல கேள்வியையே கேட்டீர். அதனால் சொல் கிறேன். பாவத்தை ஒழிப்பதும் திவ்யமானதும் சுபமானதுமான காயத்திரியின் நாமங்கள் ஆயிரத்து எட்டு (ஸகஸ்ர நாமங்கள்) இருக்கின்றன. அவை படைப்பின் ஆரம்பத்தில் ஆண்டவனு லேயே கூறப்பட்டனவாகும். அவைதான் பிராமணர்களுக்குக் கணத்தில் பாவத்தைப் போக்குவதாகவும் மோக்ஷ சாதனத்தை உண்டாக்குவதாகவும் பிரம்ம ஞானத்தை மூட்டுவதாகவும், மரண பயத்தைப் போக்குவதாகவும், நற்கதியளிப்பதாகவும் விளங்கு கிறது. அவற்றை உமக்குக் கூறுகிறேன். சிரத்தையோடு கேளும். இந்த காயத்ரி சஹஸ்ர நாமத்திற்கு ரிஷி பிரம்மா; அனுஷ்டுப்— சந்தஸ்; காயத்திரி—தேவதை; பீஜம் ஹல்; ஸ்வரம்—சக்தி. அங்கன்னியாச, கரன்னியாசம், மாத்ருகாக்ஷரங்கள் என அமைந் திருக்கின்றன இதன் தியானமாவது:—சிவப்பு, வெள்ளை, கறுப்பு, பொன், கற்பூரம் ஆகிய நிறங்களோடும் மூன்று விழிகளோடும் புத்தம் புதிய சிவப்பு மலர் மாலையோடும் நவரத்தின மணிகளின் ஒளியோடும் விளங்கும் குமரியாகவும், கௌமாரியாகவும், காயத் திரியாகவும், பத்மாசனையாகவும், கரதலத்தில் ஒளிரும் தாமரை போன்ற பாத்திரமுடையவளாகவும் அன்ன வாகனம் உடைய வளாகவும் இருக்கிற தேவியைத் தியானிக்கிறேன்" என்று தியானம் செய்ய வேண்டும்.

# காயத்திரி ஸகஸ்ர நாமம்

அசிந்திய லக்ஷணையை நம
அவ்யக்தாயை நம
அர்த்தமாத்ரு
மஹேஸ்வர்யை நம
அமந்தார்ணவ
மத்யஸ்தாயை நம
அஜிதாயை நம
அபராஜிதாயை நம
அணிமாதி குண தாராயை நம
அர்க்க மண்டல
ஸம்ஸ்திதாயை நம
அஜரா ஜாயை நம
அபராயை நம
தர்மாயை நம
அக்ஷஸூத்ர தராயை நம
தராயை நம
அகாராதிக்ஷ காராந்தாயை நம
அரிஷட்வர்க பேதின்யை நம
அஞ்ஜாநாதி ப்ரீதீகாசாயை நம
அஞ்ஜா நாத்ரி
நிவாஸின்யை நம
அதித்யை நம
அஜபாயை நம
வித்யாயை நம
அரவிந்த நிபேக்ஷணையை நம
அந்தர் பஹிர் ஸ்திதாயை நம
அவித்யா த்வம் ஸிந்யை நம
அந்தராத்மிகாயை நம
அஜாயை நம
அஜமுகா வாஸாயை நம
அரவிந்த நிபா நநாயை நம
அர்த மாத்ராயை நம
அர்த்த தானக்ஞாயை நம
அரிமண்டல மர்திந்யை நம
அஸுரக்ந்யை நம
அமாவாஸ்யை நம

அலக்ஷ் மீக்ந்யை நம

அந்த்ய ஜார்ச்சிதாயை நம
ஆதிலக்ஷ்ம்யை நம
ஆதிசக்தியை நம

ஆக்ருத்யை நம

ஆயதா நநாயை நம
ஆதித்யா பதவீசாராயை நம
ஆதித்ய பரிஸேவிதாயை நம
ஆசார்யாயை நம

ஆவர்த்த நாயை நம
ஆசாராயை நம
ஆதிமூர்த்தி நிவாஸிந்யை நம
ஆக்நேயை நம
ஆமர்யை நம
ஆத்யாயை நம
ஆராத்யாயை நம
ஆஸனஸ்திதாயை நம
ஆதார நிலயாயை நம

ஆதாராயை நம
ஆகாஸாந்த நிவஸிந்யை நம
ஆத்யாக்ஷர ஸமாயுக்தாயை நம
ஆந்தராகாச ரூபிண்யை நம
ஆதித்யமண்டல கதாயை நம
ஆந்தரத்வாந்த நாஸிந்யை நம
இந்திராயை நம
இஷ்டதாயை நம
இஷ்டாயை நம
இந்தீவர நிபேஷணையை நம
இராவத்யை நம
இந்த்ரபதாயை நம
இந்த்ராண்யை நம
இந்துரூபிண்யை நம
இக்ஷு கோதண்ட
ஸம்யுக்தாயை நம
இஷு ஸந்தானகாரிண்யை நம

இந்த்ர நீல ஸமாகாராயை நம
இடாபிங்கல ரூபிண்யை நம
இந்த்ராக்ஷ்யை நம
ஈஸ்வரீ தேவ்யை நம
ஈஹாத்ரய விவர்ஜிதாயை நம
உமாயை நம
உஷாயை நம
உடுநிபாயை நம

உர்வாருக பலானனாயை நம
உடுப்ரபாயை நம
உடுமத்யை நம
உடுபாயை நம
உடுமத்ய காயை நம
ஊர்த்வாயை நம
ஊர்த்வ கேஸ்யை நம
ஊர்த்வாதோகதி பேதிந்யை நம
ஊர்த்வ பாஹுப்ரியாயை நம
ஊர்மிமாலா வாக்ரந்தா
யிந்யை நம
ரிதாயை நம
ரிஷயே நம
ரிதுமத்யை நம
ரிஷிதேவ நமஸ்கிருதாயை நம
ரிக்வேதாயை நம
ரிணஹர்த்ரியை நம
ரிஷி மண்டல சாரிண்யை நம
ரித்தி தாயை நம
ரிஜுமார்கஸ்தாயை நம
ரிஜுதர்மாயை நம
ரிதுப்ரதாயை நம
ரிக்வேத நிலயாயை நம
ரிஜ்வ்யை நம
லூப்த தர்மப்ரவர்த்தின்யை நம
லூதாரி வரஸம்பூதாயை நம
லூதாதி விஷ ஹாரிண்யை நம
ஏகாக்ஷராயை நம
ஏகமாத்ராயை நம
ஏகாயை நம
ஏகைக நிஷ்டிதாயை நம
ஐந்தர்யை நம
ஐராவதா ரூடாயை நம
ஐஹிகா முஷ்மிக ப்ரதாயை நம

ஓங்காராயை நம
ஓஷத்யை நம
ஓதாயை நம
ஓதப்ரோத நிவாஸிந்யை நம
ஔர்வாயை நம
ஔஷத ஸம்பந்நாயை நம
ஔபாஸந பலப்ரதாயை நம
அண்டமத்ய ஸ்திதா
தேவ்யை நம
அஃகாரமநு ரூபிண்யை நம
காத்யாயிந்யை நம
காலராத்ரீயை நம
காமாக்ஷ்யை நம
காம ஸுந்தர்யை நம
கமலாயை நம
காமிந்யை நம
காந்தாயை நம
காமதாயை நம
காலகண்டிந்யை நம

கரிகும்ப ஸ்தனபராயை நம
கரவீர ஸுவாஸிந்யை நம
கல்யாண்யை நம
குண்டலவத்யை நம
குருக்ஷேத்திர நிவாஸிந்யை நம
குருவிந்த தலாகாராயை நம
குண்டல்யை நம
குமுதாலயாயை நம
காலஜிஹ்வாயை நம
காரலாஸ்யாயை நம
காளிகாயை நம
காலரூபிண்யை நம
கமநீய குணாயை நம
காந்த்யை நம
கலாதாராயை நம
குமுத்வத்யை நம
கௌசக்யை நம
கமலாகாராயை நம
காமசார பிரபஞ்ஜிஜ்யை நம
கௌமார்யை நம
கருணாபாங்க்யை நம
ககுபந்தாயை நம
கரிப்ரியாயை நம

கேஸர்யை நம
கேசவனுதாயை நம
கதம்ப குஸுமப்ரியாயை நம
காளிந்த்யை நம
காளிகாயை நம
காஞ்ச்யை நம

கலகோத்பவஸம்ஸ்துதாயை நம
காமமாதாயை நம
க்ருதுமத்யை நம
காமரூபாயை நம
க்ருபாவத்யை நம
குமார்யை நம
குண்ட நிலயாயை நம
கிராத்யை நம
கீரவாஹநாயை நம
கைகேய்யை நம
கோகிலா லாபாயை நம
கேதகீ குஸுமப்ரியாயை நம
கமண்டலுதராயை நம

காள்யை நம
கர்ம நிர்மூல காரிண்யை நம
கலஹம்ஸ கத்யை நம
கக்ஷாக்ருத கௌதுக
மங்களாயை நம
கஸ்தூரீ திலகாயை நம
கம்ராயை நம
கரீந்த்ரகமனாயை நம
குஹ்வை நம
கர்ப்பூரலேபனாயை நம
கிருஷ்ணாயை நம
கபிலாயை நம
குஹராச்ரயாயை நம
கூடஸ்தாயை நம
குதராயை நம
கம்ராயை நம
குக்ஷிஸ்தாகில விஷ்டபாயை நம
கட்ககேடகராயை நம
கர்வாயை நம
கேசர்யை நம
ககவாஹனாயை நம

கட்வாங்க தாரிண்யை நம
க்யாதாயை நம
ககராஜோபரிஸ்திதாயை நம
கலக்ந்யை நம
கண்டிதஜராயை நம
கண்டாக்யான ப்ரதா
யின்யை நம
கண்டேந்து திலகாயை நம
கங்காயை நம
கணேச குஹ பூஜிதாயை நம
காயத்ரியை நம
கோமத்யை நம
கீதாயை நம
காந்தார்யை நம
கானலோலுபாயை நம
கௌதம்யை நம
காமிந்யை நம
காதாயை நம
கந்தர்வாப்ஸா ஸேவிதாயை நம
கோவிந்த சரணா
க்ராந்தாயை நம
குணத்ரய விபாவிதாயை நம
கந்தர்வ்யை நம
கஹ்வர்யை நம
கோத்ராயை நம

கிரீசாயை நம
கஹனாயை நம
கம்யை நம
குஹாவாஸாயை நம
குணவத்யை நம
குருபாப ப்ரணாசிந்யை நம
குர்வ்யை நம
குணவத்யை நம
குஹ்யை நம
கோப்தவ்யாயை நம
குணதாயிந்யை நம
கிரிஜாயை நம
குஹ்யமாதங்க்யை நம
கருடத்வஜ வல்லபாயை நம
கர்வாபஹாரிண்யை நம
கோதாயை நம

கோகுல ஸ்தாயை நம
கதாதராயை நம
கோகர்ண நிலயாஸக்தாயைநம
குஹ்யமண்டல வர்த்திந்யை நம
கர்மதாயை நம
கநதாயை நம
கண்டாயை நம
கோரதானவ மர்திந்யை நம
க்ருணி மந்த்ர மயை நம
கோஷாயை நம
கனஸம்பாத தாயிந்யை நம
கண்டாரவப்ரியாயை நம
க்ராணாயை நம
க்ருணிஸந்துஷ்டகாரிண்யை நம
கநாரி மண்டலாயை நம
கூர்ணாயை நம
க்ருதாச்யை நம
கநவேகின்யை நம
ஜ்ஞானதா துமய்யை நம
சர்ச்சாயை நம
சர்ச்சிதாயை நம
சாருஹாஸிந்யை நம
சடுலாயை நம
சண்டிகாயை நம
சித்ராயை நம
சித்ரமால்ய விபூஷிதாயை நம
சதுர்புஜாயை நம
சாரு தந்தாயை நம
சாதுர்யை நம
சரிதப்ரதாயை நம
சூலிகாயை நம
சித்ரவஸ்த்ராந்தாயை நம
சந்த்ரம:
கர்ணகுண்டலாயை நம
சந்த்ரஹாஸாயை நம
சாருதாத்ர்யை நம
சகோர்யை நம

சந்த்ரஹாஸிந்யை நம

சந்த்ரிகாயை நம
சந்த்ரதாத்ர்யை நம

சௌர்யை நம
சோராயை நம
சண்டிகாயை நம
சஞ்சத்வாக்வாதிந்யை நம
சந்திர சூடாயை நம
சோரவி நாஸிந்யை நம
சாரு சந்தன லிப்தாங்க்யை நம
சஞ்சச் சாமரவீஜிதாயை நம
சாருமத்யாயை நம
சாருகத்யை நம
சந்திலாயை நம
சந்த்ர ரூபிண்யை நம
சாருஹோம ப்ரியாயை நம
சார்வாசரிதாயை நம
சக்ரபாஹுகாயை நம
சந்த்ரமண்டலமத்யஸ்தாயைநம
சந்த்ர மண்டல தர்ப்பணாயைநம
சக்ரவாகஸ்தன்யை நம
சேஷ்டாயை நம
சித்ராயை நம
சாருவிலாஸிந்யை நம
சித்ஸ்வரூபாயை நம
சந்த்ரவத்யை நம
சந்த்ர மாயை நம
சந்தனப்ரியாயை நம
சோதயித்ரியை நம
சிரப்ரக்ஞாயை நம
சாதகாயை நம
சாருஹேதுக்யை நம
சத்ரயாதாயை நம
சத்ரதாராயை நம
சாயாயை நம

சந்த: பரிச்சதாயை நம
சாயாதேவ்யை நம
சித்ரநகாயை நம
சந்நேந்த்ரிய
விஸர்ப்பிண்யை நம
சந்தோனுஷ்டுப்
ரதிஷ்டாந்தாயை நம
சித்ரோ பத்ரவ பேதிந்யை நம
சேதாயை நம

சத்ரேஸ்வர்யை நம

சிந்நாயை நம
சுரிகாயை நம
சேதனப்ரியாயை நம
ஜநந்யை நம

ஜந்மரஹிதாயை நம
ஜாதவேதாயை நம
ஜகந்மய்யை நம
ஜாந்தவ்யை நம
ஜடிலாயை நம
ஜேத்ர்யை நம
ஜராமரண வர்ஜிதாயை நம
ஜம்பூத்வீபவத்யை நம
ஜ்வாலாயை நம
ஜயந்த்யை நம
ஜலசாலின்யை நம
ஜிதேந்த்ரியாயை நம
ஜிதக்ரோதாயை நம
ஜிதாமித்ராயை நம
ஜகத்பிரியாயை நம
ஜாதருபமய்யை நம
ஜிஹ்வாயை நம
ஜானக்யை நம
ஜகத்யை நம
ஜராயை நம
ஜாநித்ர்யை நம

ஜன்ஹு தநயாயை நம
ஜகத்ரய ஹிதைஷிண்யை நம
ஜ்வாலா முக்யை நம
ஜபவத்யை நம
ஜ்வரக்ந்யை நம
ஜிதவிஷ்டபாயை நம
ஜிதாக்ராந்தமய்யை நம
ஜ்வாலாயை நம
ஜாக்ரத்யை நம
ஜ்வரதேவதாயை நம
ஜ்வலந்த்யை நம
ஜலதாயை நம
ஜ்யேஷ்டாயை நம

ஜ்யாகோஷாஸ்போடதிங்
முக்யை நம
ஜம்பிந்யை நம
ஜ்ரும்பணாயை நம
ஜ்ரும்பாயை நம
ஜ்வலந்மாணிக்ய
குண்டலாயை நம
ஜிஞ்ஜிகாயை நம
ஜணநிர்கோஷாயை நம
ஜஞ்ஜாமாருதவேகின்யை நம
ஜல்லரீவாத்யகுசலாயை நம
ஞருபாயை நம
ஞபுஜாஸ்ம்குதாயை நம
டங்கபாணஸமாயுக்தாயை நம
டங்கின்யை நம
டங்கபேதின்யை நம
டங்கீகணக்ருதாகோஷாயை நம
டங்கநீய மஹோராஸாயை நம
டங்கார காரிணீதேவ்யை நம
டடசப்தநி நாதிந்யை நம
டாமர்யை நம
டாகின்யை நம
டிம்பாயை நம
டுண்டமாரைகநிர்ஜிதாயை நம
டாமரீதந்த்ர மார்கஸ்தாயை நம
டமட்டமருநாதிந்யை நம
டிண்டிரவஸஹாயை நம
டிம்பலஸத்க்ரீடா
பராயணாயை நம
டுண்டி விக்னேஸஜனன்யை நம
டக்கா ஹஸ்தாயை நம
டிலிவ்ரஜாயை நம
நித்யக் ஞானாயை நம
நிருப மாயை நம
நிர்குணாயை நம
நர்மதா நத்யை நம
திரிகுணாயை நம
திரிபதாயை நம
தந்த்யை நம
துளஸ்யை நம
தருணாயை நம
தருவே நம

த்ரிவிக்ரம பதாகாந்தாயை நம
துரீயபதகாமிந்யை நம
தருணாதித்ய ஸங்காஸாயை நம
தாமஸ்யை நம
துஹிநாயை நம
துராயை நம
த்ரிகாலக்ஞான
ஸம்பந்நாயை நம
த்ரிவல்யை நம
த்ரிலோசனாயை நம
த்ரிசக்த்யை நம
த்ரிபுராயை நம
துங்காயை நம
துரங்கவதனாயை நம
திமிங்கில கிலாயை நம
தீவ்ராயை நம
த்ரிஸ்ரோதாயை நம
தாமஸாதிந்யை நம
தந்த்ர மந்த்ர
விசேஷக்ஞாயை நம
தநுமத்யாயை நம
த்ரிவிஷ்டபாயை நம
த்ரிஸந்த்யாயை நம
த்ரிஸ்தந்யை நம
தோஷாஸ்ம்ஸ்தாயை நம
தாலப்ரதாபிந்யை நம
தாடங்கிந்யை நம
துஷாராபாயை நம
துஹிநாசல வாஸிந்யை நம
தந்துஜால ஸமாயுக்தாயை நம
தாரஹாராவலிப்ரியாயை நம
திலஹோமப்ரியாயை நம
தீர்த்தாயை நம
தமாலகுஸுமாக்ருத்யை நம
தாரகாயை நம
த்ரியுதாயை நம
தன்வ்யை நம
த்ரிசங்கு பரிவாரிதாயை நம
தலோதர்யை நம
திலாபூஷாயை நம
தாடங்க ப்ரியவாஹிந்யை நம
த்ரிஜடாயை நம
தித்திர்யை நம
த்ரிஷ்ணாயை நம
த்ரிவிதாயை நம
தருணாக்ருத்யை நம
தப்தகாஞ்சனஸங்காஸாயை நம
தப்தகாஞ்சனபூஷணாயை நம
த்ரியம்பகாயை நம

த்ரிவர்காயை நம
த்ரிகாலக்ஞானதாயிந்யை நம
தர்ப்பணாயை நம
த்ருப்திதாயை நம
த்ருப்தாயை நம
தாமஸ்யை நம
தும்பருஸ்துதாயை நம
தார்க்ஷ்யஸ்தாயை நம
த்ரிகுணாகாராயை நம
த்ரிபங்க்யை நம
தனுவல்லர்யை நம

தாத்கார்யை நம
தாரவாயை நம
தாந்தாயை நம
தோஹிந்யை நம
தீனவத்ஸலாயை நம
தானவாந்தகர்யை நம
துர்காயை நம
துர்காஸுர நிபர்ஹிண்யை நம
தேவரீத்யை நம
திவாயை நம
ராத்ர்யை நம
த்ரௌபத்யை நம
துந்துபிஸ்வனாயை நம
தேவயாந்யை நம
துராவாஸாயை நம
தாரித்ரியோத் பேதிந்யை நம
திவாயை நம
தாமோதரப்ரியாயை நம
தீப்தாயை நம
திக்வாஸாயை நம
திக்விமோஹிந்யை நம
தண்டகாரண்ய நிலயாà

தண்டிந்யை நம
தேவ பூஜிதாயை நம
தேவ வந்த்யாயை நம
த்விஷ்தாயை நம
த்வேஷிண்யை நம
தானவாக்ருத்யை நம
தீனநாதஸ்துதாயை நம
தீக்ஷாயை நம
தைவதாயை நம
திஸ்ரூபிண்யை நம
தாத்ர்யை நம
தநுர்தராயை நம
தேந்வை நம
தாரிண்யை நம
தர்மசாரிண்யை நம
தரந்தராயை நம
தராயை நம
தாராயை நம
தனதாயை நம

தான்ய தோஹின்யை நம
தர்மசீலாயை நம
தநாத்யக்ஷாயை நம
தநுர்வேத விஸாரதாயை நம
த்ருத்யை நம
தந்யாயை நம
த்ருதபதாயை நம
தர்மராஜப்ரியாயை நம
த்ருவாயை நம
தூமாவத்யை நம
தூமகேச்யை நம
தர்மசாஸ்த்ர பிரகாசின்யை நம
நந்தாயை நம
நந்தப்ரியாயை நம
நித்ராயை நம
ந்ருநுதாயை நம
நந்தனாத்மிகாயை நம
நர்மதாயை நம
நலின்யை நம
நீலாயை நம
நீலகண்டஸமாஸ்ரயாயை நம
நாராயணப்ரியாயை நம

நித்யாயை நம
நிர்மலாயை நம
நிர்குணாயை நம
நிதயே நம
நிராதாராயை நம
நிருபமாயை நம
நித்யஸுத்தாயை நம
நிரஞ்ஜனாயை நம
நாதவிந்து காலாதீதாயை நம
நாதவிந்து கலாத்மிகாயை நம
ந்ருஸிம்ஹிந்யை நம
நகதராயை நம
ந்ருபநாகவிபூஷிணிதாயை நம
நாகக்லேச சமன்யை நம
நாராயணபதோத்பவாயை நம
நிரவத்யாயை நம
நிராகாராயை நம
நாரதப்ரிய காரிண்யை நம
நானுஜ்யோதி :
ஸமாக்யாதாயை நம
நிதிதாயை நம
நிர்மலாத்மிகாயை நம
நவஸத்ரதராயை நம
நீதயை நம
நிருபத்ரவகாரிண்யை நம
நந்தஜாயை நம
நவரத்நாட்யை நம
நைமிஷாரிண்ய வாஸிந்யை நம
நவநீத ப்ரியாயை நம
நார்யை நம
நீலஜீமூத நிஸ்வனாயை நம
நிமேஷிண்யை நம
நதிரூபாயை நம
நீலக்ரீவாயை நம
நீசீஸ்வர்யை நம
நாமாவள்யை நம
நிசும்பக்ந்யை நம
நாகலோக நிவாஸிந்யை நம
நவஜாம்பூனதபிரக்யாயை நம
நாகலோகாதி தேவதாயை நம
நூபுராக்ராந்த சரணாயை நம
நரசித்த ப்ரமோதிந்யை நம

நயனுயை நம
நிர்காதஸமநிஸ்வனுயை நம
நந்தனேத்யான நிலயாயை நம
நிர்வ்யூஹோா பரிசாரிண்யை நம
பார்வத்யை நம
பரமோதாராயை நம
பரப்ரஹ்மாத்மிகாயை நம
பராயை நம
பஞ்சகோச விநிர்முக்தாயை நம
பஞ்சபாதக நாசிந்யை நம
பரசித்த விதானஜ்ஞ்யை நம
பஞ்சிகாயை நம
பஞ்சரூபிண்யை நம
பூர்ணிமாயை நம
பரமாயை நம
ப்ரீத்யை நம
பரதேஜப்ரகாசிந்யை நம
புராண்யை நம
பௌருஷ்யை நம
புண்யாயை நம
புண்டரீக நிபேக்ஷணுயை நம
பாதாளதல நிர்மக்னுயை நம
ப்ரீதாயை நம
ப்ரீதீவிவர்திந்யை நம
பாவந்யை நம
பாதஸஹிதாயை நம
பேசலாயை நம
பவநாசின்யை நம
ப்ரஜாபத்யை நம
பரிச்ராந்தாயை நம
பர்வதஸ்தன மண்டலாயை நம
பத்மப்ரியாயை நம
பத்மஸம்ஸ்தாயை நம
பத்மாக்ஷ்யை நம
பத்மஸம்பவாயை நம
பத்மபத்ராயை நம
பத்மபதாயை நம
பத்மிந்யை நம
ப்ரிய பாஷிண்யை நம
பசுபாசவிநிர்முக்தாயை நம
புரந்த்ர்யை நம
புரவாஸிந்யை நம
புஷ்கலாயை நம
புருஷாயை நம
பர்வாயை நம
பாரிஜாதஸுமப்ரியாயை நம
பதிவ்ரதாயை நம
பவித்ராங்க்யை நம
புஷ்பஹாஸ பராயணுயை நம
ப்ரஜ்ஞாவதீஸுதாயை நம
பௌத்ர்யை நம
புத்ர பூஜ்யாயை நம
பயஸ்விந்யை நம
பட்டிபாசதராயை நம
பங்க்த்யை நம
பிதுர்லோகப்ரதாயிந்யை நம
புராண்யை நம
புண்யஸீலாயை நம
ப்ரணதார்த்திவிநாசிந்யை நம
ப்ரத்யும் நஜநன்யை நம
புஷ்டாயை நம
பிதாமஹபரிக்ரஹாயை நம
புண்டரீகபுராவாஸாயை நம
புண்டரீகஸமானனுயை நம
ப்ருதுஜங்காயை நம
ப்ருதுபுஜாயை நம
ப்ருதுபாதாயை நம
ப்ருதுதர்யை நம
ப்ரவாளசோபாயை நம
பிங்காளக்ஷ்யை நம
பீதவாஸாயை நம
ப்ராசாபலாயை நம
ப்ரஸவாயை நம
புஷ்டிதாயை நம
புண்யாயை நம
ப்ரதிஷ்டாயை நம
ப்ரணவாகத்யை நம
பஞ்சவர்ணுயை நம
பஞ்சவாண்யை நம
பஞ்சிகாயை நம
பஞ்ஜரஸ்திதாயை நம
பரமாயாயை நம
பரஜ்யோதிஷே நம
பரப்ரீத்யை நம

பராகத்யை நம
பராகாஷ்டாயை நம
பரேசாந்யை நம
பாவிந்யை நம
பாகவத் யுத்யை நம
புண்ய பத்ராயை நம
பரிச்சேத்யாயை நம
புஷ்ப ஹாஸாயை நம
ப்ரிதுரதர்யை நம
பீதாங்க்யை நம
பீதவஸநாயை நம
பீதசையாயை நம
பிசாசிந்யை நம
பீதக்ரியாயை நம
பிசாசக்ந்யை நம
பாடலாக்ஷ்யை நம
படுக்ரியாயை நம
பஞ்சபக்ஷ்ய ப்ரியாசாராயை நம
பூதநாப்ராண காதிந்யை நம
புந்நாகவ நமத்யஸ்தாயை நம
புண்யதீர்த்த நிஷேவிதாயைநம
பஞ்சாங்க்யை நம
பராசக்த்யை நம
பரமாஹ்லாத கார்ண்யை நம
புஷ்பகாண்டஸ்திதாயை நம
பூஷாயை நம
போஷிதாகில விஷ்டபாயை நம
பாநப்ரியாயை நம
பஞ்சசிகாயை நம
பந்நகோபரிசாயிந்யை நம
பஞ்சமாத்ராத்மிகாயை நம
ப்ரித்வ்யை நம
பதிகாயை நம
ப்ருதுதோஹிந்யை நம
புராணந்யாயமீமாம்ஸாயை நம
பாடலீபுஷ்பகந்திந்யை நம
புண்யப்ரஜாயை நம
பாரதாத்ர்யை நம
பரமார்கைக கோசராயை நம
ப்கவாள சோபாயை நம
பூர்ணூசாயை நம
ப்ரண்வாயை நம
பல்லவோதர்யை நம
பலிந்யை நம
பலதாயை நம
பல்கவே நம
பூத்கார்யை நம
பலகாக்ருத்யை நம
பணீந்த்ரபோகசயனுயை நம
பணிமண்டல மண்டிதாயை நம
பாலபாலாயை நம
பஹுமதாயை நம
பாலாதபநிபாம்சுகாயை நம
பலபத்ரப்ரியாயை நம
பந்த்யாயை நம
படபாயை நம
புத்திஸம்ஸ்துதாயை நம
பந்தீதேவ்யை நம
பிலவத்யை நம
படிசக்ந்யை நம
பலிப்ரியாயை நம
பாந்தவ்யை நம
போதிதாயை நம
புத்யை நம
பந்தூககுஸுமப்ரியாயை நம
பாலபாநுப்ரபாகாராயை நம
ப்ராம்ஹ்யை நம
ப்ராம்ஹணதேவதாயை நம
ப்ருஹஸ்பதிஸ்துதாயை நம
ப்ருந்தாயை நம
ப்ருந்தாவன விஹாரிண்யை நம
பாலாகிந்யை நம
பிலாஹாராயை நம
பிலவாஸாயை நம
பஹுதகாயை நம
பஹுநேத்ராயை நம
பஹுபதாயை நம
பஹுகர்ணவதம்ஸிகாயை நம
பஹுபாஹுயுதாயை நம
பீஜரூபிண்யை நம
பஹுரூபிண்யை நம
பிந்துநாதகலாதீதாயை நம
பிந்துநாதஸ்வரூபிண்யை நம
பத்தகோதாங்குளித்ராணுயை நம

பதரீயாச்ரம வாஸிந்யை நம
ப்ருந்தாரகாயை நம
ப்ருஹத்ஸ்கந்தாயை நம
ப்ருஹத்யை நம
பாணபாதிந்யை நம
ப்ருந்தாத்யக்ஷாயை நம
பஹுநுதாயை நம
வநிதாயை நம
பஹுவிக்ரமாயை நம
பத்தபத்மாஸநாஸீநாயை நம
பில்வபத்ரதலஸ்திதாயை நம
போதித்ருமநிஜாவாஸாயை நம
படிஸ்தாயை நம
பிந்துதர்ப்பணாயை நம
பாலாயை நம
பாணாஸனவத்யை நம
படபானலவேகின்யை நம
ப்ருஹ்மாண்ட
பஹிரந்தஸ்தாயை நம
ப்ருஹ்மகங்கண
ஸூத்ரிண்யை நம
பவாந்யை நம
பீஷணவத்யை நம
பாவின்யை நம
பயஹாரிண்யை நம
பத்ரகாள்யை நம
புஜங்காக்ஷ்யை நம
பாரத்யை நம
பாரதா சாயாயை நம
பைரவ்யை நம
பீஷணாகாராயை நம
பூதிதாயை நம
பூதிமாலிந்யை நம
பாமின்யை நம
போகநிரதாயை நம
பத்ரதாயை நம
பூரிவிக்ரமாயை நம
பூதவாஸாயை நம
ப்ருகுலதாயை நம
பார்கவ்யை நம
பூஸுரார்ச்சிதாயை நம
பாகீரத்யை நம
போகவத்யை நம
பவநஸ்தாயை நம
பிக்ஷுவராயை நம
பாமிந்யை நம
போகின்யை நம
பாஷாயை நம
பவாந்யை நம
பூரிதக்ஷிணாயை நம
பர்காத்மிகாயை நம
பீமவத்யை நம
பவபந்த விமோசிந்யை நம
பஜனீயாயை நம
பூததாத்ர்யை நம
ரஞ்ஜிதாயை நம
புவநேச்வர்யை நம
புஜங்கவலயாயை நம
பீமாயை நம
பேருண்டாயை நம
பாகதேயின்யை நம

மாதாயை நம
மாயாயை நம
மதுமத்யை நம
மதுஜிஹ்வாயை நம
மதுப்ரியாயை நம
மஹாதேவ்யை நம
மஹாபாகாயை நம
மாலிந்யை நம
மீநலோசனாயை நம
மாயாதீதாயை நம
மதுமத்யை நம
மதுமாம்ஸாயை நம
மதுத்ரவாயை நம
மானவ்யை நம
மதுஸம்பூதாயை நம
மிதிலாபுரவாஸிந்யை நம
மதுகைடபஸம்ஹார்த்ர்யை நம
மேதிந்யை நம
மேகமாலிந்யை நம
மந்தோதர்யை நம
மஹாமாயாயை நம

மைதில்யை நம
மஸ்ருணப்ரியாயை நம
மஹாலக்ஷ்ம்யை நம
மஹாகாள்யை நம
மஹாகந்யாயை நம
மஹேஸ்வர்யை நம
மாஹேந்த்ர்யை நம
மேருதநயாயை நம
மந்தாரகுஸுமார்ச்சிதாயை நம
மஞ்ஜுமஞ்ஜீரசரணாயை நம
மோக்ஷதாயை நம
மஞ்ஜுபாஷிண்யை நம
மதுரத்ராவிண்யை நம
முத்ராயை நம
மலயாயை நம
மலயாந்விதாயை நம
மேதாயை நம
மரகதச்யாமாயை நம
மாகத்யை நம
மேனகாத்மஜாயை நம
மஹாமார்யை நம
மஹாவீராயை நம
மஹாஸ்யாமாயை நம
மநுஸ்துதாயை நம
மாத்ருகாயை நம
மிஹிராபாஸாயை நம
முகுந்தபத விக்ரமாயை நம
மூலாதாரஸ்திதாயை நம
முக்தாயை நம
மணிபூரகவாஸிந்யை நம
ம்ருகாக்ஷ்யை நம
மஹிஷாரூடாயை நம
மஹிஷாஸுரமர்திந்யை நம
யோகாஸ்னாயை நம
யோககம்யாயை நம
யோகாயை நம
யௌவநகாஸ்ரயாயை நம
யௌவந்யை நம
யுத்தமத்யஸ்தாயை நம
யமுனாயை நம
யுகதாரிண்யை நம
யக்ஷிண்யை நம
யோகயுக்தாயை நம
யக்ஷராஜப்ரஸூதிந்யை நம
யாத்ராயை நம
யானவிதானஜ்ஞாயை நம
யதுவம்சஸமுத்பவாயை நம
யகாராதி ஹகாராந்தாயை நம
யாஜுஷ்யை நம
யஞ்ஞரூபிண்யை நம
யாமிந்யை நம
யோகநிரதாயை நம
யாதுதான பயங்கர்யை நம
ருக்மிண்யை நம
ரமண்யை நம
ராமாயை நம
ரேவத்யை நம
ரேணுகாயை நம
ரத்யை நம
ரௌத்ர்யை நம
ரௌத்ரப்ரியாகாராயை நம
ராமமாதாயை நம
ரதிப்ரியாயை நம
ரோஹிண்யை நம
ராஜ்யதாயை நம
ரேவாயை நம
ரமாயை நம
ராஜீவலோசனாயை நம
ராகேஸ்யை நம
ரூபஸம்பந்நாயை நம
ரத்நஸிம்ஹாஸநஸ்திதாயை நம
ரக்தமரல்யாம்பரதராயை நம
ரக்தகந்தானுலேபனாயை நம
ராஜஹம்ஸஸமாரூடாயை நம
ரம்பாயை நம
ரக்தபலிப்ரியாயை நம
ரமணீய யுகாதாராயை நம
ராஜிதாகிலபூதலாயை நம
ருருசர்ம பரீதானாயை நம
ரதின்யை நம
ரத்னமாலிகாயை நம
ரோகேஸ்யை நம
ரோகசமந்யை நம
ராவிண்யை நம

ரோமஹர்ஷிண்யை நம
ராமசந்த்ர பதாக்ராந்தாயை நம
ராவணச் சேதகாரிண்யை நம
ரத்னவஸ்த்ரபரிச்சந்நாயை நம
ரதஸ்தாயை நம
ருக்மபூஷணுயை நம
லஜ்ஜாதிதேவதாலோலாயை நம
லலிதாயை நம
லிங்கதாரிண்யை நம
லக்ஷ்ம்யை நம
லோலாயை நம
லுப்தவிஷாயை நம
லோகின்யை நம
லோக விஸ்ருதாயை நம
லஜ்ஜாயை நம
லம்போதரீதேவ்யை நம
லலநாயை நம
லோகதாரிண்யை நம
வரதாயை நம
வந்திதாயை நம
வித்யாயை நம
வைஷ்ணவ்யை நம
விமலாக்ருத்யை நம
வாராஹ்யை நம
விரஜாயை நம
வர்ஷாயை நம
வரலக்ஷ்ம்யை நம
விலாஸிந்யை நம
விநதாயை நம
வ்யோம மத்ய ஸ்தாயை நம
வாரிஜாஸந்ஸம்ஸ்திதாயை நம
வாருண்யை நம
வேணுசம்பூதாயை நம
வீதிஹோத்ராயை நம
விருபிண்யை நம
வாயுமண்டலமத்யஸ்தாயை நம
விஷ்ணுரூபாயை நம
விதிப்ரியாயை நம
விஷ்ணுபத்நியை நம
விஷ்ணுமத்யை நம
விஸாலாக்ஷ்யை நம
வஸுந்தராயை நம
வாமதேவப்ரியாயை நம
வேலாயை நம
வஜ்ரிண்யை நம
வஸுதோஹிந்யை நம
வேதாக்ஷர பரீதாங்க்யை நம
வாஜபேய பலப்ரதாயை நம
வாஸவ்யை நம
வாமஜநந்யை நம
வைகுண்டநிலயாயை நம
வராயை நம
வ்யாஸப்ரியாயை நம
வர்மதராயை நம
வால்மீகி பரிஸேவிதாயை நம
சாகம்பர்யை நம
ஸிவாயை நம
சாந்தாயை நம
சாரதாயை நம
சரணுகத்யை நம
சாதோதர்யை நம
சுபாசாராயை நம
சும்பாஸுர விமர்திந்யை நம
சோபாவத்யை நம
சிவாகாராயை நம
சங்கரார்த சரீரண்யை நம
சோணுயை நம
சுபாசயாயை நம
சுப்ராயை நம
சரஸ்ஸந்தானகாரிண்யை நம
சராவத்யை நம
சரா நந்தாயை நம
சரத்ஜ்யோத்ஸநாயை நம
சுபாநநாயை நம
சரபாயை நம
சூலிந்யை நம
சுத்தாயை நம
சபர்யை நம
சுகவாகனுயை
ஸ்ரீமத்யை நம
ஸ்ரீதரா நந்தாயை நம
ஸ்ரவணுந்ததாயின்யை நம
ஸர்வாண்யை நம
ஸர்வரீவன்த்யா நம

ஷட்பாக்ஷரயை நம
ஷட்ருதுப்ரியாயை நம
ஷடாதாரஸ்திதா தேவ்யை நம
ஷண்முகப்ரிய காரிண்யை நம
ஷடங்கரூபாயை நம
ஸுமத்யை நம
ஸுராஸுரநமஸ்கிருதாயை நம
ஸரஸ்வத்யை நம
ஸதாதாராயை நம
ஸர்வமங்களகாரிண்யை நம
ஸாமகானப்ரியாயை நம
ஸூக்ஷ்மாயை நம
ஸாவித்ரியை நம
ஸாமஸம்பவாயை நம
ஸர்வாவாஸாயை நம
ஸதாநந்தாயை நம
ஸுஸ்தந்யை நம
ஸாகராம்பராயை நம
ஸர்வைஸ்வர்யப்ரியாயை நம
ஸித்யை நம
ஸாதுபந்துபராக்ரமாயை நம
ஸப்தரிஷிமண்டலகதாயை நம
ஸோமமண்டல வாஸிந்யை நம
ஸர்வஜ்ஞாயை நம
ஸாந்த்ரகருணாயை நம
ஸமானாதிகவர்ஜிதாயை நம
ஸர்வோத்துங்காயை நம
ஸங்கஹீனாயை நம
ஸத்குணாயை நம
சகலேஷ்டதாயை நம
ஸரகாயை நம
ஸூர்ய தநயாயை நம
ஸுகேச்யை நம
ஸோமஸம்ஹத்யை நம
ஹிரண்ய வர்ணாயை நம
ஹரிண்யை நம
ஹ்ரீங்கார்யை நம
ஹம்ஸவாஹிந்யை நம
க்ஷௌமவஸ்த்ரபரீதாங்க்யைநம
க்ஷீராப்திதநயாயை நம
க்ஷமாயை நம
காயத்ர்யை நம
ஸாவித்ரியை நம
பார்வத்யை நம
ஸரஸ்வத்யை நம
வேதகர்பாயை நம
வராரோஹாயை நம
ஸ்ரீகாயத்ரீ பராம்பிகாயை நம

இந்த காயத்திரி ஸகஸ்ரநாமம் எல்லாப் பாவங்களையும் நீக்கி, புண்ணியத்தையும், மாபெரும் சம்பத்தையும் வழங்கவல்லது. ஆனந்தத்தையும் விளைவிப்பது. இந்த ஸஹஸ்ரநாமத்தைப் பிராமணர்களோடு அஷ்டமி திதியில், விசேஷமாய் வாசித்து, ஜப ஹோமங்களும், பூஜை, தியானங்களும் சிறப்பாகச் செய்ய வேண்டும். இந்த ஸகஸ்ர நாமத்தை தீயவர் ஒருவருக்கும் சொல்லக் கூடாது. நல்ல தேவி பக்தனாகவும் நல்ல மாணவனாகவும் இருக்கிற பிராமணனுக்கு சொல்வதே உத்தமம். ஒருவன் உறவினனாயிருந்தாலும், வழி தவறியவனாக இருந்தாலும் அவனுக்கும் இதைச் சொல்லலாகாது. எவனது வீட்டில் இந்த சகஸ்ரநாமம் ஒலிக்கிறதோ அவனுக்கு என்றும் எதனிடமும் பயம் இராது. மகாலக்ஷ்மி சஞ்சலசஞ்சாரியாக இருந்தாலுங் கூட அவனிடம் நிலைத்திருப்பாள். இது பரம ரகஸ்யமாகவும் புண்ணிய பலன்களை உண்டாக்குவதாகவும் இருந்து வருகிறது. தரித்திரனுக்கு நிதியையும் மோக்ஷகாமிகளுக்கு மோக்ஷத்தையும், காமிகளுக்கு சகல இஷ்ட சித்திகளையும் கொடுப்பது இதுவாகும்.

இதைப் படிப்பவன் நோயாளியாக இருந்தால் நோயிலிருந்து விடுபட்டு ஆரோக்கியசாலியாகிறான். பந்தக் கட்டுக்களிலிருந்தும் விடுபடுகிறான். பிருமஹத்தி, கட்குடி, பொன் திருட்டு, குரு பத்தினியோடு கூடிக் குலாவிய பாபம் முதலான மகாபாதகங்களெல்லாம் இதை ஒருதரம் மனப்பாடம் செய்தாலே அகன்றொழியும்! உண்ணக் கூடாதனவற்றை உண்பவனும் வாங்கக் கூடாத தானங்களை வாங்கியவனும் பொய் சொல்பவனும், அவர்களோடு கூடியிருந்தவனும், கபட வேடதாரியும் இதை மனப் பாடம் செய்தால் அப்பாபங்கள் நாசமாகும். நாரதரே! நான் சொல்லிய இந்த சகஸ்ரநாமம் ரகசியமானது. தூய்மையானவருக்குப் பிரம்ம சாயுஜ்யத்தை வழங்க வல்லது. இது சத்தியம்! இது சத்தியம்! இதில் சந்தேகமே தேவையில்லை!'' என்றார் நாராயணர்.

## 7 தீக்ஷை விதி முறைகள்

நாரதர் நாராயணரை நோக்கி, ''சுவாமி! பலத்தையும், பெரும் பாக்கியத்தையும், பெரும் சிறப்பையும் கொடுக்கும் ஸஹஸ்ர நாமத்தைத் தங்களிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொண்டேன். பிரம்ம, க்ஷத்திரிய, வைசியர்களுக்கும் பெண்களுக்கும் எந்தத் தீக்ஷையில்லாமல் அதிகாரம் உண்டாகாதோ அந்த உன்னதமான தீக்ஷா விதியை விரிவாக எனக்குக் கூற வேண்டும்!'' என்று கேட்டார்.

நாராயணர் கூறலானார்:

''தூய்மையான சீடர்களுக்கு எந்தத் தீக்ஷையினால் தேவாக்னி குரு பூஜைக்கு அதிகாரம் சித்திக்கிறதோ, எந்தத் தீக்ஷை மேலான மெய்யறிவை கொடுத்து அறியாமை யெனும் பாவத்தை அகற்றுகிறதோ, எது அதிகப் பலத்தையும் கொடுக்கிறதோ, குருவும் சிஷ்யர்களும் மிகவும் பரிசுத்தமாக விளங்குவதற்கு எதை விரும்புகின்றனரோ, அந்தத் தீக்ஷையைதான் உத்தமமான தீக்ஷை என்றும், அதை செய்து கொள்வது அத்தியாவசியம் என்றும் ஆகமங்களை அறிந்த அறிஞர்கள் போற்றுகிறார்கள்.

அத்தகைய தீக்ஷைக்குரிய விதி முறையாவது:—

குரு விதித்தபடிக் காலைக் கடன்களை முடித்து நதிக் கரையை அடைந்து ஸ்நாநம் சந்தியாவந்தனம் முதலானவற்றைச் செய்ய வேண்டும். பிறகு கமண்டலத்தைக் கையில் ஏந்தி, மௌனமாக நதிக் கரையிலிருந்து புறப்பட்டு, தன் வீட்டிற்குச் சென்று, யாக மண்டபத்தை யடைந்து, உன்னதமான ஆசனத்தில்



கார்ந்து, ஆசமனப் பிராணு யாமஞ் செய்ய வேண்டும். சாதாரண அர்க்கியத்தில் (மந் திர நீரில்) வாசனைப் பூக்களை இட்டு ஏழு முறை அஸ்திர மந் திரத்தில் ஜபிக்க வேண்டும்

"அந்தத் தீர்த்தத்தைக் கொண்டே அந்த மந்தி ரத்தை உச்சரித்து வாயில்கள் முதலியவற்றின் மீது தெளிக்க விட்டுப் பூஜையைத் துவங்க வேண்டும். வாசல் மேற்படி யில் தக்ஷிணதிசையில் கங்கை யையும் கணேசரையும் வலது புறத்தில் சரஸ்வதியையும் நடு வில் லக்ஷ்மியையும் நிலைபெறச் செய்து அவரவருக்குரிய மந்தி ரங்களால் வாசனை மலர் அர்க் கியங்களைக் கொண்டு பூஜிக்க வேண்டும். பிறகு மேற்படிவாச லின் தக்ஷிண சாகையில் கங் கையையும் கணேசரையும், இடது சாகையில் க்ஷேத்திரப் பாலகரை யும் யமுனையையும், கீழ்ப்படியில் அஸ்திர தேவரையும் நிலை பெறச் செய்து முன் போலவே அவரவருக்குரிய மந்திரங்களால் பூஜித்து அப்பரிவார மூர்த்திகளையெல்லாம் தேவி மயமாகப் பாவித்து தியானம் செய்ய வேண்டும். பிறகு, திவ்ய முத்திரையினுல் மேல் புறத்திலுள்ள விக்னங்களையும் அஸ்திர மந்திரத்தால் வானத்து விக்னங்களையும் பாத தாடனத்திருல் பூமியிலுள்ள விக்னங்களையும் நீக்க வேண்டும். பிறகு தக்ஷிணங்கிரியினுல் வாமசாகையில் உட் புகுந்து தீர்த்த கலசத்தையும், நிருதி திக்கில் வாஸ்துபதி பிராமண வடிவை ஸ்தாபித்து வாசனை மலர்கள் முதலானவற்றைக் கொண்டு சாமான்யர்க்கியத்தால் பூஜிக்க வேண்டும். பிறகு பஞ்ச கவ்யத்தை எடுத்து மணடப தோரண ஸ்தம்பம் வரையில் தெளிக்க வேண்டும். இதுவரை கூறிய தேவதைகளை யெல்லாம் தேவி மயமாகவே மன தில் பாவித்து பக்தி சிரத்தையாக மூல மந்திரத்தை உச்ச ரித்து, ஜபித்து, புரோக்ஷனம் செய்து அஸ்திர மந்திரதறை உச் சரித்து, மண்டப ஸ்தானத்தை தாடனஞ் செய்ய வேண்டும். அஸ்திர மந்திரத்தோடு, ஹூம் என்ற மந்திரத்தையும் உச்சரித்து, அப்யுக்ஷணம் செய்து, ஆகாயத்தில் தூபம் பரி மளிக்கும்படி தூபங் காட்டி, தருப்பையின் நுனியால் சுத்தம் செய்ய வேண்டியவற்றைச் சுத்தம் செய்து, அந்தத் தருப்பை

நுனியை ஈசானிய திக்கில் வைக்க வேண்டும். பிறகு புண்யாஹ வாசனம் செய்து, ஏழைப் பிராமணர்களை போஜனத்தால் மகிழச் செய்து, பிறகு கிழக்கு முகமாக ஆசனத்தில் அமர வேண்டும். தன் குருவை வணங்கி, தியானிக்க வேண்டிய தெய்வத்தை அந்தத் தெய்வ மந்திரத்தால் தியானித்து முன் சொன்னது போல பூத சுத்தியாதிகளைச் செய்ய வேண்டும். பிறகு சிரசில் ரிஷியையும், முகத்தில் சந்தஸையும், இதயத்தில் தேவதையும், குஹ்யத்தில் பீஜத்தையும் பாதங்களில் சக்தியையும் கிரமமாக நியசிக்க, வேண்டும். பிறகு தாளத்திரயமும் (மும்முறை தட்டுதலும்) சோடிகா முத்திரையினால் மூன்று முறை திக்பந்தனமும் பிராணா யாமமுஞ் செய்து மூல மந்திரத்தை உச்சரிக்க வேண்டும். பிறகு சரீரத்தில் மாத்ருகாநியாசம் செய்ய வேண்டும். அதைச் செய்யும் முறையாவது—தலை முதல் பாதம் வரையில் மந்திர வித்தான ஓம் அம் நம என்கிற மந்திரத்தால் நியசித்து, அதற்குப் பிறகு மூலமந்திர ஷடங்க மந்திரங்களின் ஆரம்பத்தில் பிரண வத்தையும் முடிவில் நம: ஸ்வாஹா; வஷட்; ஹூம்; வௌஷட்; பட் என்பவற்றையும் இணைத்து, பெரு விரல் முதல் சிறு விரல் வரையிலும் இருதயம் முதலான இடங்களில் செய்வதான கரந்நி யாச அங்கன்னியாசங்களைச் செய்ய வேண்டும். பிறகு, வர்ணாதி நியாசங்களை கல்பங்களில் எந்தெந்த இடங்களில் எப்படியெப்படி சொல்லியிருக்கிறதோ அது போல மூல மந்திரத்தைச் சேர்த்து செய்வது நல்லது. கல்பப்படி வர்ண நியாசம் செய்த பிறகு தன் உடலைத் தேவிக்குப் பீடமாகக் கற்பித்து பூஜைகளைச் செய்ய வேண்டும்

அதன் விளக்கம்:—வலது தோள், இடது தோள், வலது தொடை, இடது தொடை, முகம், இடது விலாப்புறம், உந்தி, வலது விலா என்னும் எட்டு இடங்களில் முறையே தர்மம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வரியம், அதர்மம், அஞ்ஞானம் அவை ராக்கியம் அநைஸ்வரியம் என்னும் எட்டு மந்திரங்களைக் கொண்டு நியசித்து, இந்த எட்டில் தர்மாதி நான்கு மந்திரங்களை நான்கு கால்களாகவும் அதர்மாதி நான்கு மந்திரங்களைப் பாத்திரமாக வுள்ள பீடமாகவும் பாவித்து, மத்தியில் மென்மையாக இருக்கும் இருதய நடுவில் அனந்தன் என்னும் மந்திரத்தால் நியசித்தும், தூய பிரபஞ்சத தாமரையான அந்த இதய கமலத்தில் பன்னிரண்டு கலைகயோடுள்ள சூரியனையும், பதினாறு கலைகளோடுள்ள சூரியனையும் பதினாறு கலைகளோடுள்ள சந்திரனையும் பத்துக் கலைகளோடுள்ள அக்னியையும் அவரவருக்குரிய மந்திரங்களால் நியசித்து, அதற்கு மேல் ஸத்வம், ராஜஸம், தாமஸம் என்னும் முக்குணங்களையும் நியசித்து அதற்கு மேல் ஆன்மா, அந்தராத்மா பரமாத்மா என்னும் மூன்று விதமான ஆத்ம ஸ்வரூபத்தில் ஞானாத் மாவை நியசித்தும் செய்வதான பாவனா பூஜையே பீட பூஜை என்று கூறப்படுகிறது.

இவ்விதம் தேவி பீடத்தைக் கற்பனை செய்து அமுகானாுய நம என்றும் மந்திரத்தால் ஆசனத்தைப் பூஜை செய்து, அந்த ஆசனத்தில் தியானிக்கப்படும் தியேய மூர்த்தியான தேவியை தியேய மந்திரத்தால் தியானிக்க வேண்டும். யதாவிதியாக மானசீகமாக எல்லா உபசாரங்களையும் செய்ய வேண்டும்! அம்பிகைக்கு மகிழ்ச்சியூட்டக் கூடிய முத்திரைகளைக் காட்டி, அந்த ஆசனத்துக்கு இடது பாகத்தின் தலைப்பில் சதுஸ்ரமாகவும், அதனுள்ளே விருத்தாகாரமான ஷட் கோணமும், அதனுள் திரிகோண மண்டலமும் அமைத்து—அதன் நடுவே சங்கமுத்திரை காண்பிக்க வேண்டும். பிறகு ஷட் கோணங்களை அக்னிதிக்கு முதலாக ஷடங்க மந்திரத்தால் உத்தம புஷ்பங்களைக் கொண்டு அர்ச்சித்து, சங்கிற்கு ஆதார பாத்திரத்தை அந்த ஷட்கோண நடுவில் வைத்து, அஸ்திர மந்திரத்தால் தெளித்து, "மம் வன்னி மண்டலா யோக்தாதி தோத சகலாத்மநே, அமுக தேவ்யா அர்க்ய பாத்திர ஸ்தானுய நம!" என்றும் மந்திரத்தை சொல்லி அக்னி மண்டலத்துக்குரிய பத்துக் கலைகளையும் கிழக்கு முதல் பிரதக்ஷிணமாக பூஜிக்க வேண்டும். மூல மந்திரத்தால் புரோக்ஷிக்கப்பட்ட சங்கை எடுத்து, மூல மந்திர உச்சரிப்புடன் முன் குறிப்பிட்ட ஆதார பாத்தில் வைத்து, "அம் சூரிய மண்டலா யோக்த்வாத் வாத சாந்தே கலாத்மனே—அமுக தேவ் யர்க்ய பாத்ராய நம:" என்றும் சம்சங்காயபதம் புரோச்யம் நம:" என்றும் உச்சரித்துத் தெளிக்க வேண்டும். சூரியனுக்குரிய பன்னிரண்டு கலைகளையும் பூஜித்து, முறைப்படி, அவற்றை ஸ்தாபித்து, மாத்ருகா மந்திரத்தையும் மூலமந்திரத்தையும் விலோமமாகவுச்சரித்து, அந்தச் சங்கில் நீரை பூஜித்து, சந்திர மண்டலத்துக்கு உரிய பதினறு கலைகளையும் நியசிக்க வேண்டும். பிறகு "உம் ஸோமமண்டலாயோக்த்வாம் தேஷோட சகலாத்மநே—அமுகார்க்யா மிருதாய நம:" என்னும் மந்திரத்தை யுச்சரித்து மலர் தூவி, இதய தியானத்தோடு ஸ்ருனி முத்திரையினுல் ஆவாஹனம் செய்து, அந்த மந்திரத்தையே எட்டு முறைகளும், அதே போல மூலமந்திரத்தை எட்டு முறையும் ஜபிக்க வேண்டும் அவற்றோடு இருதயம் முதலான ஷடங்கங்களையும் ஜபம் செய்து, மச்ச முத்திரையால், கையை மூடிப் பின்னர், அந்தச் சங்கிற்குத் தக்ஷிணை திக்கில் புரோக்ஷிணை பாத்திரத்தை வைத்து, அதில் சங்கு நீர் தீர்த்தத்தைக் கொஞ்சம் விட்டு, அந்த நீரினுல் எல்லாப் பூஜைப் பொருட்களையும் தன்னையும் தெளித்துக் கொண்டு (புரோக்ஷித்து) இரண்டையும் பரிசுத்தமெனப் பாவித்துக் கொள்ள வேண்டும். பிறகு தன் எதிரில் ஒவ் வேதிகையும் அதன் மீது சர்வதோபாத்திரம் எனும் மண்டலத்தையும் கற்பித்து, அதன் மத்தியில் கர்ணிகை (தாமரைக் கொட்டை) எழுத வேண்டும். பிறகு நெல்லையும் அரிசியை நிரம்பப் பரப்பி, அதன் மீது சிதைவற்ற நல் தர்ப்பைக் கூர்ச்சத்தை வைத்து ஆதார சக்தியிலிருந்து பீடம் வரையில் அர்ச்சனை செய்ய

வேண்டும். பிறகு, கறுப்பற்ற இரண்டு மண் குடத்தை எடுத்து அதன் உட்புறத்திலும் வெளியிலும் அஸ்திர மந்திரத்தை உச்சரித்து, புனித நீரால் சுத்தம் செய்து மூன்றிமையோடு கூடிய நூலால் சுற்றி, அந்தக் கும்பக் கலசத்திலுள் தர்ப்பை கூர்ச்சமும் நவ ரத்தினமும் இட்டு, தாரா மந்திரத்தால் வாசனை மலர்களைக் கொண்டு, அர்ச்சனை செய்ய வேண்டும்.

பிறகு அந்தக் கும்பத்திற்கும் பீடத்திற்கும் ஐக்கிய பாவனு நியாயஞ் செய்ய வேண்டும். பிறகு, பிரதிலோமமாக மாத்ருகா மந்திரத்தை ஜபம் செய்து அதோடு மூலமந்திரத்தையும் ஜெபித்து அந்த ஜபத்துடன், கும்பத்தில் நீரைப் பூரித்து, அரசந்துளிர், பலாவின் தளிர், மாந்தளிர் என்பன இவற்றைக் கும்ப முகப்பில் வைத்து, அக்ஷதைகளிட வேண்டும். இரண்டு வஸ்திரங்களை உடுத்தி, பிராண ஸ்தாபன மந்திரத்தால் பிராணப் பிரதிஷ்டை செய்ய வேண்டும். பிறகு, தேவி கற்பத்தில் கூறப்பட்டிருக்கும் ஆவாஹனம் முதலான முத்திரைகளால் பராசக்தியை மகிழ்ச்சி பெறச் செய்து, தியானம் புரிந்து ஸ்வாகதந்தே மஹாதேவி என்று நலம் விசாரிப்பதாகவும் அதற்குத் தேவி, வர்த்தஸ்வ ஸ்வாகதம் என்று பதிலளித்ததாகவும் பாவித்து, ஸ்வாகதார்க்கியமும், பாத்யாசமனார்க்கியமும் கொடுத்து நெய் தயிர் பால் முதலானவற்றால் ஆன உணவை நிவேதனம் செய்ய வேண்டும்; பிறகு நீராட்டுவதாக தைலானம் முதலானவற்றையும் சந்தனம் முதலான நறுமணப் பொருட்களையும் சமர்ப்பித்து, சிவப்புப் பட்டாடைகளாலும் பல விதமான அணி மணிகளாலும் அலங்கரித்து, தேவியினது அங்கங்களில் மாத்ருகா நியாயஞ் செய்து, பச்சைக் கற்பூரம் கஸ்தூரி, குங்குமப் பூ முதலிய நறுமணத்தோடு கூடிய சந்தனத்தையும் குருக்கி முதலான நறுமண மலர்களையும் சாற்றி, அதில், விலாமாச்சை, சந்தனம், தேன், சர்க்கரை என்பன கலவையிட்ட தூபமும் தீபமும் காட்ட வேண்டும். பலவிதமான நைவேத்யப் பொருட்களை நிவேதனஞ் செய்ய வேண்டும். அவ்வாறு செய்யும் போது, முன்பு புரோக்ஷணத்திற்காக வைத்திருக்கும் அர்க்கிய தீர்த்தத்தால் ஒவ்வொன்றையும் தெளித்து நிவேதனஞ் செய்ய வேண்டுமே தவிர, புரோக்ஷணமில்லாமல் நிவேதிக்கலாகாது. அவ்வாறு நிவேதித்த பிறகு தேவியின் அங்கங்களை வழிபடும் அங்க பூஜை செய்து பிறகு வைஸ்வதேவம் செய்ய வேண்டும். அதைச் செய்யும் முறைமாவது:—தக்ஷிண பாகத்தில் நெல்லைப் பரப்பி, அதில் அக்னியை நிலைப்படுத்தி, மூர்த்தியை முறைப்படி ஆவாஹித்துப் பூஜித்து, தாரா மந்திரத்தினாலும் மூல மந்திரத்தினாலும் இருபத்தைந்து முறைகள் பாயசத்தினாலும் நெய்யினாலும் ஹோமம் செய்ய வேண்டும். மறுபடியும் வியாஹ்ருதி மந்திரத்தால் ஓமஞ் செய்து, சந்தன மலர்களால் அர்ச்சனை செய்து, அக்னியிலிருக்கும் மூர்த்தியைப் பீடத்தில் சேர்த்து, அக்னிக்குப் பாய

ஸாஞ்சலி செய்து அக்னியை வெளிப்படுத்தி, பிறகு பராசக்தியின் ஆவரண தேவதைகளை நறுமண மலர்களால் பூஜிக்க வேண்டும். பராசக்திக்குப் பஞ்சோபசாரம் செய்து, தாம்பூலங் கொடுத்து, சத்ரசாமரங்களால் உபசாரம் செய்து, தேவி மந்திரத்தை ஆயிரம் உரு ஜபம் செய்து, தேவிக்கு ஈசான்ய (வட கீழ்த்) திசையில் சமர்ப்பித்து வேதிகையின் ஈசான்ய பாகத்யல் கரகத்தை நிலைப் படுத்த வேண்டும். அதில் துர்க்கா மந்திரத்தை ஆவாஹித்துப் பூஜை செய்து, அந்தக் சரகத்தைக் காக்க வேண்டும் என்று சொல்லி, கையில் எடுத்துக் கொண்டு, அதில் உள்ள நீர் கீழே விழும்படிப் பிரதக்ஷிணம் செய்து, அந்த இடத்தை நனைத்து, கரகத்தை முன்பிருந்த இடத்தில் வைத்து, அங்கு அஸ்திர மந்திரத்தால் அஸ்திர தேவதையைப் பூஜிக்க வேண்டும். பிறகு, குரு சீடனோடு மௌனமாய் உணவருந்தி விட்டு, யாக சாலையில் நியமத்தோடு படுத்துறங்க வேண்டும்.

குண்டலத்தையும் தண்டுலத்தையும் சம்ஸ்காரஞ் செய்வதற்காக, குரு எந்த விதமாக எவ்விதம் சுத்தம் செய்ய வேண்டும் என்பதைக் கூறுகிறேன்.

ஆசாரியர், தேவியின் மூல மந்திரத்தை உச்சரித்து, குண்டத்தையும் தண்டுலத்தையும் நிரீட்சித்து, அஸ்திர மந்திரத்தால் தெளித்து, மேற்படி மந்திரத்தால் தாடனமும் (தட்டுதலும்) கவசத்தால், அப்யுக்ஷணமும் (மூடுதலும்) செய்ய வேண்டும். மூன்று தருப்பைகளால் மேற்கிலிருந்து கிழக்காகவும் தெற்கிலிருந்து வடக்காகவும் மூன்று ரேகைகளை இழுத்து, பிரணவத்தால் குண்டலத்தை மூடுவித்து, ஆதார சக்தி முதல் பீடம் வரைப் பூஜை செய்ய வேண்டும். பரமகாரணர்களான வாகீஸ்வரி, வாகீஸ்வரர்களை நறு மண மலர்களால் பூஜித்து, வாகீஸ்வரி, வாகீஸ்வரரோடு கூடிக் கொண்டு மோகத்தோடு ருது ஸ்நானத்தை யுடையவளாகவும் இருவரும் சிறிது காலம் கூடியிருப்பதாகவும் பாவித்து தியானிக்க வேண்டும். பிறகு, நெருப்பை ஒரு பாத்திரத்தில் வைத்துக் கொண்டு அதிலிருந்து சிறிது அக்னியை நைருதி திக்கில் ராக்ஷஸப் ப்ரீதியாகத் தள்ளி விட்டு, முன்பு குண்டத்துக்குச் சொல்லியது போலவே அந்த அக்னிக்கு சதுஸ் ஸம்ஸ்காரஞ் செய்து, ரம் என்ற அக்னி பீஜத்தை உச்சரித்து, அக்னியிடமிருந்து அந்த அக்னி தன் சைதன்யத்தில் கலந்ததாகவும் மீண்டும் அந்த அக்னியிடம் சேர்ந்ததாகவும் பாவனை செய்து, பிரணவததால் ஏழுதரம் அபிமந்திரித்து, தேனு முத்திரை வழங்கி, அஸ்திரத்தால் ரக்ஷையும் கவசத்தால் அவகுண்டமுஞ் செய்து, பாத்திரத்தோடு கையில் எடுத்துக் கொண்டு, குண்டத்தின் மேல் மூன்று முறை பிரதக்ஷிணமாகச் சுற்றி, அந்த அக்னியைச் சிவபீஜமாகவும், குண்டத்தை தேவியோனியாகவும் பாவித்து, இரண்டு முழங் காலும் பூமியில் தாங்கும்படி இருந்து, குண்டத்தில்



சர்வலோக ஈஸ்வரி

உருவமற்ற அகிலமாதாவான மூலசக்தியின் சித்திரம்

அக்னியையிட்டு இருவருக்கும் ஆசமனங் கொடுக்க வேண்டும். பிறகு சித் பிங்கள ஹந தக பச என்பவற்றை இரட்டிப்பாகச் சொல்லி, சர்வக்ஞாக் ஞாபய ஸ்வாஹா என்னும் வன்னி தீப மந்திரத்தால் ஒளிரச் செய்து, அந்த அக்னியைத் தியானிக்க வேண்டும். "நான்கு திசைகளிலும் முகமுள்ளதாகவும் தனிப் பெரும்பிரகாசத்தோடு நிர்மலமாய், சுவர்ணம் போலப் பிரகாசிப்பதாகவும், ஓமத்தையே ஆகாரமாகவும் கொண்டுள்ள வேத மாதாவான அக்கினியை வணங்குகிறேன்!" என்று பொருள் உள்ள மந்திரத்தால் தனிக் கவனத்தோடு தோத்திரஞ் செய்ய வேண்டும். அதன் பிறகு 'ஸஹஸ்ரார்ச்சி சுவஸ்தி பூரண உத்திஷ்ட புருஷ: தூம வ்யாபீ ஸப்த ஜிஹ்வோ தநுர்த்தவ' என்னும் வன்னி மந்திர ஷடகங்களையும், அக்னியின் பூர்வ பச்சிம தக்ஷிணோத்தா நைருதி ஈசான ஸ்தானங்களில் நியசித்து, மங்கள இஷ்ட சித்தி, ஸ்வஸ்திகம் என்பனவற்றைத் தரித்துக் கொண்டு, பத்மாசனத்தில் இருப்பதாகவும், முக்கண்களை யுடைய

தாகவும் பொன்னிறமானதாகவும் விளங்கும் அக்னியைத் தியானம் செய்ய வேண்டும். பிறகு குண்டத்து மேகலையில் நான்கு பக்கமும் ஜலத்தால் பரிஸ்தரண மிட்டு, அதன் மேலே நான்கு சமித்துக்களை சூரிய வட்டமாக வைக்க வேண்டும். குண்டமத்தியில் அஷ்டதள பத்மத்தையும் (எட்டு இதழ் தாமரையையும்) அதன் நடுவில் ஷட் கோணத்தையும் (ஆறு கோணத்தையும்) அதன் நடுவில் விருத்த கோணத்தையும் (வட்ட கோணத்தையும்) அதன் நடுவில் திரிகோணத்தையும் (முக்கோணத்தையும்) பாவிக்க வேண்டும்: அல்லது முன்னதாகவே எழுதிக் கொள்ள வேண்டும். பிறகு, அந்த அக்னியை நோக்கி ''வைஸ்வாநரா! ஜாதவேதலோகிதாக்ஷ! இந்த ஸ்தானத்தை வகிக்க வேண்டும். வகித்து எல்லாக் காரி யங்களையும் சாதித்தருள வேண்டும்'' என்று ஸ்வாஹா மந்திரத்தால் பூஜை செய்து நடுவிலிருக்கும் ஷட் கோணத்தில், 'ஹிரண்யா சுகனு ரக்தா கிருஷ்ணு ஸுப்ரபா பஹுரூபா அதிரக்திகா' என்னும் மந்திரங்களினுலும் கேசரங்களில் அங்க மந்திரங்களாலும் அர்ச்சனை செய்து, தாமரையின் எட்டுத் தளங்களில் ஜாதவேதா, சப்த ஜிஹ்வா, ஹவ்ய வாஹனு; அசுவோதரஜ: சஞ்ஜோந்நிய: வைஸ்வாநர கௌமாரதேஜ, விஸ்வமுக, தேவமுக என்பவர் களைக் கும்பிட்டு அந்தந்த இடங்களில் அவர்கள் பிரசன்னமாயிருப்ப தாயும் நான்கு பக்கங்களிலும் லோக பாலகர்கள் ஆயுதசஹிதமாக இருப்பதாகவும் பாவித்துத் தியானித்துப் பூஜை செய்ய வேண்டும். அதற்குப் பிறகு, சிருச்சிரவம், ஆஜ்யம் என்பனவற்றை சம்ஸ் காரஞ் செய்து, சிரவத்தால் ஆஜ்யத்தை ஆஜ்ய பாத்திரத்தின் வலதுபுறமிருந்து எடுத்து அக்னியின் வலது நேத்திரத்தில் அக்னயே ஸ்வாஹா என்னும் மந்திரத்தால் விட்டு, பிறகு இடது பாகத்திலிருந்து நெய்யை எடுத்து, அக்கினியின் இடது நேத் திரத்தில் சோமாயஸ்வாஹா என்னும் மந்திரம் சொல்லி விட்டு, பாத்திரத்தின் நடுவிலிருந்து நெய்யெடுத்து அக்னீ ஸோமாப்யாம் ஸ்வாஹா என்னும் மந்திரம் சொல்லி நடு நேத்திரத்தில் விட்டு, மறுபடியும் தக்ஷிண திக்கிலிருந்து எடுத்து, அக்னியின் முகத்தில் அக்னியே ஸ்விஷ்ட க்ருதேஸ்வாஹா என்னும் மந்திரமும் தாரா மந்திரத்தோடுள்ள வியாஹ்ருதி மந்திரங்களாலும் சொல்லி ஓமஞ் செய்ய வேண்டும் பிறகு அக்னி மந்திரத்தினுல் மும்முறை செய்து பிரணவத்தால் கர்ப்பாதானம், பும்ஸவனம், விஷ்ணுபலி சீமந் தோன்னயனம், ஜாதகர்மம், நாமகரணம், உபநிஷ்கிரமணம், அன்னப் பிரசாதம், கர்ண வேதம், சூடாகர்மம், உபநயனம், விரத பந்தனம், மஹாநாம்ய விரதம், உபநிஷத் விரதம், கோதான விரதம், உதவாஹம் என்னும் நற்செயல்களுக்கு பதினுறு ஹோமம் செய்ய வேண்டும். பிறகு, வாகீஸ்வரி வாகீஸ்வரர்களைப் பூஜை செய்து, உத்வாஸனம் செய்து, பிறகு ஐந்து சமித்தால் அக்னியை முன்னிட்டு ஓமஞ் செய்ய வேண்டும். பிறகு, ஆவரண தேவதைகளுக்கும் ஒவ்வொரு ஹோமஞ் செய்துவிடவேண்டும்.

அதன் பிறகு சிருவத்திஞல் நெய்யை எடுத்து யாக கரண்டியில் நான்கு முறைவிட்டு, யாக கரண்டியை மூடிக்கொண்டு ஆசனத்தில் இருந்து எழுந்து 'வௌஷட்' என்பதை அந்தத்தில் கொண்டிருக்கும் அக்னி மந்திரத்தால் பூர்ணுகுதி செய்யவேண்டும்.

அதன் பிறகு, கணேச மந்திரத்தால் பத்து ஆகுதி செய்து, அக்கினியில் பீடத்தைப் பூஜித்து, குறிப்பிட்ட தேவதையைத் தியானம் செய்து, அந்த அக்னியில் அந்தந் தேவதையை எண்ணி நெய்யிஞல் அக்கினி முகமும் தேவதையின் ஐக்கியமாக இருப்பதாகப் பாவனை செய்து, இருபத்தைந்து ஹோமங்களை மூலமந்திரங்களோடு செய்து, பிறகு ஒரே பாவமாகப் பாவித்து, அக்கினியை ஆன்மாவிடம் ஒடுக்கி ஷடங்க தேவதைகளுக்கு ஆகுதிகளைத் தனித் தனியாகச் செய்யவேண்டும் அதற்குப் பிறகு பதிஞேரு ஆகுதிகளைச் செய்யவேண்டும். இதஞல் அக்கினிக்கும் தேவிக்கும் நாடி சந்தானம் செய்து, கற்போக்தமான பொருட்களைக் கொண்டோ அல்லது எள்ளிஞலோ தேவதையின் மூலமந்திரம் சொல்லி ஆயிரத்தெட்டு ஆவர்த்தி ஹோமம் செய்யவேண்டும். பிறகு தேவி மகிழ்ந்திருப்பதாகவும், அப்படியே ஆவாண தேவதைகளும் வன்னியாதி தேவதைகளும் மகிழ்ந்திருப்பதாகவும் பாவிக்கவேண்டும். பிறகு, ஸ்நான சந்தியாதிகளைச் செய்தவஞகவும், இரண்டு ஆடை இரண்டு ஆபரணம் தரித்தவஞகவும், கமண்டலம் ஏந்தியவஞகவும், சுத்தஞகவும் விளங்கும் சீடனை குண்டத்திற்கு அருகில் ஆசாரியர் வரவழைத்து, தம்மையும் சபையில் உள்ளோரையும் குலதெய்வத்தையும் அவன் வணங்கித் தர்ப்பாசனத்தில் உட்காரும்படி செய்து, கருணையோடு அவனைப் பார்த்து, அவனுடைய சைதன்னியம் தன்னிடம் சேர்ந்ததாகப் பாவனை செய்து தேவியின் திருவருளுக்கு உரியவஞகும்படி சீடனின் தேகத்தைத் திருஷ்டியிஞலும் அத்வாக்களை ஓமத்திஞலும் சோதனை செய்ய வேண்டும். அதைச் செய்யும் முறையாவது:— சீடனின் உடலில் ஷடத்துவாக்களைத் தியானித்துப் பாதங்களில் காலாத்துவாவையும் (காலகதி நெறியையும்) சந்தியில் தத்வாத்துவாவையும் (தத்துவ வழியையும்,) உந்தியில் புவஞத்வாவையும் (புவி வழியையும்) இருதயத்தில் வர்ணுத்துவாவையும் (குல வழியையும்) நெற்றியில் பதாத்வாவையும் (பொருள் வழியையும்) சிரசில் மந்திராத்வாவையும் (மந்திர வழியையும்) தியானித்து, அந்தந்த அத்வாவை (வழியை) ஸ்வாஹாந்தமாக உச்சரித்து, எள்ளோடுங்கூடிய நெய்யில் தோய்த்த கூர்ச்சத்திஞல் சிஷ்யனைத் தொடவேண்டும், பிறகு, பிரணவத்துடன் கூடிய அத்வமந்திரத்திஞல் எட்டெட்டு ஆகுதிகள் செய்ய வேண்டும். அதன் பிறகு ஷடத்வாக்களும் பிரம்மத்தில் ஒடுங்கியதாகப் பாவனை செய்து, மறுபடியும் சிருஷ்டி மார்க்கத்தில் அத்வாக்கள் பிரம்மத்திலிருந்து உண்டானதாகப் பாவித்து தம்மிடம் ஒடுங்கிலயித்த சீடனின் சைதன்யத்தை சீடனின் தேகத்தில் எழுப்பி,

பூர்ணாகுதி செய்யவேண்டும். பிறகு, குண்டத்திலிருக்கிற தேவதையைக் கலசத்தில் கூட்டி, மீண்டும் வியாகிருதி ஹோமம் செய்து, அக்னியின் அங்க ஆகுதிகள் ஒவ்வொரு முறை செய்து, அக்கினியைத் தன்னிடம் ஒடுக்கிக் கொண்டு, நேத்திர மந்திரம் சொல்லியவாறு, சிஷ்யனின் கண்களை வஸ்திரத்தால் கட்டி, குண்டத்திலிருந்து மண்டலத்தை அடைவித்து, அவன் கையில் மலர்களைக் கொடுத்து, முக்கிய தேவதையிடம் மலரஞ்சலிசெய்ய வைத்து பிறகு கண் கட்டை அவிழ்த்து, குரு சாசனத்தில் உட்கார வைக்கவேண்டும். தேகத்தில் பூத சுத்தியும் மந்திர நியாசங்களும் செய்து சீடனை எழுப்பி வேறு மண்டலத்தில் உட்காரவைத்துக் கும்பத்தில் இருக்கிற துளிர்களைத் தலைமீது வைத்து, தேவி மந்திரத்தை ஜபம் செய்து, தெய்வரூபமாக விளங்கும் கலசஜலங்களைக் கொண்டு, அபிஷேகம் செய்து, ரக்ஷார்த்தமாக வர்த்தனி ஜலத்தையும் தெளிக்க வேண்டும். அதன் பின்னர் சிஷ்யன் இரண்டு ஆடைகள் உடுத்தி திருநீறு அணிந்து, குரு சந்நிதானத்தில் உட்காரவேண்டும். கருணாமூர்த்தியான ஆசாரியர் தம் இதயத்திலிருந்து பராசக்தியை வெளிப்படச்செய்து, சிஷ்யனின் இதயத்தில் அடைவித்ததாகப் பாவித்து, சிஷ்யனை நறுமண மலர்களால் அர்ச்சனைசெய்து, தனக்கும் தேவிக்கும் ஐக்கிய பாவமாக எண்ணி, மகாதேவியின் மந்திரமாகிய தேவி காயத்ரி மந்திரத்தை சிஷ்யனின் வலது காதில் மூன்று முறைகள் உபதேசித்தல் வேண்டும். பிறகு, தம் இடது ஹஸ்தத்தை சிஷ்யனின் தலைமீது வைத்து, நூற்றெட்டு உரு சிஷ்யன் ஜபிக்கும்படிச் செய்யவேண்டும். அதன் பிறகு, சிஷ்யன் தேவரூபமான ஆசாரியரை பூமியில் தண்டாகாரமாக வீழ்ந்து வணங்கி வேறு நினைப்பற்று அனைத்தையும் ஆசாரியருக்கு அர்ப்பணம் செய்து, யாக சம்பந்தப்பட்ட பிராமணர்களுக்குத் தக்ஷிணை கொடுத்து மகிழச்செய்து, போஜனமும் செய்விக்க வேண்டும். சுமங்கலிகளுக்கும் கன்னிப் பெண்களுக்கும் பிரம்மசாரிகளுக்கும் தீனர்களுக்கும், ஆதரவற்றவர்களுக்கும் வறுமையாளர்களுக்கும் தன் கைப் பொருளின் சக்திக்கு ஏற்றபடி தானமிட்டு திருப்திசெய்வித்து, கிருதார்த்தனானதாக நினைக்கவேண்டும். பிறகு நாள் தோறும் அவன் இந்த மஹாமனுவை ஆராதனை செய்து வரவேண்டும். நாரதரே! உமக்குத் தீக்ஷாவிதியைத் தெளிவாகக் கூறினேன். ஆகையால் நீர் தேவியின் திருவடிகளைப் பூஜித்துவாரும். இதைவிட பரமான தருமம் வேறு எதுவுமில்லை. வைதீகன் வேதத்திற் கூறியுள்ளபடி உபதேசஞ் செய்ய வேண்டும். தாந்திரிகன், தாந்திரிகப் படி உபதேசிக்க வேண்டும். தாரமுள்ள இந்தத் தீக்ஷை விதியை அந்தந்த பிரயோக முறையில் செய்ய வேண்டும்.'' என்று நாராயணர் கூறினார். நாரதர், நாராயணரை வணங்கி, விடை பெற்று தேவியின் தரிசனத்தை மனத்தில் எண்ணியபடி, பராம்பிகையின் பரமகதியை அடைந்தார்—இவவாறு வியாசர் ஜனமேஜயனுக்குக் கூறினார்.

## 8 அமரர் அகந்தையை அடக்கிய யக்ஷ உருவம்

ஜனமேஜய மன்னன் வியாசரை நோக்கி, ''ஞான குருவே! எல்லா சாஸ்திரங்களையும் தர்மங்கள் யாவையும் கற்றுணர்ந்தவர் களில் உயர்ந்தவரே! பிராமணர்களுக்கு வேதத்தில் சக்தியுபாசனை சொல்லப்பட்டிருக்கிறது. மூன்று சந்திகளிலும் வேறு காலங்களிலும் சக்தியுபாசனையே செயல்பட்டுவருகின்றது. அந்தச் சக்தி தேவி யைத் தவிர வேறு எந்தச் சக்தியை யார்தான் போற்று வார்கள்?'' ஆனால் சிலர் வைணவர்களாகவும், சிலர் காணு பத்யர்களாகவும் சிலர் மரவுரி ஆடையாளர்களாகவும் சிலர் ஓர் ஆடையும் உடுத்தாத திகம்பரர்களாகவும், சிலர் காபாலிகர் களாகவும் சிலர் பௌத்தர்களாகவும், சிலர் சார்வாகர்களாகவும் பலவாருகவும் பிரிந்து வேதத்தில் அக்கறையில்லாமல் இருக் கிருர்கள். எல்லாமறிந்தவரே! மங்களத்தை கைவிட எவருக் கும், மனப்பூர்வமாக விருப்பம் ஏற்படாது. அப்படியிருக்கும் போது சிலர் அப்படி இருப்பது ஏன்? நீங்கள் முன்பு கூறிய மணித் வீபவர்ணனையில் தேவியின் மாபெரும் இடம் எத்தகையது? அது எப்படியிருக்கிறது? இவற்றை நீங்கள் எனக்குச் சொல்லவேண் டும!'' என்று வேண்டினன்.

வியாசர் கூறலானர்:

''ஜனமேஜயனே! நீ தகுந்த கேள்வியையே கேட்டிருக்கிருய்! எனவே, பிராம்மணர்களுக்கு வேதத்தில் அக்கறை ஏற்படும் விதத் தையும், மணித்வீபத்திலுள்ள தேவியின் இடப்பெருமைகளையும் கூறுகிறேன் கேட்பாயாக.

''ஆதியில் அசுரர்கள் பலவிதமான ஆயுதங்களோடும் மாயை களோடும் மிகவும் மமதையோடும் நூறு ஆண்டுகள் தேவர்களுடன் கொடிய யுத்தம் செய்தார்கள். அப்போது பராசக்தியின் அருளால் தேவர்கள் வெற்றியடைந்தார்கள். அசுரர்கள் பாதாளத்திற்கு ஓடிப் போனர்கள். அதன் பிறகு பராசக்தியின் செயலால்தான் வெற்றி யடைந்தோம் என்பதை தேவர்கள் மறந்தனர். ''நம் பலத்தா லன்ரோ வெற்றிபெற்ரேம்? தேஜஸோடும் வல்லமையோடும் கூடிய நம் முன்னல் பாமரரான அசுரர்கள் நிற்கமுடியுமா? அவர் கள் கதையும் ஒரு கதையா?'' என்று மமதையோடு பெருமை பாராட்டிக் கொண்டிருந்தனர். அப்போது தேவியானவள் யக்ஷரூப மாக ஆவிர்ப்பவித்தாள்.

அப்போது அவள் 'கோடிச் சூரியப் பிரகாசமாய், கோடி சந்திரர்களின் குளிர் நிலவின பிரகாசமாய், ஏககாலத்தில் தோன்றும் கோடி மின்னல்களைப் போன்ற பேரொளியாய், கைகால்கள் முதலிய உறுப்புக்கள் எதுவுமின்றி மிகப் பேரழகோடும் தேஜஸோடும் விளங்கும் யக்ஷ உருவத்தோடு தோன்றினாள்.

அப்போது, தேவர்கள் ஆச்சரியமடைந்து, ''இந்த மாயை அசுரர்களின் குறும்பா? அசாத்தியமான இவ்வளவு பெரிய மாயையை வேறு யாரால் செய்யமுடிந்தது?'' என்று ஒன்று கூடி ஆலோசனை நடத்தினார்கள். ''நம்மில் யாராவது ஒருவர் அந்த யக்ஷ உருவத்தின் அருகே சென்று பார்த்து அதன் கதையை ஆராய்ந்து செய்யவேண்டியதைச் செய்யவேண்டும்!'' என்று முடிவு கட்டினார்கள் தேவேந்திரன், அக்னிதேவனை அழைத்து, ''அக்னியே! நீ எங்களுக்கு முகமாக இருப்பதால் நீ முதலில் சென்று அந்த யக்ஷன் யாரெனத் தெரிந்து கொண்டு வா!'' என்றான். உடனே அக்னித்தேவன் வேகமாகக் கிளம்பி யக்ஷனின் அருகே சென்று, ''நீ யார்?'' என்று கேட்டான். அதற்கு யக்ஷன் அக்னியைப் பார்த்து, ''நீ யார்? உன்னிடம் என்ன வல்லமை உண்டு? என் முன்னால் முதலில் அதை எடுத்துச் சொல்!'' என்றான். அதற்கு அக்னி, ''நான் தான் அக்னி தேவன்! நான் தான் ஜாதவேதன்! எல்லாவற்றையும் சுட்டெரித்து தகனஞ்செய்யும் வல்லமையுடையவன்!'' என்று கூறினான். அப்பொழுது யக்ஷன் அக்னித் தேவன் எதிரில் ஒரு துரும்பைக் கிள்ளி எறிந்து, ''நீ உலகத்தை யெல்லாம் சுட்டெரிக்கும் வல்லமை யுடையவன் என்று கூறினையல்லவா? எங்கே இந்தச் சிறு துரும்பைச் சுட்டெரிக்க உன்னால் முடியுமா, பார்?'' என்றான். உடனே அக்னி தேவன் தனது முழுச்சக்தியுடன் அந்தச் சிறு துரும்பை சுட்டெரிக்க முயன்றான். ஆனால் எவ்வளவு முயன்றும் அவனால் கொளுத்த முடியவில்லை. அதனால் அக்னிதேவன், வெட்கமடைந்து தேவர்களிடம் திரும்பிச் சென்று தான் சென்று வந்த காரியத்தைக் கூறி ''நமக்கு ஏன் இந்த வீண் மமதை? அதனால் நமக்கு ஆவது என்ன?'' என்றான். உடனே தேவர்கள் அக்கினியை விட்டுவிட்டு காற்றுத் தேவனான வாயுவை அழைத்து, ''வாயுதேவனே! உலகமனைத்தும் உன்னையே சார்ந்திருக்கின்றன. உன் அசைவினாலேயே உலகங்கள் இயங்கிவருகின்றன. எல்லாவுயிர்களிலும் நீயே பிராணரூபமாக இருக்கிறாய். ஆகையால் நீயே அந்த யக்ஷனிடம் சென்று பார்த்து வா அதை அறிந்து வர உன்னைவிடச் சாமர்த்தியம் வேறு யாருக்கும் இல்லை!'' என்றார்கள். வாயுத்தேவன் ஆணவத்துடன் அந்த யக்ஷனிடம் விரைந்து சென்று யக்ஷனை நோக்கி, ''நீ யார்?'' என்றான். அதற்குள் அந்த யக்ஷன், ''நீ யார் என்பதை முதலில் சொல்! உன்னிடம் என்ன சக்தியிருக்கிறது! அதை என் முன்னால் சொல்'' என்றான். அதற்கு வாயு மிகவும் ஆணவத்தோடு ''நான்

தான் வாயுத்தேவன்! எல்லாவற்றையும், ஆட்டி அசைக்கக் கூடிய ஆற்றலும் எதையும் உறிஞ்சக்கூடிய ஆற்றலும் எனக்கு உண்டு! என் சேட்டையினால் தான உலகங்கள் யாவும் இயங்கவும் பேதமும் படுகின்றன!'' என்று கூறினான். அதற்கு யக்ஷன், ''இதோ உன் முன்பு இருக்கும் இந்தச் சிறு துரும்பை உன்னிஷ்டப்படி ஆட்டி அசைக்கச் செய் பார்க்கலாம்! அப்படி நீ செய்யாவிட்டால் உன்னை அனுப்பிய இந்திரனிடமே திரும்பிப் போய் சேர்!'' என்று சொனனான். உடனே காற்றுத்தேவன் முழு ஆற்றலோடு அந்தத் துரும்பை அதன் இடத்திலிருந்து ஊதிப்பெயர்க்க முயன்றான். ஆனால் அந்தச் சிறு துரும்பு இருந்த இடத்திலேயே இருந்தது. அது சிறிதும் அசையாததைக் கண்டதும் காற்றுத்தேவனின் கர்வம் அடங்கியது. அவன் அவமானமடைந்து, இந்திரனிடம் திரும்பிச் சென்று தனக்குக் கர்வபங்கம் ஏற்பட்டதைச் சொன்னான். பிறகு தேவர்கள் எல்லாம் தங்களுக்கு அரசனாகிய தேவேந்திரனை நோக்கி, ''நீரே எங்களுக்கு அதிபதியாதலின் நீரே போய் அந்த யக்ஷனின் தன்மையை அறிந்துவாரும்!'' என்று அனுப்பிவைத்தார்கள். உடனே, இந்திரன் போய் அந்த யக்ஷனைத் துரத்த முயன்றான். ஆனால் பராத்பரமான யக்ஷரூபம் ஓடிப் போகாமல், இந்திரனின் எதிரே அதிவேகமாய் பாய்ந்து வந்து திடீரென மறைந்து விட்டது.

இந்திரன் அவமானமடைந்து, 'ஆகா! இந்த யக்ஷன் என்னையொரு பொருட்டாகவே மதிக்கவில்லை! என்னிடம் ஒன்றுகூட கேட்காமல் போய்விட்டானே! முன்பு நான் அனுப்பிய வாயுவிடமும் அக்னியிடமும் பேசிய இந்த யக்ஷன் என்னிடம் பேசக்கூடவில்லையே?'' என்று மனம் குறைப்பட்டு, ''நான் இனி தேவர்களிடம் திரும்பிப் போகக்கூடாது! அவர்களிடம் போனால் இந்த அவமானத்தை எப்படிச் சொல்வேன்? அதைவிட உயிர் விடுவதே மேல்! ஏனெனில் மானம் உயிரை விடப் பெரிதல்லவா?'' என்று தன் கர்வத்தை அடக்கிய அந்த யக்ஷனிடமே சரணடைந்தான். அப்பொழுது ''இந்திரா! நீ மாயாபீஜத்தை ஜபம் செய்துவா! அதனால் நீ சுகப்படுவாய்!'' என்று ஒரு வானொலி எழுந்தது. அதைக் கேட்ட தேவேந்திரன் ஒரு லட்சம் ஆண்டுகள் ஆகாரம் ஏதும் புசியாமல் கண்மூடி பராத்பரமான மாயாபீஜத்தை ஜபித்துத் தியானத்தில் இருந்தான். அப்பொழுது தற்செயலாக சித்திரை மாதம் நவமிதிதி நடுப்பகலில், முன்பு தேஜோரூபமாகித் தோன்றிய யக்ஷனின் இடத்தில் பேரொளி ஒன்று தோன்றியது.

அவ்வொளி நடுவில் குமாரியாயும், அப்பொழுதே தோன்றிய இளமைப் பருவததினளாகவும் கோடி இளஞ்சூரியர் போன்ற பிரகாசத்தோடு உமாதேவி தோன்றினாள். அவள் தன் தலையணியாகப் பிறைச் சந்திரனைச் சூடி, ஆடையினுள்ளே ஒளிரும் தனங்களோடும், பாசம் அங்குசம் வரதம் அபயம் என்பனவற்றை ஏந்திய




யக்ஷிணி

திருக்கரங்களோடும் மென்மையான தளிர் போன்ற உடம்பு நிறத்தோடும் விளங்கினாள். அதோடு அவள் மனோகரியாகவும், பக்தர்களுக்குக் கற்பகவிருட்சத்தைப் போன்றவளாகவும், பலவிதமான அணிமணி அலங்காரத்தோடும் மூன்று கண்களோடும் மல்லிகை மாலைகளால் அலங்கரித்த கூந்தலோடும் தோன்றினாள். நான்கு வேதங்களும் உருவெடுத்து நான்கு திசைகளிலும் நின்று அத்தேவியைத் துதித்தன. புன்னகை முகத்தினளாகவும் பிரசந்நை யாகவும்கோடி மன்மதர்களின் அழகுடையவளாகவும் தோன்றிய அத்தேவியின் பல்வரிசை ஒளியினால் பூமியெல்லாம் பத்மராகம் போல் பிரகாசித்தது. சிவந்த ஆடையுடன், செஞ்சந்தனம் பூசிய சிவையாகவும், ஹேமவதியாகவும் சர்வ காரணங்களுக்கும் காரணியாகவும் காரணங்கருதாத கருணாகரியாகவும் உமாதேவி தோற்றமளித்தாள். அந்தத் தேவியைத் தேவேந்திரன், பக்திப் பரவசத்தோடு தரிசித்து, ஆனந்தக் கண்ணீர் பெருக, மெய்க் கூச்செறிய வணங்கித் துதித்து ''ஜகதாம்பிகையே! அந்த யக்ஷன் எங்கிருந்து உண்டானான்? அதன் கதையைச் சொல்ல வேண்டும்!'' என்றான். அதற்குப் பராசக்தி கூறலானாள். ''தேவேந்திரா! அந்த யக்ஷன், காரணத்திற்குக் காரணமான என் உருவமே யாகும்! அது தோஷரகிதமாயும் சர்வ சாக்ஷியாயும் மாயாதிஷ்டானமாயும் விளங்கும் பிரம்ம ஸ்வரூபமாகும்! சகல வேதங்களும் எதனுடைய திருவடிகளைப் பூஜிக்கின்றனவோ, தவங்

கள் யாவும் எதனைச் சொல்கின்றனவோ, எந்த வஸ்துவின்மீது அன்பு வைத்து பிரமச்சரியத்தைக் கடைப்பிடிக்கிறார்களோ, அதை இனிச் சொல்கிறேன் கேள்! ஓம் என்னும் ஏகாக்ஷரம் பிரம்மமாகும். அதையே ஹ்ரீம் சொரூபமாகவும் சொல்லுவர்! இந்த இரண்டுமே எனது பீஜ மந்திரங்கள் முக்கியமாக இந்தப் பீஜ ஸ்வரூபமாக இருக்கும் நான ஜகத்தையெல்லாம் படைக்கின்றேன். அதில் ஒரு பகுதி சச்சிதானந்த(மெய் அறிவு இன்ப)சொரூபம். மற்றொன்று மாயாப் பிரகிருதி! பராசக்தியாகவும் சக்திமதியாகவும் மகேஸ்வரியாகவும் இருக்கும் என்னிடத்தில் அந்த மாயையானது சந்திரனில் நிலவு எப்படி அபேதமாக இருக்கின்றதோ, அப்படியே அபேதமாயும் சமமாயும் இருக்கின்றது ஜகத்பிரளயத்தில் என்னிடம் அபேதமாக இருக்கும் பிராணிகளுடைய கர்மங்களின் பரிபக்குவ வசத்தால் மறுபடியும் அவ்யக்தமாக இருக்கும் அந்த மாயை வியக்தமாகிப் பிரகாசிக்கிறது. மறைமுகமாக இருக்கும் அவஸ்தை எதுவோ, அதுவே மாயை! வெளிமுகமாக இருக்கும் மாயை எதுவோ அதுவே தான் தமசு அந்தத் தமசிலிருந்து ஸதவமும் சிருஷ்டியின் துவக்கத்தில் ரஜசும் தோன்றுகின்றன. பிரம்ம, விஷ்ணு, ருத்திரர்கள் இம்மூன்று குணங்களையும் உடையவர்கள் தான். பிருமாவுக்கு ரஜோ குணமும், விஷ்ணுவுக்கு சத்வகுணமும், ருத்திரருக்குத் தமோகுணமும் மிகுந்திருக்கும். ருத்திரர் சர்வகாரணரூபராயும் அவற்றை அடைவதற்குக் காரணமாகவும் இருக்கிறார் பிரம்மா ஸ்தூலதேகமாகவும், விஷ்ணு சூட்சும தேகமாகவும் ருத்திரர் காரண தேகமாகவும் விளங்குகிறார்கள். துரியமோ நானே இருக்கிறேன்! சம அவஸ்தையாக இருப்பதாகச் சொல்லும் சர்வ அந்தர்யாமியோ நானே தான். உருவம் இல்லாத பிரமம் எனப்படும் அந்தப் பிரம்மரூபமும் நானே தான். என் உருவம் நிர்க்குணம் சகுணம் என்றும சொல்லப்படும். நிர்க்குணம் என்பது மாயை இல்லாதது. சகுணம் என்பது மாயையுடன் கூடியது. இவ்விரண்டு உருவமாக இருக்கும் நான், சகல ஜகங்களையும் படைத்து, அதற்குள் புகுந்து, ஜீவர்களின் கர்மங்களை அனுசரித்து எப்பொழுதும் அவர்களைத் தூண்டிக்கொண்டேயிருக்கின்றேன். படைத்தல், காத்தல், அழித்தல் (சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம்) என்னும் முத்தொழில்களில் மும்மூர்த்திகளையும் இயங்கச் செய்து கொண்டிருக்கிறேன். வாயு, சூரியன், இந்திரன், யமன், அக்னி முதலான தேவர்களான நீங்களெல்லாம சஞ்சரிப்பதும் என் ஏவலினால் தான்! என் அருளாலேயே நீங்கள் வெற்றியை அடைந்தீர்கள் நீங்கள் மரப்பொம்மையைப் போன்றவர்கள். உங்களை நானே ஆட்டிவைக்கின்றேன். அவரவரது கர்மங்களை அனுசரித்து, எல்லாவற்றையும் செய்பவள் நான். அதனால் தான் சில சமயம் உங்களுக்கு வெற்றியும் சில சமயம் அசுரர்களுக்கு வெற்றியும் உண்டாகும்படி நானே செய்கிறேன். சர்வ சொரூபமாக இருக்கும் என்னை நீங்கள் மமதையால் மறந்து கர்வத்தால் அகங்காரம் கொண்டீர்கள். உங்

களுக்கு அருள் செய்வதற்காக உங்களுடைய தேகத்திலிருந்து வெளிப்பட்டிருக்கும் உன்னத தேஜஸ் என்னுடைய தேஜஸே யாகும். ஆகையால் உங்களுக்கு உண்டான கர்வத்தை நீக்கி விட்டு சச்சிதானந்த ரூபிணியான என்னைச் சரணடைவீர்களாக!'' என்று கூறினாள்.

மூலப்பிரகிருதியும் ஈஸ்வரியுமான மஹாதேவியைத் தேவர்கள் பக்தி சிரத்தையோடு தோத்தரிக்க அவள் அப்பொழுதே மறைந் தாள். பிறகு பகவதியின் பராத்பரமான திருவடித் தாமரையை தேவர்களனைவரும் அகங்காரமின்றி வழிபட்டு, மூன்று காலங் களிலும் காயத்திரி ஜபம் செய்து, யக்ஞபாகங்களைக் கொடுத்து போற்றிப் பூஜித்து வந்தார்கள். இவ்வாறு கிருதயுகத்தில் பிராமணர் அனைவரும் காயத்திரி மந்திரம் பிரணவம் ஹ்ருல்லேகா மந்திரஜபம் ஆகியவற்றில் மிகவும் பற்றுடையவராக விளங்கினார்கள். வேதத்தில் சில இடங்களில் விஷ்ணுவின் உபாசனை சொல்லப்பட்டிருந்தாலும் அது நித்தியமானது அல்ல. எனவே விஷ்ணு உபாசனையே தீக்ஷையோ சிவோபாசனையோ இல்லாமலிருந்தாலும் இருக்க லாம், சகல வேதங்களிலும் காயத்திரி உபாசனை நித்தியமாகச் சொல்லப்பட்டிருப்பதால் அந்த காயத்திரி உபாசனையில்லாமல் மட்டும் இருக்கக்கூடாது.

அது இல்லாத அந்தணனுக்கு எந்த வகையாலும் அதோகதி யுண்டாகும். பிராமணனுக்குக் காயத்திரியினால் கிருத கிருத்திய முண்டாகிறது. அவனுக்குக் காயத்திரியைத் தவிர வேறு விருப்பம் எதுவுமே வேண்டியதில்லை. காயத்திரியை ஜபிக்கும் பிராமணன் மோக்ஷமடைவான். உலகத்தில் தர்மத்தை நிலைநாட்டவந்த மனு அந்தணர்கள் வேறு எது செய்தாலும் செய்யாவிட்டாலும் காயத்திரி உபாசனையை மட்டும்விடாமல் செய்ய வேண்டும் என்றும் அதைவிட்டு வேறு உபாசனைகளைச் செய்பவன் நரகமடைவான் என்றும் கூறியுள்ளார். ஆகையால், ஜனமேஜயனே! முதல் யுகத் தில் காயத்திரியை உபாசித்த பிராமணர்களில் உயர்ந்தோர், தேவி யின் திருவடித்தாமரையில் பக்தியுள்ளவர்களாக இருந்தார்கள் என்பதை அறிவாயாக!' என்றார் வியாசர்.

## 9 பிராமணர்களின் பொறுமையும் கௌதமரின் சாபமும்

“ஜனமேஜய மன்னனே! காயத்திரி ஜபத்தின் மகிமையை கௌதம முனிவரின் கதை ஒன்றினால் உணர்த்துகிறேன், கேள்:

''முன் ஒரு காலத்தில், ஜீவர்களின் கர்மவசத்தால், பன்னிரண்டு ஆண்டுகள் வரையிலும் இந்திரன் மழை பெய்விக்காமல் இருந்தான். அதனால் மனிதர்கள் இறக்கும்படியான கொடிய பஞ்சம் உண்டாகி, பிணங்களின் எண்ணிக்கையைக் கணக்கிட முடியாமற்போயிற்று. சிலர் பசி தாங்காமல் குதிரைகளையும் பன்றிகளையும், சிலர் மனிதர்களின் பிரேதங்களையும் தின்று வந்தார்கள். குழந்தைகளைத் தாயும், மனைவியரை புருஷர்களும் சாப்பிட்டார்கள். இவ்விதம் ஜீவன்கள் பசியினால் பீடிக்கப்பட்டு சாப்பிடக் கூடாததையெல்லாம் சாப்பிட்டுத் துன்புற்றன. பிராமணர்களில் பலர் ஒன்று கூடி, ''நாம் அனைவரும் கௌதமரிடம் செல்வோம். அவர் தவச் செல்வர்; காயத்திரி ஜபத்தை மறவாதவர்; அவர் நமது வறுமையைப் போக்குவார். அவருடைய ஆசிரமம் சுபிக்ஷமாக இருப்பதால் பலர் அங்கு சென்றுள்ளனர். ஆகையால் அவருடைய ஆசிரமத்துக்கு நாமும் செல்வோம்!'' என்று தீர்மானித்துத் தங்கள் குடும்பங்களோடும் அக்னி ஹோத்ரத்தோடும், பசுமாடுகளை ஓட்டிக் கொண்டு கௌதமரின் ஆசிரமத்திற்கு நான்கு திக்குகளிலிருந்தும் வந்து சேர்ந்தார்கள். அவர்களையெல்லாம் கௌதமர் வரவேற்று உபசரித்து ''நீங்கள் அனைவரும் இங்கு வந்த காரணம் என்னவோ?'' என்று கேட்டார். அதற்கு அவர்கள் அடங்காத துயரத்தோடு அவரவரின் துன்பங்களையெல்லாம் எடுத்துக் கூறினார்கள். கௌதமர் அவர்கள் மீது இரக்கங்கொண்டு அவர்களுக்கு அடைக்கலம் தந்து, ''பிராமணர்களே! என் ஆசிரமம் உங்களுடையது தான்! நான் உங்களுக்குத் தொண்டனாவேன்! நீங்கள் அனைவரும் மஹாதபோதனர்கள். உங்களுடைய தரிசனத்தாலேயே தீய ஒழுக்கங்களும் நல்லொழுக்கங்களாகி விடுகின்றன. உங்கள் பாததூளியினால் என் மனை சுத்தமாகிவிட்டது! நீங்கள் யாவரும் சந்தி, ஜபம், பாராயணம் முதலியவற்றைச் செய்து சுகமாக இருங்கள்'' என்றார். பிறகு அவர் மிகவும் பக்தி சிரத்தையோடு காயத்ரியைத் தியானித்து, ''ஹேதேவீ! ஸ்ரீவித்யே! வேதத்தாயே! பராத்பரே! வியாகிருதி முதலிய மகா மந்திர ரூபியே! பிரணவஸ்வரூபிணி ஸ்வாஹா சுவதா ரூபிணியே! எல்லாப் பொருள்களையும் தந்தருளும் உன்னை வணங்குகிறேன். பக்தர்களுக்குக் கற்பகவிருக்ஷம் போன்று அவஸ்தாத்திரியங்களுக்குச் சாட்சியாகவும் துரியாதீத ஸ்வரூபிணியாகவும் சச்சிதானந்தரூபிணியாகவும் உபநிஷத்துக்களால் அறியக்கூடியவளாகவும், சூரிய மண்டலவாசினியாகவும், அதிகாலையில் சிவந்த நிறமுடைய பாலையாகவும் மத்தியான்னத்தில் சிறந்த குமரியாகவும் மாலையில் கறுப்பு நிறமுள்ள விருத்தையாகவும் விளங்கும் உன்னை தினமும் வணங்குகிறேன்! பரமேஸ்வரி! நீ எனது அபராதங்களை மன்னிக்க வேண்டும்'' என்று தோத்தரித்தார். உடனே காயத்திரி தேவி காட்சி தந்து, யாவரையும் காக்க வல்ல சர்வபோஷண பாத்திரம் ஒன்றைக் கௌதமரிஷியிடம் கொடுத்து, 'கௌதமா! நீ எதை எதையெல்லாம் விரும்புகிறாயோ,

அவற்றையெல்லாம் இந்தப் பாத்திரம் கொடுக்கும். நீ வைத்து கொள்!'' என்று கூறி மறைந்தாள்.

பிறகு, மாபெரும் *மலைக்குச் சமமான அளவு அன்னவகைக் குவியல்களும் அறுசுவைத் தின்பண்டங்களும் உன்னதமான பட்டாடை ஆபரணங்களும் யாகப் பொருட்களும் மற்றும் கௌதம முனிவர் விரும்பின அனைத்தும் அந்தப் பாத்திரத்திலிருந்து உண்டாயின. கௌதம முனிவர் அவற்றைக் கண்டு, மகிழ்ந்து, பிராமணர்கள் அனைவரையும் அழைத்து அவற்றையெல்லாம் கொடுத்தார். மறுபடியும் அந்தப் பாத்திரத்திலிருந்து, பசு, எருமை, ஆடு முதலியவைகளும் அவற்றிற் குரிய உணவான பலவித புல்வகைகளும், யக்ஞத்துக்குரிய கிருச்சரம் முதலான பொருட்களும் மூவுலகிலும் தெது அழகுள்ளனவோ, அவையனைத்தும் உண்டாயின. அவற்றையும் கௌதம முனிவர் அந்தணர்களுக்கு வழங்கினார். அந்தணர்கள் மிகவும் மகிழ்ந்து மிகவும் திருப்தியடைந்து, யக்ஞச் செய்யத் துவங்கினார்கள்

அந்த இடத்தைப் பார்த்தபோது, சுவர்க்க லோகத்தைப்போல் திகழ்ந்தது. பிராமணர்களும் பிராமணப் பெண்களும் ஆடையணிகளாலும் சந்தனம் முதலான வாசனை மலர்களாலும் தேவர்களைப் போலவும் அப்ஸர ஸ்திரீகளைப் போலவும் தென்பட்டார்கள் இவ்விதம் கௌதமர் அவர்களை மகிழவைத்துக்கொண்டு இருந்த செய்தி தேவர்களுக்கும் எட்டியது. இந்திரன் தனது சபையில் ''மனிதர்கள் மரணமடையும் படியான இந்தப் பஞ்சக் காலத்தில் அவிசு, வபை முதலியவை உண்டாவதே துர்லாபமாக இருக்கும் போது, அவையெல்லாம் அங்கு அளவில்லாமல் உண்டாகின்றன. இங்குள்ள நமது கற்பகவிருக்ஷம நம்முடைய மனோரதத்தைப் பூர்த்தி செய்கிறது'' என்று சொல்லிக் கொண்டிருந்தான். கௌதமரோ சிறிதும் அகந்தையில்லாமல் பன்னிரண்டு ஆண்டுகள் வரை தம்மை நாடிவரும் ரிஷிகள் அந்தணர்களுக்கெல்லாம் அபயமளித்து அவர்களைத் தம் புத்திரர்களைப் போலவே அவர் போஷித்து வந்தார். மேலும் எல்லா முனிவர்களும். காயத்திரி தேவியான லோக மாதாவைப் பூஜிப்பதற்கான இடங்களையும்கௌதமர் ஏற்படுத்தினார். அப்படிப்பட்ட இடங்களில் அந்தணர்கள் முறைப்படி காயத்திரியைப் போற்றி வரும் போது, ஒருநாள் நாரத முனிவர் தமது மகதி என்னும் வீணையை மீட்டி, காயத்திரியின் பரமகுணங்களை பரவசத்தோடு பாடிக்கொண்டு தூய்மையான மகரிஷிகளின் நடுவில் வந்து உட்கார்ந்தார் அவரை கௌதமர் முதலான முனிவர்கள் வரவேற்று வணங்கி உபசரித்தார்கள். நாரதர் கௌதமருடைய புகழை எடுத்துச் சொல்லி ''பிரம்ம ரிஷியே! தேவசபையில் தேவேந்திரன் நீர் ரிஷிகளைப் போஷிக்கும் பெரும் புகழைச் சொன்னதைக் கேட்டு நான் உம்மைப் பார்க்கவந்தேன். முனிவர்களிலே மிகவும் சிறந்த



வரான நீரோ ஜகதம்பிகையின் அருளால் தன்யராக இருக்கிறீர்!'' என்று சொல்லிவிட்டு காயத்திரி ஸ்தானத்தை அடைந்து பேரன்பால் கண்கள் மலர்ந்து விரிய, காயத்திரியை முறைப்படி துதித்து விட்டுச் சுவர்க்க லோகத்திற்குக் கிளம்பிச் சென்றார்'

கௌதமரை நாரதர் பெரிதாகப் புகழ்ந்து விட்டுப்போன பிறகு கௌதமரால் காப்பாற்றப் பட்ட பிராமணர்கள் அனை வரும் தௌதமருக்கு உண்டான பெரும் புகழைக் கண்டு, பொறாமையும் எரிச்சலும் கொண்டு அகங்காரத்தால் ஆத்திரப்பட்டார்கள். அதன் விளைவாகக் கௌதமரின் புகழை அழியச் செய்வதற்கானவற்றை யெல்லாம் செய்ய முயன்றார்கள். அச்சமயம் பூவுலகமெங்கும் நல்ல மழை பொழியலாயிற்று தேசங்கள் யாவற்றிலும் சுபிக்ஷமுண்டாயிற்று அதை, அந்தணர்கள் கேட்டு கௌதமரைச் சபிக்க முயன்றார்கள். அதற்காக மிகக் கிழமாகவும் பிராணனை விடும் நிலையிமுள்ள ஒரு மாயவடிவப் பசுவை அவர்கள் கொண்டுவந்து கௌதமர் ஹோமஞ் செய்யும் சமயத்தில் குறுக்கீடாக ஓமச்சாலையிலுள் அப்பசு புகும்படி ஓட்டினார்கள். கௌதமர் அந்தப் பசுவை ஹூம் ஹூம் என்ற சப்தத்தால் தடுத்தார். அந்த சப்தத்தைக் கேட்டுப் பயந்து கிழட்டுப் பசு உயிரை இழந்தது. உடனே அங்கிருந்த பிராமண முனிவர்கள் அனைவரும் துஷ்டரான கௌதமரால் தான் பசு கொல்லப்பட்டதென்று கூச்சலிட்டு ஆர்ப்பாட்டம் செய்தார்கள். கௌதமர் ஓமத்தைப் பூர்த்தி செய்துவிட்டுப் பசு இறந்து கிடப்பதைக் கண்டு மிகவும் வியப்புற்று, சமாதி நிஷ்டையில் அமர்ந்து தியானஞ்செய்து, பசு இறந்ததின் உண்மைக் காரணத்தைத் தம் ஞானதிருஷ்டியால் அறிந்தார் உடனே, பிரளய கால ருத்திரரைப் போல் வெகுண்டு, சினத்தால் கண் சிவக்க, அந்தணர்களை நோக்கி ''ஓ பிராமண அதமர்களே! நீங்கள் இனிமேல் வேத மாதாவான காயத்திரி ஜபத்திலும் தியானத்திலும் பராமுகராகிவிடக்கடவீர்கள். வேதத்திலும், அது கூறும் யாகங்களிலும், அதன் வாக்கியங்களிலும், ஆண்டவனிடமும் ஈஸ்வரன் சம்பந்தப்பட்ட சாஸ்திரங்களிலும் மந்திரங்களிலும் மூலப்பிரகிருதியினிடத்தும், ஸ்ரீதேவியிடமும், தேவி தியானத்திலும் புராணங்களி

லும் நீங்கள் பற்றற்றவர்களாவீர்களாக! தேவிமந்திரம், தேவி ஸ்தானம், தேவியுபாசன கர்மங்கள், தேவி யுற்சவ தரிசனம் தேவி நாம கீர்த்தனம், தேவி பக்தனை அனுகூதல், தேவி பக்தனை வழி படல், அதுபோலவே ஈஸ்வர பூஜை, விபூதி ருத்திராக்ஷம், பில்வம் முதலியவற்றிலும், சிரௌதாசார ஸ்மார்த்த ஆசாரங்களிலும் ஞான மார்க்கத்திலும் அத்வைத ஞானத்திலும் சாந்தி தாந்தியாதி சாத னங்களிலும், நித்திய கர்ம அனுஷ்டானங்களிலும், வேதம், ஓதல், வேதாத்தியயனங்களிலும் கோதானம் முதலான தானங்களிலும் பிதுர் சிரார்த்தம் முதலானவற்றிலும் சாந்திராயணம் முதலான பிராயச்சித்தங்களிலும் பராமுகமாகக் கடவீர்கள். ஸ்ரீதேவியை மறந்து, மற்ற தெய்வங்களிடம் பக்தி சிரத்தையுடன் இருக்கக் கடவீர். காபால தந்திரங்களிலும், பௌத்த சாஸ்திரங்களிலும், பாஷாண்ட ஆசாரத்திலும் விருப்புடையவராகக் கடவீர்கள்! தந்தை, தாய், புத்திரன், உடன் பிறந்தான், கன்னிகை பத்தினி முதலானவர்களையெல்லாம் விக்ரயம் செய்யும் தொழிலுடையவரா வீர்கள். புனித வேதம் புண்ணிய தீர்த்தம், தர்மம் முதலானவற் றையெல்லாம் விக்ரயம் செய்யக்கடவீர்கள் காம சாஸ்திரம், பௌத்தம் காபாலிகம் முதலிய மதங்களில் நாட்டம் வைக்கக்கடவீர் கள்! தாய், புத்திரி, சகோதரி, பிறன்மனைவி முதலானவர்களோடும் கூடிச் சங்கமம் செய்யக்கடவீர்கள். உங்கள் பரம்பரையில் உதிக்கும் ஆடவரும் பெண்டிரும் நான் இட்ட சாபத்தீயால், தகிக்கப்பட்டவர் களாய் உங்களைப்போலவே ஆகக்கடவர். மகேஸ்வரியானகாயத்திரி உங்களைக் கோபிக்கட்டும், உங்கள் வீடுகள் இருளடைந்து போகட் டும்!'' என்று சபித்தார். இவ்விதமாகக் கொடுஞ்சாபம் கொடுத்து, நீரைத் தொட்டு விட்டுத் தம் பூஜா ஸ்தானத்தையடைந்து காயத்திரி தேவியைத் தரிசித்து, வணங்கினார். அப்போது சாபத் திற்கு ஆளான பிராமணர்களின் தீச் செயலைக்கண்டு மகாதேவி புன்னகை செய்து, கௌதமரை நோக்கி, "பாம்புக்குக் கொடுத்த பால் எப்படி விஷமாகிறதோ அதுபோலவே இவர்களுக்கு நீ செய்த நன்றியும் நஞ்சாயிற்று. கௌதமா! உன் சினத்தை நீத்து சாந்தி யடை! இது உலகியல்பு!'' என்று கூறியருளினாள். கௌதமர் தேவியைத் தரிசித்து வணங்கி தமதிருப்பிடத்தை யடைந்தார். பிறகு பிராமணர்கள் எல்லாம் கௌதமர் சாபத்தால் வேதவழி களையும் காயத்திரியையும் மறந்தார்கள்.

பிறகு அவர்கள் அனைவரும் ஏக்கமுற்று வெட்கத்தால் கூசி, கௌதமரிடம் வந்து சாஷ்டாங்கமாய் விழுந்து கும்பிட்டுத் தங்கள் மீது கருணை செய்யும்படி வேண்டிய வண்ணம் நான்கு புறமும் சூழ்ந்து கொண்டார்கள். அப்போது கௌதமர்,'' என் சொல், என்றுமே பொய்க்காது. நீங்கள் அனைவரும் கிருஷ்ணவதாரம் வரை யில், கும்பீபாக நரகில் கிடப்பீர்களாக! கலியுகத்தில் உங்களுக்குப் பிறவியுண்டாகும். அப்போது என் சாபப்படியே நான் சொன்ன

வற்றையெல்லாம் நீங்கள் செய்வீர்கள். சாபவிமோசனத்தை விரும்பினால் காயத்திரியின் திருவடித் தாமரையை வழிபடுங்கள்! என்று சொல்லியனுப்பினர். பிறகு அவர் ''இது பிராரப்தம்!'' என்று சொல்லிச் சினத்தை விட்டு, மனச்சாந்தியடைந்தார்.

கௌதமர் சபித்தபடியே கிருஷ்ணாவதாரம் முடிந்து கலிகாலம் தோன்றியபோது, சாபமடைந்த அந்தணர்கள் அனைவரும் கும்பீ பாக நரகத்திலிருந்து வெளிப்பட்டு பூமியில் பிறந்தார்கள். அவர்கள் மூன்று வேளை சந்தியாவந்தனங்களைக் கைவிட்டும் காயத்திரி ஜபத்தை மறந்து பக்தியை இழந்தும் வேதத்தில் நம்பிக்கையிழந்தும், பாஷாண்ட மதங்களிற் புகுந்தும் அக்னிஹோத்திரம் முதலான நற்கர்மங்களைக் கைவிட்டும் மனம் போனவாறு வாழலாயினர். தேவர்களுக்கும், பிதுர்களுக்கும் அன்னமிடுவதைக் கைவிட்டும் அறநெறி அறியாதவர்களாகவும் அலைந்தார்கள். சிலர் காபாலிகர்களாகவும் பௌத்தர்களாகவும் சமணர்களாகவும் திரிந்தார்கள். பண்டிதராயிருந்தும் கெட்ட நடத்தை உடையவர்களாகவும் பரஸ்திரீ இச்சை மிகுந்தவர்களாகவும் கெட்டலைந்தார்கள். மன்னனே! அவர்கள் மீண்டும் தாம் செய்யும் கர்மத்தாலேயே கும்பீபாக நரகத்தை அடைவார்கள். ஆகையால், எவ்விதத்திலும் நித்தியமான மகேஸ்வரி உபாசனையையே செய்யவேண்டும் அந்த சக்தியுபாசனை தான் நிலையானது இதிலிருந்து அந்தணர்களுக்கு சக்தி தேவியிடம் பக்தி ஏற்படாததற்குக் கௌதமரின் சாபமே காரணம் என்பதைப் புரிந்துகொள்வாய்! இனி ஜகதீஸ்வரியின் மேலான ஸ்தானமான மணித்வீபத்தைப் பற்றிச் சொல்கிறேன். கேள்!''

## 10 மணித்வீபத்தில் ஆறு ருதுக்கள் முதலியன

''ஜனமேஜயனே! பிரம்மலோகத்தின் மேற்பாகத்தில், சகல லோகமுமுள்ளது என்று எது சொல்லப்படுகிறதோ அதுவே மணித்வீபமாகும். அதில் தேவியின் வாசம் பிரகாசிக்கிறது. வைகுண்டம், கைலாயம், கோலோகம், பூலோகம் முதலிய எல்லா உலகங்களையும் இந்த மணித்வீபம் தன்னுள்ளே கொண்டிருப்பதால், அது சர்வ லோகமாகும். தேவி, தான் எப்பொழுதும் வசிப்பதற்காக மூலப் பிரகிருதியிலிருந்து அமைத்துக் கொண்டதால், அது சர்வ லோகாதிகம் என்றும் வழங்கப்படும். அதற்கு இணையானதும் அதைவிட அழகானதும் மூவுலகிலும் எதுவும் இல்லை. பிறவித் துன்பத்தை அழிக்கும் இந்த மணித்வீபம் மூவுலகிற்கும் குடைபோலுள்ளது. அதுவே பிரம்மாண்டத்திற்குச் சாலையாகவும் விளங்குகிறது. அது பல யோசனைகள் அகலமுடையது. அதை



நாற்புறமும் அமுதக்கடல் சூழ்ந்திருக்கும். அந்தக்கடல், காற்றினால் மோதும் அலைகளோடும், ரத்தினம்போல் மின்னும் மணற்பரப்போடும், பலவித மீன் வகைகளும் சங்குகளும் நிறைந்தும், அலைமடிந்து விழுந்தோறும் சிதறும் திவலைகளினால் குளிர்ந்துள்ள நிலப் பரப்போடும், பற்பலவிதமான கொடி மரங்களுள்ள மரக்கலங்களோடும் நான்கு பக்கங்களிலும் மரங்களின் பொலிவோடும் விளங்குகிறது.

அதற்கு வடக்குப் பக்கத்தில் நான்கு வாசல்களும் ஏழு யோசனை உயரம் உள்ள இரும்பால் அமைக்கப்பட்ட மதில் ஒன்றுள்ளது. அதில் அஸ்திர சஸ்திரம் தரித்து, யுத்தத்தில் வல்லவர்களான காவலர்கள் சஞ்சரிப்பார்கள். ஒவ்வொரு வாசலிலும் எண்ணற்ற துவார பாலகரும் தேவியின் பக்தகணங்களும் ஜகதாம்பிகையின் திருக்கோலத்தைக் காண வரும் கூட்டத்தினரும் நெருங்கியிருப்பதோடு, அவர்களுடைய வாகனங்களும் அணியணியாக நெருங்கியிருக்கும். விமானங்கள் ஒன்றோடொன்று உராய்வதால் ஏற்படும் மணியோசை எங்கும் பரவியொலிக்கும். திசைகளெங்கும் குதிரைகளின் கனைப்பும், குளம்படிச் சத்தமும் காதுகளில் பெரிதாக ஒலிக்கும். அரசனே! அத்திசைகளில் கைகளில் பிரம்புகளை ஏந்திய கூட்டத்தவர்கள் வரிசையாய் நிற்பார்கள். அவர்கள் முண்டியடித்துச் செல்லும் தேவர்களின் கூட்டத்தைப் பிரம்பால் அடிக்க, அவர்கள் அலறும் ஓசைகளும் கலந்தொலிக்கும். அந்த இரைச்சலில் இது இன்ன ஓசையென்று பிரித்தறிய முடியாது. வழிகளெல்லாம் நீர் நிறைந்த தடாகங்களும் ரத்தினமயமான மரங்களும் திகழும்.

அதற்கு வடக்கில் வெண்கலமயமான மண்டபம் ஒன்று இருக்கிறது. அதைச் சூழ்ந்து, விண்ணளாவிய கோபுரங்களோடு கூடிய வெண்கலப் பிரகாரம் ஒன்று இருக்கும். முன் சொன்ன பிரகாசத்தைவிட பன்மடங்கு காந்தியோடு அது பிரகாசிக்கும். உலகில் எவ்வளவு மரவகைகள் உண்டோ, அவ்வளவும் அங்கு இருந்து எப்போதும் நறுமணங்கமழும் மலர்கள், கனிகள், தளிர்கள்

முதலானவற்றோடு திகழும் பலா, மகிழம், வெள்ளல் ஊத்தி, செம்பாலை, கூரணிகாரம், கோங்கு, அசோகு, தேவதாரு முதலிய மரவகையோடு வனங்களும் உபவனங்களும் தடாகங்களும் சூழ்ந்திருக்கும். அவ்வனங்களில், ஆறு ருதுக்களிலும் உண்டாகும் பயன்களெல்லாம் எப்போதும் உண்டாகிக் கொண்டேயிருக்கும். குயிலோசை வண்டுகளின் ரீங்காரம் எல்லாம் இனிமையூட்டும். பல விதமான ரசங்கள் போல் நதிகள் பெருக்கெடுத்துவரும். புறாக்கள், கிளிகள் முதலிய பறவைகளும், அவற்றின் இறக்கை அசைவின் காற்றினாலும், மரங்களின் அசைவினாலும் சுகந்தமான காற்றினாலும் அங்கு மிங்கும் ஓடும் பல வகையான பெண்மான்கள் கூட்டத்தினாலும் அந்த இடம் மிக அழகாகவும் மனோரம்மியமாகவும் திகழும்.

அதற்கும் வடக்கில், சதுரமாய் ஏழுயோசனை, உயரமுள்ள ஒரு தாம்பிரப் பிரகாரம் இருக்கிறது. அது பொன் போன்ற மலர் இலைகளோடு, பத்து யோசனைதூரம் பரவிய வாசனையுடையதாகவும் கற்பகவிருட்சங்களால் சூழப் பெற்றும் இருக்கும். அங்கு, எப்பொழுதும் வசந்த ருதுவானவன் புஷ்ப சிம்மாதனத்தில், புஷ்பக்குடை நிழலின் கீழ், புஷ்பாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, புஷ்பங்களிலிருந்து பொழியும்தேன் வெள்ளத்தில் சுழல்கின்ற கண்களோடு இருப்பான். அவனோடு மதுஸ்ரீ, மாதுஸ்ரீ என்னும் மங்கையர் இருவர் புன்னகையுடன் கூடி மகிழ்ந்துகொண்டிருப்பார்கள் கானம் புரியும் கந்தர்வர்களும் தங்கள் காதலியரோடு அங்கு நிறைந்திருப்பார்கள். கோகிலங்களின் சப்தங்கள் நிறைந்திருக்கும். வசந்த காலத்து உல்லாசங்களை விரும்புகிற காமிகளின் மனோரதத்தை அந்த இடம் விருத்தி செய்யும்.

அதற்கும் வடக்கில் ஏழு யோசனை உயரமுடைய ஈயப்பிரகாரம் ஒன்று உண்டு. சாலைகள் தோறும் பத்து யோசனைதூரம் வாசனை வீசும் சந்தன மரங்களும், பொன்னென ஒளி வீசி எப்போதும் மலர்ந்த மலர்களோடும் அமுதச்சுவையோடும் விளங்கும் கற்பக மரங்கள் அங்கு நிறைந்திருக்கும். அந்த வனத்தில் கிரீஷ்ம ருது நாயகன், சுக்ரஸ்வரி, சுகிஸ்ரி என்னும் தன் நாயகிகளோடு மகிழ்ந்திருப்பான். அங்கு எல்லோரும் தாபம் தணிவதற்காகத் தங்கியிருப்பார்கள். வேதங்களை யறிந்த சித்தர்களும் இருப்பார்கள். திவ்யமான சந்தன மலர்களை அணிந்த எண்ணற்ற மங்கையர் கைகளில் விசிறிகளோடு இருப்பார்கள். இவர்களைத் தவிர வேறு பலர் குளிர் நீரின் குளுமையை விரும்பி அங்கு கூட்டம் கூட்டமாக வந்து தங்கியிருப்பார்கள்.

அதற்கு வடக்கில் ஏழு யோசனை உயரமுடைய பித்தளைப் பிரகாரம் ஒன்று இருக்கிறது. அது அரிச்சந்தன மரங்களாலும், புதிய தளிருள்ள மரங்களாலும் பச்சைப் புற்களுள்ள புல்வெளிகளாலும் நிறையப்பெற்றிருக்கும். ஆசை கொண்டவளின் மனதைப்போன்ற

கலங்கிய பொய்கைகளும் நதிவெள்ளங்களும். கூட நிறைந்திருக்கும். தேவியை வழிபடும் சித்தர்களும் தேவர்களும் நிறைந்த இடங்களை யும் கொண்டிருக்கும். தேவியை முன்னிட்டு தடாகங்கள், கிணறு கள் வெட்டுதல் முதலான தருமங்களைச் செய்தவர்கள், அங்கு தத்தமது மனைவியருடன் சுகித்திருப்பார்கள். அங்கு மேகவாகனை வருஷ ருது என்னும் நாயகன் வசிப்பான். அவனுக்குக் கண்கள் மின்னல். கவசம்—மேகம். சப்தம்—இடி; வில்—வானவில்; சேனை கள்—வருஷ தாரைகளான கணங்கள், நாயகிகள்—நபஸ்ரீ, நபஸ்யஸ்ரீ, ஸ்வரஸ், யாரஸ்யமாலினி, அம்பா, அதுலா, அநிரந்தீ, அப்ரமந்தீ, மேக யந்திகா, வருஷயந்தீ, சிபுணிகா, வாரிதாரா என்னும் பன்னிரு சக்திகளாவார்கள்.

அதற்கு எதிரில் ஏழு யோசனை உயரத்தில் பஞ்சலோகத்தால் நிர்மாணிக்கப்பட்ட ஒரு பிரகாரம் இருக்கும் அதன் நடுவில் மந்திரச் சாலை ஒன்று இருக்கும். அது மலர்கள், கொடிகள் தளிர்கள் இவற்றோடு திகழும். அங்கு, பலவித சித்துக்களில் வல்லவர்களான சித்தர்கள் தங்கள் பரிவாரங்களோடும் பத்தினிகளோடும் வசிப்பார் கள் அதற்கு நாயகன் சரத்ருது. அவனுக்கு லக்ஷ்மி, ஊர்ஜ லக்ஷ்மி என இரண்டு நாயகிகள் உண்டு.

அதற்கு முன்னால், பெரிய கோபுரங்களோடு ஒரு வெள்ளிப் பிரகாரம் ஏழு யோசனை உயரத்தோடு இருக்கிறது அதன் நடுவில் பூங்கொத்துகள் நிறைந்த பாரிஜாத மரங்கள் இரு வரிசைகளிலும் இருக்கும். அவை, தேவித் தியானம் முதலான நற்பணி புரிபவர் களை மகிழச் செய்யும். அதற்கு நாயகன் ஹேமந்தருது, அவன் சகல கணங்களோடும் இருந்து காமிகளை ரமிக்கச் செய்வான் அவனுக்கு ஸஹஸ்ஸ்ரீ; ஸஹஸ்யஸ்ரீ என்னும் இரண்டு நாயகியர்கள்! அங்கு தேவி விரதம் செய்த சித்தர்கள் வசித்துக் கொண்டிருப்பார்கள்.

அதன் முன்னால், ஏழு யோசனை உயரத்தில், உருக்கி வார்த்த பொன்னாலான பிரகாரம் ஒன்று உண்டு. அதன் மத்தியில் மலர்கள் தளிர்கள் நிறைந்த கதம்பவனங்கள் சூழ்ந்துள்ளன. அவ்வனத்தில் தேன் ஆயிரந்தாரையாகப் பெருக்கெடுக்கும். அதை அருந்துபவர் தேவியின் நிஜானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருப்பார்கள். அதற்கு நாயகன் சிசிரருது, அவனுக்கு தபஸ்ஸ்ரீ, தபஸ்யஸ்ரீ என்னும் இரு மனைவியர்கள் உண்டு அங்கு தேவியின் விரதத்தைச் செய்யும் சித்தர்கள் பலவித போகங்களினால் விளையும் பேரானந் தத்தோடும் நாயகியரோடும் பரிவாரங்களோடும் கூடியிருப் பார்கள்.

அதற்கு முன்னால் ஏழு யோசனை உயரத்தில் புஷ்ப ராக மய மானபிரகாரம் ஒன்று இருக்கும். அங்குள்ள பூமியும் வனங்களும்,

சோலைகளிலுள்ள மணி மரங்களும், மதில்களும் புஷ்பராக மயமாகவே இருக்கும். மண்டபங்கள். தூண்கள், பொய்கைகள், பொய்களிலுள்ள தாமரைகள் பறவைகள் முதலியன யாவுமே ரத்னமயமாக இருப்பதால், இரத்தினச் சாலை என்றும் வழங்கப்பெறும். மற்ற பிரகாரங்களை விட இது பன்மடங்கு அதிகப் பிரகாசமாக இருக்கும். ஒவ்வொரு பிரம்மாண்டத்திலுள்ள திக்பாலகர்களும் இங்கு தத்தமது ஆயுதங்களோடு வசித்திருப்பார்கள்.

அதற்கு கிழக்கில் அமராவதி என்ற ஒரு பட்டணம் பலவித உபவனங்களோடு மிகவும் உன்னதமாக இருக்கும். அங்கு இந்திரன், ஐராவதத்துடன், தேவர்கள் தேவ கன்னியர்கள் புடைசூழ, இந்திராணியோடு சுகித்திருப்பன்.

அக்னி கோணத்தில், அக்னிக்குச் சமமான வன்னியபுரி என்ற பட்டணம் ஒன்றிருக்கும். அங்கு அக்னித்தேவன், ஸ்வாஹா, சுவதா என்னும் இரு பத்தினிகளோடும் தன் வாகனங்கள் கணங்களோடும் மகிழ்ந்திருப்பான்.

யம திக்கில் யமபுரி என்னும் ஒரு பட்டணம் உண்டு. அங்கு சூரியப் புத்திரனை யமன் தன் நாயகியோடும் சித்ரகுப்தன முதலானவர்களுடன் வசித்திருப்பான்.

வருண திக்கில், வருணன் மச்ச(மீன்) வாகனத்தில் அமர்ந்து கடலில் விளைந்த சங்கு முதலான வற்றோடும் தன் சக்தியோடு மதுமயக்கமுடையவனாகவும் வாசம்புரிவான். வாயு கோணத்தில் வாயுதேவன் காற்றையே புசிக்கும் யோகிகளோடும், மான்வாகனத்தோடும், மருத் கணகங்களோடும், கொடியேந்திய கையோடும் பரந்த கண்களோடும் தன் நாயகியோடும் சுகித்திருப்பான். வடக்குத்திசையில் யக்ஷலோகத்தில் அதன் நாயகனை குபேரன் விருத்தி, ரித்தி என்னும் இரு நாயகிகளோடும் நவநிதிகளோடும் பெருத்த வயிறோடும், தனத்துக்கு நாயகனாய் விளங்குவான். மணிபத்ரன், பூர்ணபத்ரன், மணிமான், மணி சுந்தரன், மணி பூஷணன், மணி ஸ்ருக்வி, மணிகன், முகதாருகன் முதலிய யக்ஷ தளதிபகளோடும், நிஜ சக்தியோடும் வீற்றிருப்பான். ஈஸான கோணத்தில் ரத்தினங்களால் அமைந்த அதியற்புதமான ருத்ர லோகம் ஒன்று உண்டு. அங்கு ஈஸானர் என்ற ருத்திரர் இருப்பார். அவர்கோபமுள்ளவராகவும்,பிரகாசமான கண்களோடும், நாணேற்றிய வில்லம்புகளோடும், சூலாயுதத்தோடும்.விகாரமான அக்னியைக் கக்கும் முகமும்மூன்று விழிகளும், பத்துக் கண்டமும் ஆயிரம் புஜங்களும் பத்துப் பாதங்களும் கொண்டவராகத் திகழ்வார். ருத்திரக் கூட்டங்களுடனும் ருத்திராணிகளுடனும் பத்ரகாளி முதலிய மாத்ருகா கணங்களாலும் வீரபத்திரர் சகிதமான மகா ருத்திரர்களாலும் சூழப்பட்டிருப்பார். தலைமாலை தலைக்கு அணிந்தும் பாம்புவளையம் பூண்டும், புலித்தோல்

உடுத்தியும், யானைத் தோலை அங்கவஸ்திரமாக அணிந்தும் மஹா ஸ்மசான சாம்பலைப் பூசிக்கொண்டு திக்கு அதிர முழக்கமிடும் மான் ஏந்தி, பிரக்த கணங்கள் சூழ வீற்றிருப்பார்.

## 11 சக்தி கணங்கள் வாசம புரியும் பிரகாரங்கள்

''புஷ்பராகப் பிரகாரத்திற்கு முன்னால், பத்து யோசனை உயரமும் கோபுர வாயில்களும் கொண்டு, குங்குமம் போலச் சிவந்து விளங்கும் பத்மராகப் பிராகாரம் ஒன்று இருக்கும் அதில் பதுமராக ஸ்தம்பங்களுங்கூடிய பற்பல மண்டபங்கள் உண்டு. அவற்றில் அறுபத்து நான்கு கலைகளும் சக்தி வடிவங்களாக வீற்றிருப்பார்கள் பலவிதமான ஆயுதங்களும் அணிமணி அலங் காரங்களும் பூண்டு, பதுமராகமாகப் பிரகாசிக்கும் ஒவ்வொரு லோகத்திற்கு அதிபதியாக அங்கங்குள்ள கணங்களோடும் வாகனங் களோடும் வசிப்பார்கள் அவர்களுடைய பெயர்கள்: பிங்களாக்ஷி, விசாலாக்ஷி, சமிர்த்தி, விருத்தி, சிரத்தா, சுவாஹா, சுவதா, அபிக்ஞா, மாயா, சம்ஞா, வசுந்தரா, திரிலோகதாத்ரி, சாவித்திரி, காயத்திரி, திரிதசேஸ்வரி, அரூபா, பகுரூபா, ஸ்கந்தமாதா, அச்சு தப்ரியா, விமலா, அருணி, ஆருணி, பிரகிருதி, விகுர்தி, ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹ்ருதி, சந்தியா, மாதா, சதி, அம்சி, மர்ததிகா, வச்சரிகா, வரா, தேவமாதா, பகவதி, தேவகி, கமலாசனி, திரிமுகி, சப்தமுகி, சுராசுர விமர்த்தனி, லம்போஷ்டி, ஊர்த்வகேசி, பகு சீருஷா, வ்ருகோதரி, ரதரேகா, சசிரேகா, ககனவேகா, பவன வேகா, மதனாதுரா, அனங்கமதனை, அனங்கமேகலா, அனங்க குசுமா, விஸ்வரூபா, சுராதிகா, க்ஷயங்கரி, அக்ஷோப்யா, சத்ய வாதினி, பகுரூபா, சுசிவ்ருதா, உதாராவாகீசி எனப்படும் அறுபத்து நான்கு சக்திகளும் பயங்கரமாய் ஜொலிக்கும் நாக்கும் முகமும் கொண்டவர்கள். மேனோக்கி விரிந்த செம்பட்டைக் கூந்தலுடன் அக்னியைக் கக்குகின்றவர்களாய், எல்லா ஜலத்தையும் குடித்து விடுவோமா, அக்னியை அழிப்போமா, காற்றை ஸ்தம்பனஞ் செய் வோமா என்று ஒருவருக்கொருவர் பேசியவண்ணம், வில்லும் அம்பும் ஏந்தி கடகடவென்று பற்களைக் கடித்து, திக்குகளை நடுங்கச் செய்வார்கள். இவர்கள் ஒவ்வொருவரும் லக்ஷம் பிரம் மாண்டத்தை நாசஞ் செய்யவல்ல நூறு அக்குரோணி படைகள் கொண்டவர்கள். அவர்களது யுத்ததளவாடங்களின் கணக்கையும் ரத, கஜ துரக பதாதிகளின் கணக்கையும் சொல்லி முடியாது''

அத்தகைய பதுமராகப் பிராகாரத்திற்குமேல் செம்பருத்தி மலர் போல் பிரகாசிக்கும் பத்து யோசனை நீளமுள்ள கோமேதகப்

பிரகாரம் ஒன்று உண்டு. அங்கு வசிப்பவர்களின் மனைகளும் கோமேதக மயமாக இருக்கும் அங்குள்ள மண்டபங்கள், தூண்கள், மரங்கள், தடாகங்கள், பறவைகள் யாவுமே கோமேதகமாய் விளங்கும். அதன் நடுவில் மஹாதேவிகளான முப்பத்திரண்டு சக்திகள், கோமேதமணிகளால் அலங்கரிக்கப்பட்டு விளங்குவார்கள். அவர்கள் பைசாச முகமுடையவர்களாய், சக்கரமேந்தி, ''வெட்டு! அறுத்தெறி! கொளுத்திவிடு!'' என்ற வீரமுழக்கங்களோடும் யுத்த ஆர்வத்தோடும் திகழ்வார்கள். ஒவ்வொரு மகா சக்தியும் பத்து அக்குரோணி சேனையோடும் கூடியிருப்பார்கள். லக்ஷம் பிரம்மாண்டத்தை நாசஞ்செய்யவல்ல பலத்துடன் விளங்குவார்கள். தேவியினுல் யுத்த ஆரம்பத்திற்கும் தேவையானவையெல்லாம் அங்கு நிறைந்திருக்கும். பாபத்தை அழிக்கும் அம்முப்பத்திரண்டு சக்திகளின் பெயர்களாவன: வித்யா, ஹ்ரீ, புஷ்டி, பிரக்ஞா, திநீவாஸீ, குஹூ, ருத்ரா, வீர்யா, பிரபா, ஆனந்தா, போஷிணி, ரித்திதா, சுபா, காளராத்ரி, மஹாராத்திரி, பத்திரகாளி, கபர்த்தினி, விகிர்தி, தண்டி, முண்டினி, இந்து கண்டா, சிகண்டிநி, நிகம்பசும்பமதனி, மஹிஷாசுரமர்த்தனி, இந்திராணி, ருத்திராணி, சங்கரார்த்த சரீரிணி, நாரீ, நாராயணி, திரிசூலினி, பாலனி, அம்பிகா, ஹ்லாதினி. இவர்களில் ஒருவருக்கொருவர் கோபம் மூண்டால் பிரம்மாண்டங்களுக்கே நாசம் ஏற்படும். இவர்களுக்கு எங்கும் எப்போதும் தோல்வியே ஏற்படுவதில்லை.

அந்த கோமேதகப் பிராகாரத்திற்குமேல், கோபுரங்களோடு கூடிய பத்து யோசனை உயரமுள்ள வஜ்ரப்பிராகாரம் ஒன்று இருக்கும். அங்கு கதவுகள் தாளிடப்பட்டிருக்கும். எங்குமில்லாத நூதன மரங்களும் பூமி, கிராமங்கள், வீதிகள், நெடுஞ்சாலைகள் வீடுகள், பறவைகள், தடாகங்கள் முதலியன யாவுமே வஜ்ர (வைர) மயமாக விளங்கும் அங்கு தேவியின் பரிஜனங்கள் வசிப்பார்கள். சிலர் மதகர்விகளான லக்ஷம் தாசிகளால்பணியாற்றபட்டவர்களாக இருப்பார்கள். சிலர் பானபாத்திரத்தையும், சிலர் மலர்களையும் சிலர் விசிறிகளையும், சிலர் சாமரைகளையும், சிலர் தாம்பூலத்தையும் கையில் வைத்திருப்பார்கள். சிலர் பலவிதமானவிசித்திர ஆடைகள் உடுத்தியும், சிலர் குங்குமம், சந்தனம், கண்ணாடி குடைமுதலானவற்றை ஏந்தியுமிருப்பார்கள். சிலர் ஓவியந் தீட்டுபவராயும், சிலர் பாதம் பிடிப்பதில் ஆசையுடையவராயும், சிலர் சிறந்த ஆபரணங்களை அலங்காரம் செய்பவராயும் சில நறுமண மலர்களால் அலங்காரஞ் செய்பவராயும், சிலர் மலர் சூடுபவராயும் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருப்பார்கள். இத்தகைய சிருங்கார உடல் வாய்ந்த அவர்கள் மூன்று உலகங்களையும் துரும்பாக மதிப்பவர்கள். அவர்களின் பெயர்களாவன: அநங்கரூப, அநங்கமதனு, சுந்தரி, மதநாதுரா, புவனவேகா, புவனபாலிகா, சிசிரா, அனங்கவேதநா, அநங்கமேகலா என்பனவாகும்! பின்னர்

கொடி போன்ற இவர்கள் இடுப்பில் ஓசையிடும் ஒட்டியாணமும் கால்களில் ஒலிக்கும் சிலம்புகளும் அணிந்து, உள்ளும் புறமும் உலாவிக் கொண்டிருப்பார்கள். இவர்கள் சகல காரியங்களிலும் சமர்த்தைகள். கைகளில் பிரம்பு முதலான பல ஆயுதங்களும் ஏந்தி பல வாகனங்களில் ஏறி, எட்டுத் திசைகளிலும் சூழ்ந்திருக்கும் பிரா கார வெளியில் காவலாகச் சூழ்ந்து கொண்டிருப்பார்கள்.

அந்த வஜ்ரப் பிராகாரத்திற்கு அப்பால், வைடூரியப் பிரகாரம் ஒன்று பத்து யோசனை உயரத்தில் கோபுரத்தோடு இருக்கும். அங்குள்ள பூமி, வீடுகள், வீதிகள் ராஜவீதிகள் வாபி, கூபம், தடாகம், கால்வாய், மணல் யாவும் வைடூரிய மயமாகவே அமைந் திருக்கும். கிழக்கு முதல் மண்டலாகாரமாய் அஷ்டதிக்குகளிலும் பற்பல மங்கையரின் கூட்டத்தோடு, பிராஹ்மா, மஹேஸ்வரி கௌமாரி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி, சாமுண்டா என்னும் சப்த மாதர்களும் மகா லக்ஷ்மியுமாக எட்டு சக்திகள் இருப்பார்கள். இவர்கள் பிரம்ம ருத்திராதி தேவர்களைப் போல, மிகவும் பெருமை மிக்கவர்களாகவும் உலகங்களுக்கு மங்களஞ் செய்வர்களாகவும் இருப்பார்கள். இந்தப் பிராகாரத்தின் வாசல்களில் மும்மூர்த்தி களின் வாகனங்களான, அன்னம், கருடன், ரிஷபம், என்னும் மூன்றும் இந்திராதி தேவர்களின் வாகனங்களும் எண்ணற்றன வாய் அலங்காரமாகவும் வெகு கவனத்தோடும் எப்போதும் சித்த மாக இருக்கும். வானளாவி ஒன்றன் பின்னொன்றாக வரிசையாக நிற்கும் ரதங்களும் பற்பலச் சின்னங்களோடு விமானங்களும் பற்பலக் கொடிகளும் இசைக் கருவிகளும் அங்கு நிறைந்திருக்கும்!

அந்த வைடூரியப் பிராகாரத்திற்கு அப்பால் பத்துயோசனை உயரமுள்ள இத்திர நீலப்பிராகாரம் ஒன்று உண்டு. அங்குள்ள பூமி, வீதிகள், நெடுஞ்சாலைகள், வீடுகள், கிணறு, தடாகம் முதலியன யாவுமே இந்திர நீல மயமாக இருக்கும். அங்கு ஒரு பெரிய தாமரையில் பல யோசனை விசாலமுள்ளதாய் சுதர்சனத்துக்கு. இரண்டாவதாக ஷோடச கோணங்களுடையதாக இருக்கும். அதில் பதினறு சக்திகளின் கிருகங்கள் சர்வ சாமக்கிரியைகளால் நிறைந்திருக்கும். அச்சக்திகளின் பெயர்களாவன: கராளி, விகராளி, உமா, சரஸ்வதி, ஸ்ரீதுர்க்கா, உஷா, லக்ஷ்மி, சுருதி ஸ்மிருதி, த்ருதி, சிரத்தா, மேதா, மதி, காந்தி, ஆர்யா என்பன வாகும். இவர்கள் நீலமேகம் போன்றவர்கள். கைவாள் ஏந்தியும், சமமான உருவுடையவர்களாகவும் கேடயம் ஏந்தியவர்களாகவும் யுத்த சன்னத்தர்களாகவும், ஜகதீஸ்வரியான தேவியின் சேனாதி பதிகளாகவும், ஒவ்வொரு பிரம்மாண்டத்திலுமுள்ள மகா சக்தி களுக்கு எஜமானிகளாகவும், பிரம்மாண்டங்களையே கலங்கச் செய்யக்கூடியவர்களாகவும் தேவி சக்தியுடன் இருப்பவர்களாகவும் பலவகை ரதங்களில் சஞ்சரிப்பவர்களாகவும் இருப்பார்கள். இவர்

களின் ஆற்றல்களை அளவிட்டுக்கூற, ஆயிரமுகமுடையவனாலும் முடியாது!

அந்த இந்திர நீல பிராகாரத்துக்கு அப்பால் பத்துயோசனை நீளமுள்ள முத்துப் பிராகாரம் உண்டு. அங்கு பூமியெல்லாம் முத்து மயமாக இருக்கும். அதன் நடுவில் அஷ்டதள (எட்டு இதழ்) தாமரை முத்துக்கள் நிறைந்து விசாலமான கேசரங்களோடு இருக்கும் தேவிக்குச் சமமான உடல் வாய்ந்தவர்களாகவும், தேவியின் ஆயுதங்களைத் தரித்தவர்களாகவும், ஜகத்தின் செய்திகளைச் சொல்பவர்களாகவும தேவிக்குச் சமமான போகத்தையுடையவர்களாகவும், குறிப்பைக் கொண்டு மனோபாவத்தை அறியும் ஆற்றலையுடையவர்களாகவும், பண்டிதைகளாகவும் சகல செயல்களிலும் சமர்த்தர்களாகவும், தேவியின் அபிப்பிராயத்தை அறிந்தவர்களாகவும், மிகவும் எழில் வாய்ந்தவர்களாகவும், பிரம்மாண்டங்கள் ஒவ்வொன்றிலுமுள்ள பிராணிகளின் எண்ணங்களை அறியும் ஆற்றல் உள்ளவர்களாகவும் விளங்கும் மந்திரிணிகள் அத்தாமரையில் வாசம் செய்வார்கள் அவர்களின் பெயர்களாவன: அநங்க குஸுமா, அநங்ககுஸுமாதுரா, அநங்கமதனா, அநங்கமதனாதுரா, புவனபாலா, ககனவேகா, பாசாங்குசவரா, பீதிதரா, அருண விக்கிரகா

அந்த முத்துப் பிராகாரத்திற்கு அப்பால், பத்துயோஜனை நீளமுள்ள மரகதப் பிரகாரம் இருக்கும் அது பற்பல சௌபாக்கியங்களோடும் போகத்தோடும் திகழும். அங்குள்ள பூமி, முதலியன யாவுமே மரகதமயமாக இருக்கும். அங்கு விசாலமான ஷட்கோணம் (ஆறு கோணம்) ஒன்று உள்ளது அதில் பூர்வகோணத்தில் காயத்திரி சமேதராகவும் குண்டிகை, தண்டாயுதம், அக்ஷமாலை, தாங்கியவராகவும் பிருமா வீற்றிருப்பார். காயத்திரி தேவியைப் போலவே ஸ்மிருதிகளும் சர்வ வேத சாஸ்திரங்களும் மந்திர நூல்களும் புராணாதி இதிஹாசங்களும் உருவெடுத்து மூர்த்திவடிவில் துலங்கும். நிருதிகோணத்தில் விஷ்ணுமூர்த்தி, சங்கு, சக்கரம், கதை, தாமரை முதலானவற்றோடு, மச்ச கூர்மாதி தசாவதாரங்களோடும் கூடியிருப்பார். வாயு கோணத்தில் பரசு, அக்ஷமாலை, அபயம், வரதம் ஏந்தி ருத்திரமூர்த்தி வீற்றிருப்பார். அங்கு சரஸ்வதி தேவியும் இருப்பாள். தக்ஷிணாஸ்யா முதலான ருத்திர பேதங்கள் எவ்வளவுண்டோ, கௌரிபேதங்கள் எவ்வளவுண்டோ அவ்வளவும் அவ்விடத்தில் வாசம் புரிந்து கொண்டிருக்கும். இருபத்தெட்டு ஆகமங்களும் மற்றுமுள்ள ஆகமங்கள் அனைத்தும் வடிவமெடுத்திருக்கும். அக்னிகோணத்தில் தனாதிபதியான குபேரன் கையில் ரத்தின கும்பமும் மணிகரண்டமும் ஏந்தி மகாலக்ஷ்மியோடும் தேவியின் நிதிக்கு அதிபதியாய் தன் கணங்களோடும் இருப்பான். மேற்குக் கோணத்தில் மன்மதன் தன் நாயகியான

ரதியோடு, பாசம், அங்குசம், தனுசு, பாணம் என்பனவற்றை ஏந்தியவனும் வீற்றிருப்பான். அந்த மன்மதனோடு சிருங்கார ரசங்கள் யாவும் உருவம்பூண்டும், எப்போதும் வாசம்புரிந்து கொண்டிருக்கும். ஈசான கோணத்தில் புஷ்டியான தேகத்தினரும் பராங்குச தாரியும் விக்கினங்களை அகற்றுபவருமான விநாயகர் வீற்றிருப்பார். அவருக்கு எந்தெந்த விபூதிகள் உண்டோ அவையனைத்தும் அங்குமாபெரும் ஐஸ்வரியத்தோடு கூடியவைகளாய் வசிக்கும். கோணங்களில் இருக்க வேண்டியவர் இருக்க, பிரம்மாண்டத்திலுள்ள பிரம்மக்கூட்டங்கள் எல்லாம் ஜகதீஸ்வரியைச் சேவித்துக் கொண்டிருப்பார்கள்.

அந்த மரகதப் பிராகாரத்திற்கு அப்பால் நூறு யோசனை நீளமுள்ள பவளப் பிராகாரம் இருக்கிறது. அங்குள்ள பூமியும் கிருகங்களும் பவளமாகவே இருக்கும். அதன் நடுவில் பஞ்சபூத அதிபதிகளோடு ஹ்ருல்லேகா, ககனு, ரக்தா, கராளிகா, மகோச்சுஷ்மா என்னும் ஐந்து சக்திகள் பஞ்சபூதங்களைப் போன்ற காந்திகளையுடையவர்களாகவும், பாசாங்குச வரதாபயங்களுடன் சர்வ ஆபரணங்களைத் தரித்துக் கொண்டும் தேவிக்குச் சமமான அலங்காரத்துடன் நூதன யௌவனத்தினுல் கர்வித்தவர்களாகவும் இருப்பார்கள்.

இந்தப் பிராகாரத்திற்கு அப்பால் நவரத்தினங்களால் இயன்ற பற்பல யோசனை நீளமுள்ள பிரகாரம் ஒன்றுண்டு. அங்குள்ள தடாகங்கள் முதலியன யாவும் நவரத்தினமயமாகவே இருக்கும். அங்கு ஸ்ரீ தேவிக்குரிய மந்திரங்களும் மஹாவித்தைகளும், மகா வேதங்களும் இருக்கின்றன. அங்குதேவியின் ஆவாணதேவதைகள் அணிகளோடு கோடிய சூரியப் பிரகாசமாய் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அங்கு சப்தகோடி மகாகோடி மகா மந்திரங்களும் வாசம்புரியும்.

நவரத்தின மணி பிராகாரத்திற்கு அப்பால் சிந்தாமணி கிருகம் இருக்கிறது. அங்குள்ள சகலபொருட்களும் சிந்தாமணியினுலேயே நிர்மாணிக்கப்பட்டிருக்கும். சூரிய காந்தக்கல், சந்திர காந்தக்கல், மின்னலைப் போன்ற கல், முதலானவற்றுல் உருவாக்கப்பட்ட தூண்களின் பேரொளியினுல் உள்ளேயுள்ள பொருட்கள் வெளியே தெரியாமலிருக்கும்!

## 12 தேவி வாசம் புரியும் உலகம்

நவரத்தின மணிப் பிரகாரத்தின் நடுவில் தேவியின் ஸ்தானமான ஆயிரக்கால் மண்டபம் மிளிர்ந்து கொண்டிருக்கும். அந்த

மண்டபத்தின் நான்கு பக்கத்திலும் சிருங்கார மண்டபம் முக்தி மண்டபம், ஞான மண்டபம், ஏகாந்த மண்டபம் என்னும் நான்கு மண்டபங்களுண்டு. அவைகள், பலவிதமான விதானங்களோடும் பலவகையான நறுமணங்களும் தூபங்களோடும், கோடி சூரியர் களுக்குச் சமமான காந்தியோடும் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அந்த மண்டபங்களின் நான்கு பக்கங்களிலும் அழகான திரை களிட்டும் மல்லிகை, குந்தம் முதலானவற்றை வனம்போல நிறைத் தும் அளவற்ற கஸ்தூரியினால் திமிர்த்தும் திகழும். அம்மண்டபங் களைச் சூழ்ந்துள்ள தாமரைத் தடாகங்கள் ரத்தினமிழைத்த படி களோடும் அமுதச் சாறோடும் வண்டுகளின் ரீங்காரத்தோடும், அன்னங்கள் காரண்டவம் முதலிய பறவைகளோடும் நிறைந்திருக் கும். அந்தச் சிங்கார மண்டபத்தின் நடுவே உலகநாயகி வீற் றிருப்பாள். அங்கு கணங்களான தேவிகள், கீதம் இசைப்பார்கள். இங்குள்ளோர் இசையின்பத்தில் மகிழ்ந்திருப்பார்கள். இரண்டாவ தான முக்தி மண்டபத்தின் நடுவே, தேவி வீற்றிருந்து ஆன்மாக் களின் பாசத்தளைகளை நிவர்த்தி செய்யும் வகையை எப்போதும் சிந்தித்துக் கொண்டிருப்பாள். மூன்றாவதான ஞானமண்டபத்தில் பாசநிவர்த்திக்கான ஞானோபதேசஞ் செய்து கொண்டிருப்பாள். நான்காவதான ஏகாந்த மண்டபத்தில் ஜகத்தைக் காப்பதற்காக மந்திரிணிகளோடு ஆலோசித்திருப்பாள்

இந்நான்கு மண்டபங்களோடு பிரகாசிக்கும் சிந்தாமணிக் கிருகத்தில், சக்தித்தத்துவாத்மகமாய் இருக்கும் பத்துப் படிகளோடு ஒரு மஞ்சம் இருக்கும். அதற்கு நான்கு கால்களாகப் பிரம்மா, விஷ்ணு, ருத்திரர், மஹேஸ்வரர் என்னும் நால்வரும்திகழ்வார்கள். அதன் பலகையாக சதாசிவர் விளங்குவார். அந்தப் பலகையின் மீது மகாதேவர் புவனேஸ்வரராகப் பிரகாசிக்கத் தேவி இருப்பாள். இவ்வாறு மெய் விளையாட்டின் பொருட்டுத் தேவி இருவிதமாய் அங்கு திகழ்வாள். படைப்பின் ஆதியில் தேவியின் அர்த்தாங்கம் ஈஸ்வரனேயாவர். அவர் மன்மதனின் அகந்தையை அடக்கு வதற்காகக் கோடி மன்மதர்களைப் போன்ற அழகுருவமாகவும் ஐந்து முகம், மூன்று கண்கள், ரத்தினமணி, பூஷணம், வரதம், அபயம், பரசு முதலியவற்றை உடையவராகவும், பதினாறு வயதுள் ளவராகவும் மகாதேவராகவும் கோடி சூரியப் பிரகாசமும் கோடிச் சந்திரரைப்போல் குளுமையும் சுத்தஸ்படிகம் போல் குளிர்ந்த ஒளியும் உடையவராகவும் விளங்குவார். புவனேசுவரியோ, நவரத்தினங்கள் பதித்த ஒட்டியாணம், சுத்தப்பொன்னில் வைடூரிய மிழைத்த தோள்வளைகளும் ஸ்ரீசக்கர நாதாடங்கமும் பூண்டு பிரகா சிப்பாள். பிறைச்சந்திரனை வென்ற நெற்றி, கோவைப்பழம்போன்ற உதடுகள், கஸ்தூரிதிலகம் ஒளிரும் நெற்றி அந்த நெற்றியின் மீது சந்திர சூரியர்களைப் போலத் திவ்ய சூடாமணியால் உருவாக்கிய ஆபரணங்கள், திவ்யத்திருமேனி, சுக்கிர உதயம் போலப்பிரகாசிக்

கும் நாசிகாபரணம், முத்தாரத்தோடு குங்குமம், கர்ப்பூரங்கலந்த நல்ல சந்தனம் முதலானவைகளைப் பூசிய ஸ்தனங்கள், சங்கு நிகர் கழுத்து, மாதுளம்பழம் போல் பல்வரிசை, விலைமதிப்பற்ற ரத்தின மணிமகுடம், முன் உச்சிக்கேசம், களங்கமற்ற சரத்காலச் சந்திரன் போன்ற முகமும், கங்கையாற்று நீரின் சுழிபோன்ற நாபி, மாணிக்க மோதிரங்கள் ஜொலிக்கும் விரல்கள், தாமரை தளம் போன்ற காந்தி, ரத்னசலங்கையோடு கூடிய ரத்தின வளை யல்கள் முத்தாரம் முதலான ரத்தின பதக்கங்கள், மல்லிகைப் பூக்கள் நிறைந்த கூந்தல், நெருங்கியும் உன்னதமாயுமுள்ள ஸ்தன பாரங்கள் இவற்றோடு புவனேஸ்வரி திகழ்வாள். அந்த சிவசக்தி பாசாங்குச வரதாபயங்களைத் தரித்து, முற்றிலும் சிங்காரமாய், வல்லிக் கொடி போன்ற அங்கத்துடன், சௌந்தரிய தாரைக்குப் பிறப்பிடமாயும் இருப்பாள் காரணமேயில்லாத கருணையும் உண் மையான சல்லாப மாதுர்யத்தினால் திரஸ்காரம் செய்யப்பட்டுள்ள வீணையும் பலகோடி சந்திர சூரியரின் காந்தியும் உடையவளாகத் திகழ்வாள் தோழிகள், தாசிகள் தேவகன்னியர், சகலமான தேவதைகள், இச்சாசக்தி (விழைவாற்றல்) கிரியாசக்தி (செய லாற்றல்) ஞானசக்தி (அறிவாற்றல்) ஆகியவர்களால் சூழப் பட்டும் இருப்பாள். அந்தத் தேவியுடன், லஜ்ஜை, துஷ்டி, புஷ்டி, கீர்த்தி, காந்தி, க்ஷமாதயா, புத்தி, மேதா, ஸ்மிருதி, லக்ஷ்மி என் போரும் மூர்த்திகளாக இருப்பார்கள். பீடசக்திகளான ஜயை விஜயை, அபராஜிதை, நித்தியை, விலாசினி, தோத்திரி, அகோரை, மங்களை என்போர் சதாசேவித்துக் கொண்டிருப்பார் கள். பக்கங்களில் சங்கநிதி, பதுமநிதிகள் இருக்கும் இத்தகைய சிந்தாமணிக் கிருகத்தின் அருகே, புவனேஸ்வரியின் இடப்பாகத் தில் நவரத்தின மயமான நதி ஒன்றுண்டு. அந்தநதி, பல கிளைநதி களாகப் பிரிந்து அமிர்தசாகரம் வரை செல்கின்றது சர்வேசுவா னுக்கு இந்தப் புவனேஸ்வரியின் சம்மந்தத்தால் மஹேஸ்வரர் என்ற பெயர் வந்தது. இல்லையெனில் அந்தப் பெயர் வந்திராது. இனி சிந்தாமணி கிருகத்தின் அளவைக் கூறுகிறேன். அதன் நீளம் ஆயிரம் யோசனையாகும். அதற்கு வடக்கில் ஒரு பிராகாரம் ஆதார மின்றி இரண்டாயிரம் யோசனை உயரமுள்ளதாய் விண்ணளாவ அமைந்துள்ளது. அது பிரளயத்தில் சுருங்கியும் படைப்பின்போது விரிந்தும் விளங்கும். இதற்கும் மேலான காந்தியுடையது ஒன்று மில்லை. எதில் தேவியானவள் தேஜோரூபியாக இருக்கின்றனளோ அதுவே சிந்தாமணி கிருகமாகும். தேவ, மானிட, நாகலோகங் களிலும் இதர லோகங்களிலும் இருக்கும் தேவி உபாசகர்கள் அனை வரும் இதையே ஜபிக்கின்றனர். தேவியை நாடுகிறவர்கள் உடல் நீங்கிய பிறகு இங்கே வந்து விடுவார்கள். இந்த மணித் வீபத்தில், நெய், பால், தயிர், தேன் என்பவை தனித்தனியே ஓடும் கால்வாய் களாகவும் அமிர்தம் நதியாகவும் இருக்கும். சில கிளையாறுகள் திராக்ஷா ரசமாகவும், சில நாவற்பழச் சாறுகவும், சில மாம்பழ

ரசமாகவும் சில கரும்புச் சாறுகவும் ஓடிக் கொண்டிருக்கும். எவரெவர் எந்தெந்தப் பழ ரசத்தை விரும்புகின்றனரோ அவர் களுக்கு அந்தந்த மரங்கள் அந்தந்தப் பழத்தை வழங்கும். இங்கு குறை ஒன்றும் இராது. ரோகமும், ஜரையும் இல்லை. கவலையும் சிந்தனையும் இல்லை. காமம், மாச்சரியும் குரோதங்கள் எதுவும் கிடையாது. எல்லோரும் பெண்களுடன் கூடிய யௌவன முடையவர்களாகவும் கோடி சூரியப் பிரகாசமுள்ளவராகவும் இருப்பார்கள். அவர்கள் அனைவரும் தேவியைப் போற்றி கொண்டிருப்பார்கள்! அவர்களில் சிலர் சாலோகத்தையும் சிலர் சாமீப்யத்தையும் சிலர் சாரூப்யத்தையும் சிலர் சாயுஜ் யத்தையும் அடைந்தவர்களாக இருப்பார்கள். ஒவ்வொரு பிரம்மாண்டத்திலுள்ள தேவதைகள் எல்லாம் ஒன்றுக, இங்கேயே இருந்தவண்ணம் சேவிப்பார்கள். சப்தகோடி மகா மந்திரங்கள் வடிவு பெற்று 'உபாசித்துக் கொண்டிருக்கும். எல்லாவிதமான மகாவித்தைகளும் மாயாசஹித விக்ரஹங்களும் காரணமான பிரம்மரூபத்தை ஸோஹம் என்னும் முறையால் தியானித்து, தேவியை உபாசித்த ஆனந்தமயமாய் இருக்கும்

' ஜனமேஜயனே! அந்த மணித்வீபம் இப்படித்தான் திகழும். சூரியன், சந்திரன், அக்னி, மின்னல் ஆகியவையாவுமே அந்த மணித்வீபத்தின் காந்தியின் கோடி யம்சத்திற்கு ஈடாகாது. சில இடங்களில் பவளத்துக்கு ஈடாகவும் சில இடங்களில் மரக தத்திற்கு சமமாயும், சில விடத்தில் கோடி மின்னல்களிறைல் வியாபித்திருக்கும். ஒளி போன்ற பேரொளியோடும் சில இடங் களில் நவரத்தினங்கள்வைர காந்தியைப் போலும் சில இடங் களில் காட்டுத்தீயைப் போலும் சில இடங்களில் சூரிய சந்திர காந்தக்கற்களைப் போன்ற ஒளி வண்ணங்களாகவும் திகழும், சில இடங்களில் ரத்தினசிருங்கமுள்ள மலைகளும், சில இடங் களில் ரத்தினகோபுரப் பிராகாரங்களும் காணப்படும். ரத்தின மயமான இலை பழங்களோடு மரங்களும், விளையாடும் மான் களும்—மயில்களும், புருக்களும் கிளிகளும் மனோரம்மியமான நீர்த் துறைகளும், ரததின தாமரைகள் மலர்ந்துள்ள பொய்கைகளும் அங்கு நிறைந்திருக்கும். நறுமணத் தென்றல் எப்போதும் வீசிக் கொண்டிருக்கும். தூபதீபங்கள் எண்ணற்று நிரம்பியிருக்கும். சகல ஐஸ்வரியம், சகல சிருங்காரம். சர்வக்ஞத்வம். அகண்ட தேஜஸ், சகல பராக்கிரமம், சகல நல்ல குணங்கள், தயை இவற்றிற் கெல்லாம் முடிவான இடமாகவும் அந்த சிந்தாமணிக் கிருகம் அமைந்துள்ளது. ஜனமேஜயனே! இந்த உலக இன்பமாகிய அரசபோக இன்பம் முதல் பிரம்மானந்தம் வரையிலுள்ள சகலவித மான இன்பங்களும் ஆனந்தங்களும் அடங்கியிருக்கும் இடமாக அதுவேயுள்ளது. இவ்விதம் வர்ணித்த மணித்வீபமே, மஹா தேவிக்கு சகல லோகத்துக்கும் மேலான உத்தமோத்தமமான

ஸ்தானமாகும். அதை நினைத்தாலே, சகல பாவங்களும் அகன்றொழியும். பிராணன் நீங்கும் சமயத்தில் மனிதன் அதை நினைப் பானாயின் அந்த மணித்வீபத்தையே அடைவான். இந்த ஐந்து அத்தியாயங்களையும் சிரத்தையுடன் பாராயணம் செய்தால் பூத ப்ரேத பிசாசுகளால் யாதொரு பொல்லாங்கும் ஏற்படாது. ஆகையால் நூதனமான ஒரு கிரஹத்தை யமைத்து, வாஸ்து, சாந்தி எனச் சொல்லப்படும் யாகத்தைச் செய்து, அதன் பிறகு இவ்வத்தியாயங்களைச் சிரத்தையோடு படிக்கச் செய்தால் சகலவிதமான மங்களங்களும் உண்டாகும்!'' என்றார் வியாசர்.

## 13 தேவி பாகவதம் படிப்பதின் பயன்

வியாசர் மேலும் கூறலானார்:

''ஜயமேஜயனே! நீயே விரும்பிக் கேட்டதற்கிணங்க, நாரதருக்கு நாராயணர் சொன்ன முறையிலேயே நானும் உனக்கு யாவையும் சொன்னேன். மிகவும் அற்புதமான இந்தத் தேவி பாகவதத்தை எவன் ஒருவன் கேட்கின்றானோ அவன் தேவிக்குப் பிரியனாகவும் தன்யனாகவும் ஆவான். நீயோ உனது பிதுர்களின் உய்வைக் குறித்து, அம்பிகையின் யாகத்தைச் செய்து, உன் யாகத்தால், உன் பிதுர்க்கள் துர்க்கதியிலிருந்து நீங்கினார்களோ இல்லையோ என்ற துக்கத்துடன் இருக்கிறாய். பிறவிக்குச் சாபல்யத்தைக் கொடுப்பதாகவும் மிகவும் உத்தமமாகவும் இருக்கும் தேவியின் மந்திரத்தை விதிப்படி நீ கிரகித்துக் கொள்வாயாக!'' என்றார் வியாசர்.

அதை ஜயமேஜய மன்னன் கேட்டுக் கொண்டு வியாசரை வேண்டி அவரிடமிருந்து பிரணவ ஸம்ஞையுடைய தேவியின் மந்திரத்தை தீக்ஷா தானப்படி அறிந்து கொண்டு, தௌமியர் முதலிய ஆசாரியர்களை வரவழைத்து, அம்பிகையின் யக்ஞத்தைப் பேரன்போடு தாராளமாகச் செய்தான் பிராமணர்களைக் கொண்டு அம்பிகையின் பிரீதியை முன்னிட்டு, இந்தப் புராணத்தை படிக்கச் செய்வித்து, பிராம்மணர்களுக்கும், அநேக சுமங்கலிகளுக்கும் குமாரிகளுக்கும் தீனர்களுக்கும் அன்னமிட்டு தன தானங்கள் வழங்கி மகிழச்செய்து, தேவியக்ஞத்தை முடித்தான். அப்போதே நாரதர் ஆகாயத்திலிருந்து இறங்கி வந்தார். அவரை ஜனமேஜயன் வரவேற்று உபசரித்து, ''நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? நான் ரக்ஷிக்கப்பட்டவனாயும் கிருதார்த்தனாகவும் ஆகிவிட்டேன்!'' என்றான். அதற்கு நாரதர், ''அரசனே! இப்போது ஓர் ஆச்சரியத்தைக் கண்ட நான் அதைச் சொல்லவே உன்னிடம் வந்தேன். உனது தந்தை கர்ம வசத்தால் துர்க்கதியை அடைந்திருந்தார். இப்போது அவர் நல்லதொரு வடிவையடைந்து தேவர்களாலும்



தேவ கன்னியர்களாலும் போற்றப்பட்டு, சுவர்க்கமடைந்து அதன் பிறகு உயர்ந்த விமானத்தில் ஏறி தேவியின் மணித்வீபத்தை அடைந்து விட்டார். மன்னவனே! நீ கேட்ட தேவிபாகவத சிரவண பலத்தாலும் உன் தேவியக்ஞ பலத்தாலும் உன் தந்தை நற்கதியை அடைந்து விட்டார். நீ உன் தந்தையை நரகத்திலிருந்து உய்வித்தாய். உன்புகழ் தேவலோகத்திலும் பரவிவிட்டது.'' என்று நாரதர் கூறியவற்றைக்கேட்ட அரசன், அத்தகைய அற்புத நற்கர்மத்தைச் செய்வித்த வியாசரை வணங்கித் தழதழக்கும் குரலில் ''மாமுனிவரே! உமது தயவாலே நான் கிருதார்த்தனுகி விட்டேன்! உம்மைக் கும்பிடுவதைத் தவிர வேறு என்ன கைம்மாறு என்னுல் செய்ய முடியும்?'' என்றுன். அவனை வியாசர் வாழ்த்தி, 'அரசனே! நீ சகல கர்மத்தையும் விட்டு, தேவியின் திருவடிகளைப் போற்றுவாயாக. தினந்தோறும் தேவி பாகவதத்தையே படனஞ் செய்வாய். இப்படிச் செய்து வந்தால், பந்தத்திலிருந்தும் ஆயாசமின்றி விடுபடுவாய். எத்தனையோ புராணங்களிருக்கின்றன. அவை, இந்தத் தேவி பாகவதத்தின் ஒரு பாகத்துக்கு ஈடாகாது. இது வேதபுராணங்களின் சர்வசாரம். இதைப் பாராயணம் செய்தால், வேதபாராயணம் செய்த புண்ணியம் கிடைக்கும். இதனை அறிஞர்கள் முயற்சியுடன் படிக்கவேண்டும்!'' என்று கூறி ஆசீர்வதித்து விட்டு தமதிருப்பிடம் சென்றடைந்தார். அதன் பிறகு, ஜனமேஜயன் மகிழ்ச்சியுடன் தேவி பாகவதத்தைப் படித்துக் கொண்டும், படிக்கச் சொல்லிக் கேட்டும், ஆனந்தமாக அரசாட்சி நடத்தி வந்தான்.''

—இவ்வாறு சூதமுனிவர் கூறினுர்.

தவங்களிலும் விரதங்களிலும் யோகசாதனைகளிலும் வேத வேதாந்தச் சிரவணங்களிலும் சிறந்தவர்களும் குரு பக்தியில் மேம் பட்டவர்களுமான நைமிசாரண்ய வாசிகளான முனிவர்களை சூத முனிவர் ஏறிட்டு நோக்கி, "தவஞானிகளே! எனது ஆசிரியராகிய வியாச மகரிஷியிடம் நான் கேட்ட வண்ணம், மஹாபுராணங்கள் எல்லாவற்றையும் .விடச்சிறந்த இந்தத் தேவி பாகவதத்தை இது வரை உங்களுக்குக் கூறினேன். நீங்கள் அனைவருமே இதைப் பக்திசிரத்தையுடனும் ஒருமித்த மனத்துடனும் கேட்டீர்கள். தேவி சொரூபத்தையும் தேவியின் திருவருளையும், தேவி உபாசன மகிமையையும், தேவி மந்திர விந்யாசங்களையும், மந்திரசித்திகளை யும், இகபரப்பயன்களையும், பாப புண்ணியச் சிறப்புகளையும் பிரம்ம யக்ஞாதிக் கிரமங்களையும், பிராண தத்துவத்தையும், பிரம்ம சித்தி யையும் கொடுக்கவல்ல காயத்திரி சம்பந்தமான சகலச் சிறப்புகளை யும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் இப்புராணம் எடுத்துக்காட்டு கிறது. ஆகையால் இதை யாவரும் பாடம் செய்து, இது ஒன்றி னாலேயே எல்லாச் சித்திகளையும் பெறவேண்டும் என்று எண்ணி அதன் மகிமையை இறுதியில் கூறத்துவங்கினேன். கேளுங்கள்!" என்று கூறலானார்:

"இந்தத் தேவி பாகவதம் அர்த்த சுலோகாத்மகமானது. தேவியின் தாமரை மலர் போன்ற திருமுகத்திலிருந்து இப்புராணம் வெளிப்பட்டு, வேத சிந்தாந்த போதனையாகவும், விஷ்ணுவின் பொருட்டு உபதேசிக்கப்பட்டதாயும், பிரம்மாவினால் நூறுகோடி கிரந்தமாகச் செய்யப்பட்டதாயும் விளங்குகிறது. இதை வியாச முனிவர் சுகமுனிவருக்குப் பதினெண்ணாயிரம் கிரந்தமாகவும் பன்னிரண்டு ஸ்கந்தங்களாகவும் இயற்றினார். இதற்கு இணையான தும் பாபங்களை நிவர்த்திப்பதுமான புராணங்கிடையாது எவன் இதைப் பாராயணம் செய்கின்றானோ, அவன் அஸ்வமேதயாகம் செய்த பலனை அடைகிறான். இதைப் பாராயணஞ்செய்கின்றவரை, வஸ்திராபரணங்களால் போற்றிப் போஷித்து, வியாசராகவே பாவித்து அவரிடம் கேட்கவேண்டும். முனிவர்களே! இந்தப் புராணத்தை தன் கையினாலாவது பிறராலாவது எழுதி புரட்டாசி மாதம் பௌர்ணமி தினத்தன்று, அலங்கரிக்கப்பட்ட பசு. தக்ஷிணை யோடும் பொன்னால் செய்யப்பட்ட சிங்க முத்திரை பதித்த புத்தகத் தைப் பிராமணர்களுக்குக் கொடுக்கவேண்டும். இந்தப் பாகவதத் தைக் கிரமமாகப் பாராயணஞ்செய்து முடித்த பிறகு, அத்தியாயத் திற்கு ஓர் அந்தணோத்தமனாகக் கணக்கிட்டு, அவ்வாறே சுமங்கலி

களுக்கும் குமாரிகளுக்கும் போஜனம் செய்விக்க வேண்டும். அவர்களைத் தேவியாக பாவித்து, ஆடையணிகளாலும், பாயச அன்னங்களாலும் மலர்களாலும் பூஜிக்கவேண்டும்.

"இந்தப் புராண தானத்தால் பூமிதானம் செய்த நற்பயன் கிடைக்கும். நாள்தோறும் பக்தியுடன் இதைக்கேட்போருக்கும் படிப்போருக்கும் எக்காலத்தும் கிடைத்தற்கரிய பொருள் எதுவுமில்லை. எல்லாப் பொருளையும் எண்ணியவாறே பெறலாம். புத்திர செல்வம், பொன் பொருள், கல்வி வித்தை முதலியவைகளைப் பெற்றிராதவர், அவற்றைப் பெறுவர். மலடிகள், வந்திகள் மிருத வந்திகள் முதலானவர்கள் பயங்கரமான பாவங்களிலிருந்து விடுபடுவார்கள். இல்லறவாசியாக இருப்பவன், இந்தத் தேவிபாகவதத்தைப் பூஜித்துவந்தால், லக்ஷ்மியும் சரஸ்வதியும் அவனைவிட்டு அகலமாட்டார்கள். வேதாளம்,டாகினி, ராக்ஷசர்கள் அவனது இல்லத்தை ஏறிட்டும் பார்க்கமாட்டார்கள். காய்ச்சல் நோய்களால் பாதிக்கப்பட்டவர்களுக்கு இந்தத் தேவிப் பாகவத மகிமையினால் பிணி நீங்கிக் குணமாகும். ஒரு மண்டலம் இதைப் பாராயணம் செய்தால் ஜுரமும், நூறு தடவைப் பாராயணம் செய்தால் காச நோயும் நீங்கும். தினம் சந்தியாவந்தனத்தை முடித்து, ஒவ்வொரு



அத்தியாயத்தைப் பாராயணம் செய்பவன் ஞானவானாகிவிடுவான். இதுவுமன்றி, உத்தேசித்த காரியம் முடியுமா முடியாதா என்பதைப் பார்க்கும் விதத்தை முன்பே கூறியிருக்கிறேன்.

''நவராத்திரியின் போது இதைப்பாடம் செய்தால், கோரிய பயனுக்கும் மேலான பயனைத் தேவியே திருவருள் செய்வாள். வைணவர்களும், சைவர்களும், கணுபத்தியர்களும் சௌரர்களும். அவரவர்களுக்கு உரிய லக்ஷ்மி முதலிய சக்திகளைக் குறித்தும், வைதிகர்கள் வேத காயத்திரியைக் குறித்தும் நவராத்திரியில் உபாசனையும் பாராயணமும் செய்தால் அவையெல்லாம் தேவிக்குப் பிரீதியாகவே இருக்கும். சூத்திரர்களும் மங்கையரும் நவராத்திரியில் பூஜையும் உபாசனையும் பிராமணமுகமாகச் செய்வாராயின் நற்பயன்களை அடைவார்கள். அதிகமாக நான் என்ன சொல்ல முடியும்? வேதசாரமே இந்தத் தேவி பாகவதம். வேதபாராயண பயன், இந்தத் தேவி பாகவதத்தைப் படித்தாலே கிடைத்து விடும்!''

இவ்வாறு, சூதமுனிவர் கூறிவிட்டு, ''தேவியே! சச்சிதானந்த ரூபிணியாயும் காயத்திரி ரூபிணியாயும் ஹ்ரீம் மயியாயுமிருக்கின்ற உன்னை நமஸ்கரிக்கின்றேன் என்னைக் காத்தருளவேண்டும்!'' என்று தியானித்திருந்தார், அப்பொழுது பௌராணிகர்களில்சிறந்த அவரை, நைமிசாரணிய வாசிகள் எல்லா உபசாரங்களோடும் போற்றிப் பூஜித்து தேவி பாகவதம் கேட்ட மகிமையால் நிர்மலமான மனமுடையவர்களாகவும் மோக்ஷத்துக்குரியவர்களுமாகி மீண்டும் வணங்கி, ''மகா ஞானியே! சம்சார சாகரத்தினின்றும் கரையேற்றி வைப்பதற்குத் தாங்கள், ஓடம் போன்றவராக இருக்கிறீர்கள். எங்கள் குற்றங்குறைகளைப் பொறுத்து கொள்ளவேண்டும்!'' என்று பலமுறைகள் வணங்கினார்கள். தியானத்திலிருந்த சூத முனிவர், வேத ரகசியமாகவும் புராண ரகசியமாகவும் உள்ள இந்த பராசக்தியின் புராணத்தைக் கூறும்படிச் செய்வித்த இந்தக் கூட்டம் நீடூழி வாழ வேண்டும் என்று ஸ்ரீ தேவியின் திருவடித் தாமரைகளைத் தியானித்து, அந்தத் திருக்கூட்டத்தைக் கும்பிட்டு விட்டு விடைபெற்றுத் தமதிருப்பிடம் சென்றார்.

ஸ்ரீ தேவி பாகவதம் சம்பூரணம்.

## பழம் பெருங் கதைகள் :

அறுபத்துமூவர் கதைகள்
(பெரிய புராணம் முழுதும் வசனவடிவில்)
*துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி* விலை ரூ 3-50

ஸ்ரீ விஷ்ணு புராணம்
*துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி* விலை ரூ 3-50

ஸ்ரீ தேவி பாகவதம் [மூன்று பாகங்கள்
*துர்க்காதாஸ். எஸ். கே ஸ்வாமி* ஒவ்வொன்றும்] ரூ 3-50

வீரவன்னியர் கதை
(வன்னிய புராணம் வசன வடிவில்)
*துர்க்காதாஸ். எஸ். கே. ஸ்வாமி* விலை ரூ 2-00

ஸ்ரீ கருட புராணம்
*எஸ். கே. ஸ்வாமி* விலை ரூ. 2—00

விக்கிரமாதித்தன் கதைகள்
*புதிய கதைகள், புதிய சித்திரங்களுடன் வட மொழிமூலத்தி லிருந்து மொழி பெயர்க்கப்பட்டது (புதிய பதிப்பு)*
பதிப்பாசிரியர் : அரு. ராமநாதன் விலை ரூ. 3. 50

கதைக் கடல்
*(மகாகவி சோமதேவரின் கதா சரித் சாகரம்; ஏராளமான புதிய சித்திரங்கள் அடங்கிய அழகிய பதிப்பு:*
பதிப்பாசிரியர் : சிரஞ்சீவி விலை ரூ. 3. 50

மங்கம்மா சத்திரத்து மனமோகனக் கதைகள்
*மனமோகனக் கதைகள் என்ற தலைப்பில் காதல் இதழில் வெளிவந்த பல கதைகளும் வெளி வர இயலாத கதைகளும் அடங்கியது. 3 பாகங்கள் வந்துள்ளன [ஒவ்வொன்றும்]*
அரு. ராமநாதன்; நாக. முத்தையா விலை ரூ. 3 50

பாட்டி சொன்ன கதைகள்
பதிப்பாசிரியர்: சிரஞ்சீவி விலை ரூ. 1 50

*சார்தர்வேஷ் கிஸ்ஸா என வழங்கும்*
நான்கு பக்கீர்கள் கதை
*மூலப்பிரதிகளைப் பரிசோதித்து*
*எழுதியவர் : நாரா. நாச்சியப்பன்* விலை ரூ. 2—00

நவீன அராபிய இரவுகள்
*ஏ. கே. சேஷய்யா* விலை ரூ 3-50

குடும்ப கீதை
(கீதைக்கு முன்னும் பின்னும்)
எஸ். வேங்கடசாமி, எம். ஏ. விலை ரூ 1-00

மதன காமராஜன் மரியாதை ராமன் கதைகள்
பதிப்பாசிரியர்: அரு. ராமநாதன் விலை ரூ. 3—50

ஜாதகக் கதைகள் என வழங்கும்
போதிசத்துவர் கதைகள்:
துர்க்காதாஸ் எஸ். கே. ஸ்வாமி விலை ரூ. 3—90

திராவிட நாட்டுக் கதைகள்
தொகுத்தவர்: சிரஞ்சீவி விலை ரூ. 3—90

---

## பலவகை நாவல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | மைனர் மதுரை வீரன் | (சந்திரமோகன்) | 1—50 |
| 2. | கட்டையசிம்மன் | „ | 1—50 |
| 3. | மலைநாட்டு மாவீரன் | „ | 1—50 |
| 4. | மின்சார மோகினி | „ | 1—50 |
| 5. | சக்கிரமண்டலத்துப் பறக்கும் சுந்தரி | „ | 1—50 |
| 6. | மின்சார மோகினியின் மாயவலை | „ | 1—50 |
| 7. | காந்தப் பறவை | „ | 1—50 |
| 8. | மந்திரவாதி மகள் லைலா | „ | 1—50 |
| 9. | மாவலிக்கோட்டை புரட்சி | (வேலவன்) | 1—25 |
| 10. | மோகனக்கிளி | (நாரா நாச்சியப்பன்) | 2—00 |
| 11. | எத்தன் சாம்பாஜி | „ | 1—50 |
| 12. | பொய்க்கால் குதிரை | (ஜெகசிற்பியன்) | 1—50 |
| 13. | நான்கு பக்கீர்கள் கதை | (நாரா. நாச்சியப்பன்) | 2—00 |
| 14 | ஹாத்திம் தாய் | ரூ | 1—50 |
| 15 | ராணி மங்கம்மாள் | ரூ | 1 50 |

# ஆராய்ச்சி நூல்கள்

**நீங்கள் உயரமாக வளர்வது எப்படி?** 'கார்த்திகேயன'

ஆணுக்கும் பெண்ணுக்கும் எடையும் உயரமும் எப்படியிருக்க வேண்டும்? குட்டையானவர்கள் எவ்வளவு அங்குலங்கள் வரை வளர முடியும்? அதற்குரிய ஆகார நியதிகள், பழக்க வழக்கங்கள், தேகப்பயிற்சிகள் எவை? உங்களுடைய குழந்தைகள் நெட்டையாக வளர நீங்கள் கவனிக்க வேண்டியவை எவை?

ஏராளமான விளக்கப்படங்களும் தேகப்பயிற்சிச் சித்திரங்களும் அடங்கிய உடற்கலை நூல் விலை ரூ. 1—50

**மேடையில் பேசுவது எப்படி?** டி. எம். காளியப்பா, எம். ஏ

சென்னை முன்னாள் முதலமைச்சர் திரு. காமராஜ் அவர்களின் முகவுரையுடன் கூடியது. 1. தன்னம்பிக்கையை வளர்ப்பதெப்படி? 2. பேச்சைத் தயாரிப்பது எப்படி? 3. புகழேந்திய பேச்சாளர்கள் எவ்வாறு பேசினார்கள்? 4. வெற்றிப்பாதையை எட்டிப் பிடிப்பதெப்படி? 5. ஞாபக சக்தியை வளர்ப்பதெப்படி? 6. மேடைத் தோற்றம் எப்படி இருக்க வேண்டும்? 7. பேச்சைத் துவக்குவதெப்படி? 8. மக்கள் மனதை மாற்றுவது எப்படி? 8. சுவையாக பேசுவது எப்படி? 10. கூட்டத்திற்கு விழிப்பூட்டுவது எப்படி? 11. புதுமையோடு பேசுவது எப்படி? 12. பேச்சை வெளியிடுவது எப்படி? 13. பேச்சை முடிப்பது எப்படி? 14. சொல்வளத்தைப் பெருக்குவது எப்படி? 15. பேச்சுப் போட்டியில் பரிசுபெறுவது எப்படி? 16. கிராம நடுத்தர வர்க்கத்தினரிடையே பேசுவது எப்படி? 17 இனிய குரலில் தெளிவான உச்சரிப்பு பெறுவது எப்படி? முதலிய 18 அத்தியாயங்கள் அடங்கிய பயிற்சி நூல். விலை ரூ. 1—50

**இலாகிரிப் பொருள்களா? எம தூதர்களா?**

சு. அ. ராமசாமிப்புலவர்

காபி, தேனீர், புகையிலை, பொடி, சிகரெட், வெற்றிலை பாக்கு மது முதலியன பற்றி ஆராய்ச்சி அடங்கியது விலை ரூ 1—50

**வசீகர சக்தியும் வாழ்வில் வெற்றியும பெறுவது எப்படி?**

'வேலவன'

1. வசீகர சக்தியும் வாழ்வில செல்வாக்கும் பெறுவதற்கு வழி என்ன' 2. பிறரை நேசிக்கப் பழகுவது எப்படி? 3 தாழ்வு மனப்பான்மையைத் தவிர்ப்பது எப்படி? 4 நமது சுயநலப்பான்மையைத் தவிர்ப்பது எப்படி? 5 தன் மீதே பரிதாபப் படுவதைத் தவிர்ப்பது எப்படி? 6. மாறி மாறி வரும் உணர்ச்சி யலைகளை கணிப்பது எப்படி? 7. உங்கள் பிறவிக்குணமும் மன நோக்கும் எத்தகையது? 8 அமைதி யின்மையைத் தடுப்பது எப்படி? 9. காதலிலும் மண வாழ்க்கையிலும் வசீகர சக்தி பெறுவது. எப்படி? 10. குரல் கவர்ச்சியும் பேச்சுத் திறனும் பெறுவது எப்படி? 11 ஆரோக்யத்தால் அதிக கவர்ச்சி பெறுவது எப்படி? 12. நடையுடை பாவனைகளில் கவர்ச்சி பெறுவது எப்படி? 13. குழந்தைகளோடு பழகுவது எப்படி? முதலிய பல அத்யாயங்கள் அடங்கிய மனவளப் பயிற்சி நூல் விலை 2-00

**புதுமணத் தம்பதிகளுக்கு** 'இளவேனில்'

மணமான ஒவ்வொரு தம்பதியும் படித்துப் பயன்பெற வேண்டிய நூல். ஏன்? திருமணப் பொருத்தம் முதல் இரவு, பின்னிரவுகள் உணர்ச்சி அலைகள் இன்ப நிலை முதற் குழந்தை கருத்தடை இளமையின் பாதுகாப்பு முதலிய அத்தியாயங்களும் பல உட்பிரிவுகளும் நல்ல தமிழ் நடையில் எழுதப்பட்ட அருமையான விஞ்ஞான ஆராய்ச்சி நூல். பல விளக்கப் படங்களுடன் கூடியது விலை ரூ. 1—50

## சுவையான புத்தகங்கள்

*விக்ரமாதித்தன் கதைகள் 3. 50*
*கதைக் கடல் 3. 50*
*ஸ்ரீதேவிபாகவதம் (3 பாகங்கள்)*
*மங்கம்மா சத்திரத்து மனமோகனக் கதைகள் [3 பாகங்கள்]*
*பாகங்கள் ஒவ்வொன்றும் 3. 50*

சிந்தனையாளர் வரிசை
ஒவ்வொன்றும் விலை ரூ. 1-50

1 டார்வின்
2 பிளேட்டோ
3 கார்ல் மார்க்ஸ்
4 ரூஸோ
5 பெஞ்சமின் பிராங்ளின்
6 அரிஸ்டாடில்
7 இங்கர்சால்
8 எமர்ஸன்
9 வால்டேர்
10 மாக்கியவெல்லி
11 ப்ராய்டு
12 மாண்டெயின்
13 கன்பூசியஸ்
14 சாஅதி
15 நியெட்சே
16 தொல்காப்பியர்
17 ஐன்ஸ்டைன்

ஆராய்ச்சி நூல்கள்: 1-50
1 ரேடியோ நாடகம் எழுதுவது எப்படி?
2 நீங்கள் உயரமாக வளர்வது எப்படி?
3 மேடையில் பேசுவது எப்படி?
4 இலாகிரிப் பொருள்களா? எமதூதர்களா?
5 புது மணதம்பதிகளுக்கு
6 வசீகர சக்தியும் வாழ்வில் வெற்றியும் பெறுவது எப்படி? 2-00

நாவல்கள்

1 சுரங்கம் (எமிலிஜோலா) 3-00
2 அழகு ராஜா 3-00
3 நானாவின் தாய் (எமிலிஜோலா) 4-00
4 எதிர் வீட்டு ஜன்னல் (கோ. த. ச) 1-00
5 பேசும் ஓவியம் *தில்லைவில்லாளன்* 1-25

அரு. ராமநாதன் எழுதியவை
(ஒவ்வொன்றும்) 1-25

1 கதாநாயகி
2 அம்பிகாபதி
3 பழையனூர் நீலி
4 கோழிப் பந்தயம்
5 வேதாளம் சொன்ன கதைகள் 1-00
6 இராஜராஜ சோழன் (சரித்திர நாடகம்) 1-50
7 தங்கப் பதுமை (திரை நாடகம்) 1-00
8 அசோகன் காதலி 1-50
9 நாயனம் சௌந்தரவடிவு 1-25

பொன்மொழிகள் வரிசை

1 ஔவையார்
2 விவேக சிந்தாமணி
3 பைபிள் 4. குர்ஆன்
5 பஞ்சதந்திரம்
6 புத்தர் 7. சங்கரர்
8 காந்தி 9. இக்பால்
10 பாரதியார்
11 *அதிவீர ராம பாண்டியன்*
ஒவ்வொன்றும் 0—50

பிரேமா பிரசுரம் : சென்னை-24